# இராஜகேசரி

(வரலாற்றுப் புதினம்)

கோகுல் சேஷாத்ரி



**நள்ளிரவில்..**

ஐப்பசி நிலவு உச்சிவானைத் தொட்டது. சுக்கில பட்சமாகையால் பாதையில் வெளிச்சம் கொஞ்சம் தெரிகிறதுதான்.. என்றாலும் அந்த அகால நேரத்தில் கரடுமுரடான காட்டுப்பாதையில் தனியாகச் செல்வதற்கு யாருக்கும் தைரியம் கிடையாது - ஒருவரைத் தவிர.

நெடு நெடுவென்று வளர்ந்த அந்த உருவத்தையும் கம்பீரமான ஆகிருதியையும் பாருங்கள் ! இருளையோ பாதையில் பரவியிருக்கும் சரளைக்கற்களையோ சிறிதும் இலட்சியம் செய்யாமல் கம்பீரமாய் கைகளை விசியபடி நடக்கும் அந்த கிழவரை -

கிழவர் என்றா சொன்னேன் ? அகவை ஐம்பதை நெருங்கிக் கொண்டிருப்பதென்னவோ நிஜம்தான். ஆனால் மகாவீரரான அம்பலவாணன் கம்பன் அரையனாரை கிழவர் என்று அழைப்பதைப்போல் பாபகாரியம் வேறில்லை.

இளங்கிழவர் என்றுவேண்டுமானாலும் சொல்வோம்... வேண்டாம், அந்த கிழட்டு சகவாசமே வேண்டாம். பெரியவர் என்று பொதுவாய் சொல்லிவிட்டுப் போவோம்.

அம்பலவாணர் திருஎறும்பியூர்* மகாதேவர் கோயிலில் ஆரியக் கூத்து** பார்த்துவிட்டு சாவகாசமாய்த் திரும்பிக் கொண்டிருக்கிறார்.

** இன்றைக்கு திருவரம்பூர் என்றழைக்கப்படுகிறது. திருச்சி - தஞ்சை நெடுஞ்சாலையில் அமைந்துள்ள சைவத்தலம்.*

*** மகாபாரத இராமாயணங்களை ஆரியக் கூத்து என்று அந்நாளில்*

*குறிப்பிடுவது வழக்கம்.*

அவருடன் வந்த மற்ற துழாய்க்குடி* ஊர்க்காரர்களெல்லாம் சீக்கிரமே கிளம்பிவிட்டார்கள் - ஏறக்குறைய மூன்றுகாத தூரம்** நடந்தாகவேண்டுமே ?
அம்பலவாணரையும் கூட வரும்படி அழைத்தார்கள்.

** இந்நாளில் திருச்சிக்கருகில் திருவெரும்பூரிலிருந்து சற்று தள்ளி அமைந்துள்ள துவாக்குடி என்ற ஊர்தான் இது*
*** கிட்டத்தட்ட ஒன்பது கிமீ*

"அடேய் - நீங்கள் ஊரெல்லாம் சுற்றிக் கொண்டு இராஜபாட்டையில் வந்து சேர்வதற்குமுன்பே நான் துழாய்க்குடிக்குச் சென்று சேர்ந்துவிடுவேன்!" என்று அலட்சயமாய் பதிலளித்தார்.

அவர் கூறியதில் தப்பேதுமில்லை. பக்கத்து ஊர்க் கோயில்களில் கூத்துப் பார்த்துவிட்டுத் திரும்புகையில் பெரியவர் ஒருநாளும் இராஜபாட்டைகளை பயன்படுத்தியதில்லை. அந்தப் பகுதி காடு மேடு வாய்க்கால் வரப்பெல்லாம் அவருக்கு அத்துப்படி...
ஆங்காங்கே அடையாளம் வைத்துக்கொண்டு குறுக்கு வழியில் சீக்கிரமே ஊருக்குப் போய்ச் சேர்ந்துவிடுவார். ஆனால் மற்றவர்களுக்கு, பாவம் - அத்தனை தைரியமேது ?
கள்ளர்கள் ஒரு பக்கம், காட்டில் அலையும் விஷ ஜந்துக்கள் - நாய் நரிகள் இன்னொரு பக்கமென்று அவர்களுக்கு பலவித அவஸ்தைகள் ! சற்றுதூரம் அதிகம் நடந்தாலும் பரவாயில்லையென்று இராஜபாட்டையில்தான் வருவார்கள்.

மேலும் கூத்தில் அன்றுதான் விராட பருவம் ஆரம்பமாகியிருக்கிறது. பாரதத்திலேயே மிகவும் ரசமான கட்டம் அதுதான் ! பெரியவர் பாதியில் எழுந்து வந்துவிடுவாரா என்ன ?

சரளைக்கல் பாதையைவிட்டு வயல்வெளிகளுக்கு நடுவே ஒரு பாதை பிரிகிறது.

அம்பலவாணர் ஒரு கணம் நிதானித்தார்.
இந்த இடத்திலா பிரியவேண்டும் ?

பனைமரத்தை அடையாளமாகக் கொண்டோமானால் இதுதான் துழாய்க்குடிக்குச் செல்லும் பாதையாக இருக்க வேண்டும். என்றாலும் நிலவு மேகங்களுக்கு நடுவில் மறைந்துவிட்டதால் வெளிச்சம் அதிகமில்லாமல் இடம் சற்று குழப்பம் கொடுக்கிறது.

கொஞ்ச நேரம்தான்.

அவருக்கு என்றைக்கும் எதிலும் பொறுமை அதிகம் இருந்ததில்லை. நிலவோ வெளியே வரும் வழியாகக் காணோம்...அதனால் விடுவிடுவென்று பாதையில் இறங்கிவிட்டார்.

அவரது மனம் அன்றைய கூத்துப் படலத்திலேயே நிறைந்திருந்தது. அடடா ! அருச்சுனனும் பீமனும் எத்தனை பெரிய வீரர்கள் ! அவர்கள் இப்படி நபும்சகனாகவும் சமையலாளாகவும் ஒரு வருடம் தாக்குப்பிடிக்க
வேண்டுமென்றால் - அதற்கு எத்தனை மனப'பக்குவம் வேண்டும் ! எத்தனை பொறுமை வேண்டும் !

அதிலும் இன்று அருச்சுனனாக கூத்தில் வேஷங்கட்டியவன் மிக அற்புதமாக அந்த நிலைமையை சித்தரித்தான். மனதில் பொங்கிவரும் வீரம் - ஆனால் வெளியே பகிரங்கமாக வெளிப்படுத்தமுடியாத நிலை... ஹ! பாரதம் பாரதம்தான் !

நாளை கீசக வதமல்லவா ? இன்னும் சற்று முன்னரே கோயிலுக்கு வந்து முன்வரிசையில் இடம் பிடித்துவிடவேண்டும். நாள் செல்லச்

செல்ல கூட்டம் அதிகமாகிறதே ஒழிய குறையவில்லை.

அம்பலவாணர் ஒரு கணம் தன்னையே பீமனாக நினைத்துக் கொண்டு தன் எதிரே நின்ற கீசகனை மாரில் மானசீகமாய் எட்டி உதைத்தார் !

கீசகனுக்கு அதிர்ச்சி ! ஒரு சமையல்காரனா நம்மை இந்த அடி அடிப்பது ? சமாளித்துக் கொண்டு எழுந்தால் - மற்றொரு உதை !

இம்முறை கீசகன் கண்களில் சற்று பயம் தென்படுகிறது... ஒரு கணம் யோசித்துவிட்டு வயல்வெளியில் ஓடஆரம்பிக்கிறான் அவன் !அம்பலவாணர் அவனை ஆக்ரோஷத்துடன் துரத்த....

பொறு ! இதென்ன ?

அதற்குள் வயல் முடிந்து காட்டுச் செடிகள் வந்துவிட்டனவே ? துழாய்க்குடிக்குச் செல்லும் பாதையானால் சற்று தள்ளித்தானே காடு ஆரம்பிக்கும் ? சரிதான் - துழாய்க்குடிப் பாதைக்கு சற்று முன்னரே - ஸ்ர்விஜய சதுர்வேதி மங்கலத்திற்கு* அருகே பாதை
மாறிவிட்டோம்
போலிருக்கிறது ?

** அந்தணர்களுக்கு பிரம்மதேயமாய் விடப்பட்ட நிலங்களை சதுர்வேதி மங்கலங்கள் என்று குறிப்பிடப்பட்டன*

ஒன்றும் பாதிப்பு அதிகமில்லை - இப்படியே காட்டுவழியில் சற்று கிழக்கே நடந்தால் துழாய்க்குடி பாதை வந்துதானாகவேண்டும் - என்ன, காடு தவிர இங்கே கொஞ்சம் பொட்டல்வெளி அதிகம். சற்று நிதானித்து நிலத்தில் கால்வைக்க வேண்டும் - விஷஜந்துக்கள் நடமாடும் நேரம்.

அதற்குப் பிறகு அவரது நடை சற்று நிதானத்திற்கு வந்துவிட்டது..."அஞ்சுவ அஞ்சுக"

*********
***************************************************************************
**********

அம்பலவாணன் கம்பன் அரையனார் அத்தனை சீக்கிரம் பராந்தகச் சோழத் தெரிஞ்ச கைக்கோளர் பெரும்படை*யிலிருந்து ஓய்வுபெற்றது சோழதேசத்துக்கு எத்தனை பெரிய இழப்பு ? இருபது வருடங்களுக'குமுன் கிடைத்த அந்த எதிர்பாராத பணி ஓய்வு - அவர் உட்பட - எல்லோருக்குமே சற்று ஏமாற்றம்தான்.

** இப்படைகளைப் பற்றிய குறிப்புக்களை கல்வெட்டுகளில் காணலாம்.*

என்ன செய்வது ? பாண்டிய வீரன் ஒருவனின் எக்கு முனைகொண்ட அம்பு சேவூர் போர்க்களத்தில்* வீராவேசமாய் போரிட்டுக' கொண்டிருந்த இளைஞன் அம்பலவாணனின் வலது தோளருகே இரக்கமில்லாமல் ஆழமாகப் பாய்ந்துவிட்டது !

** இப்போர் ஏறக்குறைய கிபி.950 ல் சோழருக்கும் பாண்டியருக்கும் நடைபெற்றது*

ஒரு கணம் அப்படியே துடிதுடித்துப் போனான் ! முவுலகங்களும் கண்முன் தோன்றி மறைந்தன...அவன் தலைமையில் போரிட்டுக் கொண்டிருந்த சிறுபடையினர் அதிர்ந்துபோய் அரையனைத் தூக்கிக் கொண்டு கூடாரத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

அவ்வளவுதான்.

அத்தோடு ஒரு சுத்த வீரனின் போர்க்கள சகாப்தம் முடிவுக்கு வந்தது. ஒரு திங்கள் கழித்து சற்று தேறியபின் கைகளைத் தூக்க முயன்றால்...
ஒரு அங்குலம் கூட நகர்த்த முடியவில்லை ! அப்படியே நகர்த்தினாலும் தோளுக்குக் கீழ் உயிர் போகிற வலி..

கிளையூர் ஆதுரசாலை வைத்தியர் என்னென்னவோ பிரம்மப் பிரயத்தனங்களெல்லாம் செய்து கொஞ்சம் அங்கும் இங்கும் கைகளை நகர்த்த வழிசெய்து கொடுத்தார். இன்றும் பெரியவரால் ஒரு அளவிற்குமேல் கைகளை உயரே தூக்க முடியாது.

ஒரு வழி அடைபட்டால் - மறு வழி தானே திறக்கிறது!

துழாய்க்குடியில் அரசாங்கத்தால் அறிவிக்கபடாத போர்ப் பயிச்சி ஆசானாய் ஆனார் அம்பலவாணர். இந்த இருபதுவருடங்களில், அவர் பெயரைச்
சொல்லிக் கொண்டு - அந்தப் பகுதியைச் சேர்ந்த - ஏறக்குறைய ஐந்நூறுபேர் - சோழப் படைகளில் சேர்ந்துவிட்டார்கள். இன்று மதுரை, காந்தளூர்ச் சாலை, உதகை என்று எத்தனை இடங்களில் எத்தனை போர்க்களங்களில் அவர் பயிற்றுவித்த வீரர்கள் !

"சங்கிராமப்* பேராசான்" என்ற பெயர் அந்தப் பகுதிகளில் அவர் ஒருவரைத்தான் குறிக்கும்.

** சங்கிராம இலக்கணம் என்றால் போர்ப்பயிற்சி முறை என்று பொருள்.*

*********

***************************************************************************

**********

காட்டு வழியில் நடந்துகொண்டிருந்த அரையனார் சற்று நிதானித்தார்.

இதென்ன ? காட்டில் புரவிச்சத்தம் ?

நமக்குத்தான் கிறுக்குப் பிடித்துவிட்டதா ? இரவில் ஏதாவது மனப்பிராந்தியா ?
இல்லை - இதோ - மறுபடியும் கேட்கிறது ! ஒரு புரவியா - பல புரவிகளா ?

இந்தக் காட்டுப் பாதையில் புரவிகளை விட்டுக் கொண்டு வருவது எத்தனை கடினம் ?
எவராவது இராஜபாட்டையிலிருந்து தூக்கக் கலக்கத்தில் வழிதவறிவிட்டார்களா என்ன ?

அல்லது... ஒருவேளை ? ஒருவேளை ?கள்ளர்களாயிருக்குமோ ?
பலசேகரிகூட கொஞ்ச நாட்களாகவே சதுர்வேதி மங்கலத்தருகில் மர்மமான ஆள்நடமாட்டம் இருப்பதாகச் சொல்லிக்கொண்டிருந்தானே ? நாம் கூட அவன் அனாவசியமாய் புலம்புகிறாயென்று கடிந்துகொண்டோமே ?
அவன் சொல்வதில் கொஞ்சம் உண்மையிருக்கும் போலிருக்கிறருதே...

கள்ளர்கள்தாம் இருக்கவேண்டும். இராஜபாட்டையில் எவரையோ தாக்கிவிட்டு காவலர்கள் துரத்தி வருகையில் குறுக்கு வழியில் புகுந்துவிட்டார்கள் போலிருக்கிறது.

ஓரிரு கள்ளர்களாயிருந்தால் சமாளிக்கலாம் - நான்கைந்’து பேராய் இருந்தால் ?

புரவிகளின் குளம்படிச் சத்தங்கள் நெருங்கிக் கொண்டிருக்கின்றன... ஏதாவது செய்ய வேண்டும் ! இப்போதைக்கு மறைந்து கொள்வதுதான் ஒரேவழியாகப் படுகிறது. யார் எவரென்று நிச்சயப் படுத்திக் கொண்டு வழிதவறியவர்களாக இருந்தால் உதவலாம்.

ஆனால் அவர்கள் வருகிற வேகத்தைப் பார்த்தால்...?

அரையனார் தம் துண்டை இருமுறை உதறி விஷஜந்துக்களில்லையென்று நிச்சயப்படுத்திக்கொண்டு - அருகிலிருந்த அந்தப் பெரும் புதரின் பின் ஒடுங்கினார்.

அது அப்படியொன்றும் அடர்ந்த காட்டுப் பிரதேசமென்று சொல்லமுடிதாது. வயல்வெளிகளை ஒட்டினாற்போல் சிறு மரங்களும் புல்புதர்களும் நிறைந்த பகுதியாகத்தான் தெரிந்தது.

குளம்படிச் சப்தங்கள் மிக அருகில் கேட்கின்றன...

அதோ ! முதலில் ஒரு கம்பீரமான இராஜபோகப் புரவியும் அதன் மேலிருந்தவனும் தெரிந்தார்கள். புரவி வாய்முழுக்க நுரைதள்ளி - மிகமிக களைப்பாய்த் தெரிகிறது.

மேகம் சற்றே பிரிந்து புரவி மேலிருப்பவன் மேல் நிலவொளி ஒருகணம் விழ - ஐயோ ! எத்தனை பயப்பிராந்திகொண்ட முகம் அது !

அப்படியானால்...?

ஆம் - நாம் நினைப்பது சரிதான் - அதோ ! அவனைத் துரத்திவரும் முன்று புரவிகள் !

ஷண காலத்தில் அந்த முன்று புரவிகளும் கடிவாளத்தால் இழுத்து நிறுத்தப்பட - அதில் ஒருவன் முதுகிலிருந்து ஏதோவொன்றை எடுத்து வீசினான்... வளரி*யாயிருக்குமோ ?

** ஓடித் தப்பிப்பவர்களை பிடிப்பதற்கென்றே பயன்படும் ஒருவகை வளைவு ஆயுதம்.*

அது விர்ரென்று ஆவேசமாய் சுழன்றுகொண்டுபோய் முன்னே ஓடிக்கொண்டிருந்தவனின் தலையை வினாடி நேரத்தில் தாக்க -

"அம்மா!" என்று அலறியபடி அவன் புரவிமேலிருந்து கீழே விழுந்தான்.

மற்ற முன்றுபேரும் அவனை வேகவேகமாய் நெருங்கினார்கள்....

அடிபட்டவன் அமர்ந்திருந்த புரவி ஒரு கணம் "பிளீஹிஹி!" என்று கனைத்துவிட்டு - விட்டால் போதுமென்று தலைதெறிக்க ஓடியது.

பெரியவர் துடிதுடித்தார் - அவர் கண்களுக்கு முன்னாலேயே ஒரு அக்கிரமம் நடந்துகொண்டிருக்கிறது.. பார்த்துவிட்டு சும்மா இருப்பதா ?

ஆனால் இப்போது சண்டையில் இறங்குவது சிலாக்கியமானதல்ல என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தது. அடிபட்டவன் மிக மோசமாக களைத்திருக்கிறான் - அவனிடமிருந்து எந்த உதவியையும் எதிர்பார்க்க முடியாது. நம்மிடம் உள்ள குறுவாளையும் ஒன்றுக்கும் உதாவத ஒரு வலது கரத்தையும் வைத்துக் கொண்டு முன்று வீரர்களை சமாளிப்பதென்பது முடியாத காரியம் - அதனால் பொறுமை காக்கத்தான் வேண்டும்.

முவரும் புரவிகளைவிட்டு கீழிறங்கி அவனைச்

சூழ்ந்துகொண்டார்கள். ஒருவன் குனிந்து விழுந்தவனின் இடுப்புக் கச்சு முடிச்சை அவன் திமிரத் திமிர அவிழ்த்து உருவுகிறான் - அதிலிருந்து என்னென்னவோ பொருட்கள் கீழே விழுகின்றன... இங்கிருந்து சரியாகத் தெரியவில்லை.

அவன் மீண்டும் குனிந்து - ஏதோ ஓலைபோல் தெரிகிறது - எடுக்கிறான்.

மூவரும் ஒருவரை மாற்றி ஒருவர் பார்த்துக் கொள்கிறார்கள் - அட, இப்போதுதான் கவனிக்கிறோம் - மூவரும் அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி முகத்தைக் கருப்புத் துணியால் மூடிக்கொண்டிருக்கிறார்களே ?

ஒருவன் இடுப்பிலிருந்து உடைவாளை உருவ -

கீழே கிடந்தவனின் "வேண்டாம் ! வேண்டாம் !" என்ற அலறல் பொருட்படுத்தப்படவேயில்லை.

ஐயோ ! என்ன கொடூரம் ! - வீழ்ந்து கிடப்பவனின் நெஞ்சில் நொடிப் பொழுதில் அந்த நீண்ட வாள் ஆக்ரோஷமாய் பாய்கிறது ! சண்டாளர்கள்... இந்தக் காட்டுவெளியில் - நிராயுதபாணியாக வீழ்ந்து கிடப்பவனின் நெஞ்சில் யோசிக்காமல் ஆயுதம் பாய்ச்சுவதற்கு எத்தனை ஈவிரக்கமற்ற மனம் வேண்டும் ?

"ஆ!" வென்ற அலறல் ஓலி வீழ்ந்துகிடப்பவனிடமிருந்து பரிதாபமாய்க் கிளம்பி அந்த பிராந்தியத்தில் எதிரொலிக்கிறது.. இன்னும் சற்று நேரத்தில் உயிரை விடப்போகிறவனின் கடைசி மரண ஓலம் அது..

பெரியவரால் அதற்குமேல் பொறுமை காக்க முடியவில்லை - "அடேய் !" என்று பெரிதாய் சப்தமிட்டுக் கொண்டே புதரிலிருந்து

நரசிம்மமாய் எழுந்தார்.

மற்ற மூவரும் இதை நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. அதிர்ந்துபோனார்கள் !

ஒரு கணம் - ஒரே ஒரு கணம்தான் அவர்களின் தயக்கம் நீடித’தது. மறு கணம் மூன்று புரவிகள் அந்த இடத்திலிருந்து சிட்டாகத் தெற்குதிசையில் பறந்தன !

பெரியவர் பதைபதைப்புடன் அடிபட்டிருந்தவனை வேகவேகமாய் நெருங்கினார்....

## அம்பலவாணர் ஆவேசம்

சல்லாத் துணியைப்போல் நிலவை மூடியிருந்த மெல்லிய மேகத்திரள் விலக.. அந்த வனாந்திரப் பகுதி மேலும் சற்று வெளிச்சம் பெற்றது. காற்று நின்றுபோய் மரங்களும் செடிகொடிகளும் நாற்திசைகளிலும் உறைந்து கிடந்தன.

தன் கண்களின் முன் வெகு வேகமாய் நடந்துவிட்ட ஒரு கோரச் செயல் அம்பலவாணரை அதிர்ச்சிக்குள்ளாக்கியிருந்தது.

அடடா - தவறு செய்துவிட்டோமே ? அந்தக் கோழைகள் இப்படிச் செய்வார்களென்று நாம் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லையே ? கண்ணிமைக்கும் நேரத்தில் எல்லாம் நடந்துமுடிந்து விட்டது ... முன்பே வெளிப்பட்டிருக்கலாமோ ?

சோழ நாட்டில் இராஜ்ஜிய பரிபாலனம் உருப்பட்டாற்போலத்தான் ! சேரனையும் பாண்டியனையும் திரும்பத் திரும்ப வென்று வந்து என்ன புண்ணியம் ? உள்நாட்டில் - அதுவும் தஞ்சைக்கு

அருகிலேயே இப்படியொரு அக்கிரமம் நடக்கிறது, கேட்பாரில்லை !

அம்பலவாணர் அடிபட்டு வீழ்ந்து கிடந'தவனை சற்று நெருங்கி அவன் தலையை சற்றே உயர்த்திப் பிடித்து மடியில் கிடத்திக் கொண்டார்.

"ஆ...." வென்ற ஹீனமான முனகல் ஒலி அவனிடமிருந்து எழுந்தது.

படுபாவிகள் ! நெஞ்சில் சரியாக இதயத்தைத் துளைக்கும்படி வாளைப் பாய்ச்சியிருக்கிறார்கள்! இரத்த சேதம் வேறு மிக அதிகமாக இருக்கிறது - இவன் பிழைப்பது கடினம்தான்.

முதுகிலிருந்து தென்னங் குடுவையிலிருந்து சற்று நீரை எடுத்து அவன் வாயில் புகட்டினார்.

அவன் லேசாக கண்களை திறந்தான் - ஐயோ... அந்தக் கண்களில் தெரிந்த உணர்ச்சியை எப்படி எழுதுவது ?

மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் பயம் - கடைசி நேரத்திலாவது தனக்கு உதவிசெய்ய யாரோ வந்திருக்கிறார்களே என்கிற நன்றியுணர்வு - ஒரு கால் பிழைத்தாலும் பிழைத்துவிடுவோமோ என்கிற நப்பாசை - இல்லை, இன்னும் சில வினாடிகளில் நாம் உயிர் துறக்கப் போகிறோம் என்கிற அவநம்பிக்கை - எப்படியெல்லாம் வாழ நினைத்தோம் ? இப்படிப் போகிறோமே என்கிறற இயலாமை - சாம்ராஜ்ஜிய சேவையில் கடைசியில் வீரமரணம்தான் அடைந்தோமென்கிற பெருமிதம்...

அம்பலவாணர் அவன் கண்களில் தெரிந்த விதவிதமான உணர்ச்சிகளை தன் உயிர் இருக்கும்வரை மறக்க மாட்டார்.

அவனுக்குள் ஏதோ தோன்றியிருக்கவேண்டும் - இன்னும் அதிக நரேத்திற்கு நாம் உயிரோடு இருக்க மாட்டோம் - அதற்குள் இதோ - இந்தப் பெரியவரிடம் விபரங்களை சொல்லிவிடலாமா ? இவரைப் பார்த்தால் போர்வீரர்போலத்தான் தெரிகிறார்.. நாம் கொண்டுசெல்வது எத்தனை முக்கிய செய்தி.? ஐயோ - எத்தனை பயங்கரச் செய்தி....?

அம்பலவாணர் குடுவையிலிருந்த மீதிநீரையும் அவன்வாயில் புகட்ட - அவன் தன் உடம்பில் மிச்சமிருக்கும் சக்தியை சேமித்துக் கொண்டு பேச முயன்றான் -

வாயிலிருந்து வார்த்தைகள் குழறலாக வெளிப்பட்டதால் அவன் சொன்னது அவருக்கு புரியவில்லை - "விழாவில்" என்று ஏதோ சொல்கிறான் - அப்புறம் குழறிக் குழறி -
"தஞ்ஞையில்......(தஞ்சையில்
?)....சதி.........அரசர்...........பாதுகாப்பத்த...(பாதுகாப்பற்ற
போலிருக்கிறது)...வேளையில்.......படுகொலை !"

அம்பலவாணருக்கு அந்த நேரத்தில் அவன் சொன்னது புரியவில்லை. அவனை துரத்தி வந்தவர்கள் யார் என்று அவன் வாயால் அறிந்து கொள்வதே அவருக்கு முக்கியமான காரியமாக இருந்தது.

"உம்மீது வாளைப் பாய்ச்சிய கொலையாளிகள் யார் ?"

அவன் வெறெங்கோ பார்த்தபடி "சதி.....பயங்கர சதி...அவசரம்..." என்றான்.

எதற்கு சதி சதி என்று புலம்புகிறான் ? அவனைக் கொன்றது சதிகாரர்கள் என்கிறானா ?

"உம்மைக் படுகொலை செய்த கொலையாளிகள் யார் ?" என்றார் மறுபடியும் - சற்றே உரக்க.

படுகொலை என்ற வார்த்தை அவன் உடம்பில் ஒரு நடுக்கத்தை உண்டாக்கியது. அவர் கேள்விக்கு பதிலாக அவன் கரங்கள் வடமேற்கு திசையில் சற்றே உயர்ந்தன...

ஓரிரு கணங்கள் தான். அடுத்த கணம் அம்பலவாணர் மடியிலிருந்த தலை தொங்கியதூ. கைகள் மெதுவாக கீழே சரிந்தன. அந்தக் கடமை தவறாத வீரனின் ஆவி அந்த பிராந்தியத்தை ஒருமுறை ஹூங்காரத்தோடு வலம் வந்துவிட்டு மேலே பிரிந்தது.

அம்பலவாணரின் கண்களில் கரகரவென்று அவரையும் அறியாமல் நீர் கொட்டியது.

"வீரரே ! நீர் வாழ்க ! உமது கடமை தவறாத வீர உணர்வு வாழ்'க ! உமது உடலின்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். உம்மை கோழைகளைப் போல் இப்படிக் கூட்டமாய் வந்து கொன்றவர்களை நீதிதேவதையின்முன் நிறுத்துமுன் இந்த அம்பலவாணன் கம்பன் அரையன் ஓயமாட்டான். இது சத்தியம் !"

கோபாவேசத்துடன் கண்களில் கனல் பறக்க ஓங்கி மண்ணில் மூன்று முறை அறைந்தார் அம்பலவாணர் ! செம்மண் தூசு காற்றில் புகைமண்டலமாய்ப் பரவி எழும்ப... அந்த பிராந்தியமே ஒருமுறை நடுநடுங்கி ஓய்ந்தது.

பொறு ! எப்போதும் போல ஆவேசத்துக்கு இடம் கொடுக்காதே ! இது பொறுமையாய் செயலாற்ற வேண்டிய விஷயம்.

முதலில் இவனுக்கு ஈமக்கிரியைகளை குறைவுபடாமல' செய்ய

வேண்டும். அதற்கு முதலில் ஊர்க்காவல் அதிகாரியை முதலில் அணுக வேண்டும். அதனால் முதலில் இவன் உடலை துழாய்க்குடிக்கு கொண்டு செல்வது நல்லது.

அதற்குமுன் ? அதற்குமுன் ?

அம்பலவாணர் ஏதோ நினைவுக்கு வந்ததைப்போல் அவன் தலையை மண்ணில் கிடத்திவிட்டு அவன் இடுப்புக்கச்சிலிருந்து கீழே விழுந்துகிடந்த பொருட்களை சோதித்தார்.

முக்கியமாய் அவன் கொண்டுவந்த ஓலை பறிபோய்விட்டது. மீதமிருக்கும் பொருட்களிலிருந்து ஏதாவது இவனைப்பற்றி தெரிந்துகொள்ள முடிகிறதாவென்று பார்ப்போம். ஆவேசமாய் சபதம் வேறு செய்தாகிவிட்டது - முதலில் இவன் யாரென்று தெரியவேண்டாமா ?

கொஞ்சம் பொற்கழஞ்சுகளும் மாடை*களும் கிடக்கின்றன - அதனால் துரத்தி வந்தவர்கள் கள்ளர்களில்லையென்பது நிச்சயமாகிறது. அவன் மார்பிலிருந்த முத்துமாலையையும் எடுக்க முயற்சித்ததாக தெரியவில்லை. அப்படியானால் ?

** ஒரு வித நாணயம்*

அதோ சற்று தூரத்தில் கிடப்பதென்ன ? மோதிரம் போலத் தெரிகிறது ? கைகளில் அணிந்துகொள்ளாமல் இடுப்புக்கச்சையில் மோதிரத்தை சொருகிவைத்துக் கொள்வானேன் ?

அம்பலவாணர் அந்த மோதிரத்தை நிலவொளியில் ஆராய்ந்தார். நாகிரி எழுத்துக்களில் ஏதோ கொசகொசவென்று தெரிந்தது. சரிதான். அரசாங்க முத்திரை மோதிரம் போலிருக்கிறது. யாருடைய மோதிரம் - இவன் யாருடைய ஆள் என்பது

தெரியவில்லை. என்றாலும் இந்த மோதிரத்தை வைத்துத்தான் இவனை அடையாளம் கண்டுகொள்ளமுடியும்.

இதனை ஊரக்காவல் அதிகாரியிடம் கொடுக்கத்தான் வேண்டுமா ? கொடுத்தால் அது பல கரங்கள் மாறி தஞ்சை நாடுகாவலதிகாரியிடம் சென’று அவர் விசாரணைப்படை அமைத்து சதிகாரர்களை தேடத்துவங்குவதற்குள்..... நான்கு திங்களாகிவிடும். இடையில் மேலைச் சளுக்கனுடன் போர் ஏதாவது வந்தால் இந்தப் படுகொலையையே ஒட்டுமொத்தமாய் மறந்தாலும் மறந்து விடுவார்கள் !

கூடாது - இதுபோன்ற விஷயங்களில் தாமதமே கூடாது. அதனால’ நாமே செயல்படுவோம்.

மோதிரத்தை பத்திரமாக தனது இடுப்புக் கச்சில் முடிந்துகொண்டார்.

உடலை இங்கே விட்டுவிட்டுச் சென்றுவிட்டு ஆட்களை ஊரிலிருந்து அழைத்து வருவோமா ?

வேண்டாம் - இந்தப் பகுதிகளில் நாய் நரிகள் அதிகம்.

சற்று சிரமம் பார்த்தோமானால் ஒரு மாவீரனின் உடல் சிதைந்து சின்னாபின்னமாகிவிடும். துழாய்க்குடி வரை நாமே தோளில் சுமந்து செல்ல வேண்டியதுதான்.

அம்பலவாணர் உதிரத்தில் நனைந்து சிவந்து பிசுபிசுத்துப் போயிருந்த வேட்டியை இழுத்து வரிந்து முடிந்துகொண்டார். மெய்ப்பையை* கழற்றி அதனையும் இடுப்புக்கச்சாக சுற்றிக் கொண்டார்.

** உடலின்மீது போடப்படும் ஒருவகை சட்டை*

மிகுந்த சிரமத்துடன் ஒற்றைக் கரத்தால் அவன் உடலைத்தூக்கித் தோளில் சார்த்திக் கொண்டு துவரக்குடியிருக்கும் திசையில் விடுவிடுவென்று நடக்கத் தொடங்கினார்.

சற்று தூரத்தில் கொலை செய்யப்பட்டவனுடைய நீண்ட வாளின் பிடி ஒரு புதரிலிருந்து லேசாக எட்டிப் பார்ப்பதை அம்பலவாணரின் அவசரக் கண்கள் கவனிக்கவில்லை.

*************************************************************************
*******************

இரு நாழிகைகள் கழித்து துழாய்க்குடிக்கும் அதன் பக்கலிலிருக்கும் சில சிற்றுர்களுக்கும் ஊர்க்காவலதிகாரியாக விளங்கிய ஆதிச்ச சேர்வைக்காரரின் வீட்டு வாயில் கதவு படபடவென்று தட்டபட்டது.

சேர்வை முதல் நாளிரவுதான் நாகைப்பட்டிணத்திலிருந்து வந்திறங்கியிருந்த பிழி*யை அருந்திவிட்டு போதும் போதாததற்கு பரத்தையேரோடு வேறு சுகித்திருந்துவிட்டு திரும்பியிருந்தபடியால் மிகுந்த அலுப்பிலும் மயக்கத்திலும் இருந்தார். அந்த விடியற்காலை வேளையில் அவரது இன்பகரமான கனவு அகாலமாய் வெட்டுப்பட - தூக்கக் கலக்கத்துடனும் சற்றே எரிச்சலுடனும் "வந்துகொண்டிருக்கிறேனய்யா !" என்று குரல்கொடூத்தார்.

சேர்வைக்கு இதெல்லாம் பழக்கம்தான். ஊர்க்காவலதிகாரியாயிற்றே - நேரமாவது காலமாவது ! எந்நேரமும் யார் வந்தாலும் சந்தித்து என்னவென்று கேட்டுத்தொலைத்துத்தானாக வேண்டும்...

கட்டிலிலிருந்து எழுந்து உட்கார்ந்தால், தலை கிறுகிறுவென்று சுற்றியது. கண்களின் எரிச’சலைப் பற்றி சொல்லவே வேண்டாம்...

இமைக்கவே முடியவில்லை.

கொஞ்சம்போல தலையை அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திருப்பி தாம் எந்த உலகத்திலிருக்கிறோம் என்பதை ஒருமுறை நிச்சயம் செய்துகொண்டார் சேர்வை.

பாழாய்ப்போன யவன நாட்டுப் பிழி ! என்ன சொன்னாலும் கேட்காமல் ஒவ்வொரு முறையும் கூடைகூடையாய் இறக்கிவிட்டுப் போய்விடுகிறார்கள் இந்த சித்திரமேழிப் பெரியநாட்டு** வணிகமகாஜனங்கள்.

** கள்*

** நெல்லூரில் குடிகொண்டு வெளிநாடுகளில் வாணிபம் செய்துவந்த ஒரு பிரபல வணிகக் குழு*

அவர்கள் கொடுத்தால் ? நமக்கெங்கே போயிற்று புத்தி ? பேசாமல் நடுவிருக்கை* பெரியவர்கள் யாருக்காகவாவது தானம் செய்துவிட்டுப் போகிறது....

** பஞ்சாயத்தார்*

நாளை யார்கண்களில் படுகிறோமோ இல்லையோ - ஆசான் கண்களில் மட்டும் பட்டுத்தொலைக்கக் கூடாது. கலங்கிய கண்களை வைத்தே கண்டுபிடித்துவிடுவார். ஒருவேளை கண்டுபிடித்துவிட்டால்..கண்டபடி வசவுதான் ! நம் உடல் நலத்தின்மேல் நம்மைவிட அவருக்கு அக்கறை... என்ன செய்வது ? பாழாய்ப் போன ஆசை நம்மை விடமாட்டேன் என்கிறது...

தள்ளாடியபடியே ஒரு மெல்லிய நந்தா விளக்கு வெளிச்சத்தின் துணையோடு தாழ்வாரத்தைக் கடந்த சேர்வை எதிர்பாராமல் திடீரென்று முளைத்த மேற்கு மூலைத் தூணொன்றில் படீரென்று

மோதிக்கொண்டார் !

கடவுளே... இடது தோளில் பிரானன் போகிற வலி....

சப்தம்வேறு தொடர்ந்து கேட்கிறது... சற்று விட்டால் பாழாய்ப்போன கதவை இடித்தே உடைத்துவிடுவார்கள் போலிருக்கிறது... "அடே, வருகிறேனென்று சொல்லவில்லை - அப்படியென்ன அவசரம் ? விளக்கேற'றிக் கொண்டு வருகிறேன்"

கதவைத் திறந்தவர் சற்றே விளக்கை உயர்த்திப் பிடிக்க - அம்பலவாணர் ! சிவ சிவா !

ஆனால் அம்பலவாணர் தன்னை கவனிக்கும் நிலையில் இல்லையென்பதை சேர்வை உணர சற்று தாமதமாயிற்று... இதென்ன - கறுப்பு வேட்டியா உடுத்திக் கொண்டிருக்கிறார் ? அடக்கடவுளடே... கறுப்பில்லை - சிவப்பு ! வேட்டி முழுக்க இரத்தக்கறையா என்ன ?

அதற்குள் அம்பலவாணர் தன் தோளிலிருந்த உடலை சேர்வைவீட்டுத் திண்ணையில் கிடத்திவிட்டு சற்று ஆசுவாசப் படுத்திக் கொண்டார்.

"ஆசானே - என்ன இது கோலம் ?"

"ஆதிச்சா - எல்லா விபரமும் சொல்கிறேன். முதலில் கொஞ்சம் நீரெடுத்துக் கொண்டுவா - மிகுந்த தாகமாய் இருக்கிறது..."

சேர்வை அருகிலிருந்த வேளக்காரன் ஒருவனை எழுப்பி வெந்நீர் தயாரிக்கச் சொல்லிவிட்டு நீர் எடுத்துக் கொண்டு வந்தார். அம்பலவாணர் இரு சொம்பு நீர் அருந்தியபின்தான் சற்று நிதானத்திற்கு வர முடிந்தது.

"ஆதிச்சா - எறும்பியூர் மகாதேவர் கோயிலில் கூத்துப் பார்த்துவிட்டு குறுக்குப் பாதையில் திரும்பிக் கொண்டிருக்கும்போது ஸ்ர்விஜயச் சதுர்வேதி மங்கலத்திற்கருகில் இவனை என் கண்முன்னாலேயே மூன்று பேர் கொன்றுவிட்டார்கள். யார் பெற்ற பிள்ளையோ - நமது பகுதியில் வந்து உயிர் பரோகவேண்டுமென்று விதியிருந்திருக்கிறது... இந்த வீரனுக்கு அந்திமக் கிரியைகளை குறைவுபடாமல் நீதான் செய்யவேண்டும். நான் உடனடியாக தஞ்சைக்குச் சென்று அரண்மனையில் விபரம் சொல்கிறேன்..."

"அடக் கடவுளே...கொலையாளிகள் யாரென்று அடையாளம் தெரிந்ததா ?"

"தெரியவில்லை - நான் குரல் கொடுத்தவுடன் தப்பிச் சென்றுவிட்டார்கள்.."

"நாசமாய்ப் போயிற்று !" என்றார் சேர்வை. இந்த அநாமதேயக் கொலையைப்பற்றி நாடுகாவலதிகாரி கேட்கப்போகும் நூற்றுக்கணக்கான கேள்விகள் அவர்முன் நிழலாடின. எப்படி சமாளிக்கப் போகிறோம் என்ற கவலையில் அவர் மனம் ஆழ்ந்தது.

"ஆசானே - தஞ்சைக்கு நீங்களே நேரில் செல்லவேண்டுமா என்ன ? நான் வேண்டுமானால் வேறு ஆட்களை அனுப்பவா ?"

"வேண்டாம் - எனக்கு தஞ்சையில் வேறுசில வேலைகளும் உள்ளன - நானே செல்கிறேன்..."

அம்பலவாணர் தஞ்சைக்குச் தான் செல்லும் நோக்கத்தையோ இறந்தவன் கடைசி கணங்களில் சொன்ன செய்தியையோ மோதிர விஷயத்தையோ சேர்வையிடம் பிரஸ்தாபிக்கவில்லை. ஆதிச்ச சேர்வையிடம் எந்த இரகசியமும் தங்காது. பிழியருந்திவிட்டு

ஏதாவது தளிச்சேரிப் பெண்டிடம்* தன் அந்தரங்க செய்திகளையெல்லாம் உளறிக் கொண்டிருப்பார் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

** கோயில் நடன மாதர்கள்'*

"தஞ்சைக்குச் சென்றால் உங்கள் பெயர்த்தியை என்னிடம் விட்டுவிட்டுச் செல்லுங்கள் ஆசானே !"

"அந்த விவகாரமே வேண்டாம் - அந்தக் குழந்தை செங்கமலம்தான் எனக்கு இந்த பூமியிருக்கும் கடைசிப் பந்தம். அவளை நீ சரியாக கவனித்துக் கொள்ள மாட்டாய். பிழியருந்தத் தொடங்கிவிட்டாயானால் உலகத்தையை மறந்து விடுவாய் - வேண்டவே வேண்டாம் ! நான் அவளையும் என்னுடன் அழைத்துக் கொண்டே செல்கிறேன்.."

"அது சரி - ஐப்பசி சதய நாள் விழா நெருங்கிக் கொண்டிருக்கிறதே - தஞ்சையில் கூட்டம் அதிகமாயிருக்குமே - அந்தக் கூட்டத்திலா குழந்தையை அழைத்துப் போகப் போகிறீர் ?"

அம்பலவாணருக்கு உள்ளுக்குள் பளீரென்று ஒரு மின்னல் மின்னிற்று - விழா ! சதய நாள் விழா ! அப்படியானால் ? இறந்த வீரன் குறிப்பிட்டது இந்த விழாதானோ ? அடடா - தஞ்சைக்கு உடனடியாக செல்ல வேண்டுமே ?

"ஆம் - ஆதிச்சா - அவசரமாய் ஒரு புரவி கிடைக்குமா ?"

"செங்கமலத்தை கூட்டிச் செல்லப் போகிறேன் என்கிறீர் - அவளைப் புரவியில் வைத்துக் கொண்டு நெடுதூரம் பிரயாணம் செய்தீர்களானால் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. பேசாமல்

இராஜபாட்டைக்குச் சென்று அங்கிருந்து சாத்துக்கூட்ட வண்டி**யொன்றில் ஏறிச் செல்லுங்கள் - நானும் வழியனுப்ப வருகிறேன் - முதலில் அகத்திற்குள் வந்து குளித்துவிட்டு புத்தாடை மாற்றிக் கொள்ளுங்கள். அடே - சுடுநீர் தயாராகிவிட்டதா?"

*** வணிக மூட்டைகளை சுமந்து செல்லும் வண்டி*

*************************************************************************
*******************

குழந்தை என்று அம்பலவாணர் குறிப்பிட்ட செங்கமலத்திற்கு எட்டு பிராயம் முடிந்துவிட்டது - என்றாலும் இன்னும் அவள் குழந்தைதான். நடையில் உள்ள துள்ளல் என்ன - சிரிக்கச் சிரிக்க மழலை மாறாமல் பேசும் பேச்சு என்ன -

அம்பலவாணரை இந்த உலகத்தில் ஆட்டி வைக்கக்கூடிய ஒரே சக்தி செங்கமலம். அவருக்கென்றில்லை - துழாய்க்குடிக்கே அவள் செல்லக் குழந்தை.

அவர் இல்லாத நேரங்களில் செங்கமலத்தைப் பார்த்துக்கொள்ள ஒரு கிழவியை வேலையில் அமர்த்தியிருந்தார் அம்பலவாணர். மாலையில் கூத்துக்கு கிளம்புமுன் குழந்தையை தூங்கச் செய்ய அவர் பட்ட பாடு இருக்கிறதே - அப்பப்பா !

மிக மோசமாய் களைத்திருந்த உடம்புக்கு அதிகாலை வெந்நீர் என்ன இதமாய் இருக்கிறது ? வேட்டி மாற்றிக் கொண்டு நான்கு தெரு தள்ளி அமைந்திருக்கும் தன் அகத்திற்குச் சென்று குழந்தையை எழுப்பிக் குளிக்கவைத்துவிட்டுக் கிளம்ப வேண்டும்.

ஆதிச்சன் இதற்குள் நான்கு திசைகளிலும் ஆளனுப்பியிருப்பான்.

நாளை எல்லா வேலைகளும் துழாய்க்குடியில் முடிந்துவிடும். எங்கோ பிறந்து சோழதேசத்துக்காக உயிரைக் கொடுத்தவன் துழாய்க்குடியில் அடக்கமாகிவிடுவான். நடுகல்லுக்கு* ஏற்பாடு செய்ய வேண்டும். அவன் கீர்த்தியை கல்லில் பொறித்து வைக்க வேண்டும்.

** ஊருக்காக / நாட்டுக்காக வீரமரணம் அடைந்தவர்களின் நினைவாக நடப்படும் ஒரு கல்.*

ஆனால் இதையெல்லாம் பிற்பாடு வைத்துக் கொள்ளலாம். முதலில் அவன் சொன்ன இரகசியச் செய்தியை தஞ்சையில் உரியவர்களின் காதுகளில் சேர்ப்பிக்கவேண்டும் - அதற்கடுத்து கொலையாளிகளை கண்டறிந்து அவர்கள் தோலை உரித்து...

தலையை ஒருமுறை சிலுப்பிக் கொண்டார் அம்பலவாணர். அடுத்து வரப்போகும் சில நாட்களுக்கு தனக்கு நிம்மதியான உறக்கமில்லை என்பதை அவருடைய சிவந்த விழிகள் உணர்ந்தன.

மாராயர் கவலை

தஞ்சை மாமணிக்கோயிலை*யொட்டிய அரிகுலகேசரி பேரங்காடித் தெருவின் முனையில் அமைந்திருந்தது சோழ சாம்ராஜ்ஜிய சேனாதிபதி குரவன் உலகளந்தானான இராஜராஜ மாராயரின் உய்யக் கொண்டான் திருமாளிகை.

** நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இடம்பெற்றிருக்கும் இக்கோயிலை இன்றைய தேதியில் உறுதியாய் அடையாளங்காண முடியவில்லை*

அந்தப் பின்மாலை நேரத்திலும் மாளிகையில் பரபரப்பிற்குக்

குறைவில்லை. இருள் சூழும் நேரம் நெருங்கிவிட்டதால் மாளிகையெங்கும் நந்தா விளக்குகளை ஏற்றிவைக்கும் பணியில் சில பணியாளர் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தனர். திருவாயில் வேளத்தார் பலரும் தங்கள் பணியை முடித்துக்கொண்டு இராக்காவலுக்கு வருவோரிடம் தங்கள் வாளையும் வேலையும் ஒப்புவித்துக்கொண்டிருந்தார்கள்.

மாளிகையின் கிழக்குத் திட்டிவாசலையொட்டி ஒரு சிறிய உத்தியான நந்தவனம் அமைந்திருந்தது. செடிகொடிகள் நிறைந்திருந்ததாலோ என்னவோ அது மற்ற பகுதிகளைவிட சற்றே இருளடைந்து காணப்பட்டது. அந்த வனத்தின் மையப்பகுதியில் அமைந்திருந்த மண்டபத்தின் திட்டிக்கல் மேடையில் கைகளை கன்னத்தின் மேல் வைத்தபடி கவலையே உருவாய் உட்கார்ந்திருந்தார்’ சோழசாம்ராஜ்ஜியத்தின் மகாசேனாதிபதியான இராஜராஜ ராஜ மாராயர்.

சாம்ராஜ்ஜியத்தின் நீள அகலங்களை திட்டவட்டமாக அளந்து விளைநிலைம் இவ்வளவு, அதில் நன்செய் - புன்செய் இத்தனை வேலி, காட்டு நிலம் இவ்வளவு, தேவதான இறையிலி நிலம் இவ்வளவு என்று வரையறுத்துச் சொன்னதினால் உலகளந்தான் என்ற பட்டம் பெற்றவரும் பலப்பல போர்களில் சிறப்பாக தன் வீரத்தை நிலைநாட்டி இராஜராஜ ராஜ மாராயர் பட்டம் பெற்றவரும் சோழ மண்டலத்தில் மிகுந்த அரசியல் செல்வாக்கு பெற்ற குறிப்பிட்ட பெருந்தரத்து அதிகாரிகளில் ஒருவருமான மாராயரை நாம் அவரை சந்திக்கும் வேளை அவ்வளவு சிலாக்கிமான நேரமல்ல என்பதை அவரது முகம் தெள்ளத் தெளிவாகவே காண்பிக்கிறது.

என்றாலும் நுழைந்தாயிற்று - இனி ஒன்றும் செய்வதற்கில்லை...

நரைத்துப் புரையோடி முகத்தின் இருபக்கங்களிலும் நீண்டிருந்த

மீசை லேசாகத் துடித்துக் கொண்டிருக்க... கவலை தோய்ந்த கண்களும் கீழே தாழ்ந்த பார்வையும் அவரது ஆழ்ந்த சிந்தனையை சற்று அதிகமாக்கிக் காட்டுகின்றன.

அவரை அந்த நிலையில் தொந்தரவு செய்ய அஞ்சியோ என்னவோ உத்தியான வனத்தின் மலர் செடிகொடிகளும் மரங்களும்கூட கொஞ்சநேரமாய் திடுக்கிட்டதுபோல் ஸ்தம்பித்து அவரையே பார்த்தவண்ணம் உள்ளன.

மாராயரை பல்வேறு அரசியல் கவலைகள் விடாமல் துரத்தியவண்ணம் இருக்கும். ஒன்று போனால் மற்றொன்று. ஒரு பிரச்சனை தீர்ந்தால் அது மற்றொரு குட்டியை ஈன்றுவிட்டுத்தான் போகும். இந்த ஓயாத போராட்டத்தில் ஏறக்குறைய வாழ்க்கை முழுவதையும் செலவழித்துவிட்டு தற்போது களைத்து ஓய்ந்துவிட்டார் மாராயர்.

பணிஓய்வு பெற்று சொந்த ஊரான பழுவூருக்குச் சென்று திருத்தோற்றமுடையார் கோயில் கைங்கரியத்தில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளவேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கிறார்.....

ரொம்ப காலமாக நினைத்துக் கொண்டே...யிருக்கிறார் ! நடந்த பாடில்லை.

மாராயரை அனுப்பிவிட'டால் அவருடைய பணிகளைத் தொடர ஒருவரையல்ல - ஒன்பது பேரை அமர்த்தியாக வேண்டும். அதுவும் நம்பகமான ஆட்களாக, சாமர்த்தியமானவர்களாக, எல்லா விபரங்களும் தெரிந்தவர்களாக.... இந்த நடைமுறைச் சிக்கல்களுக்கெல்லாம் சோழப் பேரரசர் உடையார் ஸ்ர் இராஜராஜ சோழதேவர் தயாரில்லை. எப்போது கேட்டாலும் "இராஜராஜீஸ்வரத்தின் வேலைகள் முடியட்டும் - மறுநாளே உம்மை

குழந்தை குட்டிகளோடு அனுப்பிவைத்துவிடுகிறேன் !" என்பார்.

அந்த மாபெரும் கோயில் முடிவதேது ? மாராயர் கிளம்புவதேது ?

மாராயருடைய தற்போதைய கவலை கொல்லி மழவர் ஒற்றியூரரான பிருதிகண்டவர்மர் அனுப'பியிருந்த மிக மிக முக்கிமான ராஜாங்க செய்தியைப் பற்றியது. விஷயம் மிகவும் அந்தரங்கமானது - மிக இரகசியமானது - அவசரமானது - என்பதால் மாராயருடைய பிரத்யேக ஒற்றன் ஐங்கரனிடமே கைப்பட செய்தியை கொடுத்தனுப்புவதாக மழவர் முறி* யனுப்பி ஒரு பக்கத்திற்கு** மேலாகிறது.

** சிறிய ஓலை*
** 15 நாட்கள்*

ஐங்கரனும் நான்கு நாட்களுக்கு முன் கோனாட்டுத் தலைநகர் கொடும்பாளுரிலிருந்து செய்தி அனுப்பியிருந்தான் - இன்னும் இரண்டு நாட்களில் தஞ்சை வந்துவிடுவதாக. அதற்கப்புறம் ஆளையே காணவில்லை ! மேற்கொண்டு செய்தியுமில்லை !

ஒற்றன் ஒன்று குறித்த நேரத்தில் வரவேண்டும் - அல்லது தாமதமாகிறது என்று செய்தியாவது அனுப்ப வேண்டும். இரண்டும் இல்லையென்றால் அவனுக்கு ஆபத்து என்பதுதான் ஒரே அர்த்தம்.

மாராயர் இரண்டு நாட்கள் பொறுத்திருந்து பார்க்கலாம் என்று தீர்மானித்தார் - இதோ, அந்தக் கெடு முடிந்துவிட்டது. மேற்கொண்டு என்ன செய்வதென்று தெரியவில்லை.

காணாமல் போகும் ஒற்றர்களை தேடுவதென்பது மிக மிகக் கடினமான காரியம். சற்று அஜாக்கிரதையாயிருந்தாலும் பலருக்கும் விஷயம் தெரிந்துபோய் காரியம் அடியோடு நாசமாகிவிடும்.

ஒற்றர்கள் ஊருக்கு ஊர் பெயர் மாற்றி வைத்துக் கொள்வதால் ஏற்படும் குழப்பம்' வேறு. அதனால் மிகுந்த அனுபவ ஞானமும் அரசியல் விவேகமும் உள்ள ஒருவரை பிரத்யேகமாக அனுப்பி காதும் காதும் வைத்தாற்போல் தேடுதலை துவங்கவேண்டும்...

யாரை அனுப்பலாம் ? சை, சட்டென்று மனதிற்கு எதுவும் தோன்றமாட்டேனென்கிறது - நமக்கு வயதாகிவிட்டதுதான் காரணமா என்ன ?

மழவருக்குவேறு மறுபடி செய்தியனுப்பி ஐங்கரன் தஞ்சை வந்து சேரவில்லையென்பதை தெரிவிக்க வேண்டும். அவசரச் செய்தி என்றார். புதிதாய் ஆள் அனுப்பி கொல்லி மலையிலிருந்து பதில் பெற்று வருவதற்குள் இன்னொரு பக்கமாகிவிடும் - அதற்குள்... அதற்குள் விபரீதம் எதுவும் நேராமல் இருக்க வேண்டும் !

ஆண்டவனை பிரார்த்தித்துக்கொள்ள வேண்டியதுதான் ஒரே வழி ! வேறென்ன செய்வது ?

கொங்குநாட்டு வேந்தர் தேவையில்லாமல் செய்தியின் முக்கியத்துவத்தை பெரிதுபடுத்தியிருக்க மாட்டார் என்பதை மாராயரின் அனுபவம் உணர்த்தியது. அது எம்மாதிரியான செய்தியாயிருக்கும் என'பதைக்கூட அவரது பழுத்த அரசியல் அறிவால் அனுமானிக்க முடிந்தது. மழவர் சேர நாட்டிற்கு அருகிலேயே உள்ளவரென்பதால் செய்தி அநேகமாக சேரனைப்பற்றியதாகத்தான் இருக்குமென்று ஊகிக்கலாம். அல்லது சேரநாட்டில் எலிகளைப்போல் பதுங்கியிருக்கும் அமரபுஜங்கப் பாண்டியன் கூட்டத்தார் பற்றியதாகவும் இருக்கக்கூடும்.

படையெடுக்கும் தைரியமோ பலமோ தற்போது அவர்களுக்கில்லை - அதனால் ஏதாவது சதிச்செயலில் ஈடுபடலாம். ஆனால் எம்மாதிரியான சதிச்செயல் என்று ஒரு துப்புக்கூட கிடைக்காமல்

ஒற்றும் செய்ய முடியாதே ?

என்ன - மிஞ்சிமிஞ்சிப் போனால் அரசரின் உயிரைக் குறிவைப்பார்கள். ஆனால் அது நடக்காத காரியம். தற்போது மிகுந்த வற்புறுத்தலுக்குப் பிறகு பெரிய தேவர் திருமெய்க்காப்புப் படையை* இரட்டிப்பாக்குவதற்கு சம்மதித்துவிட்டார். அதனால் தொடர்ந்து நாளின் இரு பொழுதுகிலும்** கடுமையான பாதுகாப்பு.

அந்தக் கடுமையான மெய்க்காப்புப் படையையும் அரண்மனையைக் காவல்புரியும் வேளக்காரப் படை***யையும் தாண்டி வந்து ஒரு வேற்றாள் அவரை நெருங்குவதென்பதுகூட இயலாத காரியம்.

** அரசர் மற்றும் உயரதிகாரிகளை பாதுகாக்க அமைக்கப்பட்ட பிரத்யேக மெய்க்காவல் படை.*
*** சோழ இராஜ்ஜியத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற’றிருந்த காவற்படை - இராஜ அரண்மனை முதலான முக்கிய இடங்களின் காவலை*
*இவர்கள் ஏற்றார்கள்.*
**** 1 பொழுது என்பது நான்கு ஜாமம். 2 பொழுது ஒரு நாள்.*

ஆனால் அதற்காக அலட்சியமாக இருந்துவிட முடியாது. கொல்லிமழவர் அனுப்பிய செய்தியைப் பற்றிய நமது அனுமானங்களும் சரியென்பது என’ன நிச்சயம் ? அதனால் கொங்கு நாட்டிற்க்கு உடனடியாக முறிகொடுத்தனுப்ப வேண்டும். அதைவிட முக்கிய விஷயம் ஐங்கரனை தேட ஆவன செய்ய வேண்டும். சுத்த வீரன்... பாவம், என்ன ஆயிற்யோ ?

ஒரு கணம் மாராயர் மெய் நடுங்கிற்று... அப்படியிருக்குமா ? ஒருவேளை ஐங்கரன் எதிர்பாராத விதமாக எதிரிகளிடம் சிக்கிக்கொண்டு - ஐயோ ! என் மிகச்சிறந்த ஒற்றனை இழந்துவிடுவேனோ ? சிறுவயதிலிருந்து பிள்ளை போல் எடுத்து

**வளர்த்தேன்... காணவில்லையென்றவுடன் மனது அலைபாய்கிறது...**

**மாராயா - பொறு! ஏன் கண்டதையும் நினைத்துக் கலங்குகிறாய் ? அவனுக்கு ஒன்றும் ஆகியிருக்காது. ஏதாவது சுரம் வந்து இடையில் மாட்டிக் கொண்டிருப்பான் - வீணாக கவலைப்படாதே - வந்துசேர்ந்துவிடுவான்!**

**என்றாலும் தேடாமலிருக்க முடியாது. யாரையாவது கொடும்பாளூர் - திருச்சீரபுரம்* பாதையில் அனுப்பி விசாரிக்க வேண்டும். அதிலும் ஐங்கரன் இராஜபாட்டையில் பயணித்திருக்க மாட்டான் என்பதால் அருகிலிருக்கும் கிராமங்களிலெல்லாம் சந்தடி செய்யாமல் விசாரிக்க வேண்டும்.**

**** இன்றைய திருச்சி***

**யாரை அனுப்புவது ? அதுதான் இப்போது பெரிய பிரச்சனை..... தளிக்குளத்து ஆண்டவனே - நீர்தான் எனக்கொரு வழிசொல்ல வேண்டும்.**

**அவரது வேண்டுகோள் ஏற்கப்பட்டதற்கு அறிகுறியாக தஞ்சை தளிக்குள நாதர் கோயிலின்* சந்திகால பூஜை மணி "டாங் டாங்" என்று சிலமுறை அடித்து ஓய்ந்தது.**

**மண்டபத்தின் வாயிலில் நிழலாடுகிறது - திருவாயில் வேளத்தான்**.**

***** நமது கதை நடக்கும் காலத்தில் மிகச் சிறப்பாக பிரசித்தி பெற்றிருந்த இந்தத் திருக்கோயில் இன்றைய தேதியில் இருந்த சுவடு தெரியாமல் மறைந்துவிட்டது***
***** வேலைக்காரன்***

**"ஐயா - பேரந்தளகப் படைத்தலைவர் குருகாடியுர் பரமன்**

மழபாடியாரான மும்முடிச் சோழர் தங்களைக் காண வந்துகொண்டிருக்கிறாராராம்...அவருடைய மெய்க்காவல் வந்து சொல்லிவிட்டுப் போனான்..."

பளிச்சென்று மாராயருக்கு ஒரு ஒளி தோன்றி மறைந்தது. அவரது கவலைதோய்ந்த முகம் உடனே சற்று பிரகாசமாகி "வந்தவுடனே உத்தியான வனத்துக்கு அனுப்பு !" என்றார்.

அவருக்கு ஐங்கரனைத் தேட யாரை அனுப்புவதென்பது தெரிந்துவிட்டது. மீண்டும் ஒருகணம் தளிக்குள நாதரை மனதில் நிறுத்தினார்.

"வழிகாண்பித்தீர் சிவனே - உமக்கு வந்தனம்."

**************************************************************************
*******************

"வருக வருக மாவீரனே - இந்த ஏழையின் குடிலில் உன் வரவு நல்வரவாகுக !"

"உய்யக்கொண்டான் திருமாளிகை உமக்கு ஏழையின் குடிலைப்போல் தெரிகிறதா ? உத்தியான வனத்தை அடைவதற்குமுன்பே மூன்று சுற்றுக்களையும் ஏழு திருவாயில்களையும் கடக்க வேண்டியிருக்கிறது... சோழ சாம்ராஜ்ஜியத்தின் மகாசேனாதிபதியாரே ! நன்றாக இருக்கிறது உமது பேச்சு...?"

மாராயர் சிரித்தார் - "ஏதோ பேச்சுவாக்கில் சொன்னதைக்கூட விடமாட்டாயே - பாகிநாட்டிலிருந்து ஒரு வாரத்திற்குமுன் திரும்பிவிட்டதாகக் கேள்விப்பட்டேன் - இன்றுவரை இந்தப் பக்கம்

உன்னைக் காணாதிருக்கவே நீயும் மற்றவர்களைப்போல் இந்தக் கிழவனை மறந்துவிட்டாயோ என்று நினைத்தேன்...அருகே இப்படி வந்து அமர்ந்துகொள்.."

"உமது குத்தல்' பேச்சை விடமாட்டீர் - தஞ்சை வந்திறங்கியவுடன் குருகாடியில் சில அவசர வேலைகளிருந்தன - மனைவி மக்களைப் பிரிந்து ஒரு அயனம்* ஆகிறதய்யா !"

** 6 மாதங்கள்*

மாராயரை நெருங்குகையில் மழபாடியார் அவரது பாதங்களைத் தொட்டு வணங்கினார். மாராயர் அவரது சிரசை இருகரங்களால் தூக்கி நிறுத்தி ஆசீர்வதித்தார்..

"அன்னை நிசும்பசூதனியின் அருளால் நீயும் உன் குடும்பமும் நன்றாக இருக்க வேணும் !"

"சோழ சேனாதிபதியின் முகம் வாடிக் கிடக்கிறதே - எல்லாம் வல்ல உலகளந்த பெருமாளுக்கே சோதனையா ?"

உலகளந்தான் என்ற பட்டம்பெற்ற சேனாதிபதியை மூவுலகையும் தன் பாதங்களால் அளந்த வாமனருடன் ஒப்பிட்டு உலகளந்த பெருமாள் என்று கிண்டல் செய்வது மழபாடியாரின் வழக்கம். அவர்களது பத்தாண்டு சிநேகிதத்தில் இதுபோன்ற கிண்டலும் கேலியும் மிக அதிகம். அடுத்தவர்களுக்கு இவர்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்பதே சிலநேரங்களில் சரிவர புரியாது.

"அதை ஏன் கேட்கிறாய் ? இரண்டுநாட்களாக ஒரு முக்கிய பிரச்சனை வாட்டியெடுத்து வருகிறது..."

"தயவு செய்து அந்த பிரச்சனையை என் தலையில் கட்டிவிடலாம்

என்ற நினைப்பிருந்தால் அதை இந்தக் கணமே விட்டுவிடும். ஒவ்வொரு முறையும் நான் சந்திக்க வரும்போது ஏதாவது தெருவில் போகும் ஓணானை மடியில் கட்டிவிடுவதே உமக்கு வேலையாகிவிட்டது... நான் தற்போது விடுப்பில் வந்திருக்கிறேன் ஐயா - குழந்தை குட்டிகளோடு சற்று நேரத்தைக் கழிக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கிறேன் - கெடுத்துவிடாதீர் !"

மழபாடியார் இப்படி அலுத்துக்கொண்டாலும் அதற்கு உண்மையான அர்த்தம் வேறு. அதனை மாராயர் அறிவார்.

"கொங்கு நாட்டின் சிற்றரசர் கொல்லி மழவர் ஓற்றியூரானான பிருதிகண்ட வர்மரை அறிவாயல்லவா ? அவருக்கு சேர தேசத்தில் தொடர்புகள் அதிகம். காந்தளூர் மற்றும் உதகைத் தாக்குதல்களுக்குப் பிறகு சேர- பாண்டியரின் இரகசியத் திட்டங்கள' பலவற்றையும் எனக்கு தகுந்த நேரங்களில் சொல்லியிருக்கிறார். அவற்றில் பெரும்பாலானவை மிக நம்பகமான தகவல்கள்... போலிப் பொற்கழஞ்சுகளை குடந்தை ராஜாங்கக் கம்பட்டத்தில்* கலந்தது.... அமண்குடி கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மராயரை விஷம் வைத்துக் கொல்ல முயன்றது... என்மீதும் ஒரிரு கொலைமுயற்சிகள் என்று சொல்லிக்கொண்டே போகலாம்..."

** பொற்காசு வார்ப்படச் சாலை. கும்பகோணத்தில் இத்தகைய கம்பட்டமொன்றும் அதனையொட்டிய கோயிலும் அக்காலத்தில் இருந்தன. தற்போது இந்த இடத்தில் கம்பட்ட விஸ்வநாதர் கோயில் என்ற பெயரில் கோயில் மட்டுமே எஞ்சியிருக்கிறது.*

"சரிதான்.."

"அவர் ஒரு பக்கத்திற்குமுன் இரகசிய முறியொன்றை

அனுப்பியிருந்தார். அதில் முக்கிய செய்தியொன்றைக் கண்டறிந்திருப்பதாகவும் அது பிரத்யேக ராஜாங்க இரகசியமாகையால் என் நம்பிக்கைக்குகந்த ஒற்றன் ஐங்கரன் மூலம் செய்தியை கைப்படக் எழுதிக் கொடுத'தனுப்புவதாகவும் சொல்லியிருந்தார். அதன்படியே ஐங்கரனும் கிளம்பி கொடும்பாளுர்வரை வந்துவிட்டதாக நான்கு நாட்களுக்கு முன் எனக்குச் செய்தியனுப்பியிருந்தான்.

மிஞ்சி மிஞ்சிப் போனால் கொடும்பாளுரிலிருந்து தஞ்சைக்கு புரவியில் வர இரண்டு அல்லது மூன்று நாட்கள்தான் ஆகும். ஆனால் நான்கு நாட்களாகியும் ஐங்கரன் வந்து சேர்ந்தபாடில்லை - அவனிடமிருந்து மேற்கொண்டு செய்தியுமில்லை. கொல்லிமழவர் அனுப்பியிருப்பது அவசரச் செய்தியாகையால் ஐங்கரன் அனாவசியமாக தாமதிக்கக் காரணமில்லை.
அப்படி ஒருவேளை தாமதமானாலும் மறக்காமல் செய்தியனுப்பிவிடுவான். இரண்டும் இல்லையாதலால் அவனுக்கு என்ன ஆகியிருக்குமோ என்று மனது பதைபதைக்கிறது.."

"தேடுவதற்கு ஆளனுப்பியிருக்கிறீரா ?"

"இல்லை. என் வழக்கமான ஆட்களை அனுப்பினால் விஷயம் நிச்சயம் வெளியே கசிந்துவிடும். அனாவசியமான சந்தேகங்கள் கிளம்பும். சதயநாள் விழாவுக்கு இன்னும் ஐந்து தினங்களே உள்ளன - இந்நிலையில் எந்த சிறிய பரபரப்பையும் உண்டாக்க நான் விரும்பவில்லை... செய்தியின் முக்கியத்துவத்தைக் கருதி ஐங்கரனைத் தேடுவதற்கு...."

மாராயர் நிறுத்திவிட்டார். மழபாடியார் முடித்தார் - "நான் போகவேண்டுமென்கிறீர் - இல்லையா?"

தலையாட்டினார் மாராயர் - "இரண்டு நாட்களாக மனதே

சரியில்லை - ஐங்கரனுக்கு பெருத்த ஆபத்து என்று உள்மனது சொல்லிக் கொண்டேயிருக்கிறது. சகுனங்களும் நிமித்தங்களும் சரியாக இல்லை. பல்லி அகாலத்தில் சப்தமிடுகிறது - காக்கை இடம்போகிறது. பூஜையறையில் விளக்கு இரண்டுமுறை காற்றேயில்லாமல் அணைந்தது. மனது கிடந்து அலைபாய்கிறது. அதனால்தான் உன்னை அனுப்பலாமென்று யோசித்தேன்..இந்த வேலையை அதிக சந்தடியில்லாமல் செய்யவேண்டியிருக்கிறது...."

மழபாடியாருக்கு மாராயரின் உணர்வுகள் புரிந்தன.

"சரி - இன்னும் ஒரு இரவு பார்ப்போம். நாளை காலை நான் தஞ்சையை விட்டு கிளம்புகிறேன். எனக்கு நம்பிக்கைக்குகந்த மூன்று ஆட்கள் தேவை. அவர்களிடம் பணிவிபரங்களை தெரிவிக்க வேண்டாம்... நான் சொல்வதை கேட்க வேண்டும் -அவ்வளவுதான்."

"சரி - ஏற்பாடு செய்கிறேன்"

"ஐங்கரனைப் பற்றியும் கொல்லி மழவர் வழக்கமாக அனுப்பும் செய்திகளை பற்றியும் நிறைய விபரங்கள் தேவை. நாளை காலை உம்மை வந்து சந்திக்கிறேன் - சிறிதளவு பழைய பாண்டிநாட்டு வீரபாண்டியன் மாடைகளையும் தயார் செய்துவையுங்கள்.."

வீரபாண்டிய மாடைகள் எதற்காக என்று கேட்க நினைத்தார் மாராயர். ஆனால் கேட்கவில்லை.

இனி இது மழபாடியாரின் விளையாட்டு. அவனுடைய மைதானம். அவனுடைய சட்டதிட்டங்கள்தான் அங்கே செல்லுபடியாகும். அவ்வளவுதான் அவருக்குத் தெரியும்.

அன்று இரவு மாராயர் நான்கு நாட்களுக்குப் பின் நிம்மதியாக நன்கு குறட்டை விட்டு உறங்கினார்.

குறுக்கு விசாரணை

சோழ சைன்யத்தின் மேற்திசை தண்ட நாயக்கரும் மும்முடிச் சோழர் பட்டம் பெற்றவரும் இராஜராஜப் பேரந்தளகப்* படைத்தலைவரும் ஒப்பற்ற வீரருமான பரமன் மழபாடியாரை நாம் சரிவர அறிமுகம் செய்து கொள்ளும் முன்னரே திடுதிப்பென்று கதைக்குள் நுழைக்க வேண்டியதாகிவிட்டது. பின்னால் தஞ்சை பெரிய கோயில் கல்வெட்டிலும் அதன் மூலம் தமிழரின் மகோன்னதமான சரித்திரத்திலும் அழியாத இடத்தைப் பிடிக்கப்போகும் இந்த மாவீரரின் சரித்திரத்தை வாசகர்கள் கொஞ்சமேனும் தெரிந்துகொள்ளுதல் அவசியமாகும்.

** அந்தளகம் என்றால் கவசம். கவசப்படைக்கு அந்தளகப்படை என்று பெயர்.*

பரமன' மழபாடியார் சோழ சைன்னியத்தில் படிப்படியாக முன்னுக்கு வந்த வீரர். சாதாரண படைவீரராக உறையூர் பராந்தகத் தெரிஞ்ச கைக்கோளப் படையில் சேர்ந்து மாமன்னர் அருமொழிச் சோழதேவரின் ஒவ்வொரு படையெடுப்பிலும் முக்கிய சேவையாற்றி - பாகிநாட்டு மற்றும் சீட்புலி நாட்டுப் போரில்* முதல் முறையாக படைக்குத் தலைமை வகித்துச் சென்று பெருவெற்றிபெற்று** தண்ட நாயக்கர் பதவியையும் மும்முடிச் சோழர் பட்டத்தையும் ஒருங்கே பெற்றவர்.

** இந்நாளின் நெல்லூரின் வடபகுதியில் இந்த நாடுகள் அமைந்திருந்தன*

*** பார்க்க - 1921ம் ஆண்டின் கல்வெட்டு எண்.79 (தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்/பாகம் XIII)*

மாராயர்தான் மழபாடியாரின் குருநாதர். சோழப் பெரும்படையில் மழபாடியாரை சேர்த்துவிட்டதிலிருந்து படிப்படியாக நிகழ்ந்த அவருடைய வளர்ச்சியில் மாராயருக்குப் பெரும் பங்கு இருந்தது. போர்த்திறம், மதிநுட்பம், வாள்சுழற்றும் முறை, ஒற்று முறைகள் - அனைத்திலும் குருவையே சீடன் மிஞ்சிவிட்டான் என்று பேசிக் கொண்டார்கள். மழபாடியார் அந்த புகழுரைகளையெல்லாம் ஒரு புன்னகையில் மறைத்துவிடுவார்.

இராஜராஜ மாராயரை தன் தந்தையார் ஸ்தானத்தில் வைத்துப் போற்றினார் மழபாடியார். மாராயர் சொல்லும் வார்த்தைகளுக்கு அவரிடமிருந்து ஒருபோதும் மறுப்பு வந்தது கிடையாது.

*******************************************************************************
*******************

தினமும் காலை ஒரு ஜாமநேரம்* - அதாவது மாராயர் பெரியதேவர் அரண்மனைக்குக் கிளம்பிச் செல்லும்வரையில் - உய்யக் கொண்டான் திருமாளிகை பெரும் பரபரப்பில் முழ்கியிருக்கும்.

** ஏறக்குறைய மூன்று மணி நேரம்*

மாராயரின் சிவபூஜைக்காக ஒரு கோஷ்டி வேளத்தார் ஓடிக்கொண்டிருப்பார்கள். விடையில் அதிகாரிகளும் ஓலையதிகாரிகளும் அன்று கவனிக்கப்படவேண்டிய வேலைகளை ஒருமுறை கண்ணோட்டமிட்டு பட்டயங்களெல’லாம் தயாராயிருக்கின்றனவா என்று ஒருமுறைக்கு இருமுறை சரிபார்த்துக் கொள்வர்கள். திருமஞ்சன வேளத்தார்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்.

மாளிகையின் பிரதான கிழக்குப் பெருவாயிலில் கூட்டங்கூட்டமாய் திசையாயிரத்து எண்ணூற்றுவ மகாஜனங்களும்* மற்ற வணிகச் சாத்துக் குழுக்களும் சோழதேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் நடுவிருக்கை தகறாறுகளுக்காக வந்து குழுமியிருக்கும் ஊர்மன்றத்தாரும் இறையிலி மற்றும் தேவதான விவகாரங்களுக்காக வந்திருக்கும் மூலப்பருடையாரும்** அங்குமிங்கும் அலைந்து திரிந்துகொண்டிருப்பார்கள்.

** சோழர்காலத்தில் மிகுந்’த செல்வாக்கோடு திகழ்ந்த வெளிநாட்டு வாணிபக்குழு*
*** கோயில்களை நிர்வகித்து வந்த சபையார்*

ஓரக் கண்களால் நாழிகை வட்டிலில் அடிக்கடி நேரம் பார்த்துக் கொள்வார் மாராயர். முதல் முகூர்த்தம் முடிந்ததும் பணி ஆரம்பமாகும்.

ஆனால் அன்றைய ஐப்பசித் திங்களில் மாராயரின் காலைப்பணிக்கு எதிர்பாராத தடங்கல் வந்து சேர்ந்தது.

அவர் குளித்து முடித்துக் கங்கணங்கள் தரித்துக் கொண்டிருக்கையில் திருவாயில் வேளத்தார் இருவர் ஓடிவந்தார்கள் -

"பிரபோ - வாயிலில் தகறாறு ! எவனோ ஒரு வழிப்போக்கன் நமது தெற்கு வாயில் காப்போரை ஏமாற்றிவிட்டு திட்டிவாசல் வழியாக உள்ளே புகுந்துவிட்டான் - எங்கே மறைந்தான் என்று தெரியவில்லை..."

"முட்டாள்களே! வாயிலுக்கு நான்குபேர் நின்றுகொண்டு ஒரு வேற்றாள் உள்ளே புகுந்துவிட்டான் என்று சொல்ல வெட்கமாக இல்லை ? போங்கள் ! அவனைப் பிடித’து என் கண்முன்

நிறுத்துங்கள் ! அதுவரை என்னை நெருங்காதீர்கள்!" என்று கர்ஜித்தார் மாராயர்.

இதென்ன புதுக்குழப்பம் ? நாம் ஏற்கனவே பல்வேறு சிக்கல்களில் தத்தளித்துக்கொண்டிருக்கிறோம் - இதில் இப்படிப்பட்ட சில்லறைத் தகறாறுகள் வேறு. ஒருவேளை - ஒருவேளை சேர பாண்டியர்கள்தான் என்னைக் கொல்ல ஆள் அனுப்பியிருக்கிறார்களோ ? இதைத்தான் கொல்லி மழவர் கண்டறிந்து ஐங்கரனிடம் சொல்லியனுப்பி...

ஐயோ - இதென்ன ?

அந்த அறையின் ஓரத்திலிருந்த சீலை காற்றில் சற்று ஆட - சீலையின் பின் ஒரு ஜோடிப் பாதங்கள் மறைந்திருந்ததைக்கண்டு ஒரு கணம் திடுக்கிட’டார் மாராயர். அவருக்கு அதிகம் சிரமம் வைக்காமல் அவனே சீலையை விலக்கிக் கொண்டு வெளியே வந்தான்... இருட்டில் முகத்தை சரியாக கவனிக்க முடியவில்லை...

"அடே - யார் நீ ? சோழ சேனாதிபதியின் மாளிகையில் அத்துமீறிப் பிரவேசிப்பவர்க்கு என்ன தண்டனை தெரியுமா ?"

"தன் மாளிகையில் தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ள முடியாதவர் சோழ சாம்ராஜ்ஜியத்தையே பாதுகாக்கிறேன் என்று சொல்வதற்கு என்ன தண்டனை தெரியுமா ?" என்று அதற்குப் பதிலாக அவரைப் போலவே பேசிக் காட்டினான் அந்தப் புதியவன் !

தோற்றம் அடியோடு மாறியிருந்தாலும் அந்தக்குரல் ? அந்த நடை ? சற்று கண்களை இடுக்கிக் கொண்டு கூர்ந்து கவனித்தார் மாராயர் - கடவுளே ! மழபாடியான் போலல்லவா இருக்கிறது ?

கலகலவென்று சிரித்தபடி தலைப்பாகையை உருவினார் மழபாடியார்.

"இடையுறுக்கு மன்னிக்கவும். உமது மாளிகைக்குள் அத்துமீறி நுழைந்து உம்மை கொலைசெய்வதற்கு இயலுமா என்று சோதித்தேன் - மிக எளிதாக முடியும் என்று கண்டேன். மாராயரே - அடுத்தவர் பாதுகாப்பில் கவனம் சிதறியிருக்கையில் உமது பாதுகாப்பை மறந்துவிட வேண்டாம். உமது இழப்பை தாங்கும் நிலையில் சோழதேசம் தற்போது இல்லை.."

"நல்ல சோதனையப்பா !" என்று சொல்லிவிட்டு மாராயரும் சங்கடத்துடன் கொஞ்சம் சிரித்து வைத்தார்.

"மிகவும் சிரமப்பட்டுச் சிரிக்கிறீர் - ஐங்கரனைப் பற்றித் தகவலெதுவும் வரவில்லையென்று புரிகிறது. நான் இன்னும் ஒரு நாழிகை நேரத்தில் புறப்பட்டுவிடுவேன் - ஆட்கள் தயார்தானே ?"

"ஆஹா - நேற்றிரவே சொல்லிவைத்து விட்டேன்... புறப்படத் தயாராக இருப்பார்கள் !"

"சரி - எனக்கு மேலும் சில விபரங்கள் தேவை. முதல் கேள்வி - ஐங்கரனிடமிருந்து இரகசியச் செய்தி வரும் விஷயம் உம்மையும் கொல்லி மழவரையும் தவிர யாருக்காவது தெரியுமா ?"

"யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை - இருக்கக் கூடாது."

"இருக்கக் கூடாது என்பதை நானும் அறிவேன். இருக்கிறதா என்பதுதான் கேள்வி. எங்கே, பிருதிகண்டவர்மரிடமிருந்து வந்த அந்த முதல் ஓலையை எடும்.."

"வழக்கமான ஓலையாயிருந்தால் அதனை விடையில் அதிகாரிகள்

கையில் கொடுத்து பத்திரமாக வைப்பது வழக்கம். இது இரகசிய முறியானபடியால் என் அந்தரங்க அறையில் வைத்துப் படித்துவிட்டு கிழித்தெறிந்துவிட்டேன்..."

"எங்கே எறிந்தீர் ?"

இந்தக் கேள்வியை மாராயர் எதிர்பார்க்கவில்லை. சற்று திடுக்கிட்டு எரிச்சலும் அடைந்தார்.

"இதென்ன கேள்வி ? முறியை சுக்குநூறாகக் கிழித்து அதோ - அங்கிருக்கும் வெண்கலக் குடத்திலிட்டேன். வேளத்தார் நாளைக்கொருமுறை அதனை சுத்தம் செய்வார்கள்..."

"குறிப்பாக கொல்லி மழவர் அனுப்பிய அந்த முறியை சுக்கு நூறாகக் கிழித்தீரா என்று நிச்சயமாகச் சொல்ல முடியுமா ?"

"அதெப்படியப்பா முடியும் ? ஒரு தினத்திற்கு நூற்றுக்கணக்கான ஓலைகளும் செய்திகளும் வந்தவண்ணம் உள்ளன...என'றாலும் அந்தரங்கச் செய்தியிருக்கும் ஓலைகளை பெரும்பாலும் கிழித்தெறிந்துவிடுவேன் - மும்முடிச் சோழ பிரம்மாதிராஜருக்குக் காண்பிக்க வேண்டுமென்றால் ஒழிய.."

"ஓலைகளை மஞ்சள் நீரிட்டுப் படிப்பீரா - கரித்தூள் தூவிப்* படிப்பீரா ?"

** ஓலைகளையும் முறிகளையும் பெரும்பாலும் இவ்வாறு படிப்பதுதான் வழக்கம்.*

மாராயர் அதுவரை மிகவும் சிரமப்பட்டு கட்டிக் காத்துக் கொண்டிருந்த பொறுமையை கொஞ்சங்கொஞ்சமாய் இழந்து கொண்டிருந்தார்.

"பரமா ! இதென்ன - கடைசியில் என்னையே குறுக்கு விசாரணை செய்துகொண்டிருக்கிறாய் ?"

"ஐயா - என் கேள்விகளுக்கும் ஐங்'கரன் விவகாரத்திற்கும் தொடர்பிருக்கிறது. என் கேள்விகளுக்கு தயவுசெய்து பதில் சொல்லுங்கள்...தொடர்பை பின்னர் நான் விளக்குகிறேன்..."

மாராயர் சற்று சங்கடத்துடன் - "சரி - கடைசியாய் என்ன கேட்டாய் ?"

"ஓலைகளை மஞ்சள் நீரிட்டுப் படிப்பீரா - கரித்தூள் தூவிப் படிப்பீரா ?"

"பெரும்பாலும் கரித்தூளிட்டுத்தான் படிப்பது வழக்கம்"

"இரகசிய ஓலைகளை மஞ்சள் நீரிட்டுப் படிப்பதுதான் சிலாக்கியமானது - என்றாலும் உமக்கு கண்கள் சரிவரத் தெரியாதாகையால் கரித்தூளிட்டுப் படிக்கிறீர் என்று நினைக்கிறேன் - சரியா ?"

மறுபடியும் சங்கடம். "சரிதான'"

"உம்... சரி, உமது அந்தரங்க அறைக்குள் நுழைய வேறு யாருக்காவது அனுமதி உண்டா ?"

"சில விடையில் அதிகாரிகள் வந்து போவார்கள் - அறையை சுத்தம் செய்யும் வேளத்தாருக்கும் நான் இல்லாதபோது உள்ளேசெல்ல அனுமதி உண்டு..."

"அந்த அறைக்கு யார் யார் வந்து போகிறார்கள் என்று கவனிக்க

வாயிற் காவலுண்டா ?"

"கிடையாது"

"அப்படியானால் உய்யக் கொண்டான் திருமாளிகையிலிருக்கும் எவரும் உமது அந்தரங்க அறைக்குள் நுழையலாகுமா ?"

"இல்லை - கதவு பெரும்பாலும் தாழிடப்பட்டிருக்கும். திறவுகோல்கள் விடையில் அதிகாரிகளிடமோ ஓலை அதிகாரிகளிடமோ இருக்கும். அறையை சுத்தம் செய்ய வரும் வேளக்காரர் அவர்களிடம் திறவுகோல்களைப் பெற்றுக் கொண்டுதான் உள்ளே நுழைய முடியும்.."

"உமது மாளிகை வேளத்தார் எங்கு தங்கியிருக்கிறார்கள் ?"

"பெரும்பாலும் அவர்கள் தங்குவதற்கென்று தனி வேளம் உண்டு. சிலர் தனிப்பட்ட முறையிலும் வீடு கட்டிக் கொண்டு வசிக்கின்றனர்... பரமா! இறுதியாக என்னதான் சொல்ல வருகிறாய் ? என் மாளிகை ஆட்களையே சந்தேகப்படுகிறாயா ? ஒவ்வொருவரும் எத்தனை வருடங்களாக எனக்காகவேலை செய்து வருபவர்கள் தெரியுமா ?"

"பழைய ஆட்கள் சரி - ஆனால் அவ்வப்போது புதிய தற்காலிக ஆட்களையும் வேலைக்கமர்த்துவது வழக்கம்தானே ? உமது வேளத்தாரில் எத்தனைபேர் பழையவர் - எத்தனைபேர் புதியவர் என்று உம்மால் குறிப்பாக சொல்ல முடியுமா ?"

"அது எப்படியப்பா முடியும் ? பழைய ஆட்களின் முகத்தைத்தான் ஓரளவு ஞாபகம் வைத்திருக்க முடியும் ! பழைய ஆட்கள் சொந்த ஊருக்கு விடுப்பில் சென்றிருக்கும்போதோ உடல்நிலை சரியில்லாதபோதோ புதியவர்களையும் பணியிலமர்த்துவது

வழக்கம்தான் - இதையெல்லாம் கவனிப்பதற்கு எனக்கு ஏது நேரம் ? விடையில் அதிகாரிகள்தான் கவனித்துக் கொள்கிறார்கள்.."

"சரிதான்..."

"பரமா - நான் அரண்மனைக்குக் கிளம்ப வேண்டும் - தாமதமாகிக் கொண்டிருக்கிறது - உன் எண்ணம் என்ன என்பதை இப்போதாவது தெரிந்துகொள்ளலாமா ? இல்லை இன்னும் கேள்விகள் பாக்கியிருக்கின்றனவா ?"

"கோபப்படாதீர்கள் ஐயா ! உங்களுக்கு இன்னும் என் சிந்தனைகள் புரியவில்லை - விளக்குகிறேன்.

இரண்டு நாட்களுக்கு முன்பே வந்து சேரவேண்டிய ஐங்கரன் இன்னும் வந்து சேரவில்லை. அவனிடமிருந்து செய்தியுமில்லை. இதிலிருந்து அவனுக்கு ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது - அல்லது ஆபத்தில் சிக்கியிருக்கிறான் என்ற முடிவுக்கு நாம் வருகிறோம். இதுதான் நமது ஆரம்ப சித்தாந்தம். இதுவே தவறென்றால் - ஐங்கரனின் வருகை வேறு சில காரணங்களால் தாமதமாகிறதென்றால் நம்முடைய மற்ற அனுமானங்களெல்லாம் தவறானவை என்றாகிவிடும்..

என்றாலும் தற்போதைய நிலைமையை வைத்துப் பார்க்கும்போது நாம் இந்த அடிப்படை அனுமானத்தை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. சரியா ? ஆக ஐங்கரனுக்கு ஆபத்து என்பதை ஒப்புக் கொள்கிறோம்.

அடுத்ததாக அவனுக்கு எந்த விதமான அசம்பாவிதம் அல்லது ஆபத்து ஏற்பட்டிருக்கக்கூடும் என்று சிந்திக்க வேண்டியிருக்கிறது. கொடும்பாளூர்வரை பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டவனுக்கு இரண்டு மூன்று நாட்களில் ஏதோ ஏற்பட்டிருக்கிறது.

என்ன ஆகியிருக்கக்கூடும் ?

ஒன்று - புரவியிலிருந்து கீழே விழுந்து கை கால்களை ஒடித்துக் கொண்டிருக்கலாம்.

இரண்டு - சுரம் அல்லது வேறு ஏதாவது உடல் உபாதைகளில் சிக்கியிருக்கலாம்.

மூன்று - யாரோ ஐங்கரனைப் பின்தொடர்ந்து வந்து அவனைச் சிறைப்படுத்தி விடுகின்றனர்.

நான்காவது...." மழபாடியார் கொஞ்சம் தயங்கினார'..

"நான்காவதாக நடந்திருக்கக் கூடியதென்ன ? ஏன் தயங்குகிறாய் ? சொல்லிவிடு - மோசமான செய்திகளை தாங்கிக் கொள்ளுமளவிற்கு மனதை திடப்படுத்திக் கொண்டுவிட்டேன்.."

"நான்காவது - ஐங்கரனை கொலைசெய்யப்பட்டிருக்கலாம்"

"சிவ சிவா..."

"இந்த நான்கு காரண காரியங்களை அலசிப் பார்க்கும்போது முதல் இரண்டையும் விலக்கிவிடலாம். ஏனெனில் புரவியிலிருந்து விழுந்து அடிபட்டிருந்தாலோ அல்லது உடல் உபாதைகளில் சிக்கியிருந்தாலோ ஏதாவது செய்தி உமக்கு இந்நேரம் வந்திருக்கவேண்டும். வரவில்லை. ஆக முன்றாவது அல்லது நான்காவது காரணத்தைத்தான் தற்போதைக்கு அடிப்படையாகக் கொள்ள வேண்டியிருக்கிறது..."

மாராயர் குரல் கம்மிவிட்டது - "சரி - மேலே சொல்..."

"அப்படி அவனுக்கு ஏதாவது நேர்ந்திருக்கும் பட்சத்தில் அதில் ஏதோ ஒரு சதிகாரக் கும்பல் சம்மந்தப்பட்டிருப்பதும் புலனாகிறது. இவர்களின் ஆள்பலம் எத்தனை என்பது தற்போதைக்கு நமக்குத் தெரியாது. ஆக பொதுவாக எதிரிகள் என்று இவர்களைக் குறிப்பிடுவோம்.."

"எதிரிகள் ? ம்...சரிதான்.."

"எதிரிகளுக்கு ஐங்கரன் மூலம் ஏதோ ஒரு முக்கியச் செய்தி உங்களுக்கு வருகிறது என்பது தெரிந்திருக்கிறது... அது உங்கள் கைகளுக்குக் கிடைக்கக்கூடாது என்பது அவர்களின் நோக்கமாக இருக்கலாம் !"

மாராயர் மழபாடியார் அளவிற்கு கற்பனா சக்தியுள்ளவர் அல்லர். நிதானமாய் நீண்ட நெடிய நேரம் சிந்திப்பவரும் அல்லர். செயல்பாடுதான் அவரது வாழ்க்கை. அதனால் மழபாடியாரின் நிதானமான அணுகுமுறை அவருக்கு சற்று எரிச்சலை அளித்தது. மாறுவேடத்தில் கிராமம் கிராமமாக அலைந்து ஐங்கரனைப் பற்றிய செய்திகளைக் கண்டறிவதை விட்டுவிட்டு இதென்ன வீண் நேரவிரயம் என்றுதான் அவருக்குத் தோன்றிற்று..

என்றாலும் மழபாடியாரின் பிடிவாதத்தை அவர் அறிவார். அவரது போக்கிலேயே விட்டுவிடவேண்டும். வழிமுறைகள் சற்று மெதுவாகச் செல்வதுபோல் தரோன்றினாலும் முடிவுகள் பிரமாதமாக இருக்கும். இப்படித்தான் காந்தளூர்ச் சாலையில்... சரி, அதை இப்போது நினைக்க வேண்டாம். ஏதோ கேள்வி கேட்கிறான் போலிருக்கிறது... மறுபடியும் குடைய ஆரம்பித்துவிட்டான்...

"சொல்..."

"உமது கவனம் சற்று சிதறிவிட்டதுபோல் காண்கிறது. மீண்டும் சொல்கிறேன். எதிரிகளுக்கு ஐங்கரன் மூலம் முக்கியச் செய்தி வருவது தெரிந்திருக்கிறது. எப்படித் தெரிந்தது ? முதலில் இந்தக் கேள்வியை எடுத்துக் கொள்வோம். அதற்குப் பிறகு மற்றதைப் பற்றி யோசிப்போம். அவர்களுக்கு இத்தகைய இரகசிய செய்திகள் தெரிய இரண்டு வாய்ப்புக்கள்தான் உண்டு. அவர்களின் கையாள் அல்லது அவர்களுள் ஒருவனே உங்களிடமோ கொல்லி மழவரிடமோ பணியாற்றுபவர்களாயிருக்கவேண்டும். உங்கள் இருவரைத்தவிர வேறு யாருக்கும் அந்த இரகசியச் செய்தி வருவது தெரிந்திருக்க முடியாதல்லவா ?"

"யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை.. நான் இன்னமும் பிரம்மாதிராஜரிடம்கூட மூச்சு விடவில்லை - அது வேறு தனிக் கவலையாயிருக்கிறது.."

"சரி - மறுபடியும் மொத்த சூழ்நிலையை வைத்துப் பார்க்கும்போது எதிரிகள் அல்லது அவர்களின் உளவாளி கொல்லிமழவரிடம் பணியாற்றுபவர்களாய் இருப்பதைவிட உமது மாளிகையில் பணியாற்றுபவர்களாய் இருப்பதற்'குத்தான் சாத்தியக்கூறுகள் அதிகம்.."

"எதனை வைத்து அப்படிச் சொல்கிறாய் ?"

"நடந்ததை மறுபடி நினைத்துப் பாருங்கள். எதிரிகள் கொங்கு நாட்டில் உள்ளவர்களாயிருந்தால் ஐங்கரனைக் கொடும்பாளூர்வரைகூட வரவிட்டிருக்க மாட்டார்கள் - கொல்லிமலைக்கும் கொடும்பாளூருக்கும் இடையே வெகுதூரம். இடையில் ஐங்கரனை சத்தமில்லாமல் தீர்ப்பதற்கு வாய்ப்புக்கள் மிக அதிகம்... எதிரிகள் உமது பக்கலிலேயே* இருந்ததினால்தான் இத்தனை தாமதமாக செயல்பட்டிருக்கிறார்கள்.."

** அருகிலேயே*

மாராயர் குரல் கம்மியது. அவரது அரண்மனையில் துரோகிகளா ? அது சாத்தியமா என்ன ?

மழபாடியார் சற்று நேரம் சிந்தனையிலாழ்ந்திருந்தார்.... ஆழ்ந்த சிந்தனையில் அவர் சற்று நடமாடுவது வழக்கம்...அதேபோல் லேசாக நடைபயிலத் தொடங்கினார்... எதிரிகளுக்கு ஐங்கரன் மூலம் செய்தி வருவது தெரிந்திருக்கிறது. அதேபோல் அவன் கொடும்பாளுர்வரை வந்து சேர்ந்துவிட்ட விவரமும் தெரிந்திருக்கிறது....அப்படியானால் ? ஒருவேளை ? ஆஹா, அப்படியிருக்குமோ ? ஆம், வேறு சாத்தியமேயில்லை ! சிந்திக்க சிந்திக்க மனதில் புகைமூட்டம் சற்று விலகுவதைப்போல் தெளிவு பிறக்கின்றதே.... தொடர்ந்து இன்னும் ஆழமாகச் சிந்திக்க வேண்டும்..

ஆனால் மாராயர் இதற்குள் நெளிய ஆரம்பித்துவிட்டார்...இன்னும் அதிக நேரம் காக்க வைக்க முடியாது..!

"ஐங்கரன் கொடும்பாளுர்வரை வந்த செய்தி உமக்கெப்படித் தெரிந்தது ?"

"எ...என்ன ?"

"ஐங்கரன் கொடும்பாளுர்வரை வந்த செய்தி உமக்கெப்படித் தெரிந்ததென்று கேட்டேன்.. "

"ஓ - அதுவா ? கொடும்பாளுர் போன்ற முக்கிய நகரங்களின் சுங்கச் சாவடிகளில் ஓலை தூக்கிகள் உண்டு. இவர்களிடம் ஓரிரு கழஞ்சுகளை கொடுத்துவிட்டால் நமது முறிகளை குறிப்பிட்ட ஆட்களிடம் சேர்த்துவிடுவார்கள்... கொடும்பாளுரில் இந்த

வேலைக்காகவே எனக்கென்று பிரத்யேக ஆட்களுண்டு. அவர்கள் மூலம்தான் செய்தி வந்தது..."

நடந்துகொண்டே அறைவாயிலுக்கருகில் சென்றுவிட்ட மழபாடியாரின் கண்கள் யதேச்சையாக அறையின் வடக்கு சாளரத்தை நோக்க.....
திடுக்கிட்டார் !

அதிகாலைக் கதிரவனின் மெல்லிய ஒளி படர்ந்த சாளரத்தின் கீழ்ப்பகுதியில் அடர்ந்த நிழலொன்று விழுந்திருந்தது.

அது சாளரத்திற்கப்பால் அமைந்திருந்த உத்தியான வனத்தின் செடிகொடி நிழலா - அல்லது... அல்லது... வெளிப்பக்கம் யாராவது நின்றுகொண்டு நாம் பேசுவதை ஒட்டுக் கேட்டுக்கொண்டிருக்கிறார'களா ?

ஒரு சரித்திரப் பின்னணி

மேற்கொண்டு இந்தக் கதையில் நடக்கப்போகும் பல சம்பவங்களையும் புரிந்துகொள்ள அந்த காலகட்டத்தைப் பற்றிய சுருக்கமான பின்னணியை இங்கே விவரிப்பது நம் கடமையாகிறது.

வாழ்க்கை பிறப்பு - நடப்பு - இறப்பு என்ற மூன்று எல்லைகளுக்குள் இயங்குகிறது. மனிதர்களில் பெரும்பாலோர் இந்த எல்லைக்குள் அவரவர்தம் கால தேச வர்த்தமானத்திற்கும் ஏற்ப தத்தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு வாழ்ந்து மடிகின்றனர்.

ஆனால் அவ்வப்போது - அபூர்வமாக - சில மகாபுருஷர்கள் திடீரென்று தோன்றி செயற்கருஞ் செயல்கள் பலவும் செய்து தமது இனத்திற்கும் குலத்திற்கும் நாட்டிற்கும் அழியாத பெருமையை

தேடித் தந்து விடுகிறார்கள். நாளடைவில் இவர்கள் சரித்திர நாயகர்களாகி பின்னால் வரப்போகும் பல நூற்றாண்டு சந்ததியர்க்கும் வழிகாட்டும் மங்காத ஒளிவிளக்காய் - தாரகைகளாய் கிழக்கு வானில் திகழ்கிறார்கள்.

அப்படிப்பட்ட ஒரு மாமனிதர் - உலக சரித்திர ஆசிரியர்களால் The Great என்கிற அடைமொழியோடு அழைக்கப்பட்ட மிகச்சில மன்னர்களுள் ஒருவர் - கி.பி.பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தார். அருமொழித் தேவர் என்ற பெயரும் உடையார் ஸ்ரீ இராஜராஜ சோழர் என்ற அபிடேக நாமமும் தரித்த அந்த அரசர் மிகக் குறுகிய காலத்தில் - சரியாகச் சொன்னால் கிட்டத்தட்ட இருபத்தொன்பது வருட காலகட்டத்தில் (கிபி 985 - 1014) இராஜ்ஜியம் என்று சொல்லத்தக்க அளவில் இருந்த சோழ தேசத்தை சாம்ராஜ்ஜியம் என்ற அளவிற்கு விஸ்தரித்தார். இவரது காலத்தில் ஈழம் - பாண்டி மண்டலம் - சேரதேசம் - தொண்டை மண்டலம் - கொங்கு - கலிங்க நாடு என்று நாற்திசைகளிலும் விரிந்து பரந்தது சோழநாடு.

அருமொழித்தேவருக்கு முன் நாட்டை ஆண்டவர் முதல் கண்டராதித்தரின் புதல்வரான பரகேசரி உத்தமச் சோழர். அருமொழியின் சகோதரரும் பட்டத்து இளவரசருமான பரகேசரி ஆதித்த கரிகாலரின் அகால மரணத்திற்குப் பின் ஏற்பட்ட அரசியல் நெருக்கடியின் முடிவில் உத்தமச் சோழர் கிட்டத்தட்ட கி.பி 971ல் பட்டத்திற்கு வந்தார். இவரது 15 வருட ஆட்சிகாலத்தில் சோழதேசம் பெரிய அளவிற்கு மேன்மை பெறவும் இல்லை - வீழ்ச்சி அடையவும் இல்லை. இராஜ்ஜியம் குழப்பங்கள் இன்றி அமைதியாக இருந்ததுபோல் தோன்றினாலும் இந்த காலகட்டத்தில் காணப்படும் சேர - பாண்டியரின் பெருமௌனமும் அருமொழித்தேவர் பதவிக்கு வந்தபின் நிகழ்ந்த சில சம்பவங்களும் நம்மில் சில சந்தேகங்களை எழுப்புவதை மறுப்பதற்கில்லை.

எது எப்படியோ, அருமொழித்தேவர் கிபி 985ல் பட்டம் சூட்டப் பெற்றார். அந்நாளைய குல வழக்கப்படி* பரகேசரி உத்தமச் சோழர் அதற்குப்பின்னரும் இரண்டாண்டுகள் தொடர்ந்து பதவிவகித்து கிபி 987ல் முழு இராஜ்ஜிய அதிகாரங்களையும் அருமொழிக்கு வழங்கினார்.

** ஒரு அரசர் பதவியேற்ற பின்னும் பழைய அரசர் தொடர்ந்து ஓரிரு ஆண்டுகளுக்கு பதவியில் இருப்பது தெரியவந்துள்ளது. பழைய பணிகளை முடித்தற் பொருட்டும் பதவியேற்ற இளவல் உரிய அனுபவம் பெறும் பொருட்டும் இந்தப் பழக்கம் வழக்கத்திலிருந்திருக்கலாம். உத்தமச் சோழர் பதவியேற்ற முதல் இரண்டு ஆண்டுகளில் அவருக்கு முந்தைய அரசரான இரண்டாம் பராந்தகர் சுந்தரச் சோழர் தொடர்ந்து பதவி வகித்து வந்தார். பார்க்க N.Sethuraman - Early cholas, Mathematics Reconstructs the chronology.*

இதற்குப் பிறகு மளமளவென்று நடக்கும் போர்களும் சாம்ராஜ்ஜிய வளர்ச்சியும் அசாத்தியமான வேகத்தில் நடைபெற ஆரம்பித்து விடுகின்றன. தேக்கி வைக்கப்பட்ட பெருவெள்ளம் மடைகளை உடைத்துக்கொண்டு பீறி அடிப்பதுபோல் மகா வீரரான அருமொழித்தேவரின் ஆற்றல் நாலா திசைகளிலும் ஊடுருவிப் பாய்ந்து பரவியது.

திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அருமொழித்தேவரின் திக்விஜயத்தை தெளிவாகப் பதிவு செய்துள்ளன. ஏறக்குறைய கி.பி.988 வாக்கில் பாண்டி மண்டலம் மற்றும் காந்தளூர்ச் சாலை - உதகை - அதாவது மொத்த சேரதேசமும் பாண்டியநாடும் - சோழதேசத்திற்குட்பட்டன. அதற்கடுத்து குடமலை நாடு, கங்க பாடி, நுளம்ப பாடி, தடிகைப்பாடி - எல்லாம் இன்றைய கர்நாடகத்தின் பகுதிகள் - கி.பி.991ற்கு முன் வெல்லப்பட்டன.

அப்புறம் ஈழம், சாளுக்கிய தேசம், சீட்புலி நாடு, பாகி நாடு, வேங்கி நாடு, கலிங்கம் என்று ஓயாத போர்களின் முடிவாக ஒருகாலத்தில் வெள்ளாற்றை எல்லையாகக் கொண்டிருந்த தேசம் மகாநதியாகிய துங்கபத்திரையை எல்லையாகக் கொள்ளுமளவிற்கு இராட்சத அளவைப் பெற்றது !

இந்த வெற்றிகளையெல்லாம் பின்னால் வரும் சந்ததியர் தெரிந்துகொள்ள வேண்டாமோ ? அதற்காக ஒரு புதிய பழக்கத்தைக் கொண்டு வந்தார் மன்னர். அதாவது தாம் வெளியிடும் ஒவ்வொரு சாசனத்திலும் தாம் இதுவரை கைக்கொண்ட வெற்றிகளை வரிசையாகக் கவிதை வடிவில் குறிப்பிடும் முறையைப் புகுத்தினார். இதற்கு "மெய்க் கீர்த்தி" என்று பெயர். இந்த முறையை பின் வந்'த சோழ மன்னர்கள் மட்டுமல்லாது பிற்காலப் பாண்டிய மன்னர்களும் பின்பற்றலாயினர். இதனால் இன்றைக்கு இராஜராஜரின் கல்வெட்டுக்களைப் படிப்போர் மிகத் துல்லியமாக இன்ன ஆண்டுக்குள் இன்னன்ன பகுதிகள் வெல்லப்பட்டன என்று கூறுவது மிக எளிதாகின்றது. இந்த வகையிலும் இராஜராஜர் ஒரு முன்னோடி.

இதோ இராஜராஜரின் மெய்க்கீர்த்தி. இது அவருடைய கடைசி காலங்களில் கிடைத்த பிரதி - ஆக எல்லா வெற்றிகளும் இதில் வரிசையாய் பதிவாயிருப்பதைக் காணலாம்.

*திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்*
*தனக்கே உரிமை பூண்டமை மனங்கொளக்*
*காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி*
*வேங்கை நாடும் கங்க பாடியும்*
*தடிகைப் பாடியும் நுளம்ப பாடியும்*
*குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்*
*முரட்டொழிற் சிங்களரீழமண்டலமும்*

*இரட்டை பாடி எழரை இலக்கமும்*
*முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்*
*திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்*
*எழில் வளர் ஊழியுளெல்லா யாண்டும்*
*தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்*
*தேசுகொள் கோ ராச கேசரி வர்மரான*
*உடையார் ஸ்ர் ராச ராச தேவர்...*

மிகக் குறுகிய காலத்திற்குள் நடந்த சோழ தேசத்தின் அசுர வளர்ச்சிக்குப் பக்க விளைவுகளும் இல்லாமல் இல்லை.

தஞ்சையில் போக்குவரத்தும் குடியேற்றமும் எக்கச்சக்கமாகப் பெருகி உள்ளாலை என்று அழைக்கப்பட்ட தஞ்சை நகருக்கு வெளியே புறம்பாடி என்றொரு பெரிய பகுதி புதிதாகத் தோன்ற வேண்டியதாகிவிட்டது ! இன்றைக்கு சென்னைப் புறநகர் என்கிறோமே - அதே கதைதான் ! புறநகரும் நகரத்தைப் போலவே முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது என்பதை அங்கு அமைந்திருந்த இராஜராஜரின் திருமாளிகை நமக்கு உணர்த்தும். அங்கே அமர்ந்து அவர் திருவாய் மொழிஞ்சருளின - அதாவது சொன்ன (!) - ஸ்ர்முகத்தை (உத்தரவை) பட்டயத்தில் எழுதிய அதிகாரி "புறம்பாடியில் இன்ன மாளிகையில் அமைந்திருந்த இன்ன அறையில் வைத்து இந்த உத்தரவைப் பிறப்பித்தார்" என்றூ ரொம்ப சிரத்தையோடு எழுதிவைத்த பதிவு நமக்குக் கிடைத்திருக்கிறது. இந்தப் புறம்பாடிப் பகுதி இன்றைய கருந்திட்டைக்குடி பகுதியில் அமைந்திருந்ததாக ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.

அங்காடிகள் பேரங்காடிகளாயின. வழிகளாக - பெருவழிகளாக உருமாறின; பெயர் மாறின. அரசாங்க அலுவலர்களில் பெருதரம், சிறுதரம் என்று பல அணிகள் உருவாயின. படைகளைப் பற்றிக்

கேட்ட வேண்டியதில்லை - நிலப்படை, நீர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, கைக்கோளப் படை, மூன்று கை மாசேனை என்று எண்ணிக்கையிலடங்காத படைகள் ! இவர்களுக்குள் இடங்கை வலங்கையென்று பிரிவினைகள் வேறு....

இந்தப் படைகளெல்லாம் தத்தம் வருமானத்தின் சில கோயில்களை தத்தெடுத்துக்கொண்டு அந்த கோயில் பணிகளுக்குத் தங்களை அர்பணித்துக்கொண்டதெல்லாம் அந்த நூற்றாண்டுக்கே உரிய ஆச்சரியங்கள். போர் செய்தோம், கூலியைப் பெற்றுக்கொண்டோம் என்றில்லாமல் அன்றைய சமூகத்தின் முக்கிய அங்கமான கோயில்களோடு படைகளின் ஒவ்வொரு சாராரும் தம்மை இணைத்துக்கொண்டது மிகவும் கவனிக்கப்படவேண்டிய ஒரு அம்சம்.

ஒவ்வொரு அரண்மனையிலும் பற்பல வேளத்தார்...சேவகர்...பணிப் பெண்கள்... இவர்கள் குழந்தை குட்டிகளோடு தங்குவதற்கு வேளங்கள்...

ஒவ்வொருத்தருக்கும் - சரி, குறைந்தபட்சம் பெரு அலுவலர்களுக்காவது - பல மனைவிமார்கள் இருந்தனர். இராஜராஜருக்கே உலோகமாதேவி, சோழமாதேவி, திரைலோக்கிய மாதேவி, பஞ்சவன் மாதேவி, அபிமானவல்லி, மீனவன் மாதேவி, தந்தி காமகோடி*, அப்புறம் அப்பாவி வானதியாகிய வானவன் மாதேவி என்று எக்கச்சக்க பேர்....
கேட்டால் இவையெல்லாம் அரசியல் திருமணங்கள் என்பார் ! ஆக தஞ்சையில் மட்டும் எத்தனை அந்தப்புறங்கள் இருந்திருக்கும் என்று வாசகர்கள் ஊகித்துக் கொள்ளலாம்.

** இராஜராஜருடைய இந்த தேவியின் பெயர் வெகுகாலம் வரலாற்றின் வெளிச்சத்திற்கு வரவில்லை. முதன்முதலாக டாக்டர் மு.இராசமாணிக்கனார் வரலாற்று மைய ஆய்வாளர்களால் ஒரு*

*கல்வெட்டு மூலம் கண்டறியப்பட்டார்.*

நாடு பெரியதாக ஆக ஆக, அரசாங்கத்தின் செலவுகள் அதிகரித்தன.

அரசின் முக்கிய வருவாயான நிலவரியை வசூலிப்பதில் பிரச்சனைகள். சரியாக வரி கட்டாமல் அரசாங்கத்தை திட்டிக்கெண்டிருப்பவர்கள் எல்லா காலத்திலும் உண்டு.

பார்த்தார் இராஜராஜர். அதுவரை எந்தத் தென்னக வேந்தரும் செய்யத்துணியாத ஒரு இராட்சத நிலமளக்கும் பணியை துவக்க ஆணையிட்டார். இதனை செயல்படுத்தும் பொறுப்பு முக்கியப் படைத்தலைவர்களுள் ஒருவராக இருந்தவரும் நமது கதையில் முக்கிய பாத்திரமாக வருபவருமான குரவன் இராஜராஜ மாராயர் தலையில் விழுந்தது !

மாராயர் இதற்கென்று தனியாக ஒரு அளவை - கிட்டத்தட்ட பதினாறு சாண் உயரத்தில் - உருவாக்கினார். அது உலகளந்தான் கோல் என்று அழைக்கப்பட்டது. இந்த அளவுகோலை அந்தக் காலத்தின் பல்வேறு கோயில்களிலும் - தஞ்சை பெரிய கோயில் உட்பட - காணலாம். இந்த பிரம்மாண்டமான பணியை கிட்டத்தட்ட இரண்டு குறுகிய வருடகாலத்தில் முடித்துவிட்ட மாராயரின் செயல் திறனை என்னென்பது ?

இராஜ்ஜியத்தை அளந்தபின் அதனை ஒழுங்காக பல பிரிவுகளாக பிரிப்பதும் இன்றியமையாததாயிற்று. மண்டலம் - வளநாடு - கூற்றம் - நாடு என்னும் பிரிவுகள் உருவாயின. "சோழ மண்டலத்து ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டு வண்டாழ்ஞ்சேரி" என்று கல்வெட்டுக்களில் எடுத்தவுடன் நம்மை பயமுறுத்தும் தொடர் இப்படித்தான் உருவாயிற்று.

எல்லோரையும்போல் இராஜராஜருக்கும் வயதாயிற்று.

நல்லதும் கெட்டதுமாய் வாழ்க்கையில் நிறைய பார்த்தாயிற்று. இராஜ்ஜியத்தை மேற்கொண்டு விரிவாக்கும் ஆசை சற்று மட்டுப்பட்டது. அரசியலில் ஆர்வம் சற்று குறைய ஆன்மிகம் உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிய ஆரம்பித்தது. சித்தம் இடையறாது "சிவம் ! சிவம்!" என்று அரற்றியது.

இராஜராஜருக்கு சிவபாதசேகரர் என்றொரு பயெர் உண்டு. இது அவருடைய சிவ தீட்சா நாமம். இதற்கு "சிவபெருமானுடைய பாதார விந்தங்களை தன் தலையில் சூடிக்கெண்டவர்" என்று அர்த்தம்.

இது வெறும் அலங்காரத்திற்கு சூட்டிக்கொண்ட பெயர் அல்ல. கறையான் அரித்து ஏறக்குறைய அழியும் நிலையில் சிதம்பரம் திருக்கோயிலில் ஒரு அறையில் கேட்பாரற்றுக் கிடந்த தமிழ் வேதங்களான தேவாரப் பாடல்களை பெருமுயற்சிசெய்து மகான் நம்பியாண்டார் நம்பியுடன் சைவத்திருமுறைகளாக வகுத்த மிகப் பெரிய பெருமையை அடைந்தவர் இராஜராஜர். நால்வரின் தேவாரப் பாடல்களை சுவைக்கும்போதெல்லாம் நாம் சிவபாதசேகரரையும் நன்றியுடன் ஒருமுறை நினைக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இப்படியாகத் தன் மனதில் காலகாலமாய்க் குடிகொண்டுள்ள ஈசருக்கு இதுவரையில் நாடுகாணாத பிரம்மாண்டமான கற்றளி (கருங்கற் கோயில்) - எழுப்ப முடிவுசெய்தார் மன்னர்.

பிரம்மாண்டம் என்றால்.... நிஜமாகவே பிரம்மாண்டம் ! மிகப் பெரிய தூல லிங்க சொரூபம் (பெயரே பெருவுடையார் !) ... அதற்குமேல் சிதம்பரத்தில் இரகசியமாய் விரியும் ஆகாச லிங்க வடிவம்.... இத்தனையும் உள்வாங்கத்தக்கதொரு பெரிய கருவறை....

பெரிய மதில்கள்...கோபுரங்கள்... ஏறக்குறைய மேருமலையையொத்த விமானம், வானளாவிய கலசம் என்று கிட்டத்தட்ட தன் மனதிலுள்ள மாபெரும் கையிலயங்கிரியின் மாதிரியையே கருங்கல்லில் தட்சிண மேரு என்ற பெயரில் படைக்கவேண்டும் என்று விரும்பினார் பெரிதினும் பெரிது கேட்பவரான இராஜராஜ சோழர்.

நல்லவேளை ! அவருடைய கனவை நனவாக்கும் திறன்படைத்த சிற்பிகளும் பொறியியலாளர்களும் அக்காலத்தில' இருந்தார்கள் ! எங்கோ திருப்பணி செய்துகொண்டிருந்த மகா சிற்பியான குஞ்சரமல்லரான இராஜராஜப் பெருந்தச்சர் வரவழைக்கப்பட்டார் - தட்சிண மேரு கோயிலின் தலைமைப் பொறியாளர் என்னும் (தலைவலி மிகுந்த) பணி இவரிடம் அளிக்கப்பட்டது.

இதுவும் ஒரு ஆச்சரியம்தான். இத்தனை பிரம்மாண்டமான அளவில் வேறு எந்த மாதிரிக் கட்டுமானமும் இல்லாத நிலையில் இப்படிப்பட்டதொரு பணியை "செய்து முடிக்கிறேன் !" என்று உறுதியோடு சொன்ன அந்தத் தலைமைச் சிற்பியையும் அவருடன் உடனுறைந்தவர்களையும் நோக்கி கால காலங்களை தாண்டி கைகூப்புகிறோம். தமிழ்ப் பொறியியலறிவின் உச்சக் கட்டம் அது.

ஆரம்பமாயிற்று ஒரு பிரம்மாண்டமான பணி... கணக்கில்லாத ஆட்களும் அவர்களுக்கு உதவிசெய்வோரும் தஞ்சையில் குவியத்துவங்கினர். வேலைக்குத் தேவையான கருங்கற்கள், மரங்கள், உலோகங்கள் எல்லாம் வண்டி வண்டியாய் தஞ்சையை நோக்கிப் படையெடுத்தன... நாடெங்கிலுமிருந்த சிற்பிகள், கருமார்கள், தச்சர்கள் எல்லோரும் அழைப்பிதழ் அனுப்பப்பட்டது...

எல்லோரும் அவரவர் பெண்டு பிள்ளைகளிடம் சொல்லிக்கொண்டு பெருமை பொங்கக் கிளம்பினார்கள்.... "நம்ம இராசா தஞ்சாபுரில*

**பெரீய கோயில் கட்டுதாராமுல்ல...நாம போயி முன்ன நின்னு செஞ்சி கொடுக்க வேண’டாமா...?"**

** அக்காலத்தில் தஞ்சை இப்படித்தான் அழைக்கப்பட்டது*

**அது ஒரு காலம்... "நம் கோயில் ! நம் இறைவன் !" என்று எல்லோரும் கடவுளை சொந்தம் கொண்டாடிய ஒரு காலம்...**

**கிட்டத்தட்ட இந்தப்பின்னணியில்தான் நமது கதை நடக்கிறது.**

**ஆக தஞ்சையைப் பற்றி நான் குறிப்பிடும்போதெல்லாம் ஜன சந்தடிமிக்க ஒரு பெருநகரத்தைக் கற்பனை செய்து கொள்ளுங்கள்....**

**அதோ ! பேரங்காடிகளுக்குச் செல்லும் காய்கறி வண்டிகள் சாரி சாரியாய் அணி வகுத்து நிற்பதைப் பாருங்கள்....**

**இதோ... பெருவீதிகளில் வணிகர்கள்..அரசு அலுவலர்கள்.. படைவீரர்கள்.. தளிச்சேரிப் பெண்டிர்.. கிராமத்திலிருந்து வந்திருக்கும் ஊர்ச்சபை அங்கத்தினர்கள்.. என்று எத்தனை பேர் !**

**அதோ !**

**பௌத்த விகாரங்களுக்குச் செல்லும் பிக்குகளின் சரண கோஷங்கள்.. சமணப் பள்ளிகளில் உலவும் திகம்பரர்களின் பிரசங்கங்கள்...**
**ஓங்காரமாய் மணி நாதம் கேட்கும் கோயில்களில் காவி உடதைரித்த சிவ யோகிகள்... அவர்களிடையே மண்டையோட்டை கையிலேந்தி முகந்தில் கருஞ்சந்தனம் தடவி பார்க்கவே பயங்கரமாய்க் காட்சியளிக்கும் காளாமுகர்கள்.. ....**

வீடுகளில் சிறுவர்கள், மத்திய வயதினர், வயதானவர்கள் என்று வகை வகையான மனிதர்கள்...

சாவகாசமாய் தஞ்சையின் எல்லா பகுதிகளையும் உங்களுக்கு சுற்றிக்காட்ட ஆசைதான்.. என்றாலும், மேலும் தாமதிப்பதற்கில்லை ! சம்பவங்கள் மேலும் சிக்கலடைவதற்குள் கதைக்கு நாம் உடனடியாகத் திரும்ப வேண்டியிருக்கிறது...

கிளையூர் வைத்தியர்

மாராயருடன் தாம் பேசிக் கொண்டிருக்கையில் சாளரத்துக்ருகே தெரிந்த நிழல் மழபாடியாருக்கு கவலையளித்தது. என்றாலும் அந்த சாரளம் அறையின் உட்புறம் நன்கு உள்ளடங்கி அமைந்திருந்த விதம் அவரை மேற்கொண்டு ஆராய விடாமல் தடுத்தது.

மாராயர் ஒருமுறை தொண்டையை செருமிக் கொண்டார்.

"பரமா - என'னைக் கேட்டால் ஒரு விஷயம் சொல்லுவேன் ! இந்த விசாரணையெல்லாம் வீண் நேரவிரயம் - உடனடியாக நீ தஞ்சையை விட்டுக் கிளம்பி ஐங்கரன் கொடும்பாளுருக்குப் பிறகு எங்கெல்லாம் வந்தான் என்று விசாரித்துக் கொண்டே வந்தாயானால் ஏதாவது தெளிவு ஏற்படும்..அதை விட்டுவிட்டு..."

மழபாடியார் மனத்தில் பல்வேறு விஷயங்கள் ஒரே கணத்தில் ஓடி மறைந்தன. மாராயரை அவர் நன்கு அறிவார். தம்முடைய வழிமுறைகளில் அவருக்கு நம்பிக்கை இருக்காது - தேவையற்ற குறுக்கீடுதான் மிஞ்சும்.

அவர் ஒரு முடிவுக்கு வந்தார்.

"நீங்கள் சொல்வது முற்றிலும் சரி மாராயரே ! இப்படியெல'லாம் சிந்தித்தால் குழப்பம்தான் மிஞ்சுகிறது - நான் உடனடியாக ஒரு நாழிகைப் பொழுதில் தஞ்சையை விட்டுக் கிளம்புகிறேன்... உமது ஆட்களை உடனடியாக என் மாளிகைக்கு அனுப்பி வையுங்கள் !"என்றார் மழபாடியார் சற்று கம்மிய குரலில். மாராயரிடமே பொய்சொல்கிறோம். தஞ்சையை விட்டு நாம் அத்தனை சீக்கிரம் கிளம்பப் போவதில்லை. இங்கு இன்னும் கொஞ்சம் வேலையிருப்பதுபோல் தெரிகிறது...ஆனால் அதை இப்போதைக்கு மாராயரிடம் இப்போதைக்கு சொல்லுவதற்கில்லை...

"ஆஹா - இப்போதுதான் என் வழிக்கு வருகிறாய் ! நன்று நன்று ! ஆட்களை உடனே அனுப்பி வைக்கிறேன் - வேறு ஏதாவது ?"

"நான் தஞ்சை திரும்புவதற்குள் இடையில் நீர் ஏதாவது எனக்குச் அவசரச் செய்தி சொல்லி அனுப்ப வேண்டுமாயின் வழக்கம்போல என் மாளிகையின் அந்தரங்க காவலரிடம் ஓலையாக எழுதிக் கொடுத்தனுப்பிவிட வேண்டியது..."

"அது நமது வழக்கமான ஏற்பாடுதானே - சொல்லித் தெரியவேண்டுமா என்ன ?அது சரி, நீ திரும்பி வருவதற்குள் இங்கு ஏதாவது நடக்குமென்று எதிர்பார்க்கிறாயா என்ன?"

வாயைப் பிடுங்கப் பார்க்கிறார் மாராயர். இவரது வலையில் விழக்கூடாது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை - பாண்டி மாடைகளை மறக்காமல் உமது ஆட்களிடம் கொடுத்தனுப்புங்கள் !"

நாம் நினைப்பது சரிதானா ? நமது யுக்தி பலிக்குமா ?

"சரி!" என்ற மாராயர் நாழிகை வட்டிலில் நீர் அளவை ஒருமுறை

பார்த்துக் கொண்டார் - "பரமா - எனது நித்திய அலுவல்களுக்கு நாழிகையாகிறது. நான் புறப்படவா ?"

"நானும் கிளம்பத்தான் வேண்டும் ! புறப்படுமுன் கடைசியாக ஒரு விஷயத்தை சொல்லிவிடுகிறேன்... கொஞ்சம் காதைக் கொடுங்கள் !"

மழபாடியார் மாராயர் காதுகளில் முணுமுணுத்த விஷயம் அவர்களை உரசிச் சென்ற காற்றுக்குக்கூட சரிவர கேட்கவில்லை.

*****************************************************************************************************

அந்த அதிகாலை நிசப்தத்தை வண்டி மாடுகளில் மணி சப்தம் குலுங்கி குலுங்கி குலைத்ததும் ஒரு அழகாகத்தான் இருந்தது.

இன்னும் இருள் முழுக்க பிரிந்துவிடவில்லை. என்றாலும் விடிவதற்கான ஆயத்தங்களில் கிழக்கு மும்முரமாய் இருந்தது. வண்டியின் பின்புறம் வணிகச் சாத்து மூட்டைகளின் மேல் தலையை வைத்தபடி ஆனந்தமான உறக்கத்தில் இருந்தார் அம்பலவாணர். அவ்வப்போது முகம் இறுகியது.. அப்புறம் தளர்ந்தது... வெகு சுவாரஸ்யமான ஒரு கனவு ஓடிக்கொண்டிருக்கிறது போலும்.

அவருடைய மடியில் தலையை வைத்து உடம்பை எண்கோணலாக சுருட்டிப் படுத்திருக்கும் குழந்தையை நோக்குகிறோம். படுத்துத் தூங்கும் குழந்தையின் அழகைப் பார்க்கக் கூடாது என்று சரியாகத்தான் சொல்லியிருக்கிறார்கள்... நமது கண்ணே பட்டுவிடும் போலிருக்கிறதே !

அம்பலவாணரைப் பின்பற்றி நாமும் குழந்தை குழந்தை என்கிறோம்.. உண்மையில் செங்கமலம் சிறுமி. வாயைத் திறந்து பேசத் துவங்கிவிட்டாலோ எண்பது வயது கிழவி ! அவள் உடம்பு சற்றே நெளிய, அம்பலவாணரின் கரங்கள் இயல்பாக அவளைச் சுற்றி படர்கின்றன...கிழவர் விழித்திருக்கும் நேரமானாலும் சரி, உறங்குமம் நேரமானாலும் சரி - அவருடைய மனதின் ஒரு பகுதி "செங்கமலம்! செங்கமலம்!" என்று அவளையே சுற்றி வரும்.

செங்கமலத்துக்கும் அப்படித்தான்.. அவளுக்குப் பாட்டன்தான் ஆதர்ச புருஷர். அவர்தான் எல்லாமே. அவருடைய உடல் கட்டையும் கம்பீரத்தையும் மற்ற ஆட்களுடன் ஒப்பிட்டு ஒப்பிட்டு தோற்றத்தில் அவருக்கு இணையாக வேறு ஒருவரும் இந்த மண்ணுலகத்தில் கிடையாது என்று நிச்சயமே செய்துகொண்டு விட்டாள்.

ஒரு பள்ளத்தில் வண்டியின் சக்கரங்கள் புதைந்து மீள - வண்டி ஒரு சிறு குலுங்கல் குலுங்கிற்று. அந்தக் குலுங்கல் செங்கமலத்தை எழுப்ப போதுமானதாக இருந்தது. எழுந்தவள் கண்களை லேசாகக் கசக்கிக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்து தன்னை சுதாரித்துக்கொண்டாள். கொஞ்சம் யோசித்துப் பார்க்கையில் பாட்டன் முதல் நாளிரவு தூங்கிக் கொண்டிருந்த தன்னை எழுப்பியதும் தான் வண்டியில் ஏறி அமர்ந்ததும் புகைமூட்டமாக விரிந்தன.

சற்றே தலையை உயர்த்தி அயர்ந்து தூங்கும் அம்பலவாணரைப் பார்த்தாள். அவருக்கும் வழக்கமாய் இது விழிப்புத்தட்டும் நேரம்தான்... என்றாலும் முதல் நாளிரவு நிகழ்ச்சிகளால் அவருடைய அயற்சி அதிகமாயிருக்கவே தொடர்ந்து உறங்கிக்கொண்டிருந்தார்.

வண்டி குலுங்கிக் குலுங்கிச் சலெ்வது செங்கமலத்திற்கு பிடித்தமான

விஷயம். மெதுவாக எழுந்து வண்டி கடந்து செல்லும் மரங்களை பார்வையிட்டுக் கொண்டே ஒவ்வொரு மரத்தையும் "ஒன்று" "இரண்டு" என்று எண்ண ஆரம்பித்தாள்.

இப்படியாக கொஞ்ச நேரம் சென்றது. அப்புறம் அந்த விளையாட்டு அலுப்புத்தட்ட ஆரம்பித்தது..

நிமிர்ந்து உட்கார்ந்து சுற்றும் முற்றும் பார்த்தாள். அவள் கண்களுக்கு வண்டியின் பின்புறம் வைக்கப்பட்டிருந்த இரண்டடி கட்டையொன்று கண்களில் தென்பட்டது. அதை கைகளில் எடுத்துக்கொண்டு சிறிது நேரம் என்ன செய்யலாம் என்று யோசித்தாள். வண்டிச் சக்கரத்தின் ஆரங்கள் அவளை "வா!" "வா!" என்று அழைத்தன. சுற்றிக்கொண்டிருந்த ஆரங்களில் மெதுவாக கட்டையை நுழைத்தாள்.

"கட்" "கட்" என்று ஆரங்கள் கட்டையில் மோதும் சப்தம் அவளுக்கு ஆனந்தத்தை அளித்தது. ஒரு கட்டத்தில் கட்டையை சற்று அதிகமாகவே உள்நுழைக்க "சட...பட.." வென்ற மிக நாராசமான சப்தங்கள் எழுந்து பாதி உறக்கத்ததிலிருந்த வண்டிக்காரனையும் முழு உறக்கத்திலிருந்த அம்பலவாணரையும் ஒருங்கே எழுப்பியது !

அம்பலவாணர் எழுந்தது செங்கமலத்திற்கு அத்தனை ஆனந்தம் ! பேச்சுத்துணைக்கு ஆள் தயாராகிவிட்டதே..

"தாத்தா ! தாத்தா ! எதற்காக இப்போது தஞ்சாபுரிக்குப் போய்க்கொண்டிருக்கிறோம் தாத்தா ?"

எழுந்தவுடனேயே தன்மீது வீசப்பட்ட இந்தக் கேள்விக்கணையால் அம்பலவாணர் தாக்குண்டார்... அவருக்கே பதில் சரியாகத் தெரியவில்லை.

எதற்காகப் போய்க்கொண்டிருக்கிறோம் ? யாரைப் பார்க்க சென்று கொண்டிருக்கிறோம் ? யாரிடம் நடந்த சம்பவங்களை சொல்லப்போகிறோம் ? அரசாங்கத்தில் பெரிய பதவியில் இருப்பவர் காதுகளிலல்லவா இந்த செய்தி சென்று சேரவேண்டும் ?

தவறானவர்களிடம் சென்று இதனைச் சொன்னால் விஷயம் விபரீதமாகிவிடும். அல்லது வீணாகிவிடும்.

யாரைச் சென்று காண்பது ? கிளையூர் வைத்தியருக்கு யாரையாவது தெரிந்திருக்குமா ? அவரிடம் இந்த விஷயத்தை பற்றி பிரஸ்தாபிப்பதே தவறாக முடியுமோ? ஊர் முழுக்க தண்டோரா போட்டு விட்டல்லவா மறுகாரியம் பார்ப்பார் ?

" தாத்தா ! பதில் சொல்லுங்க தாத்தா ! எதற்காக தஞ்சாபுரிக்குப் போய்க் கொண்டிருக்கிறோம் ?"

"அங்கே ஒரு முக்கியமான வேலை இருக்கிறதம்மா ! அதற்காகத்தான் சென்று கொண்டிருக்கிறோம்"

"இந்த முறையும் வைத்தியர் தாத்தா வீட்டிலா தங்குவோம் தாத்தா ?"

வைத்தியர் தாத்தா என்று செங்கமலம் குறிப்பிட்டது கிளையூர் வைத்தியரைத்தான். அவருக்கும் அம்பலவாணருக்கும் நெடுநாளைய பழக்கம்.

"ஆமாம் அம்மா" என்று அம்பலவாணர் சொன்னதும் செங்கமலம் முகம் மலர்ந்தது. சில திங்களுக்கு* முன் வைத்தியர் வீட்டில் தங்கியதும் அங்கு பக்கத்து வீடுகளில் பல தோழிகளை சேர்த்துக்கொண்டு வைத்தியர் வீட்டை ஒரு வழி செய்ததும்

ஞாபகம் வந்தன. அவளுக்கு உற்சாகம் பீறிட்டது.

** மாதம்*

"எத்தனை நாள் அங்கு தங்குவோம’ தாத்தா ?"

சாதாரணமாய் குழந்தை கேட்கும் கேள்விகளுக்கு இன்று நம்மால் பதில் சொல்ல முடியவில்லை. ஏன் இப்படிப்பட்டதொரு சிக்கலில் மாட்டிக்கொண்டோம் ?

"தெரியாது அம்மா !"

"அங்கே நிறைய நாள் தங்குவோம் தாத்தா ! என் தோழி மனதிற்கினியாளேடும் மற்றவர்களோடும் நிறைய விளையாட்டுக்கள் விளையாட வேண்டியிருக்கிறது !"

"ஆகட்டும் அம்மா !" என்றார் பெரியவர்.

நடக்கப் போகும் விஷயங்களைப்பற்றிய சிந்தனையில் அவர் மனம் ஆழ்ந்தது.

காலையில் செங்கமலத்தை வைத்தியர் வீட்டில் விட்டுவிட்டு கோட்டைக்குள் சென்றாக வேண்டும். அப்புறம் ஆரியப் படைவீட்டிற்குச் சென்று நமது மாணாக்கர்கள் யாரையாவது பிடித்து - அவர்களிடம் முழு விஷயத்தையும் சொல்லவும் முடியாது, ஒன்றும் சொல்லாமலிருக்கவும் முடியாது - யாரை எப்படி அணுகுவது என்று கண்டறிய வேண்டும். சேனாதிபதியை சந்திக்க முடிந்தால் மிக நல்லது. அவர்தான் ஒற்றர் படைக்கும் தலைவர் என்று சொல்கிக் கொள்கிறார்கள் - எந்த அளவிற்கு உண்மையென்று தெரியவில்லை.

இந்த ஒற்று விஷயம் என்று வந்துவிட்டாலே செய்திகள் அரசல் புரசலாய்த்தான் கிடைக்கும் - பணிகளும் காதும் காதும் வைத்த மாதிரிதான் நடக்கும். கொலையுண்டவன் ஒற்றனாயிருக்கலாம் என்று நாமே யூகித்துக் கொண்டிருக்கிறோம். அதுவே எந்த அளவிற்கு சரி என்பதே தெரியவில்லை.

அடடா ! நாடகம் முழுமையாகப் பார்க்கும் ஆசையில் விபரீதத்திலல்லவா விழுந்துவிட்டோம் ?

விபரீதம்தானா அது ? வேறு எவராவது அந்த இடத்தில் இருந்திருந்தால் நம்மளவிற்கு அக்கறை எடுத்துக் கொண்டிருப்பார்களா ? தெய்வம்தான் நம்மை அந்த இடத்திற்கு கொண்டு சேர்த்திருக்க வேண்டும் !

தெய்வமா ? அப்படி நம்மை அந்த இடத்திற்கு சரியாகக் கொண்டு சேர்க்கத் தெரிந்த தெய்வத்தால் ஏன் நடக்க இருந்த தீமையைத் தடுக்க முடியவில்லை ? அவனுடைய விதி அவ்வாறாக முடியவேண்டுமென்று இருந்ததோ ? அதற்கப்புறம் நான் அங்கு சென்று சேர்ந்து அவன் சொல்லும் கடைசி வார்த்தைகளைக் கேட்கவேண்டுமென்பதும் விதிதானோ ?

ஏதேது.. இதனைப் பற்றி சிந்திக்க சிந்திக்க நமக்கு பையித்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறதே...

சீக்கிரம் போய்ச் சேர்ந்தால் போதும்.. எப்போது தஞ்சையை நெருங்குவோம் ?

சற்று தலையைத் திருப்பிப் பார்த்தார்.. நீண்டு வளைந்து போகும் பாதையின் முடிவில் விரிந்து பரந்த கோட்டை மதிலும் கோட்டையின் தெற்கு வாசலில் பறந்துகொண்டிருந்த பெரிய புலிக்கொடியும் அம்பலவாணர் கண்களுக்கு மங்கலாகத் தெரிந்தன.

******************************************************************************
******************

"வரவேண்டும், வரவேண்டும், அம்பலவாணரே - உங்கள் வரவு நல்வரவாகட்டும் !"

"வைத்தியரே - ஏதேது வரவேற்பு பலமாயிருக்கிறதே, ஏதேனும் என்னால் ஆகவேண்டியது உண்டா ?"

"அடடா - உற்ற நண்பனை - நெடுநாள் கழிந்து சந்திக்கிறேன்... அவனுக்கு முகமன் கூறி வரவேற்றல் தவறா என்ன ? அட, குழந்தையும் வந்திருக்கிறாளா ? ரொம்ப நல்லதாய்ப் போயிற்று ! பகல் நேரத்தில் நீர் ஊர்சுற்றக் கிளம்பி விடுவீர் - என் பேத்திதான் எனக்குத் துணை !"

இப்படிச் சொன்னாலும’ வைத்தியருக்கு உள்ளூற வயிற்றுக்குள் புளியைக் கரையத்துவிட்டது போல் இருந்தது. செங்கமலமும் அவள் கூட்டாளிகளும் சேர்ந்துகொண்டு வீட்டை உண்டு இல்லையென்று செய்துவிடுவார்கள். அடுத்த சில நாட்களுக்கு பச்சிலைகளுக்கும் பஸ்பங்களுக்கும் கஷ்ட காலம்தான்... வைத்தியரைப் போலவே இந்த சில்வண்டு கோஷ்டியும் பச்சிலையையும் வாசலில் கிடக்கும் மண்ணையும் குழைத்து லேகியமாக்கித் தரும்...அவர்களும் வைத்தியம் செய்கிறார்களாம் - ஜாக்கிரதையாய் அதனை வாங்கி வெளியில் எறிய வேண்டும்...

இப்படித்தான் சென்றமுறை வந்திருந்தபோது வைத்தியர் இல்லாத சமயத்தில் ஒரு வயிற்றுவலி வியாதியஸ்தனுக்கு இவர்களே வைத்தியம் பார்க்க - விஷயம் ரொம்ப சிக்கலாகி விட்டது. இந்தமுறை அம்பலவாணன் இல்லாத நேரமாகப் பார்த்து இந்த

கோஷ்டியை சற்று கண்டித்து வைக்க வேண்டும்.

"என்ன வைத்தியரே - என்ன யோசனை ?"

"இல்லை... வந்து... என்ன காரியமாக இத்தனை தூரம், அம்பலவாணரே ? உம்மை துழாய்க்குடியிலிருந்து கிளப்புவது எளிதான காரியம் இல்லையே ?"

"அது வந்து...."

அம்பலவாணர் பொய் சொல்லும் கலையில் அத்தனை தேர்ந்தவர் அல்லர். பொய், பித்தலாட்டம், ஆள்மாறிப் பேசுதல்... இதெல்லாம் அவருக்கு அறவே கைவராத குணங்கள்.. ஆயினும்' இன்றைக்கு நாய் வேடம் போட்டாயிற்று - குலைத்துத்தான் தீர வேண்டும் !

"அது, நமது கைக்கோளப் படைத்தலைவர் ஏதோ பயிற்சி விஷயமாக என்னைப் பார்க்க வேண்டுமென்று சொல்லியனுப்பியிருந்தார்..."

"ஓஹோ... இருக்கட்டும், இருக்கட்டும்... நீரும் சோழ சைன்யத்துக்காக இரவு பகலாக உழைக்கிறீர்... ஏதாவது ஒரு அங்கீகாரமுண்டோ ? ம்ஹூம்... அதற்கெல்லாம் பெரிய மனிதர்களைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும் என்கிறார்கள்....

அம்பலவாணருக்கு இப்படிப்பட்ட பேச்சுக்கள் அறவே பிடிக்காதவை. அவர் தன் தொழிலில் கிடைக்கும் சந்தோஷத்திற்காக அதனை செய்து வந்தார் - அங்கீகாரம், பதவி முதலியவற்றுக்கும் அவருக்கும் வெகுதூரம்.

ஆனால் வைத்தியர் அம்பலவாணருக்கு நேர் மாறானவர். எப்போதும் புலம்புவதற்கு ஏதாவது செய்திகள் கிடைத்தவண்ணம்

இருக்க வேண்டும்.

"அது சரி, என்ன விதமான பயிற்சியளிக்க வேண்டுமாம் ?"

அம்பலவாணரால் தொடர்ந்து பொய் சொல்லிக்கொண்டிருக்க முடியவில்லை. பேச்சை எந்த திசையில் திருப்பினால் வைத்தியர் வளைவார் என்பது அவருக்குத் தெரிந்தே இருந்தது.

"அது கிடக்கட்டும் வைத்தியரே, உமது மகன் அரிகண்ட தேவன் எப்படி இருக்கிறான் ? இப்போதாவது ஒழுங்காக வேலைக்குச் சென்று கொண்டிருக்கிறானா இல்லயையா?"

தன்னுடைய ஏகபுத்திரன் அரிகண்ட தேவனைப் பற்றி யாராவது பேச்செடுத்தாலே போதும், அவ்வளவுதான் - வைத்தியர் விடாமல் புலம்பித் தள்ளிவிடுவார். ஒரு வகையில் பார்க்கப் பாவமாய்த்தான் இருக்கும் - ஏகபுத்திரன். வைத்தியருக்கு திருமணமாகி வெகுநாள் கழித்துப் பிறந்த பிள்ளை என்பதால் பெற்றோர் அளவுக்கதிகமாக அவனை சீராட்டி வளர்த்து அவன் குட்டிச் சுவராகிப் போனான். அவனுடைய தொந்தரவுகளை காணப் பொறுக்காத மகராசி வைத்தியர் மனைவி காலா காலத்தில் கண்ணை மூடினாள். பெற்ற பாவத்துக்காக வைத்தியர் மட்டும் இப்போது அவனைக் கட்டிக்கொண்டு மாரடிக்கிறார'.

" எங்கே அம்பலவாணரே ? நான் சென்ற பலப் பல ஜென்மங்களிலும் செய்த பாவ வினைகளல்லவா மகவு வடிவாய் வந்து பிறந்திருக்கிறது ? அது எங்கே திருந்தப் போகிறது ? எவர் எவர் கைகளிலும் கால்களிலும் விழுந்து அந்த மாதரசி குந்தவிதேவி ஆழ்வாரிடமே பேசி இவனுக்கு சுந்தரச் சோழ ஆதுரசாலையில் உதவியாளனாக நிரந்தர வேலை வாங்கித் தந்தேன். வருடாந்திர நெல் வரும்படி அத்தனை சுகமில்லை என்றாலும் ஊர் சுற்றிக் கொண்டிருப்பதற்கு அது எத்தனையோ

மேல் என்று நினைத்தேன்... பாவி மகன், ஒரு பக்கம்* கூட ஒழுங்காக வேலைக்குப் போகவில்லை... அவன் பேரையும் கெடுத்துக்கொண்டு என்பேரையும் கெடுத்துவிட்டு மறுபடியும் தன்னுடைய தீய சகவாசத்துக்கே திரும்பிவிட்டான் ! இப்போது கடைசியாக அவனை நாடகப் பையித்தியம் பிடித்துக்கொண்டு ஆட்டுகிறது ! எவனோ விசய இராசேந்திர ஆச்சாரியனாம் ! சாந்திக் கூத்தில் வித்தகனாம் !அந்த கூத்தாடும் கும்பலுடன் சேர்ந்துகொண்டு இவனும் நாள்தோறும் கூத்தடித்துக்கொண்டிருக்கிறான் !"

** 15 நாள்*

அதற்கப்புறம் தொடர்ந்த வைத்தியரின் புலம்பல்கள் அம்பலவாணரின் காதுகளில் ஏறவில்லை. கிணற்றில் நீர் இறைத்துக் குளித்துவிட்டு உடனடியாக உள்ளாலைக் கோட்டைக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. இன்னும் ஒரு நாழிகைக்குள் கிளம்பினால்தான் அவருடைய மாணவர்களில் எவனையாவது பிடித்து மேற்கொண்டு ஆட்களை சந்திப்பது பற்றி யோசிக்க இயலும்.

வைத்தியரின் புலம்பல்களுக்கு தலையை ஆட்டியபடியே வெளியே ஆர்வத்துடன் வாயிலைக் கடக்கும் செங்கமலத்தை நோக்கினார் அம்பலவாணர்.

தஞ்சை உள்ளாலைக் கோட்டையை ஒட்டி அமைந்திருந்த வீரசோழப் பெருவீதியில்* கைகளை வீசி நடக்கையில் அம்பலவாணரை பழைய உற்சாகம் தொற்றிக்கொண்டது. அது தமது பழைய மாணாக்கர்களை பார்க்கப் போகிறோம் என்பதினால் ஏற்பட்ட உற்காசமா, அல்லது வாழ்வில் புதிய அனுபவங்கள் சிலவற்றை அடையப்போகிறோம் என்று அவருடைய உள்ளுணர்வு உணர்ந்து கொண்டதினால் ஏற்பட்ட பூரிப்பா என்று நம்மால் திட்டவட்டமாகக் கூறமுடியாது.

** தஞ்சைக் கல்வெட்டுகளில் இந்த வீதி இடம்பெற்றுள்ளது*

**வீதியில் அரை நாழிகை நேரம் நடந்த பிறகு ஆரியப் படைவீட்டுப் பகுதிகள் ஆரம்பமாயின. தெருவில் போவோர் வருவோர் எண்ணிக்கையும் கூட ஆரம்பித்தது. தமக்குத் தெரிந்த முகம் ஏதாவது தென்படுகிறதா என்று பார்த்துக் கொண்டே வீடுகளைக் கடந்தார் அம்பலவாணர். வழக்கமாக இந்தப் பகுதியில் அடியெடுத்து வைத்ததுமே ஏதாவது பழகிய முகம் தென்பட்டு விடும் - ஆனால் சோதனையாக அன்று யாருமே கண’ணுக்குப் படவில்லை. பார்த்தவர்கள் அனைவருமே பெண்டு பிள்ளைகளாகவும் சிறார்களுமாகவே தென்பட்டார்கள். தப்பித் தவறி கண்ணில் பட்ட ஆண்களும் வயதானவர்களாக இருந்தது அம்பலவாணரை சற்று எரிச்சலுக்கு உள்ளாக்கியது...**

**"எங்கே போய்த் தொலைந்தான்கள் அத்தனை பேரும் ?" என்று அவருடைய பழைய மாணாக்கர்களை நோக்கிய வசவு மெதுவாக ஆரம்பித்தது. இன்னும் கொஞ்ச நேரம்தான்... அப்பறம் அவருடைய திருவாய் மொழி காது கொடுத்துக் கேட்க இயலாத அளவுக்கு சிதைந்துவிடும்.**

**உத்தேசமாக நெடுங்களத்தானான அரங்கன் பொன்னடியான் குடிலை குறிவைத்து நடந்துகொண்டிருந்தார் அவர் - "கடவுளே ! அவனாவது ஊரில் இருக்கு தொலைக்க வேண்டுமே!" என்று மனம் அரற்றியது.**

**ஒருவழியாக அவர் எதிர்பார்த்த வீடும் வந்தது. மூடியிருந்த கபாடத்தை மெதுவாகத் தட்டி "அரங்கா ! நான் ஆசான் துழாய்க்குடியானான அம்பலவாணன் கம்பன் அரையன் வந்திருக்கிறேன் !" என்று குரல் கொடுத்தார்.**

உள்ளே சற்று ஆள் அரவம் கேட்டது. முதலில் ஒரு இரண்டடி உருவமும் (அரங்கன் குழந்தை) அப்புறம் அவன் மனையாள் உருவமும் தென்பட்டன. அதென்னவோ அம்பலவாணருக்கு பெண்டுகளைக் கண்டால் கொஞ்சம் கூச்சம் வந்துவிடும். அவர்கள் இவருடைய வயதுக்கு மரியாதை கொடுத்து பாட்டா என்று அழைத்தாலும் இவர் உள்ளூற சற்று சங்கடத்துடன்தான் பேசுவார். போதும் போதாததற்கு இந்தப் பெண்பிள்ளை வேறு நாணிக் கோணிக்கொண்டு நிற்கிறது - எங்கே போய்த் தொலைந்தான் அந்த......%#@%#@?

"அரங்கன் வீட்டில் இல்லையா அம்மா ?" - ரொம்ப பிராசையின் பேரில் குரலில் கருணையை வரவழைத்துக்கொள்ள முயன்றாலும் அது வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறது !

"அவர் களத்திற்கு வடக்கே சென்றுவிட்டாரே ஐயா ? நீங்கள் அவருடைய ஆசான்தானே ? உள்ளே வந்து நீர் அருந்துங்களேன்...."

"இருக்கட்டும் அம்மா... களத்திற்குச் சென்றுவிட்டானா ? அப்படியானால் அவனுடைய அத்தனை சகாக்களும் கூட உடன் சென்றிருக்கிறார்களா என்ன ?"

" ஆமாம் ஐயா... நமது பகுதி ஆட்கள் அத்தனைபேரையும் இழுத்துச் சென்று விட்டார்கள் - அந்தளகப் படையில் நமது படைதான் சிறந்ததாம், அதனால்...."

அவளுக்குக் கேட்காவண்ணம் பற்களை நறநறவென்று கடித்தார் அம்பலவாணர். அடடா, நமது புகழ்பெற்ற அந்தளகப் பயிற்சி கடைசியில் நமக்கே சோதனையாக முடிந்து விட்டதே....

"உள்ளேதான் வாருங்களேன் ஐயா...."

"இல்லையம்மா - கோட்டைக்குள் அவசர வேலை இருக்கிறது.....நான் கிளம்புகிறேன்.. அவன் எப்போது திரும்புவானென்று தகவலுண்டா ?"

"இப்பொழுதுதானே படையே கிளம்பியிருக்கிறது ? அடுத்த ஒரு திங்களுக்குமேல்தான் செய்தியே வர ஆரம்பிக்கும் ! அதுவரை பிடாரியாருக்கு வேண்டிக்கொண்டு முடிச்சுப் போட வேண்டியதுதான்... எங்களின் பிழைப்பே இப்படியாகி விட்டது..."

அவளுக்கு கண்களில் நீர் முட்டி எந்நேரமும் வெளியே வந்துவிடலாம் என்று பயமுறுத்தியது. கெட்டது போ ! எங்கு சென்றாலும் ஏதோ ஒரு புலம்பல் ஒலிதான் நமது காதில் விழ வேண்டுமா ? சிவ சிவா !

"நான் வருகிறேனம்மா..." என்று சொல்லிவிட்டு திரும்பிப் பார்க்காமல் கிளம்பிவிட்டார்.

ஆயிற்று. இனி கோட்டைக்குள் நுழைந்தாற் போலத்தான்.

இன்னும் ஒரே ஒரு வழிதான் பாக்கி. கோட்டை வாயிற் காவலனிடம் சொல்லி கோட்டைத்தலைவனை சந்திக்க அனுமதி பெற வேண்டும். அப்புறம் அவனைச் சந்தித்து தாம் யாரென்பதை விளக்கமாகச் சொல்லி வந்திருக்கும் காரியத்தையும் விளக்கி - என்னவென்று பொய் சொல்வது ? கைக்கோளப் படை அது இதுவென்றெல்லாம் புளுக முடியாது, மாட்டிக் கொள்வோம். மேலும் தம்முடையது அரசாங்க அதிகாரம் பெற்ற பயிற்சிக் களமும் அல்ல - அதனால் கோட்டைத்தலைவன் நம்மை ஆசான் என்று நம்புவானானென்றுகூடச் சொல்ல முடியாது...

எனினும் வேறு வழியில்லை - ஒரு முயற்சி. அவ்வளவுதான்.

*****************************************************************************
*******************

அம்பலவாணர் இவ்வாறு வீர சோழப் பெருந்தெருவில் தனக்குத் தானே புலம்பிக்கொண்டு கோட்டை வாயிலை நோக்கி நடந்த அதே சமயத்தில் தமது பிரத்யேக மாளிகையில் வாயிலுக்கருகிலமைந்த சற்று ஒதுக்குப் புறமான தோட்டத்தில் மாராயரின் ஆட்களுக்காக காத்துக்கொண்டிருந்தார் மழபாடியார். சிந்தனை மற்றொன்றின்றி தமக்கு முன்வைக்கப்பட்டுள்ள பிரச்சனையில் மனம் முழுவதையும் ஒருமுகப்படுத்தியிருந்தார் அவர்.

ஒரு எதிரி.
முகம் தெரியாத எதிரி.
சோழ சாம்ராஜ்ஜியத்தின் பிரதான சேனாதிபதியைச் சுற்றி ஒரு கண்ணுக்குப் புலப்படாத மாய வலையைப் பின்னிக்கொண்டிருக்கிறான்.

ஒருவரா ?
இல்லை - ஒருவராக இத்தனை காரியங்கள் செய்ய முடியாது. பலர் இதில் சம்மந்தப்பட்டிருக்க வேண்டும்.

ஆக எதிரிகள்.

எத்தனை பேர் ?
குறைந்தபட்சம் இருவர். அதாவது மாராயர் மாளிகையில் ஒருவன். வெளியே வேறொருவன்.

மாளிகைக்குள் எதிரி இருப்பது நிச்சயந்தானா ? காலையில்

மாராயரை சந்திக்க வருகையில் வேளத்தார் நுழையும் தெற்கு வாயிலில் எங்கோ எப்போதோ - சேரநாட்டில் பார்த்தது போன்ற ஒரு முகத்தை ஷண நேரம் சந'திக்க அவனைப் பின்தொடர நினைத்து மாளிகைக்குள் எவருமறியாமல் புகுந்து - ஏக சந்தடி ! வாயிற்காவலர் கவனிக்கவில்லையென்று எண்ணி சற்று ஏமாந்துவிட்டோம் - சந்தடி பெரும் குழப்பமாகி விட்டது. மாராயர் என்ன நினைத்துக்கொண்டாரோ தெரியவில்லை.

அந்த முகம் ??? சரியாக ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறதே... அந்தக் கண்கள்...? எப்போதோ அதனை சந்தித்ததில்லை ?

சரி, மீண்டும் கேள்விக்கு வருவோம்... விஷயம் மாராயரின் மாளிகையிலிருந்து கசிகிறதா இல்லையா ? இப்போதைக்கு ஆம் என்றுதான் கொள்ள வேண்டியிருக்கிறது... அது உண்மை இல்லையேல் நமது அத்தனை முயற்சிகளும் வீண் ! மீண்டும் முதலிலிருந்து ஆரம்பித்தாக வேண்டும் !

மாளிகைக்குள் எதிரி ஒருவராவது இருப்பது நிச்சயமென்று நினைத்துக்கொண்டு மேலே யோசிப்போம்.

வெளியில்.... ஒருவன் இருந்தால் போதுமா ?

போதாது.

ஐங்கரன் என்ற ஒற்றன் இரகசியச் செய்தியோடு வருவது தெரிந்திருக்க வேண்டும். அவன் யார் என்று குறிப்பாக அடையாளம் காட்டத் தெரிந்திருக்க வேண்டும். அவனைக் கொடும்பாளூரிலிருந்து பின்தொடர்ந்து வந்து சமயம்பார்த்து தீர்த்துக்கட்ட.... குறைந்தபட்சம் இரண்டுபேர் அல்லது அதற்கு மேற்பட்டோர் தேவை.

ஆக குறைந்தபட்சம் மூன்றுபேர். மாளிகையின் உள்ளே ஒருவன். வெளியே இருவர் என்று வைத்துக் கொள்வோம். இவர்கள் மூன்றுபேரும் - அல்லது அதற்கும் மேற்பட்ட சிலரும் சேர்ந்து நூல்பிசகாமல் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

எத்தனை நாட்களாக ? சொல்ல முடியாது. அது நமக்குக் தேவையுமில்லை.

நமது உடனடிப் பிரச்சனை ஐங்கரனும் அவனிடம் கொல்லி மழவர் கொடுத்தனுப்பிய செய்தியும்தான்.

மழபாடியாருக்கு ஒரே ஒரு விஷயம் மிகுந்த கவலையளித்தது.

அதாவது எதிரிகள் செயல்பட்ட வேகம். எப்படியாவது அந்த இரகசியச் செய்தி தற்போதைக்கு மாராயர் கையில் அகப்படவே கூடாது என்பதில் அவர்கள் காட்டிய முனைப்பு.

மறுபடியும் கொல்லி மலைக்கு வேற்று ஆளையனுப்பி விஷயத்தை மாராயர் வாங்கிவிடுவார் என்பது அவர்களுக்குத் தெரியாதா ? தெரியும்.இத்தனை துல்லியமாய்
செயல்பட்டுக்கொண்டிருப்பவர்களுக்கு மிக நிச்சயமாகத் தெரியும்.

என்றாலும் ஐங்கரனைத் தடுக்க வேண்டியது அவசியமாயிருக்கிறது. இதற்கு என்ன அர்த்தம் ?

தஞ்சையிலிருந்து கொல்லிமலைக்குச் சென்று மீண்டுவர மிஞ்சி மிஞ்சிப்போனால் ஒரு பக்கமாவது ஆகும்*.

** 15 நாட்கள்*

ஆக அந்த செய்தியின் முக்கியத்துவம் அல்லது செயல்பாடு ஒரு

பக்கத்துக்குள் நடைபெறுகிறதென்று கொள்ளலாமா ? ஆம். அப்படியொரு சித்தாந்தத’தை அமைத்துக்கொண்டால்தான் எல்லா விஷயங்களும் பொருந்தி வருகின்றன.

ஒரு பக்கத்துக்குள் முக்கியத்துவத்தை இழந்துவிடும் செயல்பாடு என்னவாக இருக்கும் ? மாராயர் சொன்னதை வைத்துப் பார்த்தால் கொல்லி மழவர் முன்பு அனுப்பியுள்ள செய்திகளெல்லாம் வெவ்வேறு சதிச்செயல்கள் பற்றிய தகவல்களே - சதிச் செயல்களுக்குத்தான் கெடு என்பது இத்தனை முக்கியமான விஷயம்...

ஒரு பக்கம் ! பதினைந்தே நாட்கள் !

ஆக அந்த செயல்பாடு என்பதை ஏதோவொரு துணிகரமான சதிச்செயல் எனக் கொள்வதில் தவறில்லை. கடைசியில் அது அத்தனை ஆபத்தற்ற விஷயமில்லையென்று ருசுவானாலும் நமக்கு ஒரு பிரச்சனையுமில்லை. எனவே சதிச்செயல் ஒன்று நடைபெற இருக்கிறது என்ற அளவிலேயே இதனை அணுகுவோம்.

இந்த சதியின் முக்கிய சூத்திரதாரி இங்கில்லை - சேரநாட்டில் இருக்கிறான். அதனால்தான் எங்கோ இருக்கும் கொல்லி மழவருக்கு விஷயம் கசிகிறது. அவர் உடனடியாக இந்த விஷயத்தை இன்னாரிடம் எழுதிக் கொடுத்தனுப்புகிறேன் என்று மாராயருக்கு செய்தி அனுப்புகிறார்.

இந்தச் செய்தி குறிப்பாக எதிரிகளுக்கு எப்படித் தெரிந்தது ? மாராயர் அரண்மனையில் உள்ள அவர்கள் ஆள் மூலமாகத் தெரிந்திருக்குமா ? மாராயரின் அரண்மனைக்குள்ளேயே இருந்துகொண்டு துணிகரமாகச’ செயல்படும் அந்த எதிரி யார் ?

மாராயரையும் கடிந்துகொண்டு புண்ணியமில்லை.

ஆயிரக்கணக்கானவர்கள் வருவதும் போவதுமாக இருக்கும் உய்யக்கொண்டான் திருமாளிகையில் கட்டுக்காவலை மிக இறுக்கமாக வைத்துக் கொள்வதும் கடினம்தான். நிர்வாகத்திற்கு அது மிகுந்த இடைஞ்சலாயிருக்கும். ஏற்கனவே பெரிய தேவர் தங்கியிருக்கும் சோழவர்மன் திருமாளிகையின் கட்டுக்காவலையே...கட்டுக்காவலா அது, கட்டுக்கடங்காக் காவல்! பலரும் பல்வேறு விதமாக விமர்சித்து வருகிறார்கள். இந்நிலையில் மாராயர் அரண்மனையிலும் கெடுபிடி அதிகமென்றால் அதிகாரிகள் செயலாற்றமுடியாமல் வெறுப்படைந்துவிடுவார்கள்.

இவன் மாராயரின் அரண்மனையில் நடக்கும் அத்தனை விஷயங்களையுமே பொதுவாக ஒற்றறிந்துகொண்டிருக்கலாம் எனக் கொள்ளலாமா? இல்லை - மாராயர் அத்தனை அலட்சியமானவரில்லை. இந்த இடம் சற்று தெளிவுபட மாட்டேன் என்கிறது. சரி, இருக்கட்டும்.

மாளிகையில் இருக்கும் எதிரியைப் பிடிப்பதிலும் மிகுந்த நிதானம் தேவை. ஒருவனை மட்டும் கையும் மெய்யுமாகப் பிடித்துவிட்டால் மற்றவர்கள் மிகுந்த எச்சரிக்கையடைந்து விடுவார்கள். பாண்டி நாட்டிலிருந்தும் சேரதேசத்திலிருந்தும் இத்தகைய ஆபத்தான பணிகளில் ஈடுபடுவோர் கொற்றவை தேவியின் முன் நேர'ந்து கொண்டிருக்கக்கூடிய பயங்கர சபதங்களை மழபாடியார் ஞாபகப்படுத்திக் கொண்டார். அவர்களை துண்டு துண்டாக வெட்டினாலும் சரி - ஒரு நூலிழை விபரம்கூட கிடைக்காது.

அதனால் அவர்களை செயல்படவிடவேண்டும். கடைசி நொடிவரை நிம்மதியாக செயல்பட விடவேண்டும். சற்று கவனம் பிசகினாலும் திட்டங்கள் மாற்றப்பட்டு விஷயம் மிகுந்த சிக்கலடைந்துவிடும். எச்சரிக்கையோடு அவர்களை கவனிக்க வேண்டும்.

சரி - அடுத்து அது எந்த மாதிரி சதிச் செயலாயிருக்கக்கூடும்

என்பதைப் பற்றி யோசிப்போம். அடுத்த ஒரு பக்கத்துக்குள் நிகழக்கூடிய ஒரு சதிச்செயல்.

சதி என்பது எப’போது நிகழக்கூடியது ? எப்போது வேண்டுமானாலும் நிகழலாம்.

என்றாலும் ஏதாவது ஒரு விஷேச நாட்களின்போதோ விழாக்களின்போதோ அசம்பாவிதம் நடந்தால் அதன் பாதிப்பு அதிகமாயிருக்கும். கூடியிருக்கும் சாதாரண ஜனங்களிடையே பெருங்குழப்பம் ஏற்படும். அதை எதிரி நாட்டவர் பல்வேறு விதங்களில் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பொக்கிஷத்தைக் கொள்ளையடிக்கலாம். நகரில் தீவைப்பு போன்ற தீச்சம்பவங்களில் ஈடுபடலாம். பொதுமக்களிடையே இதெல்லாம் கடும் அதிருப்தியை ஏற்படுத்தும். அதனைப் பயன்படுத்தி நிலைமையை மேலும் மோசமாக்கி...

சை ! எத்தனை அமங்கலமான எண்ணங்கள் ? அத்தனைதூரம் அவர்களை செல்ல விடுவானேன் ?

இன்னும் ஒரு பக்கத்துக்குள் இரு விழாக்கள் வருவதாக நேற்று திருமுனைப்பாடிநாட்டு நரலோக வீரன் குறிப்பிட்டான்.

முதலாவது இன்றிலிருந்து ஆறு நாட்கள் கழித்து வரும் ஐப்பசி சதய நாள் விழா. பெரிய தேவரின் பிறந்தநாள். மிக விமரிசையாக தஞ்சை நகரெங்கும்... சோழ தேசமெங்கும்... கொண்டாடப்படும் ஒரு விழா.

ஆஹா ? சதய நாள் விழாவிலா சதி ? அப்படியானால்... அப்படியானால்... பெரியதேவரையா குறிவைத்திருக்கிறார்கள் ?அன்றைக்கு அவரை நெருங்குவதுகூட இயலாத காரியமாயிற்றே ?

கட்டுக்காவல் மிக அதிகமாக இருக்குமே ?

இரண்டாவது விழா சதயநாள் முடிந்து நான்கைந்து நாட்கள் கழித்து வரும் ஸ்ர்பலி. அதில் அரச குடுப்பத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும்தான் கலந்துகொள்ளவியலும். அங்கு ஏதாவது விஷமம் நடக்க வாய்ப்பிருக்கிறதா என்ன ?

எதற்கும் இரண்டு விழாக்களில் முதலாவதாக வரும் சதய நாளையே குறிவைப்போம். சதய நாளில் என்னென்ன நிகழ்ச்சிகள் நடைபெறப் போகின்றன.. அதில் பெரியதேவர் எந்தெந்த நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளவிருக்கிறார் என்பதெல்லாம் துல்லியமாகத் தெரியவேண்டும்.

ஒருவேளை... ஒரு வேளை பெரிய தேவரை நாம் அளவுக்கு மீறி பாதுகாக்க முயல்கையில் அவர்க்கு அடுத்தபடியாக இருக்கும் யாரையாவது குறிவைத்துவிட்டால் ?

மதுராந்தகர்* ? பெரியதேவரை அழிப்பதற்கு பதில் அவரது வாரிசை அழிக்கக் கருதுகிறார்களா ? ஆனால் மதுராந்தகர் பாதிநாட்கள் பயணத்திலிருக்கிறார்...அவர் தற்போது தஞ்சையில் உள்ளாரா என்பதே தெரியவில்லை...கண்டறியவேண்டும்.

** பின்னாளில்தான் இவருக்கு இராஜேந்திர சோழர் என்ற பெயர் ஏற்பட்டது*

அடுத்து மகாராணி உலோகமாதேவியான தந்திசக்தி விடங்கியார் ? பஞ்சவன் மாதேவியார் ? அக்கன்* ஆழ்வார் பராந்தகன் குந்தவை பிராட்டியார் ? இவர்களெல்லாம் அரண்மனைவிட்டு அதிகம் வெளியே வராதவர்கள்.

** அந்நாளில் அக்காவை அக்கன் என்று குறிப்பிட்டார்கள்*

சேனாபதி அமண்குடி கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரமராயர் ? அல்லது இராஜராஜ மாராயர் ? ம்ஹூம் - இவர்களைத் தீர்ப்பதற்கு இத்தனை முன்னேற்பாடுகள் அவசியமில்லை.

அவர்களது குறி பெரிய தேவரான உடையார் ஸ்ர் இராஜராஜ தேவர்தான் என்பதாய் உள்மனது சொல்கிறது.

மழபாடியாருக்கு திடீரென்று பொறுப்பு இரட்டிப்பானதுபோல் தோன்றிற்று.

ஒரு பக்கம் அரசரைக் காப்பாற்ற முயற்சியெடுக்க வேண்டும் ; இன்னொரு பக்கம் சப்தம் செய்யாமல் சதிகாரர்களை பிடிக்க வேண்டும். இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை - ஆனால' வேறு வேறானவை.

பெரிய தேவரை நினைக்கையில் மனதில் ஏதோ ஒன்று உடைந்தது... அரசர் என்கிற மட்டு மரியாதைகளையெல்லாம் தாண்டிய ஒரு பந்தம் ! ஒரு பாசம் ! பக்தி என்றுகூட சொல்லலாம்தான்... சரி, ஏதோவொன்று !

அடேய் ! பெரிய தேவரையா குறிவைக்கிறீர்கள் ? உங்களை குலத்தோடு வேரறுக்கிறேன். பூண்டோடு நாசம் செய்கிறேன்.

சாம்பல் பூத்த கனல் போன்றதொரு கோபம் மழபாடியாரின் உள்ளே மையம் கொண்டது. அவர் அடிக்கடி கோபப்படுபவரல்ல. அப்படி கோபம் வந்துவிட்டால் அது நிதானமாக தன் ஜுவாலைகளை பரப்பும். மெதுமெதுவாய் அதன் வெப்பம் அனைவரையும் தீண்டும். அந்தச் சாது மிரண்டால் சோழநாடு கொள்ளாது - அத்தனை வேகம் !

அவருடைய குலதெய்வமான கச்சிப்பட்டு ஐஞ்சந்தி துர்க்காதேவி மனதில் தோன்றினாள்...தாயே ! என்னை, என் முயற்சியை நெறிப்படுத்துவாயாக ! தட்சிண மேருவென்ற பிரம்மாண்டமான கோயிலைக் கட்டிக்கொண்டிருக்கும் சிவபாதசேகரரை காத்தருளுவாயாக !

மனமுருகி ஒரு பிரார்த்தனை விண்ணில் செலுத்தப்பட்டது.

அதற்கு பதிலாக "தந்தோம் !" என்பதாக ஒரு அசரீரி வானத்திலிருந்து மழபாடியாருக்கு மானசீகமாய்க் கேட்டது.

கோட்டை வாயில் குழப்பங்கள்

தஞ்சை கோட்டை வாயிலை நெருங்கிய அம்பலவாணர் அங்கு சேர்ந்திருந்த கூட்டத்தைக் கண்டு மனம் துவண்டார்.

கறிகாய் விற்பவர்கள், மரவேலை செய்பவர்கள், கம்மார், பூக்காரிகள், கிராமத்திலிருந்து நகரத்தைக் கண்கொண்டு பார்க்க வந்திருந்த பல்வேறு ஊர'க் குடிமக்கள் என்று ஒரு எல்லையில்லாத கும்பல் சேர்ந்திருந்தது.

வாயிற் காவலர் அவர்களுக்கே உரிய அதிகாரத்தை அங்கு செலுத்திக்கொண்டிருந்தார்கள். முத்திரை மோதிரம் தாங்கிய அதிகாரிகளிடம்தான் அவர்களின் அடக்கம் வெளிப்பட்டது.

அம்பலவாணர் கூட்டத்தில் முண்டியடித்து முன்னேறினார். சிலர் அவரைப் பின்னாலிருந்து பழிக்கும் குரல் காதில் கேட்டது. எதற்கும் செவிமடுக்காது காவலர்களை மட்டும் குறிவைத்து அந்த ஜன சமுத்திரத்தில் தத்தளித்தபடி நீந்தி கோட்டை வாயிலை

அடைந்தார்.

"நீர் யாரையா ? இத்தனை பேரிடம் சொல்லிக் கொண்டிருப்பது உமது காதில' விழவில்லையா ?" - அம்பலவாணரின் எளிய ஆடை அணிகலன்கள் கோட்டைக் காவலனிடம் பெரியதொரு மரியாதையைத் தோற்றுவித்துவிடவில்லையென்பது நிச்சயம்.

"விழவில்லை - இத்தனை ஜன சந்தடிதில் யார் பேசவதும் சரிவர காதுகளில் விழவில்லை!"

"சரிதான் - அப்போது உமக்காக ஒருதடவை மீண்டும் சொல்கிறேன் கேட்டுக் கொள்ளும் ! சதய நாள் விழா நெருங்கிக் கொண்டிருப்பதால் கோட்டைக்குள் உரிய அனுமதியின்றி எவரையும் விடவேண்டாமென்று வேளக்காரப் படையினர் கடுமையான உத்தரவு போட்டு விட்டார்கள் ! ஆக முத்திரை மோதிரமோ அழைப்புப் பத்திரங்களோ இன்றி எவரையும் கண்டிப்பாக உள்ளமே விடுவதற்கில்லை !"

"கோட்டைக் காவல் தலைவரை ஒரு மிக முக்கியமான காரியமாக சந்திக்க வேண்டியிருக்கிறது !"

"அட, எத்தனை பேர் இப்படிக் கிளம்பியிருக்கிறீர்கள் ? காலையில் இப்படித்தான் இருவரை உள்ளே விட்டேன் - கடைசியில் அவர்கள் காவல் தலைவரிடம் சென்று உள்ளே விடும்படி கெஞ்சிக் கொண்டிருக்கிறார்கள் ! நான் அவரிடம் நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டேன் !"

அவ்வளவுதான். அம்பலவாணரின் பொறுமை எல்லை கடந்தது.

"அடேய் ! மிக முக்கியமான வேலையாக பார்க்க வேண்டுமென்று சொல்லுகிறேன், உனக்கு நம்பிக்கையில்லையா ? என்னை

யாரென்று நினைத்தாய் ? துழாய்க்குடி அம்பலவாண ஆசான் என்று கேள்விப்பட்டதில்லையா ?"

"என்ன ஐயா, வயதுக்கு மரியாதை கொடுத்துப் பேசினால் அதனைக் கெடுத்துக்கொள்கிறாய் ? அந்தப் பக்கமாக நகர்ந்து நில் , பல்லக்கு வந்துகொண்டிருக்கிறது பார் !"

எதிர்பாராத ஒரு கணத்தில் அம்பலவாணர் காவலனால் இழுத்துப' பிடித்து ஒரு மூலைக்குத் தள்ளப்பட்டார் !

இடக் கரத்தை தரையில் ஊன்றி ஆங்காரத்துடன் சமாளித்துக்கொண்டு எழுந்து நெகிழ்ந்துவிட்ட உடைகளைச் சரிசெய்து கொள்கையில்....

மடியில் அந்தப் பொருள் உறுத்தியது - அவனுடைய முத்திரை மோதிரம் !

தம்முடைய செய்திக்கு நம்பகத் தன்மை வேண்டும் என்பதற்காக ஞாபகமாக மடியில் கட்டிக் கொண்டோம் ! அதனைப் பயன்படுத்தினால் என்ன ?

பாவம் - அம்பலவாணருக்கு முத்திரை மோதிரங்களில் பலப்பல வகை இருப்பதும் அவற்றிற்கு பலவித பலங்கள் அல்லது உரிமைகள் இருப்பதும் தெரியாது ! அவர் வைத்திருந்த முத்திரை மோதிரத்திற்கு ஏழறை பலம் ! ஒற்றர் படைக்கே உரிய பிரத்யேக அதிகாரங்கள் பலவும் படைத்தது.

அவருக்கு ஒரே ஒரு பிரச்சனைதான் கண்முன் தென்பட்டது - எப்படியாவது கோட்டைக்குள் நுழைந்து உரியவர்களிடம் இந்தச் செய்தியை தெரிவித்து விடவேண்டும் ! அத்துடன் நமது பொறுப்பு கழிந்தது - சோழநாட்டின் குடிமகன் என்ற வகையில் நமது

கடமையை நிறைவேற்றிவிட்ட திருப்தியுடன் நிம்மதியாக ஊர் போய்ச் சேர வேண்டியதுதான்.

அந்த மோதிரமும் அவரோடு இன்னும் அதிக நேரத்திற்கு இருக்கப் போவதில்லை. சேனாதிபதியையோ அல்லது அவருக்கு அடுத்தபடியாக அதிகாரம் உள்ளவரையோ சந்தித்து விஷயத்தைச் சொல்கையில் மோதிரத்தையும் கொடுத்துவிடுமோம்.

ஆக, ஒரே ஒரு முறை ! கோட்டை வாயிலில் நுழைவதற்கு மட்டும் ! பயன்படுத்தினால் என்ன ?

கோட்டைக் காவலனின் அத்து மீறிய அலட்சியம் அவருள் ஆங்காரத்தை கிளப்பி விட்டிருந்தது. இந்த மோதிரத்தை கம்பீரமாக அவன் முன் நீட்டி அவன் தன்னைப் பணிந்து குழைவதை காணவேண்டும் என்று மனம் ஏங்கியது.

சில கணங்களில் முடிவெடுத்துவிட்டார் அம்பலவாணர். மோதிரத்தை உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டியதுதான். வேறு வழியில்லை.

அவசர அவசரமாக மோதிரத்தை அணிந்துகொண்டு ஒரு முறை அழகு பார்த்தார் - என்ன கனகச்சிதமாக அவருடைய விரலுக்குப் பொருந்தியும் விட்டது!
இந்த அவசர முடிவு தன்னை எத்தனை பெரிய சிக்கலில் ஆழ்த்தப் போகிறது என்பதை அவர் அப்போது உணரவில்லை.

*****************************************************************************
******************

சிந்தனையில் ஆழ்ந்திருந்த மழபாடியார் தம்முன் வந்து நின்ற

ஆட்களை கவனிக்க சற்று நேரமானது.

"நீங்கள்தான் மாராயர் அனுப்பியுள்ள ஆட்களா ?"

"ஆம் ஐயா !"

"நான் யார் என்பதை அறிவீர்களா ?"

"அறிகிலோம் ஐயா !"

இவர்களில் ஒருவருக்குக்கூடவா நம்மைத் தெரியாது ? தெரிந்திருக்கலாம் - ஆனால் காட்டிக்கொள்ள மாட்டார்கள். கடைசிவரை எந்தப் பணியிலும் தாம் யாருக்காக வேலை செய்கிறோம் என்பதை காட்டிக் கொள்ளவே மாட்டார்கள்.

இவர்களுக்குக் கேள்வி கேட்கத் தெரியாது. தெரியக் கூடாது. சொன்னதைச் செய்யத் தெரியும். செயல்படத் தெரியும்.

பல்வேறு திறன்களில் வித்தகர்களாய் இருப்பார்கள் - மரம் ஏறச் சொன்னால் ஏறுவார்கள் - கோட்டை கொத்தளங்களுக்குள் புகுந்து புறப்படும் வழிவகை அறிந்திருப்பார்கள் - பலவிமான பாஷை பேசுவார்கள் - நொடியில் வேடங்கட்டிக்கொள்வார்கள் - வருடக்கணக்கில் வேறு தேசத்தவராய், வேறு தொழில் செய்பவராய், வேறு இனத்தவராய் செயல்பட’டுக்கொண்டே இருப்பார்கள். நாடு முழுக்க, தேசம் முழுக்கச் சுற்றி வருவார்கள். அரசருக்காக, தாம் வேலை செய்யும் அதிகாரிக்காக உயிரையும் தருவார்கள்.

சமுதாயத்தின் பல்வேறு மட்டங்களிலிருந்தும் பொறுக்கி எடுக்கப்பட்ட திறமைசாலிகள்.

இவர்களுக்கு தனிச் சேவகர் என்று பெயர’. பொதுவாக இவர்களுக்கு ஐந்து அல்லது ஆறறை பலம் கொண்ட அதிகாரங்கள் வழங்கப்படும். மாராயரின் தனிச் சேவகம் சிறப்புத் தகுதிகள் உடையது. அதில் சேர்ந்தால் ஒற்றர் படையில் மிக எளிதாக உள்ளே புகுந்துவிட முடியுமாம் -
சொல்லிக்கொள்கிறார்கள் ! அதெல்லாம் ஒன்றுமில்லை -
மாராயர’தான் ஒற்றர்படையில் தலைவர் என்பதால் ஏற்பட்ட வீண் வதந்தி என்று சொல்வாரும் உண்டு.

"உங்கள் பெயர்கள் என்ன ?"

"நான் தித்தன் - இவன் மூவேந்தன் - அவன் பெயர் பூபலன் !"

கவனமாக அவன் தங்கள் முழுப் பெயரையும்(1) சொல்லாமல் தவிர்த்ததை இரசித்தார் மழபாடியார்.

"சரி, கவனமாகக் கேளுங்கள் ! உங்களில் ஒருவர் - இதோ இவர், பூபலன் - என்னுடன் பெரிய தேவர் அரண்மனைக்கு வரட்டும். இரண்டாமவர் -
நீங்கள்தான் தித்தரே - மாராயர் அரண்மனையில் தங்கி நான் சொன்னதைச் செய்ய வேண்டியது. மூன்றாமவரான மூவேந்தர் பகல் முழுக்க நன்கு உறங்கி ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டியது - இவர் இரவு முழுவதும் விழித்திருக்க வேண்டி வரும் !"

"அப்படியே ஆகட்டும் ஐயா !"

"மூவேந்தர் இப்போதே கிளம்பிவிடலாம். மாலை தளிக்குளத்தார் ஆலயத்தின் சந்தி வேளை பூஜை மணி அடிக்கும் நேரத்தில் ஜெயபீமதளி(2)யின் வடக்கு வாயிலருகே வெளியே என்னை சந்திக்க வேண்டியது - சரியா ? உடை வணிகனுடையதாயிருக்கட்டும்.."

"உத்தரவு ஐயா !" - அவன் பதில் பேசாமல், எந்தக் கேள்வியும் கேட்காமல் கிளம்பிவிட்டான்.

"தித்தரே - மாராயர் அரண்மனையில் இருப்பவர்களுக்கு தங்களைத்' தெரியுமா ?"

"தெரியும் ஐயா ! அடியேன் மாராயரின் திருமஞ்சன வேளத்தாரில் ஒருவன் !"

மறுபடியும் மாராயரின் புத்திசாலித்தனம் பளிச்சிடுகிறது. எப்போதாவது வந்து போகும் ஆட்களாக இருந்தால் தனிச் சேவகரை எவரும் அடையாளம் கண்டுகொண்டுவிடக்கூடும் அல்லவா ? அதனால் ஆங்காங்கே பல்வேறு சாதாரண பணிகளிலும் இவர்களை ஈடுபடுத்திவிட்டு சமயம் வரும்போது பணியில் ஈடுபடுத்த வேண்டியது ! இப்போதுகூட நாம் ஏதோ வேளக்காரனுடன் பேசிக்கொண்டிருப்பதாகத்தான் அருகில் உள்ளவர் நினைத்துக் கொண்டிருப்பார்கள்.

"சரி, தித்தரே - நீங்கள் செய்ய வேண்டியது இதுதான் ...."

மழபாடியார் படிப்படியாக, நிதானமாக தன் கண்ணியை விரிக்கத் துவங்கினார்.

***************************************************************************
*******************

அலட்சியம் நிறைந்த கோட்டைக் காவலன் கண்களுக்குமுன் அந்த ஏழரை பலம் முத்திரை மோதிரம் கம்பீரமாய் நீட்டப் பட்டது. சோழரின் புலி, மீன், மகுடம், வராகம், சாமரம் பொருந்திய

இராஜமுத்திரையுடன் கொச கொசவென்று சுற்றிலும் எழுத்துக்கள் எழுதப்பட்ட அந்த முத்திரை மோதிரத்தின் பலத்தை அவனால் அனுமானிக்க முடியவில்லை.

சற்று முன்னால் தன்னால் தள்ளி விலக்கப்பட்ட ஆசாமி என்ன அலட்சியமும் சேர்ந்து கொண்டதால் சற்று கவனக் குறைவுடனே அந்த மோதிரத்தை நோக்கினான் காவலன். ஆனால் அவனுக்கு அருகில் நின்றுகொண்டிருந்தவனின் முகம் அதனைக் கண்டவுடன் வெளிறிற்று - எழுத்துக்களுக்கு நடுவில் தெரிந்தது அந்த ஏழரை இலக்கத் தமிழ் எண் !

"ஐயா ! நாங்கள’ ஏதாவது மரியாதைக் குறைவாக நடந்திருந்தால் மன்னிக்கவும் ! (சற்றே நெருங்கி காதுக்கருகில்) நீங்கள் வேறு வேடத்திலிருக்கிறீர்கள் என்று தெரியாமல் அலட்சியப்படுத்திவிட்டோம் ! (மீண்டும் விலகி) திட்டிவாசல் வழியே உள்ளே வாருங்கள் ஐயா !"

அம்பலவாணர் கம்பீரமாக திட்டிவாசலை நெருங்கினார். அங்கே நின்றிருந்த கும்பலில் சலசலப்பு மீண்டும் கிளம்பியது !

"அடேய், இப்போது தானே அந்தப் பெரியவரை வெளியே பிடித்துத் தள்ளினீர்கள்... அதற்குள் என்ன நடந்துவிட்டது ?" என்று எவரோ கேட்பதும் காவலன் அவர்களுக்கு ஏதோ மறுமொழி சொல்லி மழுப்பியதும் அம்பலவாணர் காதுகளில் லேசாக விழுந்தது. அவர் முகத்தில் சற்று புன்னகை அரும்பியது.

கோட்டைக் காவலனின் பணிவு இழந்துவிட்ட கம்பீரத்தை அவருக்கு மீட்டுத்தர, சற்று செருக்குடனே நடைபோடத் தொடங்கினார்

என்னவென்று நினைத்துவிட்டார்கள் இந்த அம்பலவாணனை ? என்

பயல்கள் ஊரில் இல்லை - இருந்திருந்தால் அந்தக் காவலனின் தலை இந்நேரம் மண்ணில் உருண்டிருக்கும் ! என்ன அலட்சியம் ? நாம் சந்திக்கப்போகும் பெரிய மனிதரிடம் - அவர் யாராக இருந்தாலும் சரி - இவர்களைப் பற்றி சொல்லி கண்டித்து வைக்க வேண்டும்.

ஆனால் கோட்டை வாயிலில் மற்றொரு விபரீதம் கருக்கொண்டிருந்தது. அம்பலவாணரை காவலன் பிடித்துக் கீழே தள்ளிய அதே வேளையில் கோட்டையின் உச்சி சாரளத்தில் அமர்ந்திருந்த காவல் தலைவனுக்கு மாராயர் முத்திரை பதித்த ஒரு அவசர ஓலை வந்து சேர்ந்தது. அதாவது புதிய நபர்கள் யாராவது முத்திரை மோதிரத்தை - குறிப்பாக ஏழரை பலம் உள்ள மரோதிரத்தை உபயோகிக்க முயன்றால் அவர்கள் யார் என்னவென்று தீவிரமாக விசாரிக்க வேண்டியது. பதில்கள் திருப்திகரமாக இல்லையென்றால் உடனடியாக மாராயருக்கு செய்தி அனுப்ப வேண்டியது.

திரும்பி வராத ஐங்கரனின் முத்திரை மோதிரத்தை யாரும் தவறாக உபயோகப் படுத்திவிடக்கூடாது என்பதற’காக மழபாடியார் மாராயரிடம் கிளம்புமுன் தெரிவித்த யோசனை அது.

ஓலையைப் படித்து முடித்த காவல் தலைவன் உடனடியாக கீழிறங்கி வந்தான்.

"ஆட்களை உள்ளே விடுவதில் கவனமாக இருங்கள் - குறிப்பாக ஏழரை பலமுள்ள முத்திரை மோதிரத்தோடு வரும் ஆட்களை என் அனுமதியின்றி உள்ளே விட வேண்டாம் !"

"ஐயா ! இப்போதுதான் ஒரு கிழவர் ஏழரை பல மோதிரத்தைத் காட்டி உள்ளே நுழைந்திருக்கிறார் !"

"என்ன ! உடனடியாக அவரைப் பிடியுங்கள் ! சந்தடி செய்ய வேண்டாம் - அதோ போய்க்கொணடிருக்கிறாரே, அந்த ஆள்தானா ? அடடா, அவர் திரிபுவனமாதேவிப் பேரங்காடிப் பக்கமல்லவா போய்க்கொண்டிருக்கிறார்... யாரங்கே - உடனடியாக அவரைப் பிடியுங்கள் !"

தனக்குப் பின் ஒரு பெரிய பூகம்பமே உருவாகிக் கொண்டிருப்பதை உணராத அம்பலவாணர் தனக்கே உரிய உற்சாகத்தோடு அங்காடியில் நுழைந்துவிட்டார். அவருக்கு செங்கமலம் ஞாபகத்திற்கு வந்தாள் - பாவம் ! குழந்தைக்கு ஏதாவது இப்போதே அங்காடியில் வாங்கி வைத்து விடவேண்டும். மாலை இந்த வழியாகத்தான் வெளியே வருவோமென்று சொல்ல முடியாது. மேலும் நமது விவகாரங்களில் மூழ்கிவிட்டோமானால் அவளை மறந்தே போய்விடுவோம். மாலை அவளுக்கு எதுவுமே வாங்கிச் செல்லவில்லையானால் அவளது செந்தாமரை முகம் வாடி வதங்கிவிடும் - அதை கண்கொண்டு பார்க்க சகிக்காது. ஆக இப்பொழுதே வாங்கிக் கொண்டு விடலாம்.

அவருக்கு குழந்தைகளுக்கான சாமான்கள் விற்கும் கடை எங்கே அமைந்துள்ளதென்று தெரியுமாதலால் நெரியும் கூட்டத்திலும் விடுவிடுவென்று அந்தக் கடைகளை குறிவைத்து நடக்கத் தொடங்கினார்.

பாவம் ! அவரைத் துரத்திவந்த காவல் வீரர்களின் கதிதான் பரிதாபமாகிவிட்டது.... அந்த பேரங்காடியில் கடைகள் நாலாபுறமும் விரிந்து பரந்திருந்தன. அவரை எங்கேயென்று தேடுவது ? திசைக்கொருவராக பிரிந்து தேடத் துவங்கினார்கள் காவலர்கள்...

இதில் வேடிக்கை என்னவென்றால் அம’பலவாணர் இருக்கும் திசையில் நடந்த காவலன் அவரைக் கோட்டை வாயிலில்

**பார்க்கவேயில்லை ! ஏதோ தலைவர் சொல்லிவிட்டாரென்று ஈட்டியைத் தூக்கிக்கொண்டு கிளம்பிவிட்டான் - இப்போது எதிர் எதிரே சந்தித்தால்கூட தான் தேடி வந்த நபர் இவர்தான் என்று அறிந்துகொள்ள முடியாத நிலை !**

**தனக்குப் பின் நடந்த இத்தனை பூகம்பங்களையும் அறியாத அம்பலவாணர் தான் நினைத்த கடைக்கு ஒரு வழியாய் போய்ச் சேர்ந்தார். அங்கு தென்பட்ட வகை வகையான பொம்மைகளிலும் விளையாட்டு சாமான்களிலும் எதைத் தேர்ந்தெடுப்பது என்று அவருக்கு வியப்பேற்பட்டது ! அட, எத்தனை விதம் விதமாய் செய்து விற்கிறார்கள் ! தஞ்சை தஞ்சை என்று தலையில் எல்லோரும் தூக்கி வைத்துக் கொண்டாடுவதற்கும் காரணம் இருக்கத்தான் செய்கிறது.**

**கடைசியில் ஒரு காசும் இருபது மஞ்சாடிகளும் (3) (கொஞ்சம் அதிகம்தான் !) கொடுத்து வகைக்கொன்றாகக் மூட்டை கட்டிக்கொண்டு உடையார் இராஜராஜ தேவரின் அரண்மனையிருக்கும் திசையை விசாரித்துக் கொண்டு கிளம்பினார்.**

**(தொடரும்)**

---

***அடிக்குறிப்புக்கள் :***

***(1) அக்காலத்தில் முழுப் பெயர் என்பது ஊர் பெயர் மற்றும் தந்தை அல்லது பாட்டனின் பெயரை உள்ளடக்கியிருக்கும்***
***(2) தஞ்சையில் உள்ளதாக சோழர்காலக் கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ள இக்கோயிலை இன்றைக்கு அடையாளம் காண***

*இயலவில்லை*

*(3) சோழர் காலத்தில் புழக்கத்திலிருந்த நாணய வகைகள்'*

**அகப்பட்டாரா அம்பலவாணர் ?**

**கோட்டைக் காவல் வீரர்கள் இரண்டு நாழிகைகளுக்கு மேல் திரிபுவன மாதேவிப் பேரங்காடியில் கிழக்கும் மேற்குமாகச் அம்பலவாணரைத் தேடி அலுத்துவிட்டு ஓய்ந்துபோய் கோட்டை வாயிலை அடைந்தார்கள்.**

**கோட்டைக் காவல் தலைவர் அவர்களுக்காக திட்டிவாசலருகில் காத்துக்கொண்டிருந்தார். வீரர்களின் முகத்தில் எழுதி ஒட்டியிருந்த ஏமாற்றம் அவருக்கு மனச் சோர்வை அளித்தது.**

**"ஐயா, மன்னிக்க வேண்டும் - பேரங்காடியின் அதீத நெரிசலில் கிழவரை தவற விட்டு விட்டோம் !"**

**"அடடா.... என்ன துரதிருஷ்டம் ! ஓலை சில கணங்களுக்கு முன்பு வந்திருந்தால்கூட அவரை பிடித்திருக்க முடியும் - சை ! தவற விட்டு விட்டோமே ! மாராயரிடம் விஷயத்தை தெரியப்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை ! உம்.... உங்களில் யார் அவரின் முத்திரை மோதிரத்தை கவனித்து திட்டிவாசலுக்குள்' உள்நுழைய விட்டது ?"**

**இருவர் தயங்கியபடியே முன்னால் வந்தார்கள்... "நாங்கள்தான் ஐயா !"**

**"சரி, உங்களால் அவருடைய அங்க அடையாளங்களை ஞாபகப்படுத்திக்கொள்ள இயலுமா ? "**

"வயது ஐம்பதுக்குக் குறையாது... பெரிய மீசையும் கொஞ்சம் தாடியும்கூட உண்டு. சாதாரண அரையாடையும் தோளில் ஒரு வஸ்திரமும்தான் தரித்திருந்தார்...ஆபரணங்கள் அதிகமில்லை, இடது கரத்தில் ஒரு கங்கணம் தரித்திருந்ததாக ஞாபகம் !"

"இதெல்லாம் பலருக்கும் பொருந்திவரக்கூடிய விஷயங்கள்... நமக்குப் பயன்படாது ! குறிப்பாக அவரை வித்தியாசப்படுத்திக் காட்டக்கூடிய அம்சமாக ஏதாவது உண்டா, சொல்லுங்கள் ?"

இப்போது இரண்டாமவன் - அம்பலவாணரை நகரச் சொல்லி தள்ளிவிட்டவன் - முன்வந்தான்...

"அவர் தன்னை ஏதோ ஒரு ஊரின் ஆசான் என்று....இருங்கள், துரைக்குடியோ... துவரக்குடியோ..இல்லை, துவரக்குறிச்சியா? - என்னவோ சொன்னாரே..."

"ஆசானா ? ஆசான் என்றால் கல்விமானாக - கல்வி போதிப்பவராகத் தெரிந்தாரா ?"

"இல்லை ஐயா - உடல் கடும் பயிற்சியினால் கட்டாகத் தெரிந்தது ! வயிரம் பாய்ந்த தோள்கள்....அநேகமாக போர்ப் பயிற்சி கற்றுத்தரும் கள ஆசானாக இருக்கக்கூடும்.. ஆங், சொல்ல மறந்துவிட்டேனே ! அவரின் வலது கரம் சற்று பிழறி இருப்பதுபோல் தெரிந்தது. இடக் கரத்தைத்தான் அதிகம் உபயோகப்படுத்துகிறார் !"

"ம்....இதெல்லாம் கொஞ்சம் உருப்படியான தகவல்கள் ! அடே, யாரங்கே - முறியும் எழுத்தாணியும் உடனே எடுத்துக்கொண்டு ஓடி வாருங்கள்...." என்று சொல்லிவிட்டு சற்று யோசனையில் ஆழ்ந்தார் காவல் தலைவர். மாராயருக்கு என்ன விதமாக விஷயத்தை எழுதுவது, மற்ற வடக்கு மற்றும் கிழக்கு வாயில் வீரர்களுக்கு

என்ன விதமான செய்தி அனுப்பி எச்சரிப்பது என்று சிந்திக்க ஆரம்பித்துவிட்டது அவர் மனம்.

நிம்மதியாக ஒரு நாள் கூட கழியக்கூடாதென்று தன் தலையில் எழுதியிருக்கிறது போலும் என்று தன்னைத்தானே நொந்துகொண்டார் அவர்.

*******************************************************************************************

அம்பலவாணரின் ஆரம்பகட்ட உற்சாகம் பெரிய தேவர் அரண்மனையை நெருங்க நெருங்க கொஞ்சம் கொஞ்சமாக குறைய ஆரம்பித்தது.

உண்மையில் அவருக்கு பெரிய மனிதர்களை சிநேகிதம் செய்து கொள்ளும் கலை அறவே தெரியாது. அவர்களாக இவருடைய அருமை பெருமைகளைப் பற்றி கேள்விப்பட்டு கூப்பிட்டனுப்பினால்தான் என்ன ? என்பது அவர் எண்ணம். ஆக துழாய்க்குடி ஊர் சம்மந்தப்பட்ட இறையிலி மற்றும் ஏரி வாரிய விஷயங்களுக்காக(1) அவ்வப்போது வருகை புரிந்தாலும் கீழ்மட்டத்து உடனுறை அதிகாரிகளை மட்டும் பார்த்துவிட்டு விஷயத்தை முடித்துக்கொண்டு கிளம்பிவிடுவார்.

ஆனால் இப்போது வேறு வழியில்லை. நம்பிக்கைக்குரியவர்களாகப் பார்த்து செய்தியை காதில் போட்டாக வேண்டும். பெரிய தேவரையோ அல்லது அவருடைய உடன் கூட்டத்துப் பெருமக்களையோ சந்தித்துவிட்டோமானால் மிகவும் நல்லது. பெரிய தேவரை பார்க்க முடியுமாவென்று தெரியவில்லை - அடடா, ஆதிச்சன் ஒவ்வொரு முறையும் சொல்லி அனுப்புவானே, அந்த

அமண்குடியானையாவது பார்த்துப் பழகிக்கொண்டு வந்திருக்கலாம் - இப்போது உபயோகமாக இருந்திருக்குமல்'லவா ?

போகும் வழியெல்லாம் நகரம் வரப்போகும் சதயநாள் விழாவிற்காக ஆயத்தமாகிக் கொண்டிருப்பதை அம்பலவாணர் கண்டார். ஆங்காங்கே தோரணம் கட்டக் கம்பங்களை சிலர் நட்டுக் கொண்டிருந்தார்கள். பிரதான ஊர்வலம் வரபோகும் பாதை செப்பனிடப்பட்டுக் கொண்டிருந்தது. சிலர் ஓங்கி உயர்ந'திருந்த மாட மாளிகைகளின் உச்சியில் ஏறி புலி இலச்சினை மற்றும் அஷ்ட மங்கலங்களும்(2) பொறித்த கொடிகளை கட்டிக்கொண்டிருந்தார்கள்.

பல்வேறு வகையான கூத்து நடத்துவோர் நகரில் ஆங்காங்கே மேடை அமைப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். விழாவுக்கு நான்கு நாட்கள் முன்னரே கூத்துப் படலம் ஆரம்பமாகிவிடுமல்லவா ? ஆக கூத்து மேடை அமைக்க பூசை போடும் படலம் அமர்க்களமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

அம்பலவாணருக்கு கூத்து என்றால் உயிர் அல்லவா ? அதனால் அந்த மேடை அமைப்போரையும் கூத்துக் கட்டும் பெருமக்களையும் ஆர்வத்துடன் பார்த்தவாறே மனமின்றி முன்னேறினார். சரிதான், இந்தப் பணி நம் கைகளில் வந்து சேர்ந்ததும் ஒரு வகையில் நல்லதாகத்தான் போயிற்று. இல்லாவிடில் நாம் சதய நாள் கூத்துப் பார்ப்பதற்கென்று இத்தனை தூரம் வருவோமா என்ன ?

நடக்கப் போகும் கூத்துக்களிலேயே பெரிய திருக்கூத்து மன்னர் புதியதாய்க் கட்டிக்கொண்டிரூக்கும் பிரம்மாண்டமான பெரிய திருக்கற்றளிக்குப் பக்கத்தில்தான் நடைபெறப்போகிறதென்பதை மக்களிடம் பேச்சுக்கொடுத்துக் கண்டறிந்தார் அம்பலவாணர். அடுத்த மூன்று நாட்களுக்கான திட்டத்தை அப்போதே தீட்டிவிட்டது அவர் மனம். அதாவது தினமும் காலையிலிருந்து

மாலைவரை வைத்தியர் வீட்டில் நன்கு ஓய்வெடுக்க வேண்டியது. சந்தி நேரத்தில் வைத்தியருடன் கிளம்பி (அவரை எப்படியாவது கிளப்பித்தான் ஆக வேண்டும் - இல்லையேல் கோட்டைக்குள் நுழைவது மறுபடியும் சங்கடமாகிவிடும்) கோட்டைக்குள் வந்து ஏதாவது கூத்தொன்றை விடிய விடிய திருப்பியோடு பார்த்துவிட்டுத் திரும்ப வேண்டியது.
செங்கமலத்தை அவளது தோழியின் வீட்டில் படுக்கப் போட்டுவிட வேண்டியதுதான். குழந்தைக்கு தூக்கம் கெட்டுப்போய்விடக் கூடாது.

ஆஹா, அதோ தெரிவது என்ன ? புதியதாக சுண்ணம் பூசி பலவித வண்ண அலங்காரங்களோடு தெரிவதுதான் தேவரின் அரண்மனை போலும் - அடடா, என்ன கம்பீரம் ! சென்ற முறை வந்தபோது ஊர் ஆட்களோடு வந்ததினால் பேச்சு சுவாரஸ்யத்தில் அரண்மனையை கூர்ந்து கவனிக்கவில்லை - என்ன ஒரு சௌந்தர்யம் !

அரண்மனை வாயிலில் கட்டுக்காவலும் அதிகமாயிருக்கிறது. வேளக்காரப் படையினர் வரிசையாக அணிவகுத்து நிற்கின்றனர். உள்ளே போவார் வருவோர் - அவர்கள் மிகவும் பெரிய மனிதர்களாக / தெரிந்தவர்களாக இருந்தாலொழிய - தீவிர விசாரணைக்குப் பிறகே உள்ளே அனுமதித்துக்கொண்டிருக்கிறார்கள். இத்தனை பெரிய கட்டுக் காவலைக் கடந்து உள்ளே செல்வது முடிகிற காரியமா என்ன ?

மீண்டும் முத்திரை மோதிரத்தை உபயோகிப்பதில் அம்பலவாணருக்குத் தயக்கம் இருந்தது. எக்காரணமாக இருப்பினும் வேறு ஒருவருக்குரிய முத்திரை மோதிரத்தை உபயோகிப்பது பெருந்தவறு என்று ஆதிச்ச சேர்வை வேறொரு சமயத்தில் சொல்லியிருந்தது அவருக்கு ஞாபகம் வந்தது. கோட்டை வாயிலில் செய்த தவறை மீண்டும் செய்ய வேண்டாம் என்று

அவரது உள்மனம் எச்சரித்தது.

உள்ளே செல்வதற்காக பலரும் நிற்கும் வரிசையில் அவரும் நின்றார். சிறிது நேரத்தில் அவரது முறை வந்தது.

"யாரை சந்திக்க வேண்டும் ஐயா ?" - இவர்களிடம் கொஞ்சமாவது மட்டு மரிதாதை தெரிகிறது. என்ன இருந்தாலும் பெரிய தேவரின் அரண்மனையில்லையா ? குடிகளுக்கு கொஞ்சமாவது இங்கே மரியாதை உண்டுதான் !

"ஐயா நான் முடிந்தால் உடையார் இராஜராஜ தேவரையோ அல்லது குறைந்தபட்சம் அவரது உடன்கூட்டத்து அதிகாரிகளையோ சந்திக்க வேண்டும். விஷயம் அவசரமானது..."

"தங்களின் பெயர்...?"

"துழாய்க்குடியானன அம்பலவாணன் கம்பன் அரையன்"

"ஓ ! துழாய்க்குடிக்காரரா... வரவேண்டும் வரவேண்டும் ! நமது படைகளில் அந்தப் பகுதி மக்கள் குறிப்பிடத்தக்க அளவில் இருக்கிறார்கள் !"

"அதற்கெல்லாம் என் பயிற்சிதான் காரணம் !" என்று சொல்ல பெரியவரின் நாவு துடித்தது. அதற்குள் அவன் அடுத்த கேள்விக்கு தாவிவிட்டான்.

"எப்போது தஞ்சைக்கு வந்தீர்கள் ஐயா ? எங்கே தங்கியிருக்கிறீர்கள் ?"

"காலையில்தான் வந்தேன் - என் நண்பன் ஒரு மருத்துவன் ! புறம்பாடியில் வீடுகட்டிக்கொண்டு இருக்கிறான்...அவனுடைய

வீட்டில் தங்கியிருக்கிறேன்..."

"சரி, தாங்கள் தேவர் அரண்மனைக்கு வந்துள்ள காரணம் ?"

"முடிந்தால் தேவரையோ அல்லது அவருடைய உடன் கூட்டத்து அதிகாரிகளையோ ஒரு விஷயம் சம்மந்தமாக அவசரமாக சந்திக்க வேண்டியிருக்கிறது..."

"என்ன காரணமாக உடையாரை சந்திக்க விழைகிறீர்கள் என்று சுருக்கமாகக் கூற இயலுமா ?"

"அது.. விஷயம் சற்று அந்தரங்கமானதாயிற்றே !"

"மன்னிக்க வேண்டும் ஐயா - வேளக்காரப் படைக்குத் தெரியக்கூடாத நாட்டு நடப்பு எதுவுமில்லை.."

சற்று தயங்கினார் அம்பலவாணர். இவன் நல்ல முறையில் பேசிக்கொண்டிருக்கிறான். கொஞ்சமேனும் விஷயத்தை சொன்னோமானால் உள்ளே நுழைய வாய்ப்புள்ளது.

"அது.. எங்கள் பகுதியில் அசம்பாவிதமாக ஒரு கொலை நிகழ்ந்துவிட்டது - கொலையுண்டவன் எங்கள் ஊர் ஆளில்லை. அவன் யார், எந்த ஊரன் என்பது பற்றிய விபரங்களுமில்லை... அது சம்மந்தமாக..."

"ஐயா, மன்னிக்க வேண்டும். இது தேவரோ அல்லது உடன் கூட்டத்தாரோ சம்மந்தப்பட்ட விஷயம் என்று எனக்குத் தோன்றவில்லை. இது நாடுகாவலதிகாரி கவனிக்க வேண்டிய விஷயம். உங்கள் பகுதியின் கூற்றம் எது வளநாடு எது(3) என்று சொன்னால் தகுந்த அதிகாரியிடம் நானே அனுப்பி வைப்பேன் !"

அம்பலவாணர் பாடு சிக்கலாகி விட்டது. இதற்கு மேல் இவனிடம் என்னத்தைச் சொல்வது ? மொத்த விஷயத்தையும் விளக்கமாகக் கூறிமுடித்தாலும் இவன் நம்மை உள்ளே விடுவானென்று தோன்றவில்லை. என்னதான் செய்வது ?

"...அது..."

"உங்களுக்கு நாடுகாவலதிகாரியைச் சந்திப்பதில் தயக்கம் இருப்பின் சேனாதிபதி குரவன் உலகளந்தானான இராஜராஜ மாராயரை சந்திக்கலாம். அவர்தான் நாடுகாவல் அதிகாரிகளுக்கெல்லாம் தலைவர் ! சொல்லப்போனால் அவர் மட்டும்தான் தற்போது உள்ளாலைக் கோட்டைக்குள் இருக்கிறார். அரசரும் அரசியரும் உடன்கூட்டத்தாருடன் நந்திபுரம் ஆயிரத்தளிக்கு சென்றுள்ளனர் - நாளைதான் திரும்புவார்களென்று கேள்வி !"

இது கொஞ்சம் ஏற்புடையதாகத் தெரிகிறது. மாராயர்தான் ஒற்றர்படைத் தலைவரென்று சொல்லிக் கொள்கிறார்களே ! விவகாரத்தை அவரிடம் ஒப்படைத்துவிட்டால் நமது கடமை முடிந்தது.

"அவருடைய மாளிகை எங்கே இருக்கிறதையா ?"

"இதோ, இதே தெருவில் ஒரு காத தூரம் நடந்தீர்களானால் விச்சாதரப் பெருந்தெரு பிரியும். அதில் திரும்பி சிறிது தூரம் நடந்தீர்களானால் தென் மேற்கே அமைந்துள்ள மாமணிக்கோயில் என்று அழைக்கப்படும் விண்ணகரத் தளி தெரியும். அதற்கு மிக அருகில்தான் மாராயர் வசிக்கும் உய்யக் கொண்டான் திருமாளிகை அமைந்திருக்கிறது - அங்கு சென்று யாரை விசாரித்தாலும் வழி சொல்லி விடுவார்கள்"

"மிக்க நன்றி - வருகிறேன் ஐயா !"

"வந்தனம், சென்று வாருங்கள் !"

***************************************************************************
*******************

சூரிய உதயமாகி இரண்டாம் ஜாமம் முடிவடைந்து உச்சிப் பொழுது நெருங்கிவிட்டதை நாழிகை வட்டில் தெரிவித்தது. வட்டிலின் அருகிலேயே அமர்ந்திருந்த மாராயர் கோட்டைக் காவல் தலைவனிடமிருந்து தனக்கு வந்திருந்த முறியை சற்று நேரம் வெறித்துப் பார்த்தபடி ஒன்றும் தோன்றாமல் அமர்ந்திருந்தார்.

ஏதேது, நமது நேரம் மிகவும் மோசமானதாக இருக்கும் போலிருக்கிறதே ? அரண்மனை ஜோசியரை சாவகாசமாகக் கண்டு வருவதற்கு நமக்கு நேரம் கிட்ட மாட்டேன் என்கிறது. இந்தச் சிக்கலோ நேரம் செல்லச் சொல்ல மோசமாகிக் கொண்டு வருகிறதேயொழிய சீரடைவதாகத் தெரியவில்லை. பரமனையும் கொடும்பாளூர் வரை துரத்தியாயிற்று - அவன் இங்கிருந்தாலாவது யோசனை கேட்கலாம்.

ஏழரை பல முத்திரை மோதிரத்தைக் காட்டி உள்ளே நுழைந’தவன் யாரென்று தெரியவில்லை. இத்தனை வயதானவர்களை சாதாரணமாய் யாரும் ஒற்றர்களாய் வைத்துக்கொள்வது வழக்கமில்லை. போதாக்குறைக்கு ஒரு கரம் வேறு அவனுக்கு விளங்கவில்லையென்று எழுதியிருக்கிறார்கள்.ஒன்றும் புரியவில்லை...

ஒன்று இப்படி நுழைந்தவன் நடிப்பில் தேர்ந்த ஒற்றனாயிருக்க வேண்டும், அல்லது விவரம் தெரியாமல் வேறு எவருடைய முத்திரை மோதிரத்தையோ உபயோகித்திருக்கும் ஆளாயிருக்க

வேண்டும்....

ஒற்றர்களில் பெரும்பாலோர் அவசியம் நேர்ந்தாலோழிய கோட்டைக்குள் வருவதை முடிந்தவரை தவிர்த்து விடுவார்கள். செய்தி அனுப்புவதுதான் அவர்கள் தொழில்... நேரில் இன்னாரை அடிக்கடி சந்தித்தால் தாம் இன்னாருடைய ஒற்றர் என்பது வெளியாகிவிடும் என்று அஞ்சுவார்கள்.

இவனோ முத்திரை மோதிரத்தை அதிகாரமாய் நீட்டி உள்ளே பிரவேசித்திருக்கிறான். தீய எண்ணத்தோடு உள்ளே புக நினைக்கும் எதிரிக்கு இத்தனை தைரியம் இருக்குமா என்ன ?

எது எப்படியோ, அவன் பிடிபட்டு நமக்கு முழுச் செய்தியும் கிட்டும்வரை நமக்கு நிம்மதியில்லை.

மழபாடியானிடமிருந்து செய்தி வருவதற்கு குறைந்தது இரண்டு நாட்களாவது ஆகும். அதற்குள் இந்த விஷயத்தை அவனுக்குத் தெரிவித்துவிடுவது நல்லது - இது சம்மந்தமாக எது நடந்தாலும், சிறிய விஷயங்களாயினும் சரி - உடனுக்குடன் தெரிவிக்குமாறு சொல்லிவிட்டுப் போயிருக்கிறான். ஆக அவனுக்கு முறியனுப்ப வேண்டியதுதான்.

நினைத்ததை செயல்படுத்தியும் விட்டார். மழபாடியாரின் அந்தரங்கக் காவலருக்கு முறியனுப்பிவிட்டு ஓய்ந்து சாய்கையில்... கதவு தட்டப்பட்டது.

"யாரது ?"

"ஐயா - உங்களை அவசரமாய் சந்திக்க வேண்டுமென்று ஒருவர் காத்துக்கொண்டிருக்கிறார் !"

**மாராயர் அந்த விடையில் அதிகாரியிடம் தன் கோபத்தையெல்லாம் பொரிந்து தள்ளிவிட்டார்.**

**"அவசரம்தானையா - யாருக்குத்தான் அவசரமில்லை ? அவரவர் அவசரப்படிதான் உலகம் நடந்துகொண்டிருக்கிறதாக்கும் ? அப்படி தலைபோகிற அவசரமென்றால் போய் அரசரையே பார்த்துக்கொள்ளச் சொல்லுங்கள் ! நான் ஒருவன்தான் அத்துணைபேர் அவசரத்துக்கும் கிடைத்தேனா ? நல்ல அவசரம் போங்கள் !"**

**மாராயரை சந்திக்க வந்திருந்தவர் அவருக்குத் தற்போது மிகவும் தேவைப்படுபவரான அம்பலவாணர் கம்பன் அரையனார் !**

**(தொடரும்)**

---

***அடிக்குறிப்புக்கள் :***

***(1) துழாய்க்குடியில் ஒரு பெரிய ஏரி அப்போது இருந்தது. இன்றைய துவாக்குடியில் அந்த இடத்தில் முதல் குலோத்துங்க சோழன் கல்வெட்டொன்று தற்போது நமக்குக் கிடைத்துள்ளது***
***(2) வெற்றிலை, மஞ்சள், சுண்ணம், தானியம் முதலானவற்றை உள்ளடக்கிய எட்டு மங்கலச் சின்னங்கள். இவற்றை தஞ்சை பெரிய கோயிலின் திருஅணுக்கன் திருவாயிலில் பொறிக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம்***
***(3) அக்காலத்தில் சோழமண்டலம் பல்வேறு வளநாடுகளாக, கூற்றங்களாக பிரிக்கப்பட்டிருந்ததென்பதை முன்னர் கண்'டோம்'***

**தேவர் திருமெய்க்காப்பு**

அம்பலவாணர் மாராயரை சந்திக்க முயன்ற அதே உச்சி வேளையில் மழபாடியார் பெரிய தேவரின் திருமெய்க்காப்புப் படைத் தலைவருடன் தீவிர மந்திராலோசனையில் இருந்தார். மழபாடியாரை நன்கு அறிந்தவரும் அவருடைய உற்ற தோழருமான மெய்க்காப்புத் தலைவர் வேளாண் ஆட'கொண்ட வில்லியார் சதய நாள்விழாவில் அரசர் பங்கெடுத்துக்கொள்ளும் பல்வேறு நிகழ்ச்சிகள் பற்றிய தகவல்களை அவருக்கு விபரமாக எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்.

"பரமா !" என்று நட்புரிமை காரணமாக ஒருமையில் அழைத்தார் வில்லியார்.

"சதய நாள் அன்று அரசரின் பணிகளை வரிசைக் கிரமமாக சொல்கிறேன் கேள்.
காலையில் விடிந்தும் திருமஞ்சனம். அது முடித்து தேவார தேவருக்கு(1) உஷத் கால பூஜை. பின் அன்றைய முதல் காரியமாக இராஜ குரு சர்வசிவ பண்டிதரை சந்தித்து ஆசி பெறுதல்.

அதற்குப் பின் அக்கன் குந்தவையாழ்வாரையும் மற்ற குடும்பத்துப் பெரியவர்களையும் சந்தித்து ஆசி கோரல். இதையெல்லாம் முடித்து இராஜ சபைக்கு வருவதற்கே ஒரு ஜாமம் இரண்டு நாழிகை ஆகிவிடும்.

சபையில் புலவர் பெருமக்கள் மற்றும் மூத்தோரின் ஆசி கோருவார் அரசர். மக்களுக்காக அறிவிக்கப்படும் சிறப்புச் சலுகைகளெல்லாம் அப்போதுதான் வெளியிடப்படும். சில இறையிலி தானங்களும் தேவதானங்களும் நாடெங்கிலுமுள்ள தலங்களுக்கு வழங்கப்படும். பொதுமக்களையும் குறுகிய நேரத்திற்கு அரசர் சந்திப்பார்.

பின் உணவுக்காக ஓய்வு. நீ இதில் கவனிக்க வேண்டியது என்னவென்றால் அரசர் காலை முழுவதும் அரண்மனையை விட்டு வெளியே செல்வதில்லை என்பதுதான்.

நாளின் மூன்றாம் ஜாமம் முடிந்து நான்காம் ஜாமம் ஆரம்பிக்கும் மாலை வேளையில் நேராக தளிக்குளத்தார் ஆலயத்திற்குச் சென்று ஆலய தரிசனம்."

மழபாடியார் இடைமறித்தார்.

"ஆக அன்றைக்கு அவருடைய முதல் புறப்பாடு நான்காம் ஜாமத்தில்தான் ! சரி, எந்த வழியாக அரசர் தளிக்குளத'தார் ஆலயத்தை சென்றடைவாரென்று தெரியுமா ?"

"சொல்ல முடியாது. விச்சாதரத் தெரு வழியாக அரிகுல கேசரிப் பேரங்காடியைக் கடந்து தளிச்சேரியின் வடசிறகு(2) வழியாக ஆலயத்தை அடையலாம். அல்லது ஒரேயடியாக சுற்றி வளைத்துக்கொண்டு விக்கிரமச் சோழப் பெருவீதி வழியாக தெற்குக் கோட்டை வாயிலைக் கடந்தும் செல்லலாம். கடைசி நிமிடத்தில் அரசர் முடிவெடுத்து அப்படியே இரதத்தில் செல்வார் !"

மழபாடியார் முகத்தில் புன்னகை அரும்பியது. ஒரேயடியான கெடுபிடிகளை அரசர் விரும்பமாட்டார் என்பது அவருக்குத் தெரியும். தற்போதுள்ள இராஜ்ஜிய பாரம் என்னும் சுமையை தாங்கி இராஜராஜனாயிருப்பதைவிட, மக்களில் ஒருவனாக - அடையாளமற்ற சுதந்திரப் பறவையாக - வெறும் அருமொழித் தேவனாக இருந்த காலத்தையே பெரிதும் விரும்புகிறேன் என்று அவரே பலமுறை மழபாடியாரிடம் மனம்விட்டுக் கூறியிருக்கிறார்.

"சரி, அப்போது அவருக்குப் பாதுகாப்பு ?"

"அப்போதும் பாதுகாப்பிற்குக் குறைவில்லை - அவரைத் தொடர்ந்து மூன்று இரதங்கள் மூன்று பாதையில் ஒரே வேகத்தில் பயணப்படும். ஆக எந்தப் பாதையில் அரசர் பயணிக்கிறார் என்று யாருக்குமே தெரியாது."

"சரிதான் - கோட்டைக்குள்ளேயே இத்தனை முன்னேற்பாடுகளா ?"

"வேறு வழியில்லை - அசம்பாவிதம் எதுவும் நடந்துவிடக் கூடாதென்றுதான் இத்தனை ஏற்பாடுகள் ! தளிக்குளத்தார் ஆலயத்தில் சிறப்பு ஆராதனை வழிபாடுகள் நடக்கும். திருப்பதியம் பாடவல்லோரும் வாத்தியப் பேரரயர்களும் நிருத்த மாராயர்களும் தளிச் சேரிப் பெண்டுகளும் அந்த இடத்தையே பூலோக கையிலாயமாக்கி விடுவார’கள் ! ஆஹா ! அந்தக் காட்சி அற்புதமாயிருக்கும் !

பின் இராஜ கஜத்தில் அரசர் ஏறி முன்னேற்பாடு செய்யப்பட்ட பாதை வழியாக சுற்றிக்கொண்டு தற்போது பெரிய திருக்கற்றளி எழும்பிக்கொண்டிருக்கும் வளாகத்தை அடைவார். அங்கும் இளங்கோயிலில்(3) எழுந்தருளியிருக்கும் தட்சிண மேரு விடங்கரான ஆடவல்லாருக்கு(4) சிறப்புப் பூஜைகள் ஹோமங்கள் நடைபெறும். அங்கு அதிக நேரம் தங்காமல் அரசர் திருக்கூத்து வளாகத்திற்கு எழுந்தருளுவார்."

" திருக்கற்றளி வளாகத்தில் பாதுகாப்பு ஏற்பாடுகள் எப்படி ?"

"பொதுமக்களுக்கு கெடுபிடி கொஞ்சம் அதிகம்தான். கடுமையான சோதனைக்குப் பிறகே உள்ளே அனுமதிக்கப்படுவார்கள். வளாகத்துக்குள் அனுமதி பகல் மூன்றாம் ஜாமத்தின் முடிவில் நிறுத்தப்பட்டுவிடும்."

"மற்றவர்களுக்கு அனுமதி எவ்வாறு ?"

"அதிகாரிகளில் பெருந்தரத்தாருக்கு மட்டும் அனுமதி உண்டு. சிறுதரத்தாரில் குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் பிரத்யேக அனுமதி. அரச குடும்பத்தின் பெண்டுகளுக்கு தனி நுழைவாயில். இவர்களையும் கூத்தப் பெருமக்களையும் நிருத்தாசிரியர்களையும் வாத்தியக் காரர்களையும் தவிர ஒருவரும் உள்ளே நுழைய முடியாது !"

திருமெய்க்காப்புப் படை எத்தனை துல்லியமாய் அத்தனை விபரங்களையும் கணக்கிட்டு வைத்திருக்கிறதென்று மழபாடியார் வியந்து போனார். உண்மையில் அரசரின் பாதுகாப்பு இத்தனை சிக்கலாகிவிட்ட விஷயமே அவருக்குத் தெரியாது ! சிறு விபரங்களைக்கூட விட்டு வைக்காமல் தெளிவுபட இருக்கும் ஆட்கொண்ட வில்லியாரிடம் நண்பர் என்பதையும் மீறி மதிப்புக் கூடியது.

இத்தனையும் மீறியா அரசர் உயிருக்கு ஆபத்து வந்துவிடப் போகிறது ? அநாவசியமாக அலட்டிக் கொண்டிருக்கிறோமா ?

"வில்லியாரே - இந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் பற்றிய முழு விபரங்களும் உங்களைத் தவிர வேறு யாருக்காவது தெரியுமா ?"

"சிலச் சில விபரங்களை சம்மந்தப்பட்டவர்களிடம் சொல்லி வைத்திருக்கிறோம். முக்கியமாக பாலாலய பூஜைக்கு வரப்போகும் கிரம வித்தர்களுக்கும் கூத்து நடத்தப்போகும் குழுவுக்கும் அவர்கள் கோஷ்டியார் சம்மந்தப்பட்ட மற்றவர்களுக்கும் வேண்டிய மட்டும் எச்சரிக்கை செய்திருக்கிறோம். ஆக அங்கே புதியவர்கள் எவரும் நுழயை முடியாது. என் குழுவில் இருக்கும் முக்கியப்பட்டவர்களுக்கு இந்த ஏற்பாட்டு விபரங்கள் பலவும் தெரியும். மற்றபடி இதில் சம்மந்தப்படாத வேற்றாள் ஒருவருக்கு விபரங்கள் தெரியுமென்றால் அது நீ ஒருவன்தான் !"

"மனம் விட்டுச் சொல்கிறேன் - உங்களை சந்தித்தது மனதுக்கு சற்று நிம்மதியாக இருக்கிறது. அரசருடைய பாதுகாப்புக்கு குந்தகம் விளையலாம் எனும் சூழ்நிலை வெளியில் உருவாகியிருக்குமோ என்று நானும் மாராயரும் அஞ்சுகிறோம். முன்பே நான் விளக்கமாகக் கூறியபடி ஐங்கரன் பிரச்சனையை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தாலொழிய எங்களுக்கு நிம்மதியில்லை..."

"எங்கள் பாதுகாப்பு ஏற்பாடுகள் பலமாக இருந்தாலும் நீ உன் பிடியை தளர்த்திக் கொள்ள வேண்டாம் ! வழக்கமான நேரான யோசனைகள் எல்லா நேரங்களிலும் பயனளிப்பதில்லை... பல்வேறு விதமாகவும் இந்தப் பிரச்சனையை அணுக முயற்சி செய் ! உன் முயற்சிக்கு என்னாலான எல்லா உதவிகளையும்' நாங்கள் செய்கிறோம் !"

"மிக்க நன்றி வில்லியாரே ! நான் கிளம்புகிறேன்... உங்கள் படைகளின் ஆயுதச்சாலை தெற்கு உள்ளாலை மதிலருகேதானே அமைந்திருக்கிறது ?"

"ஆம் - நீ அங்கு செல்கிறாய் என்றால் நான் கிடங்கின் தலைவனுக்கு முறியனுப்பி விடுகிறேன் "

" செய்யுங்கள் "

***************************************************************************
******************

மாராயரோடு பழகிப் பழகி அவருடைய அத்தனை உணர்ச்சிகளும் அவருடைய விடையில் அதிகாரிக்குப் பழகியிருந்தது.

"சேனாதிபதியாரே ! தங்கள் பொறுமையை சோதிப்பதற்கு மன்னிக்கவும். வந்திருப்பவர் நமது திருமாளிகைக்கு வழக்கமாக விஜயம் புரியும் நபர் அல்ல. ஆள் வாட்ட சாட்டமானவராக, கண்ணியமானவராக இருக்கிறார் - கண்களில் நேர்மை தெரிகிறது. உங்களை முக்கிய விஷயமாகக் காணவேண்டும் என்று சொன்னார் - என்ன காரியம் என்று எங்களிடம் சொல்ல மறுக்கிறார்..."

"உங்களுக்குத் தெரியக்கூடாத விஷயம் அப்படியென்ன இருக்கப்..... பொறு ! ஆள் எந்த மாதிரி தெரிந்தார் ?"

"சற்று வயதானவர் ஐயா - ஆனாலும் திடகாத்திரமான உருவம்..."

மாராயர் தன்னுடைய ஆசனத்திலிருந்து எழுந்து விட்டார்....வந்திருப்பது....?

"அவருடைய வலது கை சற்று பிசகியிருப்பதுபோல் தெரிந்ததா ? நீ கவனித்தாயா ?"

"வலது கரத்தை கவனிக்கவில்லை ஐயா - ஆனால் இடக் கரத்தைத்தான் நீட்டி நீட்டிப் பேசுகிறார் ! "

"அவரேதான் ! அவரேதான் ! ஆஹா - இருண்ட பாதையின் முடிவில் ஒரு வழியாக வெளிச்சம் தெரிகிறது ! வெளிச்சம் தெரிகிறது ! எங்கே அவர் - வாயிலில் உள்ள விருந்தினர் அறையில்தானே தங்க வைத்திருக்கிறீர்கள் ? இதோ விரைகிறேன் !"

அவசர அவசரமாக முற்றத்தையும் அலுவல் அறைகளையும் கடந்து - விருந்தினர் அறையை நோக்கி ஏறக்குறைய ஓடினார் மாராயர் ! விடையில் அதிகாரி மாராயரின் திடீர் மனமாற்றத்திற்குக் காரணம் புரியாமல் அவர் பின்னோடே ஓடினார் !

ஒரு வழியாக விருந்தினர் அறைக்குள் நுழைந்தால் - யார் யாரோ தென்படுகிறார்கள், ஆனால் அவரைக் காணோம் ! பலரும் அவருக்கு முகமன் கூறினார்கள் - ஆனால் அதையெல்லாம் லட்சியம் செய்யும் நிலையில் மாராயர் இல்லை !

எங்கே அந்த திடகாத்திரமான வயதானவர் ? இங்கிருப்பவர்களில் எவரும் அந்த வர்ணனையோடு ஒத்து வரவில்லையே ! அவசர அவசரமாய்ப் பின் திரும்பி விடையில் அதிகாரியை நோக்கினார் - "எங்கே அவரை அமர வைத்தாய் ?"

"இங்குதான் பிரபோ இருந்தார் !" விடையில் அதிகாரிக்கு வியர்த்துக்கொட்ட ஆரம்பித்து விட்டது.... "இருங்கள், வெளியில் இருக்கிறாராவென்று பார்த்துவிட்டு வருகிறேன் !"

அவ்வளவுதான் ! மாராயரின் பொறுமை எல்லை மீறிவிட்டது - "அடே, என்னதான் நடந்துகொண்டிருக்கிறது என் அரண்மனையில் ?" என்று குரலை உயர்த்திக் ஒரு உறுமல் உறுமினார் !

பொறு, பொறு ! நிதானம், நிதானம் ! இதுதானே நமது சிஷ்யன் மழபாடியான் நமக்கு உபதேசிக்கும் ஒரே பாடம் ! பொறுமை - பொறுமை !

"பிரபோ, மன்னிக்க வேண்டும் ! அந்த வயதானவர் சிறிது நேரத்திற்கு முன்னராகவே அவசர அவசரமாக எழுந்து வெளியே சென்று விட்டாராம் ! வாயில் காவலன் சொல்கிறான்... விருந்தினர் அறையிலிருந்து வந்தவராதலால' அவரை எவரும் தடுக்கவில்லை ! "

"வாயிலுக்குச் சென்று பார்த்தீர்களா - அவர் இன்னமும் வெளியில் நின்றுகொண்டிருக்கப் போகிறார் !"

அடக் கடவுளே ! சோதனைமேல் சோதனையா ? நம்மைக் காணவேண்டுமென்று ஒருவன் வருகிறான் - ஆனால் நாம் வருவதற்குள் வெளியேறி விடுகிறான் ! என்னதான் நடந்துகொண்டிருக்கிறது நம்மைச் சுற்றி ?

"பார்த்துவிட்டோம் ஐயா - அவரை தெருப்பக்கம் காணவில்லை !"

"போங்கள் ! போய் நாலாபுறமும் சென்று தேடுங்கள் ! அவர் இல்லாமல் என் முகத்தில் முழிக்காதீர்கள் !" என்று உறுமிவிட்டு ஆயாசத்துடன் அருகிலிருந்த ஆசனமொன்றில் சாய்ந்துவிட்டார் மாராயர்.

அவர் அத்தனை எளிதில் மனக்கிலேசம் கொள்பவரல்ல - ஆனாலும் அடி மேல் அடி வாங்கிக் கொண்டிருந்த அவரது நெஞ்சம் இப்போது நிஜமாகவே துவண்டுவிட்டது ! தம்மைச் சுற்றிப் ஒரு மாயக் கரம் படர்ந்து - மெதுமெதுவாக நெருங்கி - ஒரு கயிற்றை அவருடைய கழுத்தில் வைத்து இறுக்குவது போன்றதொரு மூச்சுத் திணரல் அவருக்கு ஏற்பட்டது. இதுவரை இப்படி முடிச்சுக்கு மேல் முடிச்சாக விழும் சிக்கலை அவர் சந்தித்ததில்லை !

எல்லா கோபமும் வேறு இடம் தெரியாமல் உடையாரிடம் சென்று முடிந்தது ! இந்த அரசாங்க இழவெல்லாம் வேண்டாமென்று பார்த்தால் விடுகிறானா அருமொழி ? என்று தேவரை ஒரு கணம் மனதிற்குள் மனமாற சபித்தார் மாராயர்.

பரமனை அவசர அவசரமாகத் துரத்தி அனுப்பினோமே - அவன் இருந்திருந்தால் எத்தனை நிதானமாக யோசித்திருப்பான் ! அவன் விரைவில் திரும்பி வந்தால் எத்தனையோ தெம்பாக இருக்குமே - இறைவா ! இது என்ன சோதனை ?

**சற்று நீரருந்தி நிதானப்படுத்திக்கொண்டு வாயில் பக்கம் எழுந்து வந்து நின்றவரை உச்சி கால வெய்யிலும், அரிகுல கேசரி பேரங்காடியில் காலைக் காய்கறிகளை இறக்கிவிட்டுவிட்டு தத்தம் கிராமங்களுக்குத் திரும்ப சாவகாசமாய் நின்றுகொண்டிருந்த காளைமாட்டு வண்டிகளும் வரவேற்று ஆறுதல் கூறின.**

**(முதல் பாகம் முற்றும்)**

*அடிக்குறிப்புக்கள் :*

*(1) சந்திர சேகரர் செப்புத் திருமேனியை இராஜராஜர் தேவார தேவர் என்ற பெயரில் ஆராதித்து வந்தார்.*
*(2) பெரிய கோயிலை ஒட்டிய தெருக்கள் வடசிறகு தென்சிறகென்று பிரிக்கப்பட்டிருந்தன.*
*(3) திருக்கோயில் கட்டி முடிக்கப்படும் வரை திருமூர்த்தம் எழுந்தருளும் ஆலயம். பாலாலயம் என்றும் குறிக்கப்படும்*
*(4) பெரிய கோயிலில் இாஜராஜர் எழுந்தருளுவித்த நடராஜர் படிமம'*

## சிந்தனை செய் மனமே !

திருமெய்க்காப்புப் படைத் தலைவர் வேளாண் ஆட்கொண்ட வில்லியாரை சந்தித்துவிட்டு பிற அரசியல் பணிகளையும் முடித்துக்கொண்டு சற்றே திருப்தியுடனும் மிகுந்த அலுப்புடனும் முன்மாலை நேரத்தில் தமது மாளிகைக்கு வந்து சேர்ந்த பரமன் மழபாடியாரை தளபதி இராஜராஜ மாராயரிடமிருந்து வந்த இரண்டு முறி ஓலைகள் வரவேற்றன. மழபாடியார் தஞ்சையை விட்டு நீங்கவில்லை என்பதை அறிந்திருந்த அவருடைய அந்தரங்கக் அலுவலர்கள் அவருக்கான முறிகளைத் தயாராக எடுத்து வைத்திருந்தார்கள்.

முதல் ஓலையைப் படித்ததும் அவரது முகம் மலர்ந்தது.

தெற்குக் கோட்டை வாயிலில் ஒரு வயதானவர் ஏழரை பல முத்திரை மோதிரத்தைக் காட்டி நுழைந்த செய்தியை மாராயர் விலாவாரியாக விளக்கியிருந்தார். சரிதான் ! நிச்சயம் எந்த ஒற்றனும் தெற்கு வாயில் பக்கமாக வரவே மாட்டான் - அதுவும் வெளிச்சம் மிகுந்த அந்தக் காலை வேளையில் ! ஆனால் வந்திருப்பவர் எதிரிபோலும் தெரியவில்லையே ? அந்தக் கிழவரைப் பிடிக்காமல் மேற்கொண்டு எந்த யூகங்களும் செய்ய முடியாது... முதலில் அந்த மோதிரம் ஐங்கரனுடையதுதான் என்பதே நிச்சயமில்லை.

இரண்டாவது ஓலை அவரை சற்று குழப்பி விட்டு விட்டது. இதுவும் மாராயர் அனுப்பியதுதான்.

கோட்டைக்குள் நுழைந்த அதே மனிதர் தம்மை சந்திக்க

வந்திருந்ததாகவும் ஆனால் தாம் வருவதற்குள் கிளம்பிவிட்டதாகவும் ஏன் என்றூ தெரியவில்லையென்றும் - ஏறக்குறைய புலம்பும் தொனியில் - எழுதியிருந்தார் மாராயர். விடையில் அதிகாரியின் கையெழுத்துக்குக் கீழ் மாராயரே கைப்பட "வேலையை முடித்துக்கொண்டு எத்தனை சீக்கிரம் தஞ்சை திரும்ப முடியுமோ அத்தனை சீக்கிரம் திரும்பு" என்று கிறுக்கிக் கையெழுத்திட்டிருந்தார்.

என்ன இது ? இந்த நிகழ்ச்சியை எவ்வாறு விளக்குவது ? பாவம், மாராயர் ! இப்படித் தலையுமில்லாமல் வாலுமில்லாமல் நிகழ்ச்சிகள் நடைபெற்றுக்கொண்டிருந்தால் எவருக்குமே பையித்தியம்தான் பிடிக்கும் !

ஆனால் இப்படித் தொடர்பற்ற விஷயங்களுக்கு நடுவில் மறைபொருளாக ஒரு இழை எப்போதும் ஒளிந்துகொண்டிருக்கும் ! இதை எத்தனை முறை நமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம் ! யோசி ! நன்கு சிந்தித்துப்பார் ! நடந்து முடிந்த அத்தனை நிகழ்ச்சிகளுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதா இல்லையா ? நமது பழைய சித்தாந்தங்களோடு இந்த நிகழ்வுகளை எவ்விதமாகவேனும் பொருத்த முடியுமா என்று யோசி.....

தன்முன் வைக்கப்பட்ட உணவுத்தட்டை வெற்றுப் பார்வையுடன் வெறித்துப் பார்த்தார் மழபாடியார்.

ஒரு கிழவர் ஒற்றர்களுக்கான முத்திரை மோதிரத்தை உபயோகித்து கோட்டைக்குள் நுழைகிறார். அந்த மோதிரத்தை உபயோகிப்பதில் கொஞ்சம் தயக்கம் அவருக்கு இருந்திருப்பதை நிகழ்ச்சிகள் உணர்த்துகின்றன.. ஆக அது அவருடையது இல்லை என்று துணிந்து கூறலாம்.

பின் அது யாருடையது ? காணாமல் போய்விட்ட ஐங்கரனுடையதா ? அல்லது வேறு எவருடையதாகவேனும் இருக்குமா ? உறுதியோடு இந்தக் கேள்விக்கு இப்போது விடை சொல்லவதற்கில்லை.

முத்திரை மோதிரத்தை உபயோகிக்குமுன் காவல் தலைவரை ஒரு முக்கிய விஷயமாகக் காணவேண்டும் என்று சொல்லியிருக்கிறார். தான் இன்னார் என்றும் இன்ன ஊரான் என்றும்கூட தெரிவித்திருக்கிறார். இதனை கவனிக்க வேண்டும். இந்த துவரக்குடிக்கோ துவரக்குறிச்சிக்கோ ஆள் அனுப்பி விசாரித்தல் தேவையா என்று பின்னர் யோசித்துக் கொள்ளலாம்.

துரதிருஷ்டவசமாக காவலன் அசட்டையால் அவர் கோட்டைக்காவல் தலைவரிடம் என்ன சொல்ல வந்தார் என்பதைத் தெரிந்துகொள்ள முடியாமல் போய்விட்டது. தனக்கு வேறு வழிவகையில்லாத நிலையில் முத்திரை மோதிரத்தை உபயோகித்துக் கொள்கிறார் கிழவர். ஆக கோட்டைக்குள் நுழைவது அவரைப் பொறுத்த வரையில் மிக முக்கியமான செயல். எதற்காக கோட்டைக்குள் நுழைய வேண்டியது அத்தனை முக்கியமாகிறது ? தெரியவில்லை.

கோட்டைக்குள் நுழைந்தவர் என்ன செய்கிறார் ? ஏறக்குறைய ஒரு ஜாம நேரத்திற்குப் பிறகு இராஜராஜ மாராயர் மாளிகைக்கு வந்து அவரை சந்திக்க விழைகிறார். அங்க அடையாளங்களை வைத்து மாராயரின் உய்யக்கொண்டான் திருமாளிகைக்கு வந்தது அவர்தான் என்று ஒரு ஊகத்தைச் செய்து கொள்கிறோம். தெற்கு வாயிலிலிருந்து மாராயர் மாளிகைக்கு ஒரு ஜாம நேரம் என்பது மிக அதிகம். தலை போகிற அவசரத்தில் வந்தவர் மாராயரைத்தான் சந்திக்க வேண்டுமென்றால் நேரே அவர் மாளிகைக்கு வந்திருக்க வேண்டும் -

வரவில்லை. ஆக அவர் வேறெங்கோ சுற்றி அலைந்துவிட்டுத்தான் மாராயரை சந்திக்க வந்திருக்கிறார். ஏன் ?

வேறு முக்கிய வேலை எதையாவது முடித்துக்கொண்டு அவர் வந்திருப்பாரானால் மாளிகையை அடைய இன்னும் அதிக நேரம் பிடித்திருக்குமே ? ஆக அவர் தன்னுடைய பணிக்காகத்தான் மாராயரை சந்திக்க வந்திருக்கவேண்டும். தான் நினைத்த வேலை வேறெங்கோ நடக்குமென்று நினைத்து அங்கு அலைந்து திரிந்துவிட்டு வெற்றி கிட்டாமல் பின் மாராயரை சந்திக்க வந்ததாகக் கொள்ளலாமா ?

எங்கே அலைந்திருப்பார் ? இவரைப் போன்ற பெரும்பாலான கிராமத்து மக்கள் தஞ்சை வந்தவுடன் செல்லும் முதல் இடம் இராஜராஜ தேவர் அரண்மனைதான். அவர்களுக்கு இன்ன பணிக்கு இன்னாரைப் பார்க்கவேண்டுமென்று வகைதொகை ஒன்றும் கிடையாது. எதற்கெடுத்தாலும் உடையார்தான் !

அங்கே ஒருவேளை சென்றிருப்பாரோ ? பூபலனை அனுப்பி விசாரிக்கச் சொல்ல வேண்டும்.

இது வரையில் இழை கொஞ்சம் பொருந்தி வருகிறது. ஆனால் மாராயர் அரண்மனைவரை வருவதற்கு இத்தனை தூரம் மெனக்கெட்டவர் - அவர் வருவதற்குள் மாயமாய் மறைந்துவிடக் காரணம் என்ன ? இந்த இடம்தான் மிகவும் இடிக்கிறது !

மாராயர் வருவதற்கு அதிக நேரம் பிடித்ததாகத் தெரியவில்லை - அதற்குள் ஏதோ ஒன்று நேர்ந்துவிட்டது ! அது கிழவரைப் பொறுத்த அளவில் கொஞ்சம் அசம்பாவிதம்தான்.. இல்லையேல் அத்தனை

மரியாதை குறைவாக சொல்லாமல் கொள்ளாமல் திடீரென்று எழுந்து போவானேன் ? மாராயர் விருந்தினர் அறையொன்றும் அப்'படி அசம்பாவிதம் நடக்கும் இடமில்லையே...

வேறு ஏதோ செய்ய வேண்டிய அவசர வேலையொன்று திடீரென்று நினைவுக்கு வர, கிளம்ப வேண்டி வந்துவிட்டதா ? அப்படி இருந்தாலும் மாராயரிடம் ஒரு வார்த்தைகூட சொல்லாமலா கிளம்பியிருப்பார் ? அங்கு இருக்கவே பிடிக்காமல்.....அவசர அவசரமாக வெளியே ஓட வேண்டிய அளவுக்கு என்ன நிர்பந்தம் நேர்ந்துவிட்டது அவருக்கு ?

எப்படியெல்லாமோ விதம் விதமாய் மாற்றி மாற்றி யோசித்தும் திருப்திகரமாக மழபாடியாருக்கு ஒன்றும் தோன்றவில்லை.

***************************************************************************************
**********

தஞ்சைப் பெருநகரின் வீதிகளில் தனக்குத்தானே புலம்பியபடி நடந்துகொண்டிருப்பவர்- கடவுளே, அம்பலவாணரைப் போல் அல்லவா தெரிகிறது...

"அப்படி நாம் செய்திருக்கக்கூடாது - தளபதியார் என்ன நினைப்பார் ?" என்று தனக்குத்தானே வினவிக்கொண்டார் அவர். "நாம் என்ன செய்வது ? நமது நிலையில் எவர் இருந்திருந்தாலும் அதைத்தான் செய்திருப்பார்கள் !" என்று கூடவே சமாதானம் வேறு.

சிறிது நேரத்திற்குப் பின் மீண்டும் "இருந்தாலும் நாம் செய்தது சரியில்லைதான் - ஒரு வார்த்தை வாயில் காவலனிடமாவது சொல்லிவிட்டு வந்திருக்கலாம் !"

அவரால் நம்ப முடியவேயில்லை ! தளபதி இராஜராஜ மாராயர் மாளிகையில் அவன் ! இது சாத்தியமா என்ன ? அல்லது நம் கண்கள்தான் நம்மை ஏமாற்றுகின்றனவா ? இரவு பகலாக எதைப்பற்றியாவது சிந்தித்துக் கொண்டிருந்தால் அந்த உணர்வு காட்சி ரூபமாக கண்களுக்குத் தெரியுமென்று சொல்வார்களே - அதுபோல் இதுவும் நமது மனப் பிராந்தியா ?

நடந்தது இதுதான் -

இராஜராஜ மாராயரின் மாளிகையில் அவருக்காகக் காத்துக்கொண்டிருந்தபோது அம்பலவாணரின் மனம் சற்று நிம்மதியாகவே இருந்தது. சரி, எப்படியும் மாராயரை சந்தித்து விஷயத்தைச் சொல்லிவிட்டு நடையைக் கட்டிவிடலாம் என்ற நினைப்பில் இருந்தார் அவர்.

அவர் அமர்ந்திருந்தது மாராயரின் விருந்தினர் அறை. அந்த அறையை ஒட்டி நீண்டதொரு நந்தவனமும் அமைந்திருந்தது. விருந்தினரின் அறையிலிருந்து நந்தவனத்தின் ஒரு பகுதி மிக நன்றாகத் தெரியுமாறு அமைப்பு ஏற்படுத்தப்பட்டிருந்தது. காத்திருக்கும் நேரத்தில் மலர்களையும் செடிகொடிகளையும் விருந்தினர் கண்டு மகிழ இராஜராஜ மாராயர் செய்த ஏற்பாடு அது.

அம்பலவாணரின் பார்வை யதேச்சையாக நந்தவனத்தின் பக்கம் விழ - அங்கே திருத்துவார்(1) சிலர் மும்முரமாக தமது பணியில்

ஈடுபட்டிருப்பதைக் கண்டார். அதில் ஒருவன் தம்மையே திரும்பித’ திரும்பி சற்று முறைத்துப் பார்ப்பதுபோல் ஒரு எண்ணம் ஏற்படவே அவரும் அந்தப் பணியாளனை நோக்கினார்.அவருடைய பார்வை அவன்மேல் படிந்ததும் அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

அம்பலவாணர் தொடர்ந்து அவனை நோக்கியபடியிருந்தார் - அவருடைய வயதுக்கு, பார்வையில் சற்று கூர்மை அதிகம்தான்.

எங்கோ முக்கியமான ஒரு இடத்தில் அவனைச் சந்தித்திருக்கிறோம் என்று பட்டது. ஆனால் யாரென்று சட்டென்று நினைவுக்கு வரவில்லை.

மரத்தின் நிழல் விழுந்த பகுதியிலிருந்து திருத்துவார் அனைவரும் வேறொரு பகுதிக்குச் செல்லும்போது அவனும் நகர்ந்தான். சூரிய வெளிச்சம் ஒரு சில வினாடிகள் அவன் முகத்தில் விழ அவன் அந்த ஒரு கணத்தில் தலையைத் திருப்பி அம்பலவாணரைப் பார்த்த பார்வையில் - அம்பலவாணருக்கு சொரெலென்று அவனை எங்கு கண்டிருக்கிறோம் என்பது நினைவுக்கு வந்து விட்டது...

இவன்.... இவன்... இவன் அந்தக் கொலைப் பாதகர்களில் ஒருவன் ! அலற அலற அந்த அரசாங்கப் பணியாளனை துழாய்க்குடியருகே படுகொலை செய்த மூவரில் இவனும் ஒருவன் - சந்தேகமில்லை !

மூவருமே கொலையின்போது முகத்தை கண்கள்வரை முக்காடிட்டு மூடிக்கொண்டிருந்தார்கள்தான் - என்றாலும் அந்த மூவரின் கண்களையும் அதில் தெரிந்த கொலை வெறியையும் அம்பலவாணர் என்றென்றைக்கும் மறவார் !

புருவமிரண்டும் இணைந்துகொண்டதுபோல் முடிச்சிட்டு - அதே

கொலைவெறிப்பார்வையோடு....அவன்தான் இவன் ! அவன்தான் இவன் !

அதோ - அவன் வேறொருவனுடன் நம்மை நோக்கிய பகுதிக்கு வருகிறான்...அவனுக்கும் தாம் இன்னார் என்று சந்தேகம் உதித்திருக்கிறது போலும் ! ஆயிற்று - இன்னும் பத்தெட்டு வைத்தால் நமது அறையின் சாளரத்தையே நெருங்கிவிடுவான்... அதற்குள் நாம் வெளியேறிவிடவேண்டும் ! அவன் சந்தேகம் ஊர்ஜிதமாகும்வரை நின்றுகொண்டிருக்கக்கூடாது !

அவன் என்ன திட்டம் நமக்கு வைத்திருப்பானோ தெரியாது.. ஒருவேளை நம்மைத் தொடர்ந்துவந்து போட்டுத் தள்ளினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை !

அம்பலவாணர் பயந்த சுபாவம் கொண்டவரல்ல - எதிரியைப் போர்க்களத்தில் நேருக்கு நேர் சந்திப்பதில் அவருக்கு எந்தவிதமான பிரச்சனையும் இருந்ததில்லை. ஆனால் முதுகுக்குப்பின்னால் சதிவேலை புரியும் சதிகாரர்களுடன் அவருக்குப் பழக்கமில்லை. அதனால் அவர்களுக்கு பயந்தார். தனக்கு என்ன நேர்ந்தாலும் பரவாயில்லை - ஆனால் குழந்தை செங்கமலத்திற்கு சிறுதீங்கு இழைக்கப்பட்டாலும் அவரால் தாங்கிக்கொள்ள முடியாது.

அதனால் யோசிக்காமல் உடனே விருந்தினர் அறையைவிட்டு வெளியில் கிளம்பிவிட்டார’. திருத்துவார் நெருங்குகையில் அம்பலவாணர் அங்கில்லை.

மிகவும் அலுத்துக் களைத்துவிட்டதால் அம்பலவாணர் அருகே தெரிந்த விருந்தினர் விடுதிக்குள் நுழைந்து வயிறாற உண்டார். கறியமுது, கூட்டமுது எல்லாம் சேர்ந்த புழுங்கலரிசிச்சோறு காலையிலிருந்து பசித்துக்கிடந்த அம்பலவாணரின் வயிற்றுக்குள் தேவ அமிர்தமாக இறங்கியது.

எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் விடுதியின் தலைவர் ஒரு மஞ்சாடிகூட அம்பலவாணரிடமிருந்து வாங்க மறுத்துவிட்டார். அது ஜெயபீம தளியின் ஸ்ர்கன்மிகள்(2) கோயில் வருவாயைக் கொண்டு நடத்தும் தர்ம சத்திரமாம் ! விருந்தினரிடம் எக்காரணம் கொண்டும் எந்தப் பொருளும் பெற்றுக்கொள்ளக்கூடாது என்று கடுமையான உத்தரவாம் !

அவரை மெச்சியபடியே விடுதியின் திண்ணையில் வந்து அமர்ந்தார் அம்பலவாணர். முதல்நாளிரவு கண்விழித்ததும் காலையின் அலைச்சலுமாக சேர்ந்துகொண்டு அவரை ஒரேயடியாக அசர வைத்தன. வழக்கமாக மதியம் உறங்கும் பழக்கம் அவருக்கு இல்லைதான், என்றாலும் இன்று ஒருநாள் சற்று ஓய்வெடுப்போம் என்று திண்ணையில் சாய்ந்தார்.

சாய்ந்தவர் விரைவில் அப்படியே நீண்ட உறக்கத'திற்குச் சென்றுவிட்டார். அவருடன் சற்று பேச்சுக்கொடுப்போம் என்று திண்ணைக்கு வந்த விடுதியின் தலைவருக்கு அம்பலவாணரின் மெல்லிய குறட்டை ஒலி கேட்டது. ஒரு புன்னகையுடன் உள்ளே சென்றுவிட்டார் அவர்.

தூக்கத்திலும் அம்பலவாணருக்கு நிம்மதியில்லை - என்னென்னவோ கனவுகள்...

முகத்தை மூடிய அந்த மூன்று கொலைகாரர்களும் அவரை விடாமல் துரத்துகிறார்கள்.... அம்பலவாணரும் காடு., மேடு, மலை, முகடு என்று ஓடிக்கொண்டேயிருக்கிறார்... ஒரு கட்டத்தில் இனியும் ஓடமுடியாது என்ற நிலைமை ஏற்பட்டதும் - அடேய் ! என்ற ஆவேசத்துடன் திரும்புகிறார் ! அவருடைய ஆவேசத்தைக் கண்டு எதிரிகள் ஓடி ஒளிகிறார்கள் !

மற்றொரு கனவு -

அம்பலவாணர் பரத்தவரின்(3) வலையில் சிக்குண்டிருக்கிறார். எப்படி எப்போது சிக்கினோம் என்று யோசித்து யோசித்துப் பார்த்தும் நினைவுக்கு வரவில்லை ! வலையிலிருந்து அவர் வெளியேவர எடுக்கும் முயற்சிகள் அனைத்தும் வீணாவதுடன் வலையையும் மேலும் மேலும் சிக்கலுக்கு உள்ளாக்கி விடுகிறது...

அவர் விரைவில் வெளியேறியாக வேண்டும் ! வெளியேறியாக வேண்டும் !

ஏன் வெளியேற வேண்டும் ? வெளியில் என்னதான் நடந்துகொண்டிருக்கிறது ? தெரியவில்லை...ஆனால் விரைவில் வெளியேறாவிட்டால் ஏதோ ஒரு அசம்பாவிதம் நடந்துவிடும் என்பதுபோல் தெரிகிறது...

நல்ல சமயத்தில் அவருடைய சீடன் ஒருவன் அந்தப் பக்கமாக போகிறான்... அம்பலவாணர் தன் சக்தியையெல்லாம் திரட்டிக் குரல் கொடுக்கிறார் !

"ஆசானே ! ஆசானே ! என்ன இது கோலம் ?"

"ஆசானே !"

"ஆசானே !"

ஏதோ குரல் கேட்க தன் நீண்ட கனவிலிருந்து கண்களை ஒருவழியாகத் திறந்தார் அம்பலவாணர். எதிரே புன்னகையோடு நின்றுகொண்டிருந்தான் வைத்தியரின் மகன் அரிகண்ட தேவன் ! அவனுடைய அழைப்புத்தான் அந்த பொல்லாத கனவிலிருந்து அவரைக் காப்பாற்றியிருக்க வேண்டும்.

"ஆசானே - என்ன இது ? நீங்கள் எப்போது தஞ்சைக்கு வந்தீர்கள் ?" என்று நலம் விசாரித்தான் அரிகண்டன்.

"வந்ததெல்லாம் இருக்கட்டும் ! முதலில் என்னைக் கொடியதொரு இக்கட்டிலிருந்து காப்பாற்றியதற்கு மிக்க நன்றி !"

"நான் காப்பாற்றினேனா ? ஆசானே - இன்னும் தூக்கக் கலக்கமா என்ன ?"

"இல்லையில்லை - கனவில் ஒரு கொடியவனின் வலையில் அகப்பட்டுக்கொண்டு வெளியே வரமுடியாமல் திண்டாடிக்கொண்டிருந்தேன் ! நீதான் வீராதி விரனாக வந்து காப்பாற்றினாய் !" என்றார் அம்பலவாணர் சிரித்தபடி.

"நல்ல சமயத்திற்கு தஞ்சைக்கு வந்து சேர்ந்திருக்கிறீர்கள் ! நானே அழைப்பிதழ் அனுப்ப வேண்டுமென்றிருந்தேன' ! இந்த முறை

சாந்திக்கூத்தரின்

சதயநாள் விழாக் கூத்தில் நானும் வேடம் கட்டுகிறேன் தெரியுமல்லவா ? உங்களுக்குத்தான் கூத்தென்றால் உயிர் ஆயிற்றே ! அதனால்தான் ஆளை விட்டு கூட்டிக்கொண்டு வரச் சொல்லலாம் என்றிருந்தேன்... நீங்களே தெய்வம்போல் வந்துவிட்டீர்கள் !"

கூத்து என்றவுடன் அம்பலவாணருக்கு தான் மேற்கொண்ட காரியம் முழுவதும் சில கணம் மறந்துவிட்டது. தஞ்சையெங்கும் பல்வேறு இடங்களிலும்
நடந்துகொண்டிருக்கும் கூத்து ஏற்பாடுகளில் அவர் மனம் திளைத்தார்...

"கேள்விப்பட்டேன்....உன் தந்தையார் கூறினார்... ஆனால் அவருக்கு இந்தக் கூத்து விஷயமெல்லாம் அத்தனை பிடித்தமாயில்லை போலிருக்கிறதே !"

"அவரைப் பற்றிப் பேசாதீர்கள் ஆசானே ! கோபம் கோபமாக வருகிறது ! நான் எத்தனையோமுறை எடுத்துச் சொல்லியும் விடாப்பிடியாக சுந்தரச்
சோழ விண்ணகர ஆதுரசாலையில் பிடித்துக்கொண்டுபோய் தள்ளிவிட்டார். நாள் முழுக்க வியாதியஸ்தர்களைப் பார்த்துக்கொண்டிருப்பது என்னால்
இயலாத காரியம் ! சை ! அந்த ஆதுரசாலையில் சிறிதுநேரம் இருந்தால் ஆரோக்கியமாய் இருக்கும் நமக்கே வியாதியஸ்தன் ஆகிவிட்டதுபோல் ஒரு தோற்றம் ஏற்பட்டுவிடும் ! வியாதிகளில் அத்தனை வகைகள் !

கலா இரசிகனாக வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்த என்னால் இதை எத்தனைநாட்கள்தான்

சகித்துக் கொண்டிருக்க முடியும் ? அதனால் ஒருநாள் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட்டேன் ! அதனால் தந்தையாருக்கு கடும் கோபம் ! அதற்குப் பிறகு என்னிடம் முகம் கொடுத்துப் பேசுவதுகூட கிடையாது !"

அம்பலவாணர்மேல் அரிகண்டனுக்குக் கொஞ்சம் மரியாதை உண்டு. நாள் முழுக்க வைத்தியம் வைத்தியம் என்று நாடிபிடித்துக் கொண்டிருக்காமல்
வாள்சுழற்றுவது கேடயம் பிடிப்பது என்று சுவாரஸ்யமாக வாழ்க’கையைக் கழித்துக் கொண்டிருப்பவரல்லவா ?

"அடடா, உனக்குப் பிடிக்கவில்லையென்றாலும் தந்தையாரின் மனநிலையைக் கருத்தில் கொண்டு சிறிது காலம் அங்கு பணிபுரிந்துவிட்டு அதன்பின்
வெளியேறியிருக்கலாமே ?"

"அது கிடக்கட்டும் ஆசானே, நீங்கள் என்ன காரியமாக தஞ்சைக்கு வந்தீர்களள’ என்று சொல்லுங்கள் ! வருவதாக ஓலைகூட வரவில்லையே ?"

"திடீரென்று ஒரு அரசாங்கப் பணி வந்துவிட்டது - அதனால் சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பும்படி ஆகிவிட்டது ! அதுசரி , நீ கட்டப்போகும் கூத்தைப் பற்றிச் சொல் !"

"அப்படிக் கேளுங்கள் ஆசானே !" என்றபடி ஆர்வத்துடன் அம்பலவாணர் அருகில் வந்து அமர்ந்தான் வைத்தியர் மகன் அரிகண்ட தேவன்.

## அரிகண்டன் யோசனை

நண்பகலில் தஞ்சை ஜெயபீமதளி விடுதியின் வாசலில் உள்ள திண்ணையில் அமர்ந்து அம்பலவாணர் கம்பன் அரையனாரும் வைத்தியர் மகன் அரிகண்ட தேவனும் சதய நாள்விழாவில் நடைபெறப்போகும் கூத்து பற்றி தம்மை மறந்து உரையாடிக்கொண்டிருந்தார்கள்.

அரிகண்ட தேவனுக்கு மிகவும் உற்சாகமாக இருந்தது. தான் நடிக்கப்போகும் நாடகம் பற்றி இப்படி எவராவது விசாரிக்க மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்தான் அவன். அம்பலவாணர் ஆதூரத்துடன் கூத்தைப் பற்றிய விபரங்களை விசாரித்ததும் அவனுக்குத் தலை கால் புரியவில்லை. "இருக்கட்டும் ! இருக்கட்டும் ! இந்தக் கூத்து மட்டும் நல்லபடியாக முடியட்டும் ! அப்புறம் என்னைப் புறந்தள்ளிய பயல்கள் எல்லாம் என் தரிசனம் கிடைக்காதா என்று ஏங்கப் போகிறார்கள் !" என்று மனதிற்குள் கருவிக் கொண்டான்.

"இந்தக் கூத்து மிகவும் புதுமையான கூத்து ஆசானே ! சாந்திக் கூத்தர' திருவாலன் திருமுதுகுன்றனான விசயராஜ ஆச்சாரியரை(1) உங்களுக்குத் தெரியுமில்லையா ? அதுதான் வருடாவருடம் தளிக்குளத்து ஆலயத்தில் புரட்டாசி பூரட்டாதி விழாவின்போது திருமூல நாயனார் கூத்துக்(2) கட்டுவாரே.. அவரேதான் ! அவரை இந்த வருடத்திலிருந்து - நமது தேவர் கட்டிக்கொண்டிருக்கிறாறல்லவா திருக்கற்றளி ? - அந்த வளாகத்தருகில் ஐப்பசி சதய நாளின்போது கூத்துக் கட்டச் சொல்லி அரச ஆக்ஞை !

அந்தக் கற்றளி வளாகத்துக்கு நீங்கள் இன்னும் போகவில்லை -

இல்லையா ? எத்தனை பெரியது என்கிறீர்கள் ? ஒருமுறை அந்தப் பக்கம் நான் சென்றிருந்தபோது இரண’டாம் நிலைத் தச்சராகத் திருக்கற்றளிக்குப் பொறுப்பேற்றிருக்கும் நித்த வினோதப் பெருந்தச்சர்(3) வரப்போகும் கற்றளியின் மாதிரியை சில அதிகாரிகளுக்கு விளக்கமாக கூறிக்கொண்டிருந்தார்...

அடேயப்பா ! பிரம்மாண்டமென்றால் அப்படியொரு பிரம்மாண்டம் ! விமானம் தட்சிண மேருவென’றே அழைக்கப்படுமாம் ! அத்தனை பெரியது...கோயிலின் பெயர் என்ன என்கிறீர்கள் ? இராஜராஜீச்சுரம் ! கன கம்பீரமாக - கிட்டத்தட்ட நம் அரசரின் பெயரைப் போலவே இல்லை ? இதுபோன்றதொரு கற்றளி இதுவரை கட்டப்பட்டதில்லை ! இனியும் கட்டப்படப் போவதில்லை ! என்று பேசிக் கொள்கிறார்கள்...

இந்தத் திருக்கற்றளியின் சிறப்பைக் கொண்டாடும் வகையில் நமது ஆச்சாரியர் புது நாடகம் ஒன்றை ஏற்பாடு செய்துள்ளார். நாங்கள் கட்டப்போகும் நாடகத்தின் பெயர் என்ன தெரியுமா ஆசானே ? ஸ்ர் இராஜராஜேஸ்வர நாடகம்! (4)"

"அட, பெயரே புதுமையாக இருக்கிறதே !"

"பெயர் மட்டுமா ? நாடகமும் முழுப் புதுமைதான் - உங்களுக்கு அந்தத் தகவல்களைச் சொல்லவேண்டுமென்று நா துடிக்கிறது ! ஆனால் சாந்திக் கூத்தரான ஆச்சாரியர் இந்த விபரங்களை யாரிடமும் சொல்லக் கூடாது என்று கூத்துக் கட்டப்போகும் அனைவரிடமும் சத்தியம் வாங்கி விட்டார் ! நாடகம் பற்றிய தகவல’கள் முன்கூட்டியே மக்களுக்குத் தெரிந்துவிட்டால் நாடகம் ருசிக்காது என்பதுதான் காரணம் ! நானும் நாடகத்தில் வேடம் கட்டப் போகிறவன்தானே.. அதனால் வாயைத் திறக்க முடியாத நிலையில் இருக்கிறேன். மன்னிக்க

வேண்டும்."

அரிகண்ட தேவன் சொல்லச் சொல்ல அம்பலவாணருக்கு அந்த நாடகத்தை எப்பாடுபட்டாவது பார்த்துவிட வேண்டும் என்ற எண்ணம் தீவிரமடைந்தது. அரிகண்டனும் நாடகத்தில் வேடங்கட்டப்போகிறான் என்றவுடன் அவருக்கு அரிகண்டன்மேல் கொஞ்சம் பொறாமைகூட ஏற்பட்டுவிட்டதென்றால் பார்த்துக் கொள்ளுங்கள் !

"அரிகண்டா ! நாடகத்திற்கு நான் வருவதில் தடையொன’றுமிராதே ?" என்று வினவினார் அம்பலவாணர். கோட்டை வாயிலில் நடந்த கசப்பான அனுபவத்திற்குப் பிறகு அதிகார மட்டம் வருகை தரும் இடங்களுக்குச் செல்வதில் அவருக்கு சிறிது தயக்கம் உண்டாயிற்று.

இந்தக் கேள்வியைக் கேட்டவுடன் அரிகண்டன் பெரியதொரு யோசனையில் ஆழ்ந்துவிட்டான்....

" வழக்கமான நாடகமென்றால் எந்தப் பிரச்சனையுமில்லை ஆசானே ! ஆனால் அரசர் மற்றும் அரசாங்க பிரதிநிதிகள் / அரண்மனைப் பெண்டிர் முதலிய அனைவரும் வருகை தரப்போகும் பிரத்யேக நாடகமென்பதால் முன்னேற்பாடுகள் சற்று அளவுக்கதிகமாகவே இருக்கின்றன. இராஜராஜ தேவரின் திருமெய்க்காப்புப் படையினர் ஆச்சாரியரிடம் வந்து என்னென்னவோ பேசிவிட்டுச் செல்கிறார்கள்... நாடகத்தில் நடிக்கப்போகிறவர்களைத் தவிர வேறு எவருக்கும் கூத்து மேடையில் அனுமதி இல்லையாம் ! படித்துப் படித்துச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள். மேடையைத் தவிர பார்வையாளர் மட்டத்தில் உங்களை நிச்சயம் உள்ளே விடமாட்டார்கள்...அதுதான் யோசிக்கிறேன்..."

அம்பலவர் தாம் துழாய்க்குடியிலிருந்து கிளம்பி வந்த நேரம் சரியில்லை போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டார். தஞ்சை வந்ததிலிருந்து ஒரு காரியம் உருப்பட மாட்டேன் என்கிறது...

"அது வேறொன்றுமில்லலை அரிகண்டா.... என் நேரம் சரியில்லை..." என்று ஏதோ புலம்ப ஆரம்பித்தவரை அரிகண்டன் மறித்தான்.

"எனக்கொரு யோசனை தோன்றுகிறது ஆசானே ! அப்படிச் செய்தால் என்ன ??"

"என்ன யோசனையப்பா அது ?"

"காதைச் சற்று கிட்டே கொடுங்களேன்..."

அவன் சொல்லச் சொல்ல அம்பலவாணரின் முகம் சற்று மலர்ந்தது.

தஞ்சை விச்சாதரப் பெருந்தெருவிலிருந்து பிரியும் இராஜராஜப் பெருவீதியில் வடக்கே ஒன்றரை காத தூரம் நடந்தால் ஜெயபீம தளி என்றழைக்கப்படும் திருக்கோயிலை அடையலாம்.

நாம் அங்கு வந்து சேரும் நேரம் அந்தி நேரமாயிருப்பதால் தளியில் சந்தி பூஜைக்காக சேர்ந்துள்ள கூட்டத்தோடு கூட்டமாக கலக்க வேண்டியிருக்கிறது. கோயிலில் அகில் சந்தனம் புனுகு கஸ்தூரி மற்றும் பிற வாசனாதி திரவியங்களின் வாசனையும் தெய்வீக மணம் கமழும் திருநீற்றின் வாசனையும் ஆங்காங்கே அரைகுறையாகக் கலந்து எழுந்து மயக்கமான சுகந்தத்தை எங்கும் பரவவிடுகின்றன.

சரியாக சந்திகால பூஜை மணி "டாண் !" "டாண்!" என்று அடித்து ஓயும் நேரத்தில் பரமன் மழபாடியார் கோயிலின் வடக்கு வாயிலில் தாம் காலையில் பணி குறித்து அனுப்பிய மாராயரின் தனிச் சேவகருக்காக காத்துக் கொண்டிருந்தார். அதிகம் வெளிக்காட்டிக்கொள்ளா விட்டாலும் வரப்போகும் தனிச்சேவகர் கொண்டுவரப்போகும் செய்திகளை அறிய அவர் மனம் பரபரத்துக்கொண்டிருந்தது.

முதலில் வந்தவன் தித்தன்.

"என்ன தித்தரே ! செய்தி ஏதாகிலும் உண்டா ?"

"பெரிதாக ஒன்றுமில்லை. நீங்கள் குறிப்பிட்டதைப்போலவே தளபதியாரின் அந்தரங்க அறையை சுத்தம் செய்யும் வேளக்காரனை கண்காணித்து வந்தேன். நீங்கள் எதிர்பார்த்ததுபோல் அவன் தற்காலிகப் பணிக்கு வந்தவன் அல்ல ! கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்களாக மாராயரின் அரண்மனையில் பணிபுரிந்துவருகிறவன். அவன் என்று குறிப்பிடுவதே தவறு - அவருடைய அகவை அறுபதுக்குமேல் ஆகின்றது... அவரைத்தவிர அவருடைய குடும்பமே வெவ்வேறு வேளங்களில் பணிபுரிந்து வருகின்றன... ஒரு அப்பழுக்கு சொல்ல முடியாது ! மிகவும் நம்பிக்கையான மனிதர். வழக்கம்போல இன்றைக்கும் குடத்திலிருந்த முறிகளை கொட்டடிக்கு எடுத்துச்சென்று பொறுமையாக எரித்துவிட்டார் ! அவருடைய மற்ற செயல்பாடுகளும் சந்தேகத்திற்குரியதாக இல்லை. வேளத்தில் விசாரித்தால் அவரை பத்திரை மாற்றுத் தங்கம் என்கின்றார்கள் !"

"வெளியாட்கள் யாராவது வந்து அவரை சந்தித்தார்களா ?"

"ஒல்லியாக ஒரு பெண்டு வந்தது - அவருடைய பேத்தி போலிருக்கிறது - மாலையில் வந்து உணவு கொடுத்துவிட்டு சிறிது நேரம் அளவளாவிவிட்டுச் சென்றது!"

"வேறு யாரும் வரவில்லையா ?"

"ஒருவருமில்லை !"

மழபாடியார் தீவிரமான யோசனையில் ஆழ்ந்தார். தாம் முதலில் நினைத்ததைவிட விஷயம் சிக்கலாகவே இருக்கிறது. "கண்ணுக்கு எது வெளிப்படையாகத் தெரிகிறதோ அதனை ஒருபோதும் நம்பாதே !" என்று அடிக்கடி கூறுவார் திருமெய்க்காப்புத் தலைவர் ஆட்கொண்ட வில்லியார். ஆக தித்தன் இதில் பார்க்கத் தவறியது ஏதாகிலும் இருக்குமா?

"நான் முன்பு கூறியபடி அந்த வேளக்காரரின் நடவடிக்கைகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் எழுதியிருக்கிறீர்கள் அல்லவா ?"

"எழுதியிருக்கிறேனைய்யா ! இதோ ஓலை !"

மேலாட்டமாக அதைப் படித்தார் மழபாடியார். வேளக்காரர் எந்தெந்த அறைக்கெல்லாம் சென்றார், யார் யாருடனெல்லாம் பேசினார் என்று மிக விரிவாகவே எழுதப்பட்டிருந்தது. அதனைத் தமது மடியில் சொருகிக் கொண்டார்.

"சரி, இனி நீங்கள் முக்கியம் என்று நினைக்கும் விபரங்களுடன் முக்கியமில்லை என்று நினைக்கும் விபரங்களையும் எழுதி வையுங்கள். உதாரணமாக அந்த வேளக்காரர் என்ன சாப்பிட்டார் ? அந்தப் பெண்

வந்ததே - அதன் வயது மற்றும் அணிந்திருந்த அணிகலனென்ன ? வேளக்காரருக்கு ஞாபகமறதி உண்டா ? அவதுக்கு காது மற்றும் கண்கள் நல்நிலையில் உள்ளனவா ? இப்படி என்னென்ன விபரங்கள் உள்ளனவோ அத்தனையும் குறிப்பெடுத்துக்கொள்ளுங்கள்..."

சற்றே தயக்கத்துடன்..."சரி !"

இந்தப் பேச்சு நடக்கும்போதே மூவேந்தரும் அங்கு வந்து சேர்ந்தார். இரவு அவர் புரியவேண்டிய பணிகளை விவரித்தபோது மழபாடியாரின் குரலில் அதிக உற்சாசமில்லை.

பூபலனை ஏற்கனவே தேவர் அரண்மனைக்கு விசாரிக்க அனுப்பியாயிற்று - அவன்தான் தற்போதைக்கு அவருடைய ஒரே நம்பிக்கை !

ஏதோ காரிருளில் இனம் புரியாத ஒன்றைத் தேடி அலைவதைப்போன்றதொரு அவஸ்தை உணர்வு பரமன் மழபாடியாருக்கு ஏற்பட்டது. இப்போதைக்கு எங்காவது ஒரு மூலையில் - சிறிதளவு வெளிச்சம் தெரிந்தால்கூடப் போதும் - அதனைப் பிடித்துக்கொண்டு முன்னேறி விடுவார் அவர். ஆனால் அந்த வெளிச்சம் எப்போதூ வரும் ? எந்த திசையிலிருந்து வரும் ? அதுதான் தெரியவில்லை ! நாள் வேறு நெருங்கிக் கொண்டிருக்கிறது....

கவலையில் ஆழ்ந்த மழபாடியாரின் சிந்தனைகளை ஜெயபீமதளியிலிருந்த புறப்பட்ட தூப தீப வாசங்களும் காண்டா மணியிலிருந்து எழுந்த கம்பீரமான ஓங்கார சப்தமும் கலைத்தன.

தஞ்சையில் புதிதாக எழும்பிக்கொண்டிருந்த பிரம்மாண்டமான திருக்கற்றளி வளாகத்திற்கருகில் வடசேரி என்ற பெயரில் புதிதாக அமைக்கப்பட்டிருந்த தளிச்சேரிக் குடியிருப்புக்களுக்கு வருகை புரியும்படி நேயர்களை அன்போடு அழைக்கிறோம்.

அடடா - இந்தச் சேரிதான் எத்தனை அழகு !

ஒவ்வொரு இல்லமும் கட்டப்பட்டுள்ள நேர்த்தியென்ன... அவற்றில் பூசப்பெற்றுள்ள வண்ணங்களின் விதங்கள்தான் என்ன ! அட, கதவங்களில் வரிசையாக தமிழ் எண்கள்கூட பொறிக்கக் பட்டுள’ளனவே !

பெரும்பாலும் மகளிர் வசித்த வீடுகளாக இருந்ததால் ஆங்காங்கே கும்பல் கும்பலாக நின்று இளவயது தளிச்சேரிப் பெண்டுகள் அரட்டைக் கச்சேரி நடத்துவதைக் காண முடிகிறது. அவர்களில் பெரும்பாலானோர் தஞ்சைக்குப் புதிதாக குடிவந்தவர்கள்போல் தெரிகின்றனர். நாடெங்கிலும் அமநைந்திருந்த பற்பல தளிச்சேரிகளிலிருந்து நூற்றுக்கணக்கான பெண்கள் பொறுக்கியெடுக்கப்பட்டு தஞ்சை இராஜராஜீஸ்வரத்தின் பல்வேறு பணிகளிலும் ஈடுபடுத்தப்பட்டுள்ளதாகக் கேள்விப்பட்டிருக்கிறோமல்லவா ? அவர்கள் இவர்களாகத்தான் இருக்கவேண்டும் ! கோயில் இன்னும் கட்டி முடிக்கப்படவில்லையாதலால் அவர்களில் பெரும்பாலானோருக்கு முழுநேர வேலை இன்னமும் ஆரம்பமாகவில்லை போலும் - அதனால்தான் அரட்டைக் கச்சேரி அமர்க்களமாக நடந்துகொண்டிருக்கிறது !

இந்தத் தளிச்சேரியின் வீதிகளை நமது நண்பர்கள் இருவரும் வேகவேகமாகக் கடந்துகொண்டிருந்தனர்.

முதலில் நடப்பவன் அரிகண்டன். கையை வீசி கனகம்பீரமாக அவன் நடக்கும் தோரணையிலிருந்து அந்தப் பகுதி அவனுக்கொன்றும் புதியதல்ல என்பது அப்பட்டமாகத் தெரிகிது.

அவனைப் பின்தொடரந்துகொண்டிருந்த அம்பலவாணருக்கோ எல்லாம் பிரமிப்பாகவே இருந்தது ! இவ்வளவு பெரிய தளிச்சேரியை அவர் வாழ்நாளில் கண்டதில்லை - ஒன்றா இரண்டா, நானூறு பெண்களைக்(5) குடியேற்றியிருக்கிறார்களாமே ! அப்பப்பா - இன்னும் சற்றுநேரம் தஞ்சையைச் சுற்றினால் மயக்கமே வந்துவிடும் போலிருக்கிறதே !

அரட்டையடிக்கும் பெண்டுகளின் பக்கம் மனம் சென்றாலும் - அதில் பலர் அவனுக்குத் தெரிந்தவர்களாக இருந்தாலும் - அம்பலவாணர் அருகில் இருந்த ஒரே காரணத்தினால் அவர்களை அதிகம் கவனிக்காதவன் போல் விடுவிடுவென்று வீதிகளைக் கடந்த அரிகண்டதேவன், ஒரு திருப்பத்தில் புதியதாய் அமைக்கப்பட்டிருந்த இல்லமொன்றில் நுழைந்தான். அவனைத்தொடர்ந்து அம்பலவாணரும் பயபக்தியுடன் உள்ளே நுழைகையில் வாயிற்கதவு வழக்கத்தைவிட சற்றே உயரம் குறைவாக இருந்ததால் "நச்!" சென்று தலையில் இடித்துக் கொள்ள நேர்ந்தது.

அந்த வீடு சாந்திக் கூத்தரான விசய இராஜ ஆச்சாரியாரும் இதர கூத்தப் பெருமக்களும் ஒன்றாகத் தங்கியிருந்த இடம். அதனால் வீட்டின் பற்பல மூலைகளிலும் பாட்டுச் சப்தமும் சதங்கைச் சப்தமும் வாத்திய ஒலிகளும் ஆங்காங்கே ஒலித்தவண்ணம் இருந்தன.

உரத்த குரலில் எவரோ தேவாரத் திருப்பதியமொன்றைப் பாடிக்கொண்டிருக்க, அவருக்கெதிரில் தளிச்சேரிப் பெண்டுகள் கூட்டமாக அவிநயம் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அப்படி அவிநயம் பிடித்தவர்களில் முன்வரிசையில் நின்ற சிலர் மட்டும் ஒழுங்காக நாட்டியத்தில் கவனத்தை செலுத்தியிருக்க பின்வரிசையில் நின்ற பெண்டுகள் பாடகரை கேலிசெய்தபடி கால்களை சிறிதும் அசைக்காமல் கைகளை மட்டும் உயர்த்தி அவிநயம் பிடிப்பதுபோல் பாவனை செய்தார்கள். இந்தப் பாடலுக்கும் தாளத்திற்கு சிறிதும் பொருந்தாத ஒரு நாயனக் கச்சேரி வேறு சற்று தூரம் தள்ளி அமைந்திருந்த திண்ணையொன்றில் கனஜோராக அரங்கேரிக்கொண்டிருந்தது.

இத்தனை கலை மணம் கமழும் சூழ்நிலையால் அம்பலவாணரின் மனம் உற்சாகத்தில் துள்ளியது ! வாயிலில் இடித்துக்கொண்டதால் விண் விண்ணென்று தெறித்த முன் நெற்றி கொஞ்சம் குளிர்ச்சியாகிவிட்டதுபோல் தெரிந்தது...இவ்வளவு ஏன் ? தாம் எதற்காக இத்தனை தூரம் தஞ்சைக்கு வந்தோம் என்பதைக்கூட அவர் அந்தக் கணங்களில் அறவே மறந்துவிட்டார் என்றுதான் கூறவேண்டும்.

அரிகண்ட தேவன் எல்லோரையும் நன்கு தெரிந்து வைத்திருந்தவன்போல் காணப்பட்டான். உண்மையில் அவனுக்கு அனைவருடனும் நல்ல பழக்கமிருந்ததா அல்லது அம்பலவாணரைத்தான் அப்படி நம்பவைக்க அவன் முயன்றானா என்று நம்மால் உறுதிபடக் கூற முடியாது.

வெற்றிலை குதப்பிய திருவாயுடன் ஒரு திண்டில் தலையை வைத்து ஒருக்களித்துப் படுத்தபடி தமது சிஷ்யப் பெருமக்களின் கலைப்பிரவாகத்தைக் கண்டும் காணாமலும் ஓய்வெடுத்துக்கொண்டிருக்கிறாரே ? அவர்தான் விசய இராஜர்

என்றழைக்கப்படும் மகானுபாவர். பெற்றோர் வைத்த பெயரால் அழைக்கப்படாமல் "ஆச்சாரியர்" என்றே அனைவராலும் - குறிப்பாக நாட்டிலிருந்த அத்தனை கூத்தப் பெருமக்களாலும் மரியாதையுடன் அழைக்கப்படும் பெரியவரும் சாந்திக்கூத்தில் நிகரற்றவர் என்று அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவருமான ஆச்சாரியரை பின்புறமாக அணுகுகையில் அரிகண்டதேவனையும் அம்பலவாணரையும்போல் நமக்கும் சிறிது தயக்கம் ஏற்படத்தான் செய்கிறது !

ஆச்சாரியார் ஒரு மனிதரை சற்றே நிமிர்ந்து பார்க்கவேண்டுமென்றால் அவருக்கு குறைந்தபட்சம் ஒரு கட்டியக்காரனும் ஒரு உதவியாளனுமாவது வேண்டும். இத்தகைய ஏற்பாடுகள் எதுவுமில்லாமல் தன்னந்தனியே அரிகண்டனுடன் வந்து நின்ற அம்பலவாணரை அவரால் ஏறெடுத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. பாவம் - அம்பலவாண ஆசானுக்கு ஆச்சாரியாரால் கொடுக்க முடிந்த மரியாதை அவ்வளவுதான் !

அவருடைய சற்றே பெருத்த சரீரத்தைப் பிடித்துவிட்டுக்கொண்டிருந்த ஒரு சீடன் ஆச்சாரியாரின் காதுகளை சற்றே நெருங்கி அரிகண்டனும் ஒரு புதிய மனிதரும் வந்திருப்பதைத் தெரிவித்தான்.

சற்றே நிமிர்ந்து அவர்கள் இருவரையும் கண்களால் அளந்தார் ஆச்சாரியார்..."ஊம்.....!" என்றதொரு ஹூங்காரம் அவரிடமிருந்து கிளம்பியது.
வெற்றிலைச் சாற்றை அருகிலிருந்த பெரிய பித்தளைக் குவளையில் துப்பிவிட்டு -"என்ன அரிகண்டா ! கொஞ்ச நாட்களாக ஆளையே காணோம் ?" என்றார் அதட்டும் தொனியில்.

அம்பலவாணருக்குமுன் தன்னைப் பெயர்சொல்லி ஆச்சாரியார் அழைத்துவிட்டதில் அரிகண்டனுக்கு ஏக மகிழ்ச்சி ! அவருக்கு அவனை நன்றாகத் தெரியுமென்பதுபோல் அர்த்தமாகிறது அல்லவா ?

"ஆச்சாரியாரே - இங்கேயேதான் சுற்றிக்கொண்டிருக்கிறேன் ! இரண்டு நாட்களாக திருக்கற்றளி வளாகத்தில் திருக்கூத்து மேடையமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்ததால் தங்களைச் சந்திக்கவில்லை ! அவ்வளவுதான்...."

அம்பலவாணர்மேல் ஆச்சாரியாரின் பார்வை பதிந்தது. ஆடை அணிகலன்கள் அத்தனை மேம்போக்காகத் தெரியவில்லையென்றாலும் அம்பலவாணரின்
கனகம்பீரமான உருவ அமைப்பும் அச்சமென்பதையறியாத நேர்மை கலந்த நேர்ப்பார்வையும் அவருடைய உள்ளத்தில் ஒரு மரியாதை வித்தை விதைத்தன.

சற்றே தலையை நிமிர்த்தி - "யார் இவர் ?"

"இவர்தான் சங்கிராமப் பேராசான் அம்பலவாணர் கம்பன் அரையனார் ! துழாய்க்குடி மற்றும் எறும்பியூர்ப் பகுதிகளில் இவருடைய பெயர் பிரசித்தம் - எண்ணற்ற வீராதி வீரர்களை அந்தப் பகுதியிலிருந்து தயார்படுத்தி நமது சேனைக்கு அனுப்பியிருக்கிறார் இவர் !" என்று குரலில் பெருமை பொங்க அறிமுகம் செய்தான் அரிகண்ட தேவன்.

அரிகண்டனின் பரவச அறிமுகம் ஆச்சாரியரின் அதிகார தோரணையில் எந்த மாற்றத்தையும் விளைவிக்கவில்லை - "என்ன விஷயமாக இவரை நம்மிடம் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறாய் ?"

"இவருக்கு கூத்து என்றால் மிகவும் ஆர்வம் ஆச்சாரியரே ! அதிலும் நமது சாந்திக் கூத்தென்றால் அத்தனை பிரியம் ! சுற்றுப்புறத்தில் எந்த ஊரில் நமது கூத்து நடந்தாலும் வண்டி கட்டிக்கொண்டு வந்தாவது விடிய விடிய பார்த்துவிட'டுத்தான் போவார் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள் !"

"சரிதான் !" - எத்தனையோ பொன்னுரைகளையும் புகழுரைகளையும் எல்லா மட்டத்திலிருந்தும் காது புளிக்குமளவிற்கு கேட்டிருந்தும் புதிய புதிய புகழுரைகள் ஆச்சாரியாருக்கு அன்றாடம் தேவையாகவே இருந்தன. அதனை அரிகண்டன் நன்றாகப' பயன்படுத்தத் தெரிந்தவன் என்பதை அவனது குழைவும் பணிவும் நிரூபிக்கின்றன.

"அந்தப் பகுதியில் கடைசியாக இரண்டு வருடங்களுக்கு முன் நெடுங்களத்தில் கண்ணப்ப நாடகம் கட்டியதோடு சரி ! எறும்பியூர் மகாதேவர் கோயிலிலிருந்து கூத்துக்கட்ட அழைப்பு மேல் அழைப்பு விடுத்தபடிதான' இருக்கிறார்கள் - நம்மால்தான் போக முடிவதில்லை!"

"நான்கூட அந்த நாடகத்திற்கு வந்திருந்தேன் !" என்று நாவு வரை அம்பலவாணருக்கு வந்துவிட்டது... ஆனால் ஆச்சாரியாரின் சன்னிதானமும் அவருடைய தோரணைகளும் ஏற்படுத்தியிருந்த மிரட்சியில் ஒன்றும் பேசத்தோன்றாமல் மௌனமாகவே நின்றார்...

"இவருக்கு நமது புதிய நாடகமான ஸ்ர்இராஜராஜ விஜயத்தைப் பார்க்கவேண்டுமென்று மிகவும் ஆவல்...அதனால்..."

"அடடா, பார்வையாளர் அழைப்பெல்லாம் பத்து நாட்களுக்கு முன்னரே முடிந்துவிட்டதேயப்பா - இனி இவருக்கு நம்மால் அழைப்பனுப்ப முடியதே..."

"ஆசானே - உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால்......நமது கூத்துக் குழுவுடனே இவரையும் அழைத்துக்கொண்டு...."

"வேடம் கட்டாமல் கூத்துக் குழுவுக்குள் என்னால் ஒருவரைக்கூட அனுமதிக்க முடியாதைய்யா ! வேளக்காரப் படைத்தலைவரிடமிருந்து கடுமையான உத்தரவு வந்திருக்கிறது - உனக்குத் தெரியாதா என்ன ? மேலும் இவரைப் பார்த்தால் மேடையில் வேடம்கட்டிப் பாடக்கூடியவர்போலத் தெரியவில்லையே..."

அம்பலவாணருக்கு எங்கோ ஓரிடத்தில் அவமானம் தலை தட்டியது....பேசாமல் சொல்லாமல் கொள்ளாமல் சடாரென்று அந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிடலாமா என்றுகூட ஒரு கணம் யோசித்தார்.

"இவருக்கும் தகுந்ததொரு வேடம் கட்டிவிடலாம் ஆச்சாரியரே - சொல்லப்போனால் நமது நாடகத்தில் ஒரே ஒரு வேடத்திற்கு இன்னமும் ஆள்தேடிக்கொண்டிருக்கிறோம் !" என்றபடி குனிந்து ஆச்சாரியாரின் காதுகளில் பணிவுடன் ஏதோ புகன்றான் அரிகண்டதேவன்.

***அடிக்குறிப்புக்கள் :***

*(1) பின்னாள் கல்வெட்டுக்களில் இடம்பெறும் விசய ராசேந்திர ஆச்சாரியாரை இவருடைய வழித்தோன்றலாகக் கொள்க*

*(2) திருமூல நாயனார் கூத்து புரட்டாசி பூரட்டாதி விழாவின்போது ஆடப்பட்டதற்கு கல்வெட்டு ஆதாரங்கள் உள. பார்க்க - பிற்காலச் சோழர் வரலாறு, தி.வை.சதாசிவப் பண்டாரத்தார்*

*(3) இவருடைய பெயரும் கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ளது. பார்க்க*

*- தஞ்சாவூர், டாக்டர் குடவாயில் பாலசுப்பிரமணியன்*

*(4) தஞ்சை இராஜராஜேஸ்வரக் கல்வெட்டில் இந்நாடகம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. பார்க்க - சோழற்கால ஆடற் கலை, டாக்டர் இரா.கலைக்கோவன்*

*(5) இந்த நானூறு பேரின் பெயர்களும் அவர்களைப் பற்றிய சில தகவல்களும் - கதவிலக்கங்கள் உட்பட - பத்திரமாக நமக்கு இராஜராஜேஸ்வரம் கல்வெட்டில் கிடைத்துள்ளன ! பார்க்க தளிச்சேரிக் கல்வெட்டுக்கள் - இரா.கலைக்கோவன், மு.நளினி*

## அவசர அழைப்பு

காலையில் கிளம்பிய தன்னுடைய பாட்டனார் மாலையில் விளக்கு வைத்த பிறகும் வந்து சேராததால் செங்கமலம் மனம் சோர்ந்து வைத்தியர் வீட்டுத் திண்ணையில் ஒரு தூணில் முகத்தைச் சாற்றி வைத்து வழி மேல் விழி வைத்தபடி காத்திருந்தாள். போவோர் வருவோரின் முகத்தையெல்லாம் ஆவலுடன் பார்த்துப் பார்த்து அதில் தனக்குப் பிடித்தமான முகம் மட்டும் காணக்கிடைக்காததால் சற்றே கோபத்துடன் தனக்குத்தானே பேசிக்கொண்டாள்.....

"தாத்தா மட்டும் இன்றைக்கு வரட்டும் - அப்புறம் அவரைத் தனியே ஒருபோதும் விடக்கூடாது !" என்றதொரு உறுதி அவள் மனத்தில் நிலைகொண்டது. நாள்முழுக்க விளையாடிக்கொண்டிருந்ததால் அவளது இளம் உடல் மிகவும் அலுப்படைந்து சிறிது நேரத்தில் தூக்கம் கண்ணைச் சுற்றியது. சிறிது நேரத்தில் திண்ணையின் தூணைப் பிடித்துக்கொண்டு தூங்க ஆரம்பித்துவிட்டாள் செங்கமலம்.

குழந்தைக்கு இரவுச் சாப்பாடு கொடுப்பதற்காக வைத்தியர் வெளியே

வருவதற்கும் அம்பலவாணர் மிகுந்த அலுப்புடன் வீடு வந்து சேர்வதற்கும் சரியாக இருந்தது.

"சரியாய்ப் போயிற்று - இப்போதுதான் குழுந்தைக்கு இரவு போஜனமே நடக்கிறதா ! ஏன் இத்தனை தாமதம் ?" - அம்பலவாணரின் குரல் சற்று உயர்ந்துதான் விட்டது !

"ஏன் கேட்கமாட்டீர் அம்பலவாணரே - ஏன் கேட்கமாட்டீர் ? காலையில் கிளம்பி வெளியில் சென்றவர் மாலை விளக்கு வைக்கும் நேரம் வந்தும்
வீடுவந்து சேரவில்லையே என்று நான் கவலையில் கிடக்கிறேன் ! நீர் என்னடாவென்றால் தாமதமாக வந்ததுமில்லாமல் என்மீது அபாண்டமாகக் குற்றம்வேறு சுமத்துகிறீர் ! குழந்தை நீங்கள் வராமல் ஒருவாய் சாப்பிடமாட்டேன் என்று அடம் பிடிக்கிறாளைய்யா !"

அண்டப் புளுகு ஆகாசப் புளுகெல்லாம் வைத்தியருக்குப் புதிதல்ல ! அதனால்தான் யோசிக்காமல் செங்கமலத்தின்மேல் அப்படியொரு பழியை அவரால் அனாயசமாகப் போட முடிந்தது.

அம்பலவாணருக்கு தம்மீதே மிகுந்த கோபம் உண்டாயிற்று ! சை - இந்தக் கூத்துப் பிசாசு நம்மைப் பிடித்துக்கொண்டு ஆட்டுகிறது போலும் ! குழந்தையைக்கூட சரியாகக் கவனிக்காமல்....என்ன காரியம் செய்து விட்டோம்! இத்தனைக்கும் வந்தவேலைகளில் உருப்படியாக ஒன்றுகூட நடக்கவில்லை - தேவையில்லாமல் அரிகண்டன் பேச்சில் மயங்கி தளிச்சேரிக்கெல்லாம் சென்று..... என்ன மனிதன் நான் ?

அவருடைய கோபம் அரிகண்டன் மீது திரும்பியது. வைத்தியரிடம் அவனைப் பற்றிப் போட்டுக் கொடுக்கலாமா என்று ஒரு கணம்

யோசித்தார். ஆனால் தன்னைச் சந்தித்ததையோ நாடகத்தில் தான் நடிக்கப்போவதையோ தந்தையாரிடம் மட்டும் சொல்லிவிட வேண்டாமென்று மிகவும் வேண்டிக் கேட்டுக்கொண்டிருந்தான் அரிகண்டன். கொடுத்த வாக்கை அவரால் மீறமுடியாதே !

குழந்தைக்காக வாங்கிக்கொண்டு வந்திருந்த விளையாட்டு சாமான்களையெல்லாம் திண்ணையில் சப்தம் செய்யாமல் மெதுவாக வைத்துவிட்டுத் திரும்புகையில்-

அந்த வீட்டு வாயிலில் சொல்லி வைத்ததுபோல் இருவர் வந்து விறைப்பாக நின்றனர். அதில் ஒருவன் அம்பலவாணரை நெருங்கி.. "ஐயா - இங்கே அம்பலவாணர் என்று யாராவது..."

"நான்தான்...என்ன வேண்டும் ?"

"இன்று கோட்டையில் பேரரசரை உங்கள் பகுதியில் நடந்த ஒரு கொலை விஷயமாகப் பார்க்க வேண்டுமென்று வேளக்காரப் படைவீரரிடம் சொன்னீர்களா ?"

"ஆமாம் !"

"அதற்கடுத்ததாக மாராயர் அரண்மனையில் தளபதியாரைக் காண முயன்று அவர் வருவதற்குள் அவசரமாக வெளியேறி விட்டீர்களா ?"

"அ...ஆமாம் ! ஆனால் அதற்குக் காரணம்...."

"அதனை என்னிடம் சொல்லத் தேவையில்லை. உரியவரிடம் சொன்னால் போதும். கடைசிக் கேள்வி - இன்று காலையில் தஞ்சைக்

கோட்டையின் கிழக்கு வாயிலான இராஜாதித்தன் திருவாயில் வழியாக ஏழரை பல முத்திரை மோதிரமொன்றைக் காட்டி நுழைந்தவரும் நீர்தானா ?"

அம்பலவாணருக்கு ஒரு கணம் என்ன செய்வதென்று தெரியவில்லை ! ஏதோ கூட இருந்து பார்த்ததுபோல' அல்லவா சொல்கிறான் ? அடுத்தவனுடைய முத்திரை மோதிரத்தைக் காட்டி நுழைந்தது தவறுதான்...அதற்காக ? தம்மைச் சிறையிலடைக்கப்போகிறார்களா என்ன ? இவன் எப்படி சரியாகத் தன்னைத் தேடிப்பிடித்தான் ? எல்லாம் புரியாத புதிராகவல்லவா இருக்கிறது ?

அவருடைய மௌனத்தை அவன் "ஆம் !" என்பதாகப் புரிந்துகொண்டான்.

"ஐயா - நான் சோழ சைன்யத்தின் மேற்திசை தண்ட நாயக்கரான மும்முடிச் சோழர் பரமன் மழபாடியாரின் ஆணையின் பேரில் வருகிறேன். தங்களை உடனடியாக அழைத்துவரச் சொல்லி அரசாங்க உத்தரவு !"

பணிவுடன் ஓலையைக் கொடுக்கையில் திண்ணையில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த விளக்கின் வெளிச்சத்தில் அந்த அரசாங்கப் பணியாளனை நாமும் கவனிக்கிறோம்... அட, மாராயரின் தனிச்சேவகத்தைச் சேர்ந்தவனும் தற்போது மழபாடியாரின் பணியில் ஈடுபட்டிருப்பனுமான பூபலன் அல்லவா இவன் ?

அம்பலவாணருக்கு ஏதோ புரிந்தும் புரியாத மாதிரி இருந்தது. அரசாங்க ஒற்று இயந்திரத்தின் சிக்கலான செயல்பாடுகளை அவர் அறியார் ! இத்தனை பெரிய நகரத்தில் எப்படி சரியாகக் குறிவைத்து

தம்மைத் தேடிப் பிடித்தார்கள் ? என்று வியந்தார் அவர்.

"ஐயா - ஒரு நாழிகை நேரம் அவகாசம் கொடுக்க முடியுமா ? சற்று ஆசுவாசப் படுத்திக்கொண்டு குழந்தைக்கும் உணவூட்டிவிட்டுவிட்டு வந்துவிடுகிறேன் !"

பூபலன் சற்று தயங்கி..பின் ஒப்புக்கொண்டான்.

அம்பலவாணரை மழபாடியாரின் சேவகன் தேடிப்பிடித்ததில் நேயர்களுக்கு அதிக வியப்பிருக்காது என்று நம்புகிறோம்.

பேரரசர் இராஜராஜதேவரை சந்திக்க எவர் வந்தாலும் அவர்களின் விபரங்களை ஒரு பதிவோலையில் குறித்து வைக்கவேண்டுமென்கிற விதி அவருடைய அரண்மனையில் கடுமையாகப் பின்பற்றப்பட்டு வந்தது. வந்திருந்தவர்களில் முக்கியமான தூதர்கள், உள்நாட்டு அதிகாரிகள் அல்லது நானாதேசிகள் மற்றும் ஐந்நூற்றுவர் குழுவைச் சேர்ந்த வணிகர் முதலியவர்கள் இருந்தால் அவர்களே தாம் அரசரை சந்திக்க வந்துள்ள காரணத்தை சுருக்கமாக எழுதிவைக்க வேண்டும். அந்த விபரம் பிரத்யேகமாக உடன்கூட்டத்து அதிகாரிகளுக்கு உடனுக்குடன் தெரிவிக்கப்படும்.

வருபவர்கள் கிராமத்து ஆட்களாக - எழுதப் படிக்கத் தெரியாத தற்குறிகளாக(1) இருந்தால் அந்தத் தகவல்களை வேளக்காரப் படைகளிடமிருந்து ஒரு அதிகாரி கேட்டறிந்து தனியாகக் குறித்துக் கொள்வார். இப்படி வருபவர்களில் குறிப்பிட்ட பகுதியை அல்லது வளநாட்டைச் சேர்ந்தவர்கள் அடிக்கடி வந்துகொண்டிருந்தால் அந்த

விபரமும் உடன்கூட்டத்துக்குப் போய் சமயத்தில் அரசரின் கவனத்திற்கும் வந்துவிடும்... அந்தப் பகுதியில் ஏதோ சங்கடம் அல்லது சிக்கல் என்பதாக அது பொருள்படும்.

மாராயரின் ஓலையிலிருந்து அம்பலவாணரின் பிரத்யேக அங்க அடையாளங்களை அறிந்துகொண்ட மழபாடியார் உடனடியாக அதே அடையாளங்களுடன் எவராவது - குறிப்பாக துவரக்குறிச்சி அல்லது துழாய்க்குடி பக்கத்திலிருந்து - தேவர் அரண்மனைக்கு வந்திருந்தார்களா என்று விசாரித்து வர பூபலனை அனுப்பினார். அரண்மனைப் பதிவேட்டை பொறுமையாகப் பார்வையிட்ட பூபலனுக்கு அம்பலவாணரின் விபரங்களை தேடிப்பிடிப்பதில் அதிக சிரமம் இருக்கவில்லை. அதில் அம்பலவாணரைப் பற்றிப் பதிவாகியிருந்த தகவல்கள், அவர் தங்கியிருந்த இடம் முதலானவற்றை மழபாடியாரிடம் தெரிவித்துவிட்டு அவரிடம் அவசர அவசரமாக ஒரு விசாரணை ஓலை வாங்கிக்கொண்டு ஏறக்குறைய இரண்டு ஜாம நேரம் தஞ்சைப’ புறம்பாடியில் தேடியலைந்ததில் ஒருவழியாக அவரைக் கண்டுபிடித்தாகிவிட்டது.

பணியை நல்லபடியாக முடித்துக்கொண்ட திருப்தியுடன் பூபலன் ஒரு நாழிகை நேரம் கழித்து அம்பலவாணருடன் பரமன் மழபாடியாரின் அரண்மனைக்கு உற்சாகமாகக் கிளம்பினான். பாவம், அம்பலவாணர்... அலுத்துக் களைத்திருந்தாலும் அரசாங்கத்தின் அவசர விசாரணை அழைப்புக்கு மறுப்புச்சொல்ல முடியாதே !

தூக்கக் கலக்கத்தில் அரைகுறையாக இரவு உணவு உட்கொண்டுவிட்டு தன்னை மறந்து உறங்கிக்கொண்டிருக்கும் செங்கமலத்தின் முகவதனத்தை திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே பூபலனுடன் கிளம்பினார் அம்பலவாணர்.

சோழ சாம்ராஜ்ஜியத்தின முதல் அமைச்சரும் திருமந்திர ஓலை நாயகமும் சேனாபதியுமான அமண்குடியார் கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மாதிராஜரின் மாளிகைக்கு இரவு பகல் என்று விவஸ்தை கிடையாது. எப்போதும் போக்குவரத்துத்தான் ! பிரம்மாதிராஜர் எப்போது உறங்கச் செல்கிறார் என்பதே ஒரு பெரிய மர்மமாயிருக்கும். இரவு பணிமுடிக்க எத்தனை நேரமானாலும் அதிகாலை முதல்ஜாமத்தில் குளித்தெழுந்துவிட்டு திருநீறுபூசி ஒரு ஆச்சரியகரமான புத்துணர்ச்சியுடன் தளிக்குளத்தார் ஆலயத்திற்குக் கிளம்பிவிடுவார் அவர்.

சூரியன் அடங்கி ஒரு ஜாம நேரம் ஆகியிருந்தபடியால் மாளிகையெங்கிலும் விளக்குகளும் பந்தங்களும் ஏற்றப்பட்டு பிரகாசமாக எரிந்துகொண்டிருந்தன. மாலையில் பிரம்மாதிராஜரை சந்தித்துவிட்டு ஒரு பெருங்கும்பல் திரும்பிக்கொண்டிருக்க, இரவு அவர் படுக்கப்போகுமுன் பார்த்துவிடலாம் என்கிற நப்பாசையுடன் வேறொரு கும்பல் காத்துக்கொண்டிருந்தது...இன்றைக்கே வேலையை முடித்துக்கொண்டு ஊருக்குத் திரும்பிவிடலாமல்லவா ? அப்படிக் காத்துக்கொண்டிருந்தவர்களில் பலவகையான மனிதர்கள் தெரிகிறார்கள்...காசாளர்கள், கணக்கர்கள், பல்வேறு ஊர்களிலிருந்து வந்திருந்த மஹாசபையினர், சிற்சில சேனானி தலைவர்கள்... இவர்கள் எல்லோரையும்விட அதிக அளவில் வணிகப் பெருமக்கள்.

இவர்களை மேற்கொண்டு பார்க்கவிடாமல் நமது கவனத்தை சற்றே வேகமாக வந்து பளிச்சென்று மாளிகையின் முன் நிற்கும் ஒரு இரதம் கலைக்கிறது. இரதத்தை வேகமாக இழுத்துக் கொண்டு வந்த ஜாதிக்

குதிரைகள் அந்தத் திருப்பத்தில் நின்றுவிடுவோம் என்று எதிர்பார்க்கவில்லைபோலும்... "பிளீஹிஹி !" என்று ஒரு மாதிரியாக கால்களை உயர்த்தி கனைத்து அந்த திடீர் நிறுத்தலுக்கான தம் அதிருப்தியை வெளிப்படுத்தின. இரதத்தின் சாரதி பிருஷ்டத்தில் தட்டிக்கொடுத்து அவற்றை ஒருமாதிரியாக சமாதானப்படுத்த முயன்றான்.

இரதத்திலிருந்து இறங்கியவர் தளபதி இராஜராஜ மாராயர். அமண்குடியாரின் அரண்மனை வாசலில் நின்றபோது அவருக்கு ஏதேதோ எண்ணங்கள் அலைமோதின. அவற்றையெல்லாம் இலட்சியம் செய்யாது விடுவிடுவென்று மாளிகையின் வாயிலை அடைந்தார் மாராயர். அங்கு நின்றுகொண்டிருந்த வணிகப் பெருமக்களில் ஒரு சிலர் அந்த குறைவான வெளிச்சத்திலும் அவரை அடையாளம் கண்டுகொண்டு முகமன் கூறினர். ஒரு சிலர் அவரை நெருங்கிப் பேசவும் விழைந்தனர். அவர்களையெல்லாம் அதிகம் கண்டுகொள்ளாமல் மாளிகையின் மத்தியில் அமைந்திருந்த விருந்தினர் அறையை நோக்கி நேராக நடந்தார் மாராயர்.

உண்மையில் மாராயரும் பிரம்மாதிராஜரும் மிக நெருங்கிய தோழர்கள். இருவரும் ஒரே கடிகையில் படித்த மாணாக்கர்கள் என்பதால் சிறு வயது முதலே பழக்கம். பிரம்மாதிராஜர் சொல்லித்தான் மாராயர் தளபதியானார் என்று ஒரு சாராரும் மாராயர் சொல்லித்தான் அரசர் பிரம்மாதிராஜரை முதல் அமைச்சர் பதவியில் நியமித்தார் என்று வேறொரு சாராரும் இன்றுவரை சொல்லி வருகின்றனர்.

யாருடைய கண்பட்டதோ... சில காலம் முன்பு இருவருக்குமிடையில் ஏதோ பெரியதொரு மனத்தாங்கல் விழுந்து நட்பு விரிசல் கண்டுவிட்டது. பேரரசருக்கு இந்த விஷயம் ஒருவாறு

தெரிந்திருந்தாலும் இருவருமே படித்த பண்பாளர்கள், ஒருவரையொருவர் நன்கு அறிந்தவர்கள் என்பதால் அவர்களாக சமாதானம் ஆகட்டும் என்று அதிகம் தலையிடாமல் விட்டுவிட்டார். அதனால் இருவருடைய குடும்பத்தாருக்கும் இடையே நிலவிய நெருங்கிய போக்குவரத்து நின்றுபோய் சிலகாலமாக மாராயரும் பிரம்மாதிராஜரும் சந்திக்கும் ஒரே இடம் தேவர் அரண்மனைதான் என்றாகிவிட்டது !

இத்தனை பிரிவினைகள் முறையில் இருந்தாலும் அரசாங்க விஷயம் என்று வரும்போது தனிப்பட்ட மனஸ்தாபங்களை ஒதுக்கி வைத்துவிட்டு இணைந்து வேலைசெய்யும் பக்குவம் இருவருக்குமே வாய்த்திருந்தது. ஏனெனில் அவர்களுடைய தனி உணர்வுகளைத் தாண்டிய ஒரு பெருஞ்சக்தி அவர்கள் இருவரையும்... ஏன் சோழநாட்டிலிருந்த சாதாரண குடிகளிலிருந்து பெருந்தரத்து அதிகாரிகள் வரை அத்தனை பேரையும்...ஒன்றாக சங்கிலிபோல் இணைத்தது.

அதுதான் அருள்மொழி தேவர் என்னும் இராஜராஜப் பெருஞ்சக்தி.

அந்தச் சக்திதான் இப்போதும் பிரம்மாதிராஜர் வரை மாராயரை துரத்திற்று போலும்.

அமைச்சரின் அந்தரங்க மெய்க்காவலன் மாராயரின் வருகையை காதோடு காதாக அவரிடம் தெரிவித்தான். இராஜர் ஒரு கணம் துணுக்குற்றார் ! அடடா.....மாராயர் அரண்மனைக்கு வந்து எத்தனை காலம் ஆகிறது....! இப்படி முன்னறிவிப்பின்றி சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பி வருகிறார் என்றால்... மிக முக்கியமான விஷயமாகத்தான் இருக்க வேண்டும். இன்னும் அரை நாழிகை நேரத்தில் வந்திருக்கும் விருந்தினர்களை அனுப்பி வைத்துவிட்டு

அவரைச் சந்திக்கப் போவதாகவும் வாயிலில் காத்திருப்போரிடம் இன்றைய தரிசனம் முடிந்து என்று அறிவித்துவிடும் படியும் சொல்லி அவனை அனுப்பிவைத்தார் பிரம்மாதிராஜர்.

விருந்தினர் அறையில் காத்திருந்த மாராயரின் மனம் ஒரு நிலையில் இல்லை. மதிய நேரத்தில் அம்பலவாணரைத் தாம் தவறவிட்டதை அவரால் ஒருபோதும் மன்னிக்க முடியவில்லை. மேலும் மழபாடியாரிடமிருந்தும் ஒரு தகவலுமில்லை. அதனால் நிலைகொள்ளாமல் தவித்தார்.

பரமனுடைய கெட்ட குணம் இது ! விஷயம் முழுதும் திருப்திகரமாக முடியும்வரை எந்தவொரு செய்தியையும் விபரமாகப் பகிர்ந்துகொள்ளவே மாட்டான்! முறி அனுப்பினாலும் ஏதோ நம்மை சமாதானப்படுத்துவதற்காக அனுப்பப்பட்ட முறிபோன்று இருக்குமேயொழிய அதில் உருப்படியான விபரங்கள் ஒன்றும் இருக்காது ! அத்தனை தகவல்களும் முழுமையாகத’ தெரிந்து காரியமும் முடிந்த பிறகுதான் இன்ன மாதிரி செயல்பட்டேன் இன்னின்ன விஷயங்களைச் சந்தேகித்தேன் என்றெல்லாம் விபரமாக அடுக்குவான் - அதென்னவோ பிரமிப்பாகத்தான் இருக்கும்.

அவன்தான் தம்முடய அரண்மனையையும் அந்தரங்க சேவகர்களையும் கூட சந்தேகிக்கின்றானே - அதற்கப’புறம் என்னத்தைச் சொல்வது ?

இதுவரை நாம் ஒப்படைத்த எந்தக் காரியத்திலும் மழபாடியான் தவறியதில்லைதான் - அதற்கென்று பொறுப்பனைத்தையும் அவன் தலையில் கட்டிவிட்டு நாம் சும்மாயிருந்துவிட முடியுமா ? இந்த நாசமாய்ப்போன விவகாரத்தில் எந்த ஒரு பிடியுமல்லவா கிடைக்கமாட்டேன் என்கிறது....

மண்டை வெடித்துவிடும் போலுள்ள நிலையில் பிரம்மாதிராஜரை சந்திப்பதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை. நமக்கு அடுத்தபடியாக இந்த விஷயத்தின் கனத்தை முழுவதுமாகப் புரிந்துகொண்டு தகுந்த ஆலோசனைகள் வழங்குவதென்பது பிரம்மாதிராஜர் ஒருவரால்தான் முடியும்.

சேனாபதி அமண்குடியார் கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரம்மாதிராஜர்...என்னவொரு தீர்க்கதரிசி ! எத்தனை புத்தி கூர்மை ! அவர் பிரதம அமைச்சராக அருள்மொழிக்கு வாய்த்தது எத்தனை பெரிய பலம் !

சே...தேவையில்லாமல் ஒரு நல்ல நண்பனைப் பகைத்துக்கொண்டு விட்டோமோ ? இல்லை - அதற’்கு நாம் மட்டுமே காரணமில்லை, அவரும்தான் காரணம். இருவருக்குமே இது நல்லதல்ல - ஒருவகையில் நாமாக அவரை சந்திக்க வந்ததும் நல்லதுதான் ! யாராவது ஒருவர் விட்டுக் கொடுக்க வேண்டுமல்லவா...இந்த சந்திப்பு ஒரு நல்ல ஆரம்பமாகட்டும். இதிலிருந்தாவது ஒரு நல்ல உறவு மீண்டும் செழிக்கட்டும்.

தாயே ! அம்பிகா பரமேஸ்வரி ! நான் வயதானவன் - தலை அரைக்காலே மூன்றுவிசம் நரைத்துவிட்டது. இனி அதிகநாள் தாக்குப்பிடிக்கி மாட்டேன் - விரைவில் உன் சன்னிதிக்கு வந்து சேர்கிறேன்... அதுவரை என்னை அதிகம் சோதிக்காதே !

பிரம்மாதிராஜரின் அந்தரங்க சேவகன் மாராயரை நெருங்கி அமைச்சர் அவரை அழைப்பதாகத் தெரிவித்தான்.

## "உதகை தீ உய்த்த உரவோன்"

தன்னுடைய மாளிகையில் மாராயருக்கு சிற்சில தகவல்களை பரமன் மழபாடியார் முறியாக எழுதி முடிக்கையில் அம்பலவாணர் பூபலனுடன் வந்து சேர்ந்துவிட்ட தகவல் கிடைத்தது. விருந்தினர் அறையில் அவர்களை எதிர்கொண்டழைத்து வரவேற்றார் மழபாடியார்.

"வரவேண்டும், அம்பலவாணரே ! வரவேண்டும் ! உங்களை இந்த நேரத்தில் தொந்தரவு செய்ததற்கு மன்னியுங்கள் - விஷயம் மிகவும் அவசரமானது என்பதால் நாளை வரை பொறுக்க முடியவில்லை..."

அம்பலவாணரின் மனதில் எழும்பிய எண்ணங்களை வார்த்தைகளில் விவரிக்க முடியாது. மகா வீரரும் அவருடைய சீடர்களில் பலருக்கு ஆதர்ச வீர புருஷராய் விளங்குபவரும் தண்ட நாயக்கருமான பரமன் மழபாடியார் இவர்தானா... எத்தனை நாட்களாக இவரை சந்திக்கவேண்டுமென்று மனதில் எண்ணியிருந்தோம்....!

இரு கரங்களையும் கூப்பியபடி பணிவாக வணங்கி நின்றார் அம்பலவாணர்.

"அம்பலவாணரே - என்ன இது ? வயதில் நீங்கள் என்னைவிடப் பெரியவரல்லவா ?"

அம்பலவாணரின் கூப்பிய கரங்களை மழபாடியார் தன்னிரு கரங்களாலும் பிடித்துக்கொண்டார். அந்த ஸ்பரிசத்தில்

யுகயுகாந்திரங்களுக்கு நின்று நிலைக்கப்போகின்ற ஒரு பெரு நட்பின் சிறு விதை அவர்கள் இருவருடைய மனத்திலும் விழுந்தது. இருவருடைய கண்களுமே சற்று கலங்கி விட்டன. அது புதிய மனிதர்களின் முதல் சந்திப்பைப்போல் தெரியவில்லை... மிக நெருங்கிய ஒரு நண்பனை மிக மிக நீண்ட காலம் கழித்து சந்திப்பதைப் போன்றதொரு உணர்ச்சியே அவர்கள் இருவருடைய மனதிலும் குடிகொண்டிருந்தது.

"ஐயா - உங்களைப் பற்றி என்னுடைய சீடர்கள் பலரும் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன் ! உங்களை சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி !"

"உங்களை சந்தித்ததில் எனக்கும் பெருமகிழ்ச்சியே ! இந்த இருக்கையில் அமருங்கள் - பூபலரை அனுப்பி வைத்துவிட்டு வந்து விடுகிறேன் !"

அரசாங்க அதிகாரிகளின் சற்றே அதிகாரம் கலந்த போக்கைக் கண்டு மனம் நொந்திருந்த அம்பலவாணருக்கு மழபாடியாரின் பணிவான பேச்சு இதமாக இருந்தது. அவர்மீது முன்னர’ இருந்த மரியாதை பன்மடங்கு கூடியது.

பூபலன் பக்கம் திரும்பினார் மழபாடியார்.

"பூபலரே - இந்த முறியை உடனடியாக மாராயரிடம் நேரடியாக சேர்ப்பித்துவிடுங்கள் ! மாராயர் ஓலையைப் படித்து முடித்தவுடன் அவர் இதே ஓலையையும் ஒரு பதில் முறியையும் கொடுப்பார்...."

"ஐயா...அது....."

"என்ன தயக்கம் ?"

"பதில் முறி சரிதான் - ஆனால் கொடுக்கப்பட்ட ஒரு ஓலையைத் திருப்பியனுப்பும் பழக்கம் நமது வழக்கத்தில் இல்லை !"

"ஓ ! அதுவா ? நமது விவகாரதில் அந்தப் புதுமையும் நடக்கப்போகிறது. படித்தவுடன் முறியை உம்மிடமே பத்திரமாக திருப்பி அனுப்பிவிடும்படி மாராயருக்கு முறியிலேயே எழுதிவிட்டேன் ! உங்களிடம் இதுபற்றி எதுவும் கேட்க மாட்டார் - அப்படிக் கேட்டாலும் ஒன்றும் தெரியாது என்று புகன்று விடுங்கள் ! ஆக மாராயரிடமிருந்து இரண்டு ஓலைகள் கிடைக்கும். அவற்றை நமது அந்தரங்க வாயில் காவலரிடம் இரவு எத்தனை ஜாம நேரமானாலும் கொண்டுவந்து கொடுத்துவிட்டு நீங்கள் ஓய்வெடுக்கச் செல்லலாம் ! உங்களுடைய நாளைய பணி பற்றிய தகவலை அதே வாயில் காவலரிடம் விடியற்காலை எழுதிக் கொடுத்து விடுகிறேன் ! நீங்கள் பொழுது புலர்ந்து சற்று நேரம் கழித்து வந்தால்கூட போதுமானது..."

"உத்தரவு !"

பூபலன் சில வினாடிகளில் அங்கிருந்து அகன்றுவிடவே அம்பலவாணரின் பக்கம் திரும்பினார் மழபாடியார்.

"வாருங்கள் அம்பலவாணரே- இரவு போஜனம் தயாராக இருக்கிறது. உணவருந்திக்கொண்டே பேசுவோம் !"

அம்பலவாணர் கிளம்புமுன் சிறிதளவு கேழ்விறகுக் கஞ்சி குடித்துவிட்டுத்தான் வந்திருந்தார். இரவில் அரிசிச் சோறுண்ணும் பழக்கம் அவருக்கில்லை. என்றாலும் மழபாடியாரின் அழைப்பை

அவரால் தட்ட முடியவில்லை.

உணவு உட்கொள்ளும்போது அம்பலவாணர் தாம் இரண்டு நாட்களுக்கு முன் கூத்துப் பார்த்துவிட்டுத் திரும்பிய நிகழ்ச்சியிலிருந்து வரிசைக்கிரமமாக அத்தனை செய்திகளையும் கூறிக்கொண்டே வந்தார்.

"...இப்படியாக வேளக்காரப் படை வீரரிடம் வழிகேட்டுக்கொண்டு உய்யக்கொண்டான் திருமாளிகையை வந்தடைந்தேன். மாராயரையாவது சந்தித்து விஷயத்தைச் சொல்லிவிட்டால் தஞ்சையிலிருந்து ஒருவழியாகக் கிளம்பிவிடலாம் என்ற முடிவுடன் அவரது அலுவல் அதிகாரிகளை சந்தித்து தளபதியை ஒரு அவசர காரியமாக சந்திக்க வந்திருப்பதாகக் கூறி செய்தி அனுப்பினேன்...அவர்களும் என்னை விருந்தினர் அறையில் மாராயரை சந்திக்கக் காத்திருந்த பல்வேறு ஆட்களுடன் அமர்த்தினார்கள்..."

இந்தக் கட்டம் வந்ததும் மழபாடியார் எறக்குறைய உணவு உட்கொள்வதை நிறுத்தியே விட்டார்..."மேலே சொல்லுங்கள்..!"

"..அறையில் அமர்ந்து அருகிலிருந்த மாராயரின் மாளிகைத் தோட்டத்தை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். அங்கே நந்தவனத் திருத்துவார் சிலர் பணியில் ஈடுபடுத்தப்பட்டிருந்தனர். அவர்களைக் கவனிக்க ஆரம்பித்தேன். அதில் ஒருவன் முகம் மட்டும் ஏதோ ஒரு வகையில் மிக வித்தியாசமாகத் தெரிந்த மாதிரி இருந்தது. ஆகவே அவனை மட்டும் கவனிக்க ஆரம்பித்தேன்..."

இந்த இடத்தில் மழபாடியார் குறுக்கிட்டு - "நீங்கள் அமர்ந்திருந்த இடத்திற்கும் திருத்துவார் வேலை செய்துகொண்டிருந்த இடத்திற்கும் இடையே உத்தேசமாக எத்தனை தூரமிருந்திருக்கும் ?"

"ஏறத்தாழ அறுபது அறுபத்தைந்து அடி சொல்லலாம்"

"ம்....சரி, மேலே சொல்லுங்கள் !"

"நான் பார்த்துக்கொண்டிருந்ததைப் போலவே அவனும் என்னைத் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தான். திருத்துவார் பணிபுரிந்துகொண்டே என் பக்கம் நகர்கையில்....எப்படி உங்களிடம் சொல்வது ? வயதாகிவிட்டதல்லவா ? அதனால் ஏற்பட்ட மனப்பிராந்தியா என்னவென்று தெரியவில்லை... திடீரென்று அவன் முகம் நான் அன்று இரவில் கண்ட கொலைகாரர் முகங்களில் ஒன்றுபோலத் தெரிந்தது..."

மழபாடியாரின் முகம் மிகவும் இறுகிவிட்டது...ஏதேதோ நினைவுகள் அவருக்குள் ஒன்றாக அலைமோதின. மாராயரின் மாளிகையை அன்று காலையில் அணுகும்போது தென்பட்ட முகம்தான் நினைவுக்கு வந்தது.

"கொலை செய்தவர்கள் மூவரும் கண்களுக்குக் கீழே முகமூடிபோன்று கறுப்புத் துணியொன்றைக் கட்டிக்கொண்டிருந்ததாகக் கூறினீர்களே... பின் இவனை எப்படி அடையாளம் காண முடிந்தது...?"

"ஆஹா !அதை எப்படிச் சொல்வது ? அதுதான் மனப்பிராந்தி என்கிறேனே... ஆனால் அந்த முகத்தில் வித்தியாசமாக ஏதோ தெரிந்தது. அது உறுதி. அதனை இரவு கொலை நடக்கும்போதே கவனித்தேன். இன்னதென்று விவரிக்கமுடியாத ஒரு வேறுபாடு. அதே வேறுபாட்டை இந்தத் திருத்துவார் மூகத்திலும் ஏறக்குறைய கண்டேன் என்றுதான் சொல்ல வேண்டும்....புருவங்கள் இரண்டும் ஏறக்குறைய முடிச்சிட்டதுபோல் நெருக்கமாக அமைந்து.... ஆனால் வேறுபாடு

அதுமட்டுமல்ல, வேறு ஏதோ ஒன்று"

மழபாடியார் நீண்ட யோசனையில் ஆழ்ந்துவிட்டார்.

அன்று காலை ஒரு கணம்... ஒரே ஒரு கணம்தான்... அந்த முகம் உய்யக்கொண்டான் திருமாளிகையின் தெற்கு வாயிலருகே தெரிந்தது. அந்த முகத்தை எங்கே பார்த்திருக்கிறோம் ? அந்த முகத்தின் புருவங்களை கவனிக்குமளவிற்கு நமக்கு அவகாசமில்லை...முகம்கூட இப்போது நினைத்துப் பார்க்கும்போது சரியாக மனதில் பதியவில்லையென்று படுகிறது - காலையில் நாம் கோட்டை விட்டது சிறு மீன் அல்ல போலிருக்கிறதே ! அம்பலவாணர் குறிப்பிடும் மனிதனும் நாம் பார்த்த வேளக்காரனும் ஒரே ஆளாக இருக்கமுடியுமா ? அதனை எப்படி உறுதி செய்து கொள்வது ?

அம்பலவாணரை நேரே அழைத்துப்போய் மாராயர் மாளிகையிலேயே விசாரணை நடத்தலாம்தான். அவன் கொலைகாரனோ இல்லையோ - ஆளைப் கூடப் பிடித்து விடலாம். ஆனால் விஷயம் அடியோடு கெட்டுப் போகும். அவன் துழாய்க்குடிப் பக்கம் வரவே இல்லையென்று சாதிப்பான். அது மட்டுமல்ல - அவன் ஒருவேளை சதிகாரனாயிருக்கும் பட்சத்தில் இதர கூட்டாளிகளுக்குத் தகவல்போய் எச்சரிக்கையடைந்தது....திட்டத்தை மாற்றி...

ம்ஹூம் ! சரிப்பட்டு வராது !

மாராயர் மாளிகையில் நமது ஆட்களை அனுப்பி அம்பலவாணர் குறிப்பிடும் திருத்துவானை சந்தேகம் வராதபடி நோட்டமிட வைக்க வேண்டும். அதற்கு இப்போதே தித்தனுக்கு செய்தி அனுப்பினால்தான் உண்டு. மூவேந்தன் இராக்காவலுக்குச் சென்றிருக்கிறான் - என்ன

செய்தியோடு வருகிறானென்று பார்ப்போம்.

ஒரு வழியாக சிந்தனையிலிருந்து மீண்டு அம்பலவாணரை கவனித்த மழபாடியார் சற்றே துணுக்குற்றார்.

மழபாடியார் உணவருந்தியதை நிறுத்திவிட்டதால் மேற்கொண்டு அம்பலவாணரும் சாப்பிடாதது மட்டுமன்றி அருகிலிருந்த தூணில் ஒருக்களித்து சாய்ந்தபடி உறங்கவே ஆரம்பித்துவிட்டார்... நாள் முழுவதும் சுற்றிய அலுப்பு !

கள்ளங் கபடமில்லாத முகத்துடன் ஒரு குழந்தை போல் உறங்கும் அந்தப் பெரியவரைப் பார்க்கையில் மழபாடியாரின் உள்ளம் உருகியது. எப்பேர்ப்பட்ட மனிதர் இவர் ! வேறு எவராக இருந்தாலும் எக்கேடு கெட்டுப் போகிறது என்று தஞ்சையை விட்டுக் கிளம்பியிருப்பார்கள். என்ன ஒரு பொறுப்புணர்ச்சி... இவர் கொண்டு வந்திருக்கும் தகவல்கள்தான் எத்தனை முக்கியமானவை ?

படுபாதகமான கொலையொன்று நிகழ்ந்திருக்கிறது ! கொலை செய்யப்பட்டவன் ஐங்கரன்தானா என்று உறுதிசெய்துகொள்ள வேண்டும். அவனை அப்படியே நாய் நரிகளுக்கு உணவாகட்டும் என்று விட்டு விடாமல் ஊருக்குக் கொண்டுவந்து சேர்த்ததிலிருந்து அம்பலவாணர் பட்டிருக்கும் பாடு
கொஞ்சமா நஞ்சமா ? எந்த அங்கீகாரத்தையும் பிரதிபலனையும் எதிர்பாராமல் ஒரு நல்ல குடிமகன் ஆற்ற வேண்டிய கடமை என்பதை மட்டும் மனதில் கொண்டு...

அம்பலவாணரே ! நீர் நமது மனதில் நீங்காத இடம்பெற்று விட்டீர் !

"ஐயா !"

திடுக்கிட்டவர் போலும் எழுந்தார் அம்பலவாணர் "அடடா - மன்னிக்க வேண்டும் ! கண்களைச் சுழற்றிக்கொண்டு வந்தது - அப்படியே சாய்ந்துவிட்டேன் ! இரவு அதிக நேரம்' விழித்திருக்கும் பழக்கம் எனக்கில்லை !"

"மன்னிப்புக் கோரவேண்டியவன் நான்தான் ! உணவு உட்கொள்ளாமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்துவிட்டேன் - நீங்கள் சொல்லிய தகவல்கள் என் சிந்தனைகளைக் கிளறிவிட்டுவிட்டன... நானும் உங்களுக்கு சில தகவல்கள் கூறவேண்டும்...."

மழபாடியார் சுருக்கமாக மாராயருக்கு சதிச் செயல் பற்றிய தகவல் கிடைத்ததையும் தகவல் கொண்டுவரும் எதிர்பார்த்து அவர் காத்திருந்ததையும் தாம் இந்தக் காரியத்தில் ஈடுபட்டதையும் கூறி முடித்தார். ஒற்றன் அல்லது ஐங்கரன் என்றோ கொல்லி மழவர் என்றோ குறிப்பிட்டுக் கூறாமல்
மேலோட்டமாகத் தகவல்களைப் பகிர்ந்துகொள்பவர்போல் செய்திகளைக் கோடிட்டுக் காட்டினார்.

"அம்பலவாணரே - நீங்கள் கொண்டுவந்த தகவல்கள் அனைத்தும் மிக மிக முக்கியமானவை. உமது சேவைக்கு சோழ அரசாங்கமே கடமைப்பட்டுள்ளது. ஆனால்... உமது உதவி இன்னமும் முடிந்தபாடில்லை !"

"ஆஹா ! தங்களுடைய பணியில் ஈடுபடுவதை ஒரு பாக்கியமாகவே கருதுவேன் - என்ன உதவி செய்ய வேண்டுமென்று கேளுங்கள் !"

"முதல்காரியமாக நாளை விடியற்காலை பொழுது புலருமுன் நாம் இருவரும் துழாய்க்குடிக்குக் கிளம்புகிறோம் ! அதுவரை சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள் !"

சோழசாம்ராஜ்ஜியத்தின் சேனாபதியும் முதல் அமைச்சருமான கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மராயருக்கு சரீரமும் பெரிது - சாரீரமும் பெரிது. தனது பருத்த உடலை சற்று சிரமத்தின் பேரில் ஆசனத்திலிருந்து தூக்கி கரங்களைக் கூப்பி மாராயரை வரவேற்றார் பிரம்மாதிராஜர்.

"வரவேண்டும் - வரவேண்டும் ! எத்தனை நாள்களாயிற்று தாங்கள் நமது மாளிகைக்கு வந்து..."

அந்தக் குரலில் தெரிந்த உண்மையான ஆதுரத்தை உணர்ந்து தலையை ஆட்டியபடியே உள்ளே நுழைந்தார் மாராயர். அவரது கரங்களும் பதில் வணக்கம் சொல்ல உயர்ந்தன.

"இந்த ஆசனத்தில் அமர வேண்டும் !"

"சேனாபதியாரே ! இந்த நேரத்தில் தங்களைத் தொந்தரவு செய்வதற்கு மன்னிக்க வேண்டும் - ஒரு முக்கிய விஷயம் கருதி உங்களை அவசரமாக
கலந்தாசோசிக்க வேண்டியுள்ளது...!"

பிரம்மராயர் அறையிலேயே இன்னமும் நின்றுகொண்டிருந்த தனது அந்தரங்க சேவகனை ஒரு பார்வை பார்த்தார். அவன் தலையைத்

தாழத்திவிட்டு வெளியேறினான்.

"நேரம் காலமென்ற விவஸ்தையெல்லாம் எனக்குக் கிடையாது என்பதுதான் தங்களுக்குத் தெரியுமே - விஷயத்தைச் சொல்லுங்கள் !"

மாராயர் மடைதிறந்த வெள்ளம்போல் அத்தனை செய்திகளையும் அரை நாழிகை நேரத்தில் மளமளவென்று கொட்டிவிட்டார்.

"நீங்களே சொல்லுங்கள் - இப்படி எந்தப் பிடியும் கிடைக்காமல் நாள் தள்ளிக்கொண்டே சென்றுகொண்டிருந்தால் நான் என்னதான் செய்வது ?"

பிரம்மராயரின் முகம் தீவிர சிந்தனைக்கான அறிகுறிகளைக் காட்டியது. மாராயர் பேசிக'கொண்டிருந்தபோதே ஆசனத்திலிருந்து எழுந்து மெதுவாக நடைபயிலத் தொடங்கிவிட்டார் அவர்... தீவிர சிந்தனையில் ஓரிடத்தில் அமர்ந்திருப்பது என்பது அவரால் முடிகிற காரியமாக இல்லை.

"இராஜராஜ மாராயரே ! நீங்கள் சொல்லும் தகவல்கள் நான் நமது ஆட்கள் மூலம் கேள்விப்பட்ட செய்திகளோடு ஒத்துப் போவதன்றி விஷயம் மிகவும் தீவிரமடைந்துவிட்டதையும் காட்டுகிறது !

யாரங்கே ! (அந்தரங்க சேவகன் உள்ளே நுழைய) நமது வளநாட்டு வரைபடத்தை எடுத்துவா !"

மாட்டுத் தோலில் ஒரு விதமான கரிய மையினால் வரையப்பட்டிருந்த அந்த வரைபடத்தில் சோழ சாம்ராஜ்ஜியத்தின் பல்வேறு நாடுகள் வளநாடுகள் கூற்றங்கள் மண்டலங்கள் என்று பல தகவல்களும்

குறிப்பிடப்பட்டிருந்தன. சேர மண்டலம் ஒரு வண்ணத்திலும் பாண்டி மண்டலம் வேறொரு வண்ணத்திலும் சளுக்க தேசம் பிறிதொரு வண்ணத்திலும் தெரிந்தன.

மலைநாடான சேரதேசத்தைச் சுட்டிக்காட்டியபடி பேசத் தொடங்கினார் பிரம்மாதிராஜர் -

"மாராயரே - அருமொழித்தேவர் முடியேற்றம் கண்ட சில ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். பாண்டி மண்டலத்தின்மீது போர் தொடுத்தோம் - அமரபுஜங்கன் கொட்டத்தை அடக்கினோம். அவனுக்கு உதவியாக ஆய்வேள் குடிச் சேரனும்(1) காந்தளுர் கடிகைப் போர்வீரர்களும் வரவே காந்தளூரைத் தாக்குவது இன்றியமையாததாகிவிட்டது(2)....குலசேகரக் குடியானான(3) பாஸ்கர இரவிவர்மன் திருவடிக்கு பழைய உறவு கருதி தாக்குதல் தொடுக்காமல் ஓலையனுப்பினோம் - அவனோ நம்மை அவமதித்ததோடன்றி நமது தூதனையும் சிறையிட்டான்.

கடும்போர் தொடுத்தோம் - உதகையை அழித்தோம்(4) ! அப்போது சோழ சைன்யத்தின் மாதண்ட நாயக்கராக இருந்த நமது இளவல் மதுராந்தகர்(5) அவருக்கேயுரிய இரக்க சுபாவத்தினால் பெருந்தவறொன்றினைப் புரிந்தார்.... வெளியில் அதிகபேருக்குத் தெரியாத அந்த நிகழ்வுதான் உங்களது இன்றைய பிரச்சனையின் ஆணிவேரே !"

மாராயர் அதிகம் பேசாமல் அமர்ந்திருந்தார். பிரம்மராயரின் பாணி அத்தகையது. ஒரு விஷயத்தை விளக்கப் புகும்போது ஆதியோடந்தமாய் ஆரம்பித்துத்தான் முடிப்பார் அவர்.

"பாஸ்கரனுக்குத் துணையாக அவனது சிற்றப்பன் மகன் இரண்டாம் பாஸ்கரன் உதகையில் நம் சேனைகளை எதிர்த்தான’. கடுமையான போருக்குப் பின் நாம் வென்றோம் ! போரில் படுகாயமுற்ற இந்த இரண்டாம் பாஸ்கரனை சிறைசெய்யாமல் கோட்டையிலிருந்து சிகிச்சைக்காக வெளியில்செல்ல மதுராந்தகர் எவர் சொல்லையும் கேட்காமல் அனுமதித்தார். இரண்டு நாட்களில் பாஸ்கரன் சிகிச்சை பலனளிக்காமல் இறந்துவிட்டான் என்று செய்திகள் வந்தன. அப்போது அதனை உறுதிசெய்துகொள்ளும் நிலையில் நாம் இல்லை.... போர் வெற்றியில் மகிழ்ந்திருந்தோம்.

அதற்குப்பிறகு வரிசையான போர்கள் - அதனால் சேரதேசத்தின் மீது நம்மால் அதிக கவனம் செலுத்தமுடியவில்லை. முதலாம் பாஸ்கரனும் நமது மேலாண்மையை ஏற்றுக்கொண்டுவிட்டான் - ஆக நமது ஆட்களை மட்டும் ஆங்காங்கே கண்காணிப்பிற்கு விட்டுவிட்டு நாம் வேறு விஷயங்களில் கவனத்தை செலுத்தினோம்...

இந்த நீண்ட நெடிய காலகட்டத்தில் நம் கண்களுக்குத் தெரியாமல் பல காரியங்கள் நடைபெற்றிருக்கின்றன. முக்கியமாக இரண்டாம் பாஸ்கரன் போரில’ இறக்கவில்லை. வருடக்கணக்கில் அவனுக்கு மலைநாட்டு வைத்தியர்கள் ஆயுர்வேத வைத்தியமெல்லாம் செய்து ஒரு வழியாகப் பிழைக்க வைத்துவிட்டார்கள்... இருந்தாலும் பழைய உடல் பலம் அவனுக்கு வாய்க்கவில்லை. ஒரு கால் வேறு நிரந்தரமாக முறிந்துவிட்டது.

உடலின் செயல்பாடு குறையும்பபோது உள்ளத்தின் செயல்பாடு ஓங்குமல்லவா ? பாஸ்கரனின் உள்ளத்தில் பழி வாங்கும் எண்ணம் தீயாய் எழுந்தது.
தனது அண்ணன் சோழ சாம்ராஜ்ஜியத்திற்கு கப்பம் கட்ட

ஒப்புக்கொண்டது எரிகிற நெருப்பில் எண்ணை ஊற்றியது போல் ஆயிற்று. அண்ணனோடு வாக்குவாதம் செய்வதைவிட வேறு வழியை யோசிக'கலாம் என்ற முடிவில் இறங்கினான் பாஸ்கரன்.

மிகுந்த சிரமத்தின்பேரில் பல நாட்கள் பயணம் செய்து ஆய் நாட்டை - அதாவது இன்றைய இராஜராஜத் தென்னாட்டை - அடைந்தான்.

அங்கு ஆய்வேளிர் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்திருந்த கடிகை, ஆயுதசாலை மற்றும் விழிஞம் துறைமுகங்கள் முழுவதுமாக அழிக்கப்பட்டு எழுந்திருக்க இயலாத நிலையில் இருந்தன. மீதமிருந்த ஆய்வேள் குலத்தாருக்கு நம்மைப் பகைத்துக்கொள்வதில் விருப்பமில்லை - ஆகவே அவர்களும் பாஸ்கரனுக்கு அதிக ஆதரவு காட்டவில்லை.

என்ன செய்வதென்று தெரியாது திகைத்து நின்றான் சேரன் இரண்டாம் பாஸ்கரனான இரவிவர்மன் திருவடி..."

***அடிக்குறிப்புக்கள் :***

*(1) பலரும் நினைப்பதைப்போல் காந்தளூர்ச்சாலையில் நடந்த போர் பாஸ்கரன் இரவிவர்மனை எதிர்த்து நடந்த போர் அல்ல - அந்தப் பகுதியை அப்போது ஆண்டு வந்தவர்கள் சேர ஆய்வேள் குடியினராவர். காந்தளூர்ச் சாலை கடிகையும் அவர்களால்தான் நடத்தப்பட்டு வந்தது.*
*(2) கிட்டத்தட்ட கிபி 988ல் நடந்தது இந்தப் போர்*
*(3) பெரும் பகுதி கேரளத்தை மகோதயாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த சேர வம்சம். உதகை அவர்களது இரண்டாவது தலைநகராகும்.*

*(4) "-சூழி*

*மதகயத்தால் ஈரொன் பதுசுரமு மட்டித்*

*துதகையைத்தீ யுய்த்த உரவோன்"*

*- கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரின் இராஜராஜ சோழன் உலா, வரிகள் 40-42*

*(5) இராஜேந்திர சோழரின் பூர்வாங்கப் பெயர'*

## மீண்டும் துழாய்க்குடி

பிரம்மராயரின் விளக்கங்களை மாராயர் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்தார். அதில் பல விஷயங்கள் அவருக்குத் தெரிந்தவையை என்றாலும் ஆங்காங்கே புதியசெய்திகள் ஏதாவது கிடைக்கிறதா என்பதில் கவனம் செலுத்தினார்.

"சோழருக்கு எதிராக பாஸ்கரனுக்கு ஒரு ஆச்சரியகரமான இடத்திலிருந்து வலுவில் உதவி கிடைத்தது.

காந்தளூர்க் கடிகையில் தன்னுடைய பல மாணாக்கர்களைப் போரில் இழந்து நின்ற ஒரு அந்தண ஆச்சாரியார் அவனுக்கு உதவுவதாக வாக்களித்தார். முதலில் அவருடைய தகுதிகளை குறைவாக மதிப்பிட்ட பாஸ்கரன் மிக விரைவிலேயே அவர் சாதாரண மனிதரில்லை என்பதைப் புரிந்துகொண்டு விட'டான். இருவருக்குமிடையில் ஏதோ உடன்பாடு ஏற்பட்டிருக்க வேண்டும். சில நாட்களிலேயே ஆச்சாரியாரின் அணுக்க சிஷ்யர்கள் மற்றும் சிஷ்யைகளுடன் கிளம்பி மலைநாட்டின் ஏதோ ஒரு இரகசிய இடத்திற்குச் சென்றுவிட்டான் பாஸ்கரன்.."

பிரம்மராயர் இந்த இடத்தில் நிறுத்திவிடவே மாராயர் - "காந்தளூர் கடிகை ஆச்சாரியார் என்று குறிப்பிடுகிறீர்களே - இவர் யாரென்று கண்டுபிடிக்க முடிந்ததா ?" என்று வினவினார்.

பிரம்மராயரின் முகத்தில் ஒரு விஷமமான புன்னகை படர்ந்தது. "நமது ஆட்கள் எத்தனையோ முயன்றும் அவரை மட்டும் இன்னார் என்று கண்டுபிடிக்கவே முடியவில்லை ! காந்தளூர் கடிகையின் மிகப் பழைய மாணாக்கர் என்று கேள்வி..."

"சரி - மேலே சொல்லுங்கள் !"

"மேற்கொண்டு சொல்லுவதற்கு ஒன்றுமேயில்லை மாராயரே ! கடைசியாக எனக்குக் கிடைத்த தகவல் பாஸ்கரன் ஆச்சாரியார் கோஷ்டியுடன் எங்கோ ஒரு இரகசிய இடத்திற்குப் புறப்பட்டு விட்டான் என்பதுதான். மேற்கூறிய தகவல்கள் அனைத்தையும் எனக்கு அனுப்பிக்கொண்டிருந்த நமது அணுக்கச் சேவகனிடமிருந்து இதற்குப்பின் ஒரு தகவலுமில்லை. ஆளே மாயமாக மறைந்துவிட்டான் !

நானும் பல்வேறு ஆட்களை அனுப்பித் தேடி விட்டேன் - ஒரு பிடியும் அகப்படவில்லை. பாஸ்கரன்-ஆச்சாரியார் கூட்டணியின் இரகசிய முயற்சிகள் வெற்றியடைந்தால் முதலாம் திருவடியிடமிருந்தோ ஆய்வேளிடமிருந்தோ சில காலத்தில் போர் அறிவிப்பு வரும் என்று எதிர்பார்த்து நமது உடன்கூட்டத்தில்கூட ஒருமுறை எச்சரித்தேன். ஆனால் அப்படி எதுவுமே நடக்கவில்லை.

போர் அறிவிப்போ அதற்கான முயற்சிகளோ உறுதியாகாத பட்சத்தில்

நாம் மீண்டும் மலைநாட்டிற்குப் படையெடுப்பது நடக்காத காரியம் - நமது பேரரசர் அதற்கு ஒருபோதும் உடன்படமாட்டார் ! மேலும் ஆச்சாரியாரின் இரகசிய முகாம் எங்கிருக்கிறது என்றுகூட தெரியாத பட்சத்தில் நாம் எங்கே என்று படையெடுப்பது ?"

மாராயர் தலையை ஆட்டி பிரம்மராயரின் நிலையை ஆமோதித்தார்.

"இதெல்லாம் நடந்து சில வருடங்களாகிவிட்டன. இப்போது நீங்கள் சொல்லும் தகவல்களை வைத்துப் பார்க்கும்போது இந்த சதிமுயற்சிகளுக்கும் மறைந்துபோன அந்தக் கும்பலுக்கும் ஏன் தொடர்பு இருக்கக்கூடாது என்று தோன்றுகிறது..."

"கொல'லி மழவர் அனுப்பியுள்ள செய்தியென்பதால் நானும் மலைநாட்டவரையே சந்தேகப்படுகிறேன். என்றாலும் உங்களுடைய குறிப்பான சந்தேகத்திற்கு வேறு ஏதாவது காரணங்கள் உண்டா ?"

"உண்டு. முக்கியமாக இந்தச் சதியானது அரசரின் சதய நாள் விழாவை குறிவைத்து நிகழ்த்தப்படும் பட்சத்தில் நமது சதிக்கும்பல் அதில் ஈடுபடுவதற்கு மிக அதிகமான வாய்ப்புக்களுண்டு. பேரரசரின் மும்முடிச்சோழரென்று முடிசூடிக்கொண்டபின் நடந்த முதல் சதயப் பிறந்தநாள் விழா எங்கே எந்தச் சூழலில் நடந்ததென்பதை நீங்கள் நன்றாக அறிவீர்கள் ! அதனால் அதே சதய நாளில் அவர்களின் திட்டம் நிறைவேற்றப்பட்டால் பழிதீர்க்கும் படலம் முழுமை பெற்றதாகக் கருதலாம் !"

மாராயரின் மெய் ஒரு கணம் நடுநடுங்கி ஓய்ந்தது. இருள் வடிவம் கொண்ட அரக்கன் ஒருவன் அருமொழியை விழுங்கிவிட தன் இராட்சஸ வாயை அகலத் திறந்துவைத்துக்கொண்டு காத்திருக்கிறான்.

அந்த இருளைக் கிழிக்கும் ஒளிவாள் தம்மிடம்தாம் உண்டு. அந்த வாள்தான் பரமன். ஒளி அந்தக் காரிருளைக் கிழிக்குமா ? கிழக்கு வழக்கம்போல விடியுமா ?

"இரண்டாவது காரணம் - இந்தச் சதிபற்றிய முழுத்தகவல் எனக்கு இன்னமும் வந்து சேராதது. இந்த ஒரு இரகசியக் கும்பலைத் தவிர வேறு பல முக்கிய எதிரிக் குழுக்களிடம் நமது ஆட்களுண்டு. காதும் காதும் வைத்தாற்போல் துல்லியமாக நடக்கும் நிகழ்வுகளைக் கொண்டு நோக்கும்போது இதன் சூத்திரதாரியின் புத்தி பலம் தெளிதின் விளங்குகிறதல்லவா ?"

சாம்ராஜ்ஜியத்தின் நீள அகலங்களின் பரந்து விரிந்து கிடக்கும் பிரம்மராயரின் நூற்றுக்கணக்கான காதுகளையும் கண்களையும் மாராயர் நன்றாகவே அறிவார். என்றாலும் அதனைப்பற்றி அவர் தம் வாயினாலேயே பிரஸ்தாபிப்பது இதுவே முதல் முறை.

"ஆக சதி நடக்கப்போகிறது என்று நிச்சயமாகும் பட்சத்தில் எதிரியைவிட அதிக புத்தி பலம்கொண்டுதான் அவர்களை முறியடிக்க வேண்டும் ! ச்...என்ன.. நமக்கு அவசாசம்தான் அதிகம் இல்லை... இன்னும் ஒரே ஒரு நாள்தான் ! நாளை மறுநாள் சதயமல்லவா..."

பிறந்த நாளன்று அவர்கள் மேற்கொள்ளக்கூடிய பாதுகாப்பு நடவடிக்கைகள் பற்றியும் அரசரின் மெய்க்காவல் பற்றியும் இருவரும் மேற்கொண்டு வெகுநேரம் விவாதித்தார்கள். பிரம்மராயர் படுக்கச் செல்வார் என்று காத்திருந்து காத்திருந்து அலுத்துப்போன அவருடைய அந்தரங்கச் சேவகன் விருந்தினர் அறை வாசலிலேயே ஒரு ஓரமாய் அமைந்திருந்த கல் மேடையொன்றில் கால்களை நீட்டிக்கொண்டு சுகமாய்த் தூங்க ஆரம்பித்துவிட்டான்.

ஐப்பிசை(1) மாதத்தின் விடியற்காலை முதல் ஜாமத்திற்கு தஞ்சையில் குளிர் சற்று அதிகம்தான். மழை நறுக்கென்று பெய்துவிட்டு ஓயாமல் சிறிய தூறல்கள் போட்டுவிட்டு ஓய்ந்துபோய் மீண்டும் ஒரு ஜாமநேரத்திலேயே தன் முனகலை ஆரம்பித்து விட்டது.

வேகமாகப் புரவியில் செல்லும்போது வாடைக்காற்று காதுக்குள் புகுந்து சங்கடங்கள் செய்யாமலிருக்கும் பொருட்டு மழபாடியாரும் அம்பலவாணரும் பெரியதொரு துணியை தலைப்பாகையாகத் தரித்திருந்தார்கள். அம்பலவாணர் வழக்கமாக தலையில் எதையும் அணியும் பழக்கம்' இல்லாதவராதலால் முதலில் அது சற்று தொந்தரவாகத்தான் இருந்தது. என்றாலும் சிறிது நேரத்திலேயே அந்தத் தொந்தரவை ஏற்றுக்கொள்ள அவர் பழகிவிட்டார்.

இருவரும் இன்னமும் தஞ்சை புறம்படியை தாண்டவில்லை. குளிர் சற்று அதிகமாக இருந்ததாலும் விடியற்காலை இருட்டில் பாதை அதிக வெளிச்சத்தோடு தெரியாததாலும் புரவிகளை சற்று மெள்ளத்தான் செலுத்திக்கொண்டு செல்ல முடிந்தது.

பொழுது புலர்வதற்கு முன்பாக மழபாடியார் கிளம்பியதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. கிழக்கில் சற்று வெளிச்சம் தெரிய ஆரம்பித்துவிட்டால் போதும் - பற்பல ஊர்களிலிருந்தும் தஞ்சகைக்கு வந்து சேர்ந்திருக்கும் வணிகச் சாத்து வண்டிகள் ஒவ்வொன்றாக புறப்பட ஆரம்பித்துவிடும். அந்தக் காலைநேர நெரிசலில் புரவிகளைச் செலுத்திக்கொண்டு திருச்சீரபுரம் - கொடும்பாளூருக்குச் செல்லும் பராந்தகச் சோழப் பெருவழியை அடைவதற்கு ஒரு ஜாம நேரம் ஆனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. பெருவழியிலும் அந்நேரத்தில்

போக்குவரத்து ஆரம்பித்துவிடலாம். அப்புறம் சூரியன் உச்சிக்கு வரும்போதுதான் துழாய்க்குடி போய்ச் சேர முடியும் !

ஆனால் சாத்து வண்டிகள் கிளம்புமுன் பெருவழியை அடைந்துவிட்டால் புரவிகளை மிக வேகமாகச் செலுத்திக்கொண்டுபோய்விடும்’ சாத்தியக்கூறுள்ளது.

தஞ்சையைப் பொறுத்தவரையில் உள்ளாலையைவிட புறம்பாடியில் என்றைக்குமே நெரிசல் மிகுதி. ஏனெனில் புறம்பாடியில் நுழைவதற்கு பிரத்யேக அனுமதி எதுவும் தேவையில்லை. அதிலும் இப்போது சதய நாள்விழா வேறு சேர்ந்துகொண்டதால் ஏறக்குறைய அனைத்து வீட்டுவாயில் திண்ணைகளும் வெளியூர்வாசிகளால் நிரம்பிக் கிடந்ததைக் காணமுடிந்தது. ஒரு சில வீடுகளில் மாடத்தில் முதல் நாளிரவு ஏற்றிவைத்த அகல் தீபங்கள் இன்னமும் எரிந்துகொண்டிருக்க வேறுசில வீடுகள் ஒரேயடியாக இருண்டு கிடந்தன. இடையில் தென்பட்ட பெரியதொரு விருந்தினர் விடுதியின் கொட்டடியிலிருந்து வண்டி மாடுகளின் "...ம்...மா!" கத்தல்களும் அதன் எதிரொலிகளாக எழுந்த சில நாட்டுக் குதிரைகளின் "பிளீஹிஹி!" கனைப்பொலிகளும் கேட்டவண்ணம் இருந்தன.

இதனையெல்லாம் அதிகம் கவனிக்காமல் மழபாடியாரும் அம்பலவாணரும் தத்தம் புரவிகளை முடிந்தவரை வேகமாகச் செலுத்துவதில் குறியாக இருந்தார்கள். அவர்கள் ஆரோகணித்திருந்த ஜாதிப் புரவிகளிரண்டும் நல்ல ஓய்வுக்குப்பின் சுறுசுறுப்பாகத் தெரிந்தாலும் பாதையில் அதிக வெளிச்சமின்மையால் வேகமாகச் செல்லமுடியாமல் மந்த கதியிலேயே வீதிகளைக் கடந்தன.

ஏறக்குறைய இரண்டு நாழிகைநேரப் பயணத்தின் முடிவில் அவர்கள்

பெருவழியை அடையவும் கிழக்கில் வைகறைப் பொழுது விடிவதற்கான ஆரம்பக்கட்ட உத்தேசங்கள் தெரிவதற்கும் சரியாக இருந்தது.

அடுத்த அரை நாழிகைப் பொழுதில் அந்தப் புரவிகளிரண்டும் வாயுவேக மனோவேகத்தில் பராந்தகச் சோழப் பெருவழியில் பாய்ச்சல் காட்ட ஆரம்பித்தன.

துழாய்க்குடி மற்றும் அதனைச்சுற்றியுள்ள சில ஊர்களுக்கு ஊர்க்காவலதிகாரியாய் விளங்கிய ஆதிச்ச சேர்வை வீட்டை விட்டு வெளியில் வந்து வானம் பார்த்தார். மேகங்கள் சூழ்ந்து இருந்தாலும் சூரியன் இருக்கும் திசை உத்தேசமாகத் தெரிந்தது.

நேரம் காலை முதல் ஜாமம் கழிந்து ஒரு நாழிகை ஆகியிருக்கும் என்று கணித்தார் சேர்வை. வானத்திலிருந்து அவர் தம் பார்வையைக் கீழிறக்க, அந்தத் தெருமுனையில் இரு குதிரைகள் புழுதிபறக்க தம் இல்லம் இருக்கும் திசையை குறிவைத்து வருவதைக் கவனித்தார். யார் வருகிறார்களென்பது சேர்வைக்கு நிச்சயமாகத் தெரியவில்லை - அம்பலவாணரை அந்த சமயத்தில் அவர் எதிர்பார்க்கவுமில்லை.

புரவிகள் அவரது இல்லத்தை நெருங்க நெருங்க மிதமாக வேகத்தில் கட்டுப்படுத்தப்பட்டு சரியாக அவர் நின்றிருந்த இடத்திற்கு ஐந்தடிகளுக்கு முன் கன கச்சிதமாக நிறுத்தப்பட்டன. அம்பலவாணரும் மழபாடியாரும் தத்தம் புரவிகளிலிருந்து கீழிறங்கினர்.

புழுதி படிந்த உடம்போடு இறங்கிய அம்பலவாணரை சேர்வை அடையாளம் கண்டுகொள்ளவே ஓரிரு நிமிடங்கள்

பிடித்தன...."ஆசானே ! என்ன இது கோலம் ? அதற்குள்ளாகவா தஞ்சைக்குச் சென்றிருந்த அலுவல் முடிந்துவிட்டது ? (மழபாடியாரை கவனித்துவிட்டு) யாரிவர் ? தஞ்சையிலிருந்து வந்திருப்பவர்போலத் தெரிகிறது...."

"ஆதிச்சா - சற்று வீட்டிற்குள் நுழைந்தபின் பேசுவோமா ? உன் வேளக்காரனை கூப்பிட்டு முதலில் புரவிகளுக்கு நீரும் புல்லும் காட்டச்சொல் -இரண்டு மிகுந்த பசியோடிருக்கின்றன....அப்பப்பா - என்ன அலுப்பு !"

அடுத்த அரை நாழிகை நேரத்தில் கைகால்கள் சுத்தம் செய்து சற்று ஆசுவாசப்படுத்திக்கொண்டு கேழ்விறகுக் கஞ்சிக் கலயத்துடன் மூவரும் முற்றத்தில் அமர்ந்தனர். ஆதிச்ச சேர்வையிடம் அதிக தகவல்களை பகிர்ந்துகொள்வதில் அம்பலவாணருக்கு விருப்பமில்லை - அது விரைவில் ஊர் முழுதும் பரவிவிடும் என்பது திண்ணம். ஆனால் சேர்வைக்காரரின் மனமோ ஆர்வமிகுதியினால் கேள்விகளால் கொப்பளித்துக்கொண்டிருந்தது. எப்போது அம்பலவாணர் ஓய்வாக அமர்வார் - எப்போது நமது சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ளலாம் என்று காத்துக்கொண்டிருந்தார் அவர்.

ஆனால் சேர்வையின் எண்ணத்தில் மண்தான் விழுந்தது.

தாம் அவசர அவசரமாக கஞ்சியைக் குடித்ததோடு மட்டுமன்றி மழபாடியாரையும் அவசரப்படுத்தினார் அம்பலவாணர் ! உண்மையில் கேழ்விறகுக் கஞ்சி அவருக்கு மிகவும் பிடித்தமான உணவுதான். அதிலும் தொட்டுக்கொள்ள சிறிதளவு உப்பில் ஊறிய நாரத்தை ஊறுகாய் இருந்துவிட்டால் தேவ அமிர்தமேதான் ! ஆனால் சேர்வை ? அவரிடம் அகப்பட்டுக்கொள்வதாவது ? மேலும் இன்று பொழுது

சாய்வதற்குள் துழாய்க்குடியில் காரியங்களை முடித்துக்கொண்டு தஞ்சைக்குத் திரும்பிவிட வேண்டாமோ....பாவம், குழந்தை ! நேற்று நம்மைக் காணாமல் மிகவும் ஏமாற்றமடைந்திருப்பாள்...

சேர்வை பொறுக்கமாட்டாமல் - "என்ன ஆசானே கால்களில் வெந்நீர் ஊற்றிக்கொண்டதுபோல் பறக்கிறீர்கள் ?"

"ஆதிச்சா - அவசரமாக எறும்பியூர் வரை இவரை அழைத்துச் செல்ல வேண்டியிருக்கிறது ! அதனால் உடனடியாக நாங்கள் புறப்பட்டாக வேண்டும் - புரவிகளுக்கு உன் வேளத்தான் நீர்காட்டி புல்லும் கொள்ளும் இட்டுவிட்டானல்லவா... ?"

"அட, அதற்கென்ன ? சற்று நிதானமாகக்தான் உணவருந்துங்களேன் - சாப்பிடக்கூட நேரமில்லாமல் அப்படியென்ன அவசர அலுவல் ?

"அவசரம் எனக்கில்லையப்பா - இவருக்குத்தான். இவர் உடனடியாக தமது அரசாங்க அலுவலை முடித்துக்கொண்டு இரவு தஞ்சையை அடைந்தாக வேண்டும் ! அதற்கு நான் பொறுப்பேற்றுக்கொண்டிருக்கிறேன்...."

"இவர் யார் என்னவென்று ஊர்க்காவலதிகாரியான எனக்கு அறிமுகப்படுத்தக்கூட இல்லை ஆசானே... இது அநியாயம் ! இவர் நமது பகுதியில் நடந்த கொலையை விசாரிக்க வந்துள்ள நாடுகாவலதிகாரியாக இருக்குமென்று ஊகிக்கிறேன்..."

இதற்கு மழபாடியார் பதிலளித்தார் - "தஞ்சை அரசாங்கத்தாருக்கு இத்தகைய நியாய அநியாயங்கள் ஒரு பொருட்டல்ல ஊர்க்காவலதிகாரியவர்களே ! நான் கொலையை விசாரிக்க

வந்துள்ளவன்தான் - ஆனால் நாடுகாவலதிகாரியிடமிருந்து வரவில்லை. வேறொரு அரசாங்கப் பிரிவிலிருந்து வருகிறேன்...(இந்த இடத்தில் அம்பலவாணர் சற்றே கனைத்தார் - மேலும் விபரங்கள் எதுவும் சொல்ல வேண்டாம் என்பது அதன் பொருள்) உண்மையில் தற்போது உங்களுடன் சாவகாசமாக உரையாடமுடியாத நிலையிலிருக்கிறோம். என்னுடைய ஒரு சில கேள்விகளுக்கு மட்டும் விடைசொல்லிவிடுங்கள் - கொலையுண்ட மனிதரை சகல மரியாதைகளுடனும் எரித்துவிட்டீர்களல்லவா ?"

"ஆம் - நமது பகுதி அந்தணர் ஒருவரைக்கொண்டு சகல கிரியைகளும் செய்து நேற்று மாலை நமது பகுதி மசானத்தில் வைத்து எரித்துவிட்டோம் !"

"உடலை எரிக்குமுன் அதனை பரிசோதித்தீர்களா ?"

"ஆஹா - முழுவதுமாகப் பரிசோதித்துவிட்டோம். அணிந்திருந்த உடை மற்றும் ஒரு சிறு பணமுடிப்பைத் தவிர வேறெதுவும் அகப்படவில்லை !"

அவன் ஐங்கரனாயிருக்கக்கூடிய சாத்தியக்கூறுகள் அதிகமாவதை மழபாடியார் உணர்ந்தார். ஒற்றர்கள்தாம் மிகுந்த முன்னெச்சரிக்கையுடன் தம் உடைகளுக்குள் வழிச்செலவுக்குப் பணம், தற்காப்புக்கான ஆயுதம் மற்றும் அடையாள முத்திரை மோதிரங்கள் தவிர வேறு பொருட்கள் எதையும் சுமந்துசெல்ல மாட்டார்கள். அம்பலவாணர் கொலையுண்டவனுடைய முத்திரை மோதிரத்தை தாம் முன்னரே கைப்பற்றிவிட்டதாகத் தெரிவித்தாரே ? ஆனால் கொலையுண்டவனின் ஆயுதம்தான் என்ன ஆயிற்றென்று தெரியவில்லை.

மேற்கொண்டு சேர்வையிடம் உருப்படியாகத் தகவல்கள் எதுவும் பெறமுடியாதென்று தோன்றவே பளிச்சென்று எழுந்துவிட்டார் மழபாடியார். சொல்லி வைத்தாற்போல் அம்பலவாணரும் உடனடியாக எழவே சேர்வையால் ஒன்றும் செய்யமுடியவில்லை.

"பார்த்துச் சென்று வாருங்கள் ! தஞ்சைக்குச் செல்லுமுன் மீண்டும் துழாய்க்குடிக்கு வருவீர்கள்தானே ?"

"சந்தேகம்தான் - பார்ப்போம். வருகிறேன் ஆதிச்சா !" - புரவியில் ஆரோகணித்துவிட்டார் அம்பலவாணர்.

மழபாடியாரும் புரவியில் ஏறக் காலை வைத்தவர் சடாரென்று கீழிறங்கி - "சேர்வையவர்களே - நேற்று கொலையுண்டவனின் அந்திமக் கிரியைகள் நடக்கும்போது மசானத்தில் புதிய முகங்கள் ஏதாவது தெரிந்ததா ? அல்லது வித்தியாசமான வழக்கத்திற்கு மாறான சம்பவங்கள் ஏதாவது நடந்ததா ?"

"ம்....கிரியைக்கு ஒரு சில ஊர்க்காரர்கள்தான் வந்திருந்தார்கள் - வித்தியாசமாய்க் கண்களில் எதுவும் படவில்லை. நாங்களும் நீண்ட நேரம் மசானத்தில் நிற்கவில்லை - சிதைக்கு எரியூட்டியபின் கிளம்பிவிட்டோம். மசானத்துச் சுடலையை இன்று காலை சந்தித்தேன் - அவன்தான் நாங்களெல்லாம் சென்றபின் ஏதோ ஒரு புதிய மனிதர் வந்து பார்த்துவிட்டு உடலை நன்றாக எரியுட்டிவிடுமாறு சொல்லிவிட்டு ஒரு காசும் கொடுத்துவிட்டுப் போனார் என்றான்....ஏன், எதற்காகக் கேட்கிறீர்கள் ?"

மழபாடியரரின் மனத்தில் சிலீரென்று ஒரு பூச்சி பறந்தது. ஆனால் வெளியில் எந்த உணர்ச்சிகளையும் காண்பித்துக’கொள்ளவில்லை.

"வித்தியாசமாக எதுவுமில்லை. ஒரு விசாரிப்புக்குத்தான் கேட்டேன் - வருகிறேன் !"

புரவிகள் அந்தத் தெருமுனையைக் கடக்கும்வரை சேர்வை வாசலில் நிற்கவில்லை. அப்படி நின்றிருந்தால் அவை எறும்பியூர் செல்லும் கணவதி வாய்க்காலை(2) ஒட்டிச் செல்லும் இடப்புறப் பாதையில் திரும்பாமல் வலப்புறம் திரும்பியதை கவனித்திருப்பார்.

வலப்புறப் பாதை துழாய்க்குடியின் மசானத்துக்குச் செல்லும் பாதை.

***அடிக்குறிப்புக்கள் :***

*(1) ஐப்பசி மாதம் ஐப்பிசை என்றே கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. பார்க்க "பிற்காலச் சோழர' வரலாறு-1" பக்.102, தி.வை.சதாசிவப் பண்டாரத்தார்.*

*(2) கணவதி வாய்க்கால் என்னும் பெயர் கல்வெட்டுக்களில் அடிக்கடி இடம்பெறுகிறது. வாய்க்கால் பெயர்களில் இது அந்நாளில் மிகப் பிரபலமான ஒன்று போலும'*

## தடயங்கள் தேடி...

சூரியன் தஞ்சையின் கோட்டை உச்சிக்கு நேராக ஏறுவதற்கு இன்னும் இரண்டு நாழிகைகளே இருந்தன.

உடையார் இராஜராஜ சோழ தேவர் அரண்மனையின் ஒரு பகுதியாக

அமைந்திருந்த திருவோலக்க மண்டபத்தில் (1) சோழ சைன்ய தளபதி இராஜராஜ மாராயரும் முதன் மந்திரி அமண்குடி கிருஷ்ணன் இராமனான பிரம'மராயரும் திருமெய்க்காப்புத் தலைவர் வேளாண் ஆட்கொண்ட வில்லியாரும் நின்றிருந்தனர்.

அன்று மாலைதான் பேரரசர் நந்திபுரம் ஆயிரத்தளி அரண்மனையிலிருந்து தஞ்சைக்குத் திரும்புவதாக இருந்ததாகையால் அந்த பிரம்மாண்டமான மண்டபத்தில் வழக்கமாகத் தென்படும் அரசு அதிகாரிகள் எவரையும் காணக்கூடவில்லை. என்றாலும் மறுநாள் நடக்கப்போகும் சதய நாள் விழாவுக்காக மண்டபத்தை அலங்கரித்துக்கொண்டிருந்த அரண்மனைப் பெண்டுகள், அவர்களுக்கு உதவியாக அரசரின் வேளத்திலிருந்து வந்திருந்த சில ஆட்கள், மண்டபத்தை அவ்வப்போது கடந்துகொண்டிருந்த அரண்மனை மெய்க்காவல் வீரர்கள் என்று போக்குவரத்து சற்று அதிகமாகவே இருந்தது.

மண்டபமெங்கும் தீட்டப்பட்டிருந்த அழகிய வண்ண ஓவியங்களை சிலர் தட்டித் துடைத்துக்கொண்டிருந்தார்கள். வேறு சிலர் தரையை சுத்தம் செய்துகொண்டிருந்தனர். ஆனால் பலரும் ஆர்வத்தோடு ஈடுபட்டிருந்த வேலையானது மண்டபத்திற'குப் பலவிதமான மலர் அலங்காரங்கள் செய்வதாகும்.

வேளத்து ஆட்களை சில பெண்டுகளை வம்புக்கு இழுப்பதும் அவர்கள் அதற்கு மறுமொழி சொல்வதுமாக ஆங்காங்கே சில மெதுவான பேச்சுக் குரல்களையும் கேட்க முடிந்தது. பாவம் ! மாராயரும் மற்றவர்களும் அங்கு நந்திபோல் நின்றிருந்ததால் அவர்களால் வழக்கம்போல உரத்த குரலில் உரையாடி சிரித்து மகிழ முடியவில்லை. அதிலும் தமக்குப் பிடித்தமான வேளக்கார ஆட்களை சந்தித்து அகமகிழலாம் என்கிற

நினைப்பில் சற்று அதிகமாகவே அலங்காரம் செய்துகொண்டு வந்திருந்த இளம் பெண்டுகளின் முகத்தில் அசடு வழிந்தது.

இந்த எரிச்சலெல்லாம் சேர்ந்துகொள்ள ஒரு சில நடுவயதுப் பெண்டுகள் துணிந்து மாராயர் கோஷ்டியாரை உற்றுப் பார்த்த வண்ணம் அருகிலிருந்தவர்களிடம் ஏதோ கிசுகிசுத்துக் கொண்டிருந்தார்கள். "கிழங்களுக்கு இந்த நேரத்தில் திருவோலக்க மண்டபத்தில் என்ன பாழாய்ப்போன வேலை வந்து விட்டதோ !" என'பதாக அந்தப் பேச்சு அமைந்திருக்கும் என்று நாமே யூகிக்கிறோம்.

இந்தப் போக்குவரத்துக்கள் எதையும் இலட்சியம் செய்யாது மாராயரும் பிரம்மராயரும் தமது பேச்சில் மூழ்கியிருந்தனர். சொன்னதையே பலமுறை திருப்பிச் சொல்லும் பிரம்மராயருடைய உரையாடலை ஆட்கொண்ட வில்லியார் சற்று பொறுமையுடனே கேட்டுக்கொண்டிருந்தார் என்றுதான் கூறவேண்டும்.

நாம் நெருங்கும் சமயத்தில் விவாதம் சற்றே சூடுபிடித்துவிட்டதுபோல் காண்கிறது.

"ஆட்கொண்ட வில்லியாரே - இந்த விஷயத்தில் நமக்கும் பிரம்மராயருக்கும் கருத்தொற்றுமையில்லை. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?"

"என்னுடைய கருத்து என்னவென்றால் அரசருக்கு ஏதாவது கேடு விளைவிக்க நினைப்பவன் தேர்ந்தெடுக்கும் கடைசி இடமாக திருவோலக்க மண்டபம் இருக்கும். இங்கு கட்டுக்காவல் அதிகம் - போக்குவரத்தும் மிகுதி - அதனால்..."

"இப்படி நாமெல்லாம் யோசித்து கவனக்குறைவாய் இருப்போமென்று இந்த இடத்தையே எதிரிகள் தாக்குதல் தளமாகத் தேர்ந்தெடுத்துவிட்டால் ?"

"ஒரு எதிரி ஆயுதத்துடன் அரண்மனையின் மையப்பகுதியில் மும்முடிச்சோழன் திருமாளிகை(2) தாண்டி அமைந்திருக்கும் இந்த இடத்திற்கு சதய நாள் நெரிசலுக்கு நடுவில் வரமுடியும் என்று எனக்குத் தோன்றவில்லை மாராயரே..."

"முதலமைச்சரே - நீங்கள் சொல்வதும் ஒருவகையில் சரிதான். என்றாலும் திருவோலக்க மண்டபத்தில் நுழைபவர்களை சோதனை செய்யாமல் உள்ளே விடுவதை என் மனம் ஒப்பவில்லை !"

"ஐயா - திருவோலக்க மண்டபத்தில் நாளை அத்தனை இராஜவம்சத்துப் பிரதிநிதிகளும் அரண்மனைப் பெண்டுகளும் உடன்கூட்டத்து அதிகாரிகளும் அரசாங்கத்தின் பல முக்கிய விருந்தினர்களும் வருகை தருவார்கள் ! அவர்கள் அனைவரையும் சோதனையென்றபெயரில் அவமானப்படுத்துவது நடக்காத காரியம்..."

இடையில் ஆட்கொண்ட வில்லியார் குறுக்கிட்டார்.

"வேண்டுமானால் ஒன்று செய்வோம். திருவோலக்க மண்டபத்திற்குள் கிழக்கு வாயில் வழியாக நுழையும் அதிகாரிகள் யாராயினும் சரி - அவர்களை முழுவதும் சோதனையிட்டபின்பே அனுமதிப்பது. இராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அமைச்சர் மற்றும் மஹாபிரதானிகளும் கிழக்கு வாயிலை உபயோகிக்காமல் அரண்மனையின் ஊடே புகுந்துவரும் வடக்கு வாயில் வழியாக வரவேண்டியது.."

"இது ஓரளவிற்கு ஏற்புடையதாகத் தெரிகிறது எனக்கு..." என்றார் பிரம்மராயர்.

"எனக்கும் ஏற்புடையதே. இங்கே நாம் திட்டமிட்டிருந்ததை விட நீண்ட நேரம் செலவழித்துவிட்டோம். இன்னும் போக வேண்டிய இடங்கள் நிறைய உள்ளன - வாருங்கள், மதிய உணவை அரண்மனையிலயே முடித்துக்கொண்டு திருக்கற்றளி வளாகத்திற்குச் செல்வோம் !" என்றபடி அங்கிருந்து கிளம்பினார் இராஜராஜ மாராயர். அவரைத் தொடர்ந்து பிரம்மராயரும் ஆட்கொண்ட வில்லியாரும் அங்கிருந்து ஒவ்வொருவராக அகன்றார்கள்.

நந்திகள் பார்வையிலிருந்து மறைந்த சில நிமிடங்களில் அந்த இடமே சந்தைக்கடைபோல் கலகலவென்ற பேரிரைச்சலுக்கு உள்ளானது. திருவோலக்க மண்டபத்தின் மெய்க்காவல் வீரன் ஒரு முறை உரத்த குரலில் அதிகம் சப்தம் செய்ய வேண்டாமென்று அனைவரையும் எச்சரித்துவிட்டுப் போனான்.

துழாய்க்குடியின் மசானத்து பூமியானது அவலங்கள் நிறைந்த இந்த உலக வாழ்வை வேண்டாம்! என்று வெறுத்து ஒதுக்கிவிட்ட ஒரு துறவியைப்போல் ஊருக்கு வெளியே மிகத் தள்ளி அமைந்திருந்தது. அந்த வட்டாரத்தில் மனித நடமாட்டமே இல்லையென்று சொல்லுமளவிற்கு பிரதேசமே வெறிச்சென்று காட்சியளித்தது.

உச்சியில் வெய்யில் ஏறிவிட்டதால் மழபாடியாரும் அம்பலவாணரும் தலைப்பாகையைக் கழற்றி தோளில் சுற்றிப் படரவிட்டிருந்தார்கள். மசானத்தை நெருங்குகையில் சிறிய புகைமண்டலமொன்று ஒற்றைப்

பிரியாய் பிரிந்து வானமிருக்கும் திசையில் பயணப்பட்டுக்கொண்டிருந்தது. முதலில் மழபாடியார் அது முதல்நாள் எரியூட்டப்பட்ட சடலம்தானோ என்று துணுக்குற்றார்... பின் நெருங்கிக் பார்க்கையில் அது மசானத்து சுடலையின் குடிசையிலிருந்து வெளிவரும் சமயைல் புகை என்பது தெரிந்தது.

வாழ்வின் அநித்தியத்தை பறைசாற்றியபடி மௌனமாக ஆங்காங்கே அமைந்திருந்த மண்மேடுகளை இருவரும் கடந்தார்கள். சில மேடுகளின் ஓரத்தில் முழு செங்கற்கள் முக்கோணமாய் குவிக்கப்பட்டு அவற்றுள் ஒரு அகல்விளக்கும் தெரிந்தது. வேறு சில மேடுகளில் எக்காலத்திலோ போடப்பட்ட மலர் மாலைகள் காய்ந்து சருகாகிக் கிடந்தன. அவற்றை ஒதுக்குவது சுடலையின் பணியில்லை போலும் !

இருவரும் மசானத்தின் நடுவில் அமைந்திருந்த குடிசையை நெருங்கினார்கள்.

அரவம் கேட்டு வெளியில் வந்த மசானத்துச் சுடலை செங்கணன் துழாய்க்குடியின் அம்பலவாண ஆசான் வேறொரு புதிய மனிதருடன் தன்னைத்தேடி வந்திருப்பதைக் கண்டு அதிசயித்தான்...."ஆசானே - எதுக்காக நீங்க நம்பளத் தேடி வரணுமுங்க ? ஒரு வார்த்தை சொல்லியிருந்தா..."

"அது கிடக்கட்டும் செங்கணா ! நீயும் உன் குடும்பமும் சுகம்தானே..."

"ஆகா - எல்லாரும் நல்லாயிருக்கோமுங்க..."

"இவர் தஞ்சையிலிருந்து வந்திருக்கும் ஒரு அதிகாரி - நமது பகுதியில் முந்தாநாளிரவு ஒரு அசம்பாவிதம் நடந்துவிட்டதல்லவா ? அதனை

விசாரிக்க வந்திருக்கிறார்..."

"ஐயா - வணக்கமுங்க !"

கள்ளங்கபடமில்லாமல் மசானத்தில் வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கும் செங்கணச் சுடலையை மழபாடியார் சற்று மரியாதையுடனே நோக்கினார்.

"வணக்கம் - நேற்றைய சடலத்தை முழுவதுமாக எரியூட்டிவிட்டீர்களல்லவா ?"

"ஆஹா - எல்லாம் முடிஞ்சதுங்க. பாவம், ஆரு பெத்த பிள்ளையோ ! நம்ம பூமில வந்து உசுரை விடணுமுன்னு விதிச்சிருக்குதுங்க..."

"நேற்று மாலை அந்திமக் கிரியைகளை ஊர்க்காரர்களும் சென்றபின் யாரோ ஒரு புதிய மனிதர் வந்து போனதாக ஊர்க்காவலதிகாரியிடம் சொன்னீர்களாம்..."

"அட ஆமுங்கையா ! சேர்வை ஐயாவும் மத்த ஊர்ப்பெரியவங்களும் போன பின்னே கொஞ்சம்போல இருட்டிக்கிட்டு வந்துச்சுங்கோ... அப்புறம் இவரு வந்து காசு கொடுத்து செதைய நல்லா எரிச்சுப்போடச் சொன்னாருங்க..."

"ஆளின் உயரம், அங்க அடையாளங்கள் ஏதாவது..."

"இருட்டுங்க - சரியா கவனமில்லீங்க ! உசரம் கூடக்கொறைய ஒங்க ஒசரந்தான் - மத்தபடி மொகமெல்லாம் பாக்க முடியலீங்க..."

"ஏன், சிதையின் நெருப்புத்தான் நன்றாக எரிந்துகொண்டிருக்குமே - அந்த வெளிச்சத்தில் அடையாளம் தெரிந்திருக்குமே..."

"ஓ அதுவா - நேத்து எரிக்கிற விறகுல நம்ம பெண்சாதி தவறிப்போய் கொஞ்சம் ஈற விறகா வைச்சு அடுக்கிடுச்சுங்க.. நெருப்ப வச்சு ஒரு சாம நேரத்துல தீ அவியர நெலைங்க. ஈற விறகும் நல்ல வெறகின் உஷ்ணத்த வாங்கி எரியுமுன்னு நெனச்சது தப்பு... அது எரியவேயில்லீங்க ! அப்பொதான் இந்தப் பெரிய மனுசன் வந்து காசு கொடுத்து நல்லா நெருப்பூட்டி எரிக்கச் சொன்னாருங்க... ஆரு என்னன்னு தெரியாம கொடுத்த காச வாங்கிப்புட்டேனுங்க..."

அம்பலவாணரும் மழபாடியாரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். நெருப’பு அவியும் நேரத்தில் சரியாக வந்திருக்கிறானென்றால் அந்த முழு நிகழ்ச்சியையும் எட்ட இருந்தபடி அவன் கவனித்திருக்க வேண்டும் ! அவன் யாராயிருக்கக்கூடும் ? சடலம் முழுவதும் எரிக்கப்படுவது ஏன் அத்தனை முக்கியமாகிறது ?

மழபாடியாருக்கு எதையோ நெருங்கிக்கொண்டிருக்கிறோம் என்று பட்டது.

"ஐயா - நேற்றோ அதற்கு முந்தைய தினமோ மழை அதிகமாக இந்தப் பகுதிகளில் பெய்ததா ?"

"முந்தாநாள் இராத்திரி லேசான தூறல் போட்டுதுங்க - அத்தோட சரி ! நேத்து கொஞ்சம் மேக மூட்டமா இருந்தாலும் நாள்பூரா பொட்டு மழை இல்லீங்க..."

இருவரும் மசானத்துச் சுடலையிடம்' விடைபெற்றுக்கொண்டு கிளம்பினார்கள்.

"இந்த இடம்தானா ? நிச்சயமா அம்பலவாணரே ?"

"சர்வ நிச்சயமாக இந்த இடம்தான் - இந்தப் பகுதியின் காட்டுப் பாதைகளும் வயல் பாதகைளும் சிறுவயது முதலே எனக்கு அத்துப்படி....அன்றைக்கு நிலா வெளிச்சம் சற்றே குறைந்துவிட்டதால் இருட்டில் வழிதெரியாமல் இங்கே நுழைந்துவிட்டேன். சரியான பாதை அதோ - சற்று தூரத்தில் மங்கலாக ஒரு ஆலமரம் தெரிகிறது பாருங்கள் ! அதனையொட்டி அமைந்திருக்கிறது... இதோ ஏறக்குறைய இந்த இடத்தில்தான்....கொலை....."

"இருங்கள் ! மேற்கொண்டு செல்லவேண்டாம் ! நமது குதிரைகளின் குளம்படி ஏற்கனவே அங்கு பதிந்திருக்கும் சுவடுகளைக் கலைத்துவிடக்கூடும் ! இப்படியே மெதுவாக சுற்றிக்கொண்டு... அதோ அங்கு ஒற்றையாக நீட்டிய பாறையொன்று தெரிகிறது பாருங்கள் ! அங்கு சென்று குதிரைகளைப் பாறையின் கூர்முனையில் கட்டிவிடுவோம் !"

"சரிதான் !"

இருவரும் குதிரைகளைக் கட்டிவிட்டு ஆவலுடன் அந்த இடத்தை நெருங்குகையில்....

"இதோ - இங்குதான் !" - ஒரு துள்ளலுடன் முன்னேறிய

அம்பலவாணரின் புருவங்கள் நெரிந்தன... என்ன இது ?

நிமிர்ந்து மழபாடியாரை ஒரு ஆச்சரியத்துடன் நோக்கினார் அவர் - "ஐயா - விசித்திரமாயிருக்கிறது ! கொலை நடந்த இடம் சர்வ நிச்சயமாக இதுதான் - சந்தேகமேயில்லை ! ஆனால் மொத்த இடமும் மிகச் சுத்தமாகக் காட்சியளிக்கிறதே.... நான் குறைந்தபட்சம் ஒரு சில உதிரத் திட்டுக்களையாவது இந்த இடத்தில் எதிர்பார்த்தேன்.. "

மழபாடியார் மண்டியிட்டு அந்த மண்மேடிட்ட பகுதிகளை நிதானமாகப் பார்வையிட்டார். பிராந்தியத்தின் மற்ற பகுதிகளைப்போலத்தான் அதுவும் தெரிந்தது. பலாத்காரமோ கொலையோ நடந்ததற்கான எந்தத் தடயங்களும் இல்லாதது மட்டுமன்றி குதிரைக் குளம்படிகளும் பாதச்சுவடுகளும்கூட அறவே மறைந்துபோயிருந்தன.

"அம்பலவாணரே - இந்த வழி ஆட்கள் அதிகம் புழங்கும் வழியில்லை என்பது நிச்சயம் அல்லவா ?"

"சர்வ நிச்சயம் !"

மழபாடியார் தன்னுடைய தோலினாலான பாதக்குறடுகளைக் கழற்றி ஒரு ஓரமாக வைத்துவிட்டு அந்தப் பிராந்தியத்தை மெதுவாக அலசத் தொடங்கினார். முன்னெச்சரிக்கையாக தன்னுடைய பாதச் சுவடுகள் தனியே தெரியும் விதமாக பாதங்களால் ஒருவித சுழி அமைத்தவாறே நடந்தார்.

ஏறக்குறைய அரை நாழிகைப் பொழுது மௌனமாகக் கழிந்தது.

அம்பலவாணர் ஒருமுறை நிமிர்ந்து சற்று தூரத்தில் கட்டப்பட்டுக்

கிடந்த குதிரைகளை நோக்கினார். பிராந்தியத்தில் பாம்புகள் மற்றும் வேறு சில விஷ ஜந்துக்களின் நடமாட்டம் உண்டென்பதால் குதிரைகள் தனியே கட்டப்பட்டிருப்பதைப் பற்றி அவருக்குக் கவலை ஏற்பட்டது. மழபாடியாரோ கிளம்புகிற வழியாய்த் தெரியவில்லை...! நின்றும் ஊர்ந்தும் அந்தப் பிரதேசத்தையே அங்குலம் அங்குலமாக அலசிக்கொண்டிருந்தார்.

அம்பலவாணரால் அதற்கு மேல் அதிக நேரம் தாக்குப்பிடிக்கமுடியவில்லை. தாம் இருக்கும் இடத்தை விட்டு அகன்று குதிரைகளுக்கருகில் சென்று நின்று கொண்டார்.

மேலும் ஒரு அரை நாழிகை கழிந்தது.

மழபாடியார் அவர் முன்பு தனக்கு அருகில் நின்றிருந்ததையோ தற்போது விலகிச் சென்றுவிட்டதையோ ஒரு பொருட்டாக கவனித்ததுபோல் தோன்றவில்லை. முன்பு நின்றிருந்த இடத்திலிருந்து மிக விலகி ஏறக்குறைய அம்பலவாணர் காட்டிய ஆலமரப் பாதையில் பூமியை உற்று நோக்கியபடியே மேலும் மேலும் நகர்ந்துகொண்டிருந்தார்.

பாறையின் அருகில் சப்பணமிட்டு அமர்ந்துவிட்ட அம்பலவாணரின் பொறுமையோ அவரிடமிருந்து எந்த வினாடியிலும் விடைபெற்றுக்கொண்டுவிடுவேன் என்று பயமுறுத்திக்கொண்டிருந்தது. அதேசமயம் மழபாடியாரின் தீவிர ஆராய்ச்சியில் குறுக்கே புகுவதற்கும் தயக்கமாயிருந்தது. எதுவும் செய்யத்தோன்றாமல் முகத்தில் வழியும் வியர்வை நீரை வழித்தவாறே தலையை உயர்த்தி வானத்தை வெற்றுப்பார்வை பார்த்தார்.

உலகனைத்திற்கும் ஒளிகொடுக்கும் ஆதித்தனாகிய சூரிய தேவன் வானுச்சியிலிருந்து தன்னுடைய வெப்பத்தில் தோய்ந்த கிரணங்களை வஞ்சனையில்லாமல் அனைத்து உயிர்களின்மீதும் பொழிந்துகொண்டிருந்தான'.

***அடிக்குறிப்புக்கள் :***

*(1) அத்தாணி மண்டபம்*

*(2) இராஜராஜீசுவரம் முதல் கல்வெட்டில் இருமடிச்சோழன் திருமாளிகை என்ற பெயரில் ஒரு அரண்மனை தஞ்சை புறம்பாடியில் உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு குறிப்பிடப்படும் மாளிகை உள்ளாலையில் அமைந்திருப்பதாய்க் கொள்க*

**யார் அவன் ?**

குதிரைகளின் அருகே தனது பொறுமையை பெரிதும் இழந்தவராய் மழபாடியாருக்காக காத்துக்கொண்டிருந்த அம்பலவாணரின் மனத்தில் திடீரென்று அந்த ஞாபகம் வந்தது...

அடடா ! இன்று காலை இரண்டாம் ஜாமம் கழிந்தபின் நாடக ஒத்திகைக்கு வருவதாக அரிகண்டனிடம் வாக்குக் கொடுத்திருந்தோமே ! அவன் நம்மைப் பற்றி என்ன நினைப்பான் ? அட, அவன் வாக்குக்காக அத்தனை பெரிய நாடகத்தில் நமக்கும் ஒரு வேடமளிக்க ஒத்துக்கொண்ட அந்த பெரிய ஆச்சாரியார்தான் நம்மைப் பற்றி என்ன நினைப்பார் ? வசனம் அப்படியொன்றும் பெரிதாக இல்லையென்றுதான் அரிகண்டன் சொன்னான் - இருந்தாலும் ஒருமுறைக்கு இரண்டு முறை

ஒத்திகை பார்த்துக்கொள்வது நல்லதில்லையா ?

பாவம் - இன்று முழுக்க நம்மை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாந்து போவான்...

அம்பலவாணருக்கு கண்முன்னே நிகழ்ந்துகொண்டிருந்த அவசர காரியங்களெல்லாம் கணத்தில் மறந்துபோக பெரும் மனத்துயரில் ஆழ்ந்தார். நல்லவேளையாக மழபாடியார் அவரைநோக்கி நெருங்கிவிடவே தேவையற்ற அந்த சிந்தனை ஓட்டம் தடைபட்டது.

"என்ன அம்பலவாணரே ! இங்கு வந்து நின்றுகொண்டிருக்கிறீர் ?"

"நல்லவேளை - இப்பொதாவது உம்முடன் இன்னொரு மனிதனும் வந்தான் என்கிற ஞாபகம் வந்ததே !" என்று சூடாக மறுமொழி கூற நினைத்தார் அம்பலவாணர். ஆனால் மழபாடியாரின் கம்பீரமான தோற்றமும் சிரித்த முகமும் அந்த வாக்கியத்தை தொண்டைக்குழியிலேயே நிறுத்திவிட்டன.

"இந்தப் பகுதிகளில் விரியன் பாம்புகளின் நடமாட்டம் சற்று அதிகம்... அவைகளில் ஒன்று நம் குதிரைகளைக் கடித்து வைத்தால் நம் காரியம் அடியோடு கெட்டுவிடுமல்லவா ? அதனால்தான் குதிரைகளுக்குக் காவலாக இங்கேயே நின்றுகொண்டிருக்கிறேன்..." என்றார் கம்மிய குரலில்.

"அம்பலவாணரே - மிக முக்கிய தடயங்கள் அகப்பட்டிருக்கின்றன. ஒன்று யோசித்தீரா ? மசானக் காட்டுக்கு நேற்றிரவு வருகை புரிந்த அந்த மர்ம மனிதன் எந்த காரணத்திற்காக வந்திருக்கக்கூடும் என்று உமக்கு ஏதாவது தோன்றுகிறதா ?"

"அதுதான் சுடலையே சொன்னானே - சடலம் சரியாக எரிபடவில்லையென்றும் அதற்காக அந்த புதிய மனிதன் காசொன்றினைக் கொடுத்துவிட்டுச் சென்றான் என்றும்..."

"அட, அது சுடலை தன்னுடைய நோக்கில் சொன்ன செய்தி ! அதனைப் பொருட்படுத்தாதிர்கள்... இதனை வேறு விதமாக - நமது மர்ம நண்பரின் கண்ணோட்டத்தில் யோசித்துப் பாருங்கள் ! சடலத்தை சரிவர எரிக்க வேண்டியது சுடலயின் கடமையில்லையா ? எப்படியும் அவன் தன் பணியை நிறைவேற்றி விடுவான் என்பது நம் நண்பருக்குத் தெரியாதா ? அதற்காகவா வேலை மெனக்கெட்டு வந்து சுடலையை சந்தித்து காசு கொடுத்துவிட்டுச் செல்ல வேண்டும் ? ஒரு வேளை அந்த சமயத்தில் ஏதோ ஒரு காரணத்திற்காக ஊர்க்காவலதிகாதியோ அல்லது நாமோ வந்திருந்தால் அவர் அகப்பட்டுக்கொண்டிருக்கமாட்டாரா ? இந்த ஆபத்துக்களையெல்லாம் பொருட்படுத்தாமல் நமது நண்பர் மசானத்திற்கு வந்திருக்கிறார் என்றால் அது வேறு காரணங்ளுக்காக இருக்க வேண்டுமென்று உமக்குத் தோன்றவில்லையா ?"

"ம்... அட, ஆமாம் ! நீங்கள் சொல்கிறபடி யோசிக்கும்போது அப்படித்தான் தோன்றுகிறது - அப்படியானால் அவன் வந்த நோக்கம் என்னவாக இருந்திருக்குமென்று நீங்கள் நினைக்கிறீர்கள் ?"

"அங்குதான் சிக்கலே இருக்கிறது. சரி, ஒரு கேள்வி. அன்றிரவு ஆட்கள் துரத்திவந்தபோது துரத்தப்பட்டவன் கைகளில் ஏதாவது ஆயுதத்தைப்' பார்த்தீரா ? குறிப்பாக சற்றே நீண்ட பிடியுள்ள ஒரு வளைந்த வாளை பார்த்த ஞாபகம் உள்ளதா ?"

அம்பலவாணர் யோசித்துப் பார்த்தார். அப்படியொரு நீண்ட வாளைப் பார்த்த ஞாபகம் அவருக்கில்லை.

"வாள் இருந்திருக்கிறது அம்பலவாணரே - நிச்சயம் இறந்துவிட்ட நமது சேவகனின் கைகளில் வாள் இருந்திருக்கிறது. அவன் துரத்தப்பட்டபோதோ அல்லது புரவியிலிருந்து கீழே விழுந்தபோதோ வாளும் கைதவறி எங்காவது விழுந்திருக்கும். நீங்கள் அவனுடைய சடலத்தைச் சுமந்துசெல்லுமுன் அந்தப் பகுதியில் வேறு ஏதாவது விழுந்து கிடக்கிறதா என்று ஆராய்ந்து பார்த்தீரா ?"

"சரியாய்ப் போயிற்று ! அந்தப் பின்னிரவில் கண்முன் நடந்த கொலைபாதகத்தில் நெஞ்சம் கொதித்துக் கிடந்தேன்.. நானிருந்த நிலைமையில் ஆற அமர அந்தப் பகுதியை ஆராய்வதற்கா தோன்றும் ?"

"ம்... அதுவும் சரிதான். ஆனால் வாள் நிச்சயம் இறந்தவனிடமோ அல்லது அந்தப் பகுதியிலோ விழுந்திருக்க வேண்டும். அதற்காகத்தான் நமது நண்பர் ஆபத்தைப் பொருட்படுத்தாமல் மசானம் வரை வந்துபோயிருக்கிறார் !"

துணுக்குற்றார் அம்பலவாணர் - "என்ன, அப்படியா சொல்கிறீர்கள் ?"

"ஆம் - அது மட்டுமல்ல. நமது நண்பர் முதலிலிருந்தே இறந்தவனுடைய வாள் அதன் உறையிலேயே இருப்பதாகத்தான் எண்ணிக்கொண்டிருந்திருக்கிறார். அன்றைய இரவு நேர நிகழ்ச்சியில் நீங்கள் எதிர்பராமல் திடீரென்று புதரிலிருந்து வெளிப்பட்டவுடன் என்ன செய்வது என்று தெரியாமல் மூவரும் பறந்தோடிவிட்டார்கள்....பின்னர் யோசித்துப் பார்க்கும்போதுதான் வாளை மறந்துவிட்டுவிட்டது

அவருக்கு உறைத்திருக்கும். சடலத்துடன் அந்த வாளையும் சேர்த்து நீங்கள் எடுத்துக்கொண்டு போய்விட்டதாக எண்ணிக்கொண்டிருக்கலாம். சரி, எப்படியும் சடலத்தை எரிக்கும்போது வாள் அதன்மீது வைக்கப்படுமல்லவா - அப்போது அதனை அப்புறப்படுத்த முயற்சிப்போம் என்றுதான் நேற்று மசானத்திற்கே அவர் வந்திருக்கிறார். சடலத்தை நெருக்கிப் பார்த்தபின்தான் நமது சேவகன் வாள் அவன் மீது வைத்து எரிக்கப்படவில்லை என்கிற விஷயமே நமது நண்பருக்குப் புரிந்திருக்கிறது...அதற்குப்பின்..."

"என்னவோ நேரில் அவனுடன் நின்று பார்த்ததுபோல் சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்..."

மழபாடியார் சிரித்தார். நினைப்பதை ஒளிவு மறைவின்றி நேரிடையாகப் பேசிவிடும் அம்பலவாணரின் கிராமத்து மனம் அவரைக் கவர்ந்தது.

"உளவு மற்றும் ஒற்று வேலையில் எனக்கு முழுப்பயிற்சி உண்டு ஐயா - சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள் ! நேற்று மசானத்து பூமியில் வாள் உடலோடு வைத்து எரிக்கப்படவில்லையென்ற பின்புதான் நமது நண்பர் இந்த இடத்திற்கே வந்து தேடியிருக்கிறார். இன்னும் சொல்லப்போனால்.... நேற்றிரவு இருளில் அவர் இங்கு வந்து தேடியிருக்கக்கூடிய வாய்ப்பு குறைவு - இன்று அதிகாலையில்தான்.... சை ! நாம் இன்னும் இரண்டுஜாம நேரம் முன்னதாக வந்திருப்போமானால்..."

"என்ன சொல்கிறீர்கள் மழபாடியாரே ? அவன் இன்று காலையிலா இங்கு வந்து தடயத்தையெல்லாம் அழித்துவிட்டான் என்கிறீர் ?"

"சந்தேகமேயில்லை. நேற்று முன்தினம் - அதாவது நீங்கள்

கொலையைப் பார்த்த அன்று - முன்னிரவில் சற்று மழை பெய்திருந்தது. அதனால் உங்கள் பெரிய பாதங்கள் சற்றே அழுத்தமாக ஆலமரப் பாதையில் பதிந்துள்ளன. ஆனால் நமது நண்பரின் பாதச்சுவடுகள் நேற்றோ இன்று காலையோதான் பதிக்கப்பட்டுருக்கவேண்டும்..."

"அவனுடைய பாதச்சுவடுகளைக் கண்டீர்களா ?"

"கண்டேன் ! புத்திசாலித்தனமாக கொலை நடந்த இந்த வட்டாரத்தில் அவை அழிக்கப்பட்டிருந்தாலும் சற்று தூரத்தே அவை அழிக்கப்படவில்லை ! அது தேவையில்லையென்று நண்பர் கருதியிருக்கலாம் - அல்லது ஆள் அரவம் ஏதாவது கேட்டிருக்கலாம்..."

"சரிதான்..."

"நண்பர் முக்கியமாகத் தேடி வந்தது அந்த வாளைத்தான் ! அது மட்டும் நமக்கு அகப்பட்டிருந்தால் கொலை செய்யப்பட்டது இன்னார்தான் என்று சற்று உறுதியாகவே கூறிவிடலாம். ஒற்றர்களுக்கென்று அளிக்கப்படும் வாள் பிரத்யேகமான தயாரிப்பு. அதனால்தான் அது அகற்றப்படவேண்டியது முக்கியமான காரியமாகிவிட்டது. வாளைத்தேடி வந்தவர் இதையும் விட்டு வைப்பானேன் என்று உதிரத் திட்டுகளையும் அங்கே தெரிந்த காலடிச் சுவடுகளையும் கன காரியமாய் அழித்துவிட்டுச் சென்றிருக்கிறார்...."

"அடடா....இப்போது வாள் அவரிடம் அகப்பட்டுக்கொண்டு விட்டதா ?"

"உறுதியாகச் சொல்வதற்கில்லை - ஆனால் அப்படித்தான்

தோன்றுகிறது. ஆம் ! நான் நினைத்தது சரிதான் - இதோ ! இந்தப் புதரின் முனையில் இலைகள் சீராக வெட்டப்பட்டிருப்பதைப் பாருங்கள் ! வாள் புதரில் அகப்பட்டுக்கொண்டு அதனை முனைந்து எடுக்கையில் செடி இலைகள் இத்தனை சீரான வெட்டுக்கு உள்ளாகிவிட்டன.. இல்லையேல் இந்தக் காட்டுப் பகுதியில் ஒரே ஒரு புதர்ச் செடியின் இலைகள் மட்டும் வெட்டுப்படுவானேன் ?"

அம்பலவாணருக்கு எல்லாமே பிரமிப்பாக இருந்தது. உண்மைதான். ..அந்தச் செடியின் சிறு இலைகள் வெட்டப்பட்டுள்ள முறையைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது. இதையெல்லாம் தனியாக நாம் வந்திருந்தால் கவனித்திருப்போமா என்பது சந்தேகம்தான்... சந்தேகமென்ன - நிச்சயம் கவனித்திருக்க மாட்டோம் !

"அப்போது ஒட்டுமொத்த தடயங்களையும் வாளையும் இழந்து நிற்கிறோமா ?"

"அப்படித்தான் இருக்கிறது நிலைமை. ஆனால் சிறிதளவு நமது சிந்தனா சக்தியை உபயோகப்படுத்தினால் நமது நண்பரைப் பிடிப்பது இன்னமும்கூட சாத்தியப் படலாம்.....ஏனெனில் நம்மைப்போலவே அவரும் இந்தப் பகுதிகளில்தான் இன்று காலைவரை சுற்றிக் கொண்டிருந்திருக்கிறார்...ம்....கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கையில், அவர் இத்தனை துணிவோடு இந்த வட்டாரத்தில் சுற்றுகிறார் என்றால் இந்தப் பகுதியைச் சேர்ந்த நபராக இருக்கக்கூடிய சாத்தியக்கூறுகள்தான் அதிகம்....அம’பலவாணரே, இந்த ஆலமரப் பாதை நேராக எங்கே செல்கிறதென்று தெரியுமா ?"

"பாதையில் ஒரு வழி ஆலமரத்தைத் தாண்டி சற்று கிழக்கே பிரிந்து எறும்பியூரையொட்டி அமைந்திருக்கும் சதுர்வேதி மங்கலங்களுக்குச்(1)

சென்றுவிடும். மற்றொரு வழி சற்றே நீண்டும் வளைந்தும் இரண்டு அல்லது மூன்று காத தூரம் சென்று இராஜபாட்டையை அடைந்துவிடும்..."

*(1) அந்தணர்களுக்கு மானியமாய் வழங்கப்பட்ட நிலங்கள்*

"ஆஹா - அந்த இராஜபாட்டை திருச்சீரபுரத்திலிருந்து தஞ்சைக்குச் செல்லும் பாதையல்லவா ?"

"ஆம்..."

"இராஜபாட்டையை ஆலமரப்பாதை சந்திக்கும் இடத்தில் ஏதாவது மண்டபங்களோ அஞ்சினான் புகலிடங்களோ வணிகர் விடுதிகளோ உண்டா ?"

"ம்ஹூம் - அதெல்லாம் ஒன்றுமில்லையே ! எறும்பியூரை விட்டால் நெடுங்களத்தில்தான் விடுதி ! இடையில்...."

"விடுதி என்றில்லை - வேறு ஏதாவது உண்டா ? நன்கு யோசனை செய்து பாருங்கள் !"

"ஒரேயொரு வாணியஞ்சாவடி(2)தான் உண்டு - அதுவும்...."

*(2) சுங்கத் தீர்வை முதலியவற்றை அரசுக்கு வணிகர்கள் செலுத்தும் மையம். வணிகச் சரக்குகளை சோதனை செய்யும் மையங்களாகவும் இவை திகழ்ந்திருக்கக்கூடும்*

மழபாடியார் முகம் திடீரென பன்மடங்கு பிரகாசமாயிற்று - "வாணியஞ்

சாவடி ! வாணியஞ் சாவடி ! அம்பலவாணரே - இப்போது புரிகிறது ! அடடா - எல்லாமே தெள்ளத் தெளிவாக இப்போது புரிகிறது ! முன்பே எனக்கு ஏன் இது தோன்றவில்லை ? சை - எத்தனை முட்டாளாக இருந்திருக்கிறேன் நான் ! துழாய்க்குடிக்கு இத்தனை தூரம் நாம் வந்தது வீண்போகவில்லை அம்பலவாணரே..."

"என்ன சொல்கிறீர் ? ஒன்றும் புரியவில்லையே..."

"விளக்கங்களெல்லாம் பிறகு ! நாம் முதலில் உடனடியாக காரியத்தில் இறங்கியாக வேண்டும் - அதிக அவகாசமில்லை ! புரவியில் ஏறுங்கள் உடனே - மற்றதை வழியில் சொல்கிறேன் !"

ஒன்றும் புரியாமல் மழபாடியாரை சற்று கோபத்துடன் முறைத்தவாரே புரவியில் ஆரோகணித்தார் அம்பலவாணர். அவரது கோபத்தை சிறிதும் இலட்சியம் செய்யாத மழபாடியாரின் புரவி நாலுகால் பாய்ச்சலில் ஆலமரப் பாதையை நோக்கிப் பாய்ந்தோடியது.

**************************************************************************************
**********

சேனாபதி இராஜராஜ மாராயரின் உய்யக்கொண்டான் திருமாளிகையின் சமையலறை மதிய உணவு நேரமாதலால் அல்லோல கல்லோலப் பட்டுக்கொண்டிருந்தது. மாராயரின் மாளிகைப் பரிவாரமே நூறைத் தாண்டிவிடும். அதனைத் தவிர நாட்கூலிகள், விருந்தினர்கள், வழிப்போக்கர்கள் என்று அத்தனை பேரையும் சேர்த்துக்கொண்டால் ஒரு வேளைக்கு குறைந்தபட்சம் இருநூற்றம்பது பேர்களுக்காவது

உணவு தயாராகியாக வேண்டும்.

நீர்த்திவலைகள் பெரும் அண்டாக்களில் இடம்பெயர்ந்துகொண்டிருந்தன. சிலர் சுடுசோற்றை பெரிய பானைகளிலிட்டு தூக்க மாட்டாமல் தூக்கிச் சென்றுகொண்டிருந்தனர். பிரதான மடைப்பள்ளி உத்தியோகஸ்தர் சமையலறையின் வாசலில் அமர்ந்துகொண்டு காய்கறி நறுக்கிக்கொண்டிருப்பவர்களை விரட்டிக்கொண்டிருந்தார்.

இந்த சந்தடிகளை அதிகம் கவனிக்காதவன்போல் ஒரு ஓரமாக கறியமுதை வேகவைத்து கிண்டிக்கொண்டிருந்தான் அடைப்பக'காரர்களுள் ஒருவனாகப் பணிபுரிந்துகொண்டிருந்த தித்தன். காலையில் இரகசியமாக மழபாடியாரிடமிருந்து அவனுக்கு வந்து சேர்ந்திருந்த முறி வாசகங்கள் திரும்பத் திரும்ப மனதில் வட்டமடித்துக்கொண்டிருந்தன.

"நேற்று சொன்னவற்றை செய்யவும். நந்தவனத் திருத்துவார் யாராவது நம்மவரை சந்திக்க நேர்ந்தால் கவனம். நம் பூவின் கண்கள் பூக்களில் பதிந்திருக்கும் - ம"

இரத்தினச் சுருக்கமாக எழுதப்பட்டிருந்த அந்த முறி தனக்கு மட்டுமே அர்த்தமாகும் வகையில் எழுதப்பட்டிருப்பதை தித்தன் இரசித்தான். மழபாடியாரின் புத்தி கூர்மைக்கு மற்றொரு சான்று. இதில் நம்மவர் என்று அவர் குறிப்பிடப்படுவது நாம் கவனிக்க வேண்டிய குட முறிகளை சுத்தம் செய்யும் வேளக்காரக் கிழவரைத்தான் - அதில் சந்தேகமில்லை. சம்மந்தமில்லாமல் நந்தவனத் திருத்துவார் ஒருவர் பற்றி எழுதியிருக்கிறார் - அதுதான் ஏனென்று இன்னமும் விளங்கவில்லை.

பணி நிமித்தமாக திருத்துவாரும் அரண்மனை வேளக்காரர்களும் ஒருவரையொருவர் சந்திக்க வாய்ப்பேயில்லை - தனிப்பட்ட முறையில் சந்தித்தால்தான் உண்டு. இத்தகையதொரு சந்திப்பை மழபாடியார் எதிர்பார்க்கிறார் போலும்.

"கவனம்!" - ஒற்றைச் சொல்லில் எத்தனை செய்திகள்... கவனமாக மிகுந்த எச்சரிக்கையோடு கண்காணிக்கப்பட வேண்டிய சந்திப்பு அது. அதே சமயம் அவர்கள் பேசிக்கொள்வதை முடிந்தவரை ஒட்டுக்கேட்டே ஆகவேண்டும் என்கிற மறைமுக ஆணையும் இதில் அடக்கம்.

நம் பூவின் கண்கள் - பூபலனைக் குறிப்பிடுகிறார் போலிருக்கிறது.

பூக்களில் பதிந்திருக்கும் - பூக்களில் ? ம்....பூக்கள் இருக்குமிடம் நந்தவனம். சரிதான் ! அங்கே திருத்துவாரை கண்காணிக்க பூபலனுக்கு ஆணை போலிருக்கிறது. அவனுடைய கண்கள் ஏற்கனவே திருத்துவாரிடம் பதிந்துள்ளது என்பதைத் தெரிந்துகொள். ஆக நீ முக்கியமாக கவனிக்கவேண்டியது வேளக்காரக் கிழவரைத்தான் என்பதே இதில் அடங்கியிருக்கும் செய்தி.

கிழவர் தன் பணிகளை காலையிலேயே தொடங்கிவிட்டார். இதுவரை சந்தேகத்திற்கு இடமாக ஒன்றும் நடைபெறவில்லை - என்றாலும் மழபாடியார் அத்தனை தகவல்களையும், அவை முக்கியமாகப் படுகிறதோ/இல்லையோ - எழுதியனுப்பச் சொல்லியிருக்கிறாரே - அதனால் அவர் எந்தெந்த அறைக்கல்லாம் சென்று சுத்தம் செய்கிறார், எத்தனை முறை ஒரு அறையை சுத்தம் செய்கிறார் என்றெல்லாம் குறிப்பெடுக்க வேண்டியிருக்கிறது...

மடைப்பள்ளி சற்று உள்தள்ளி அமைந்திருப்பது நமது பணிக்கு சற்றுக் குந்தகம்தான். என்றாலும் வேறு வழியில்லை. இருப்பதைக்கொண்டு சமாளிப்போம்... அடடா, இடையில் இந்த மடைப்பள்ளி உத்யோகஸ்தன் வேறு தொந்தரவு கொடுக்க வந்துவிட்டானே ?

"அடேய் ! உங்களுக்கெல்லாம் என்னதான் நினைப்பு ? கறியமுது வேகவைப்பதற்கு இத்தனை நேரமா ? கெட்டது குடி !"

"அது... காய் சற்று முற்றல் போலிருக்கிறது ஐயா - வெந்து முடிப்பதற்கு நேரமாகி..."

"யாரிடம் காது குத்துகிறாய் அப்பனே ? அத்தனையும் பிஞ்சுப் புடலைப் பிஞ்சுகள் ! அரிந்து போடும்போது நானே பார்த்தேன் - கவனமாக வேலைசெய் ! இல்லையேல் நாட்கூலி கொடுத்து இன்றோடு அனுப்பிவிடுவேன் - தெரிந்ததா ?"

"உள்ளது ஐயா !"

கிழவர் சற்று தள்ளாடியபடியே மூன்றாவதுமுறையாக கையில் குடத்துடன் மடைப்பள்ளியை கடப்பதை கவனமாக மனதில் குறித்துக்கொண்டான் தித்தன்.

## வலை விரிந்தது

உடையாரின் பிரதான அரண்மனையில் மும்முடிச்சோழன் திருமாளிகையையொட்டி அமைந்திருந்த விருந்தினர் அறையில் மதிய உணவை திருமெய்க்காப்புப் படைத் தலைவர் வேளாண் ஆட்கொண்ட

வில்லியாருடனும் சேனாபதி கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மராயருடனும் அருந்திக்கொண்டிருந்த தளபதி இராஜராஜ மாராயருக்கு திடீரென்று முதல்நாளிரவு மழபாடியார் அனுப்பியிருந்த முறி ஞாபகம் வந்தது.

அடடா ! இன்றைய கடுமையான அலுவல்களில் அந்த முறியின் செய்தியை சற்று மறந்துதான் போய்விட்டோம் ! முறி கையில் இருந்தாலாவது ஒருவேளை விஷயம் ஞாபகம் இருந்திருக்கும்... ரொம்ப காரியமாக படித்து முடித்தவுடன் முறியைக் கட்டாயம் திருப்பி அனுப்பிவிடும்படியல்லவா எழுதியிருந்தான் பரமன் !

அதாவது பரவாயில்லை - சகித்துக்கொள்ளலாம். முறியில் விசாரணையின் போக்கைப் பற்றி ஏதாவது உருப்படியான தகவல்கள் உண்டா என்றால் அதுவுமில்லை....இரத்தினச் சுருக்கமாக இரண்டே வாக்கியங்கள்.

*"அன்புள்ள தளபதியாருக்கு,*
*கொல்லி மழவரிடமிருந்து ஒரு முறி ஓலை வந்ததுபோல் பாவித்து நீங்களே ஒரு ஓலையெழுதி வழக்கம்போல குடத்திலிட்டுவிடவேண்டியது. ஓலையிலிருக்கவேண்டிய செய்தி இதுதான் :*
***ஐங்கரனிடமிருந்து செய்தி வந்திருக்கும். சதி பூரணமாக உறுதியாகவில்லை. கொடுத்தனுப்பிய தகவல்கள் வதந்தியாகக்கூட இருக்கலாம் - கொல்லி மழவன் ஒற்றியூரன் பிருதிகண்டவர்மன்***
*- பரமன்"*

அவ்வளவுதான் ! தலையுமில்லாமல் வாலுமில்லாமல் மொட்டையாக ஒரு செய்தி.

ஓலையில் கவலை தொனிக்கும் வாக்கியங்கள் இல்லாமல் ஒரு உறுதி தன்பெடுவதால் ஐங்கரன் விஷயத்தில் ஓரளவிற்கு முன்னேற்றம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்று நாமாக புரிந்துகொள்ள வேண்டியதுதான். இவன் இன்னமும் தஞ்சைக்கு வெளியில்தான் சுற்றிக்கொண்டிருக்கிறானா அல்லது கோட்டைக்குள் வந்துவிட்டானா என்பதே கேள்விக்குறியாகத்தான் இருக்கிறது. நேற்று காலையில் தஞ்சையை விட்டுக் கிளம்பியவன் மாலைக்குள் நமக்கொரு ஓலை கொடுத்தனுப்புவது எவ்வகையில் சாத்தியம் ? ஒருவேளை தஞ்சை புறம்படியில் ஏதாவது தடயங்கள் அகப்பட்டு அங்கே சுற்றிக்கொண்டிருக்கிறானா என்ன ?

எது எப்படியோ - ஓலையில் உள்ளதை நாம் செயல்படுத்தியாக வேண’டும். அதில் உள்ள நடைமுறைச் சிக்கல்களை புரிந்துகொள்ளாமலே முறி எழுதியிருக்கிறான் பரமன் ! மழவரின் ஓலைகளில் அவருடைய கொல்லி நாட்டு சிற்றரசின் இராஜமுத்திரை பதிக்கப்பட்டிருக்கும். மேலும் அவருடைய கையெழுத்தும் பிரத்யேகமானது. இதையெல்லாம் சரிவரக் கையாண்டால்தான் அவரிடம் வந்ததுபோன்ற ஒரு ஓலையைத் தயாரிக்கமுடியும். இத்தனை சிரமப்பட்டு தயாரித்த ஓலையை என்ன செய்யவேண்டும் ? பைத்தியக்காரனைப்போல் நமது முறிக்குடத்தில் நாமே வீசி எறிந்து விடவேண்டும் ! என்னதான் நினைத்துக்கொண்டிருக்கிறாய் என்று கேட்கலாமென்றால் ஆளே அகப்படமாட்டேன் என்கிறான்.. எல்லாம் நமது தலையெழுத்து !

மழவரின் இராஜமுத்திரைக்கு எங்கு செல்வது ?

உள்படுகருமத்தாரிடம்தான் விசாரிக்க வேண்டும் - அரண்மனையில் நிச்சயம் அவருடைய முத்திரை மோதிரம் அணிந்தவன் யாராவது இருப்பான் - அதனை வைத்து மழவ முத்திரை தயாரித்துவிடலாம். கையெழுத்துதான் சற்று சிரமமானது. அவரிடமிருந்து வந்துள்ள பழைய ஓலைகளை வைத்துக்கொண்டு.. எழுத்து எழுத்தாக சரிபார்த்து... கெட்டது போ !

அரை குறையாக மதிய உணவை முடித்துக்கொண்டு இன்னும் ஒன்றரை ஜாம நேரத்தில் பெரிய திருக்கற்றளி வளாகத்தில் சந்திப்பதாகக்கூறி வில்லியாரிடமிருந்தும் பிரம்மராயரிடமிருந்தும் விடைபெற்றுக்கொண்டு ஒரு சோர்வுடன் உய்யக்கொண்டான் திருமாளிகைக்குத் திரும்பினார் மாராயர்.

மழபாடியார் தனது புரவியை மிதமான வேகத்தில் செலுத'திக்கொண்டுபோக அம்பலவாணரின் புரவியும் அதற்கு இணையாக ஓடியது.

"இப்போது சொல்லுங்கள் மழபாடியாரே - ஏன் இந்த திடீர் பரபரப்பு ? வாணியஞ்சாவடியில் அப்படி என்னதான் இருக்கிறது ? நாம் இப்போது அங்கா சென்றுகொண்டிருக்கிறோம் ?"

"அம்பலவாணரே ! நாம் தேடிக்கொண்டிருக்கும் நண'பர் ஒன்று அந்த வாணியஞ்சாவடியில் பணிபுரிபவராக இருக்க வேண்டும் - அல்லது அந்தச் சாவடியோடு ஒட்டிய தினப் பணி எதிலோ ஈடுபடுபவராயிருக்க வேண்டும்...!"

"என்ன...! எப்படி அத்தனை உறுதியாகச் சொல்கிறீர்கள் ?"

"பல காரணங்கள் உண்டு அம்பலவாணரே ! முதன் முதலில் நீங்கள் இந்தக் கொலையைப் பற்றி விவரித்தபோதே சிற்சில சந்தேகங்கள் எனக்கு உதித்தன... கொலை ஏன் இந்த இடத்தில் நிகழ வேண்டும் ? துரத்தப்பட்டவன் எங்கிருந்து துரத்தப்பட்டான் ? முக்கியமான செய்தியைச் சுமந்துகொண்டு தஞ்சைக்குச் சென்றவனுக்கு இந்த இடத்தில் என்ன வேலை ? நீங்கள் உங்களை கொன்றது யார் என்று வினவியபோது அவன் கரங்கள் தென்மேற்கு திசையைச் சுட்டியதாகச் சொன்னீர்களல்லவா ? அவன் அவ்வாறு குறிப்பிட்டு காட்டியது எதற்காக ? நான்கூட முதலில் இந்தப் பகுதியிலிருந்து தென்மேற்கே அமைந்த ஏதோ ஒரு ஊரைத்தான் அவ்வாறு குறிப்பிட்டிருக்கிறானோ என்று சந்தகேித்தேன்... இல்லை ! அவன் இங்கிருந்து ஆலமரப்பாதையில் சரியாக தென்மேற்கில் அமைந்துள்ள இராஜபாட்டையை - இராஜபாட்டையில் ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்தை - சுட்டிக்காட்டியிருக்கிறான். அங்கிருந்துதான் அவன் துரத்தப்பட்டிருக்க வேண்டும். உங்கள் கூற்றுப்படி இராஜபாட்டையில் அந்தப் பகுதியில் வாணியஞ்சாவடி ஒன்றைத்தவிர வேறு எதுவும் அருகில் கிடையாது.




துழாய்க்குடி வாணியஞ்சாவடியும் சுற்றுப்புறங்களும்

சரி, வாணியஞ்சாவடியிலிருந்து துரத்தப்பட்டவன் ஏன் ஆலமரப் பாதையில் தப்பிக்க நினைக்க வேண்டும் ? ஏனெனில் இராஜபாட்டையின் மறு பக்கத்தில் சதுர்வேதி மங்கலத்து வயல்வெளிகள் ! வயல்வெளிகளில் குதிரையை செலுத்திக்கொண்டு போவது கடினம் என்பதோடு முதுகும் எதிரிகளின் வில்லினால் குறிபார்க்கப்படும் அபாயம் அதிகம் - அதனால்தான்......"

"சொல்லுங்கள்...ஏன் நிறுத்திவிட்டீர்கள் ?"

"...இந்த இடத்தின் அமைப்பையும் கொலை நிகழ்ந்த துல்லியத்தையும் மறுபடி சீர்துக்கி ஆராயும்போது இவ்வாறு இங்கு கொலைபாதகம் நிகழ்வது முதல் முறையல்ல என்றுகூடத் தோன்றுகிறது அம்பலவாணரே - தெய்வாதீனமாக அன்று நீங்கள் தலையிட்டதால் நம்மவன் உடல் நாய் நரிகளுக்கு உணவாகாமல் தப்பித்தது..."

"என்ன - இங்கு முன்பே பல கொலைகள் நிகழ்ந்துள்ளனவா ?"

"அதற்கான சாத்தியக்கூறுகள் மிக அதிகம். அம்பலவாணரே ! யோசித்துப் பாருங்கள் - நம் நண்பரைப் போன்ற சதிகாரர்களுக்கு என்றுமே வாணியஞ்சாவடி மிக ஏதுவான இடம். அங்கு போக்குவரத்து மிகுதியென்பதால் தனிப்பட்ட நபர்களின் நடவடிக்கைகளை கூர்ந்து கவனிக்க ஆட்கள் கிடையாது. மேலும் தஞ்சைக்கு திருச்சீரபுரத்திலிருந்து செல்லும் முக்கியப் பெருவழியாக இருப்பதால் தஞ்சைக்குச் செல்லும் வணிகப் போக்குவரத்தையும் கண்காணித்து "மேலிடத்திற்கு" செய்தி அனுப்பலாம் ! ஒருவரும் சந்தேகிக்க மாட்டார்கள்...."

"எனக்கு மிகவும் பழகிய ஒரு பகுதியில் இப்படிப்பட்ட துரோகச் சம்பவங்கள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன என்று நினைக்கும்போது மிக வருத்தமாக இருக்கிறது மழபாடியாரே..."

"உங்கள் வருத்தம் எனக்குப் புரிகிறது. கவலையற்று ஒரு பறவைபோலத் துள்ளித் திரிந்த உங்களை அரசியல் என்னும் சதிச்சுழலில் ஆழ்த்திவிட்டேனோ என்றுகூட அஞ்சுகிறேன்..."

அம்பலவாணர் சற்றே சிரித்தார் - "எல்லாம் விதி மழபாடியாரே - அதற்கு நீங்களோ நானோ மட்டும் பொறுப்’பல்ல. மேற்கொண்டு இப்போது என்ன செய்வதாக உத்தேசம் ?"

"சொல்கிறேன், கவனமாகக் கேளுங்கள்...."

திருச்சீரபுரம் மற்றும் உறந்தையிலிருந்து தஞ்சைக்குச் செல்லும் முக’கியப் பெருவழிகளில் ஒன்றான பராந்தக சோழப் பெருவழியில் ஒரு மிகப் பெரிய புளியமரத்தின் கீழ் அமைக்கப்பட்டிருந்த அந்த வாணியஞ்சாவடியானது நாளின் மதிய நேரத்திலும் மிகுந்த சுறுசுறுப்போடு இயங்கிக் கொண்டிருந்தது.

வணிகர்களின் சாத்து வண்டிகள் ஒரு ஓரமாக ஓரங்கட்டப்பட்டு நிற்க, சாவடியின் ஊழியர்கள் ஒவ்வொரு வண்டியாக சரக்குகளை சரிபார்த்து இதுவரை தீர்வை விதிக்கப்படாத சரக்குகளுக்குத் தீர்வை விதித்தும் முன்னரே தீர்வை கட்டப்பட்ட சரக்குகளை சரிபார்த்தும் அனுப்பிக்கொண்டிருந்தனர். வண்டிகளை ஒவ்வொன்றாக சோதித்து அனுப்ப தாமதமாகிக்கொண்டிரூந்ததால் வரிசையில் பின்நின்ற வண்டிக்காரர்கள் சிலர் தத்தம் மாடுகளை அவிழ்த்து வயல்வெளிகளை ஒட்டி ஓடிய விக்கிரம சோழன் வாய்க்காலில் ஓடிய தண்ணீரில் நீர்காட்டிக் கொண்டிருந்தர்.

சாவடியையொட்டி சில சிறிய கடை கண்ணிகளும் விரிந்திருந்தன. ஒரு கடையில் மாட்டுத் தீவனமான பூண்ணாக்கும் வைக்கோலும் விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன. மற்றதில் சிற்றுண்டிகளும்

பலகாரங்களும் விற்பனைக்குத் தயாராக இருந்தன. மதிய நேரமாதலால் ஒரு சிலர் மதிய உணவை அங்கே முடித்துக்கொள்ளத் தலைப்பட்டனர். வேறு சிலரோ தாங்கள் கட்டிக்கொண்டு வந்திருந்த கட்டு சாத மூட்டயைை வைத்துக்கொண்டே கச்சேரியை நிகழ்த்திவிட்டு தஞ்சைக்குச் சென்று விடுதிகளில் மிச்சத்தை கவனித்துக்கொள்ளலாம் என்கிற எண்ணத்திலிருந்தனர்.

மாட்டுத் தீவனக் கடையில் விற்பனை அமோகமாக நடந்துகொண்டிருந்தது. அந்தக் கடையின் ஊழியர்கள் ஒரு பக்கமாக நின்று சாத்து வண்டிகளின்' மாடுகளுக்கு புண்ணாக்கு முதலானவற்றை நீரில் கரைத்து உண்ணக்கொடுத்துக்கொண்டிருந்தார்கள். வைக்கோல் மற்றும் புண்ணாக்கிலிருந்து வரும் வாசம், வண்டி மாடுகளின் சாண வாசம், வயல்களிலிருந்து எழும் நெல்வாசம் என்று அந்தப் பகுதியே ஒருவித அவஸ்தையான வாசத்தில் மூழ்கிக் குளித்துக்கொண்டிருந்ததென்றால் மிகையில்லை.

ஒரு வயதான கிழவி வண்டி வண்டியாகச் சென்று மாங்காய்கள் விற்றுக்கொண்டிருந்தாள். மாங்காய்கள் அத்தனை தரமாக இல்லையென்றாலும் கிழவிக்காக பரிதாபப்பட்டு சிலர் இரண்டு மஞ்சாடிகளுக்கு நான்கு மாங்காய்கள் என்று வாங்கிக்கொண்டிருந்தனர்.

பாதையின் ஒரு பக்கம் முழுக்க வயல்வெளிகளும் அதனை ஒட்டி வாய்க்காலும் அமைந்திருந்ததால் காற்று சுகமாக வீசிக்கொண்டிருந்தது.

மேற்கூறிய காட்சிகளையெல்லாம் சற்று தூரத்தில் ஒரு மரத்தின் மறைவிலிருந்து கவனித்துக்கொண்டிருந்த மழபாடியாரும் அம்பலவாணரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

"அம்பலவாணரே ! நான் சொன்னதெல்லாம் ஞாபகத்தில் இருக்கின்றதல்லவா ? மிகுந்த எச்சரிக்கையோடு செய்ய வேண்டிய காரியம் இது - சிறிது பிசகினாலும் நமது முழு நோக்கமும் பாழாகிவிடும். துரதிருஷ்டவசமாக இந்த ஆபத்தான பணிக்கு உங்களை தனியே அனுப்பும்படி ஆகிவிட்டது...நானும் உங்களுடன் சாவடிக்கு வருவது நல்லதல்ல..."

"அட, அதனாலென்ன - நான் நிச்சயம் சமாளித்துவிடுவேன்..."

"நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் - நீங்கள் அவர்களை சரியாக கவனிக்கவில்லையே தவிர அவர்கள் நிலவொளியில் உங்களை நன்றாகவே பார்த்திருக்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது. அதனால்தான் மாராயர் மாளிகையில் நந்தவனத்திலிருந்தவன் உங்களை சந்தேகித்து நெருங்கி வந்திருக்கிறான்... அன்று இரவு கிட்டத்தட்ட இதேபோல்தான் உடையணிந்திருந்தீர்களா ?"

"தலைப்பாகை கட்டும் வழக்கம் எனக்கில்லை - அதனால் தலைப்பாகை கிடையாது. மெய்ப்பையும் அன்று அணிந்திருக்கவில்லை. ஒரேயொரு துணித் துண்டை கழுத்தை சுற்றிப் போர்த்தியிருந்தேன் !"

"பின் மெய்ப்பையைக் கழற்றிவிடுங்கள். தலைப்பாகையை முழுவதுமாக அவிழ்த்துவிட்டு ஒரு துண்டாக்கி தோளில் சுற்றிக்கொள்ளுங்கள். நமது நண்பர் உங்களை உடனடியாக அடையாளம் கண்டாக வேண்டும்' - அது முக்கியம் ! அடையாளம் கண்டுகொண்டவுடன் ஒரு கணம் - ஒரே ஒரு கணம் - அவர் முகத்தில் ஒரு வியப்பு / ஒரு அதிர்ச்சி தோன்றும். அதை வைத்துத்தான் அவரைப் பிடித்தாக வேண்டும். அதனால் பார்க்கும் முகங்களை நன்றாக உள்வாங்கிக்கொள்ளுங்கள் !"

"சரி!"

"இங்கிருந்து நேராக பலகாரக் கடைக்குச் செல்கிறீர்கள். அங்கே ஓரிரு பலகாரங்களை எனக்கும் சேர்த்து வாங்கிக்கொண்டு மூட்டையாகக் கட்டிக்கொண்டு நேராக சாவடிக்குள் நுழைகிறீர்கள். சாவடியின் காவலன் வழிமறிப்பான். அவனிடம் நாடுகாவலதிகாரியின் படைப்பிரிவிலிருந்து வருகிறேன் - ஒரு கொலை சம்மந்தமாக சாவடி அதிகாரியிடம் பேசவேண்டும் - என்று சொல்லி என்னுடைய முத்திரை மோதிரத்தைக்காட்டிவிட்டு உள்ளே நுழைகிறீர்கள். உள்ளே இருக்கும் சாவடி அதிகாரிகளிடம் உரத்த குரலில் துழாய்க்குடியருகே ஒரு கொலை இரண்டு நாட்களுக்குமுன் நடந்துவிட்டதென்றும் அதனை விசாரிக்க இன்று நண்பகல் நாடுகாவலதிகாரி வருவதாவும் அதனால் சாவடியின் ஊழியர்கள் அனைவரும் நண்பகலில் தவறாமல் இருக்கவேண்டுமென்றும் சொல்கிறீர்கள். அதோடு நின்றுவிடாமல் சோழநாட்டின் பாதுகாப்பு கெட்டுவிட்டதென்றும் நாட்டின் பிரஜைகளுக்குக் பாதுகாப்பில்லையென்றும் சொல்லி அரசாங்கத்தை ஏசுகிறீர்கள் - சரியா ? அதற்கு அவர்கள் என்ன பதில் சொன்னாலும் அதற்காகக் கோபத்துக்கொண்டு மேலும் சப்தம் செய்கிறீர்கள். ஒருவழியாக அவர்கள் உங்களை சமாதானம் செய்து வெளியேற்றி விடுவார்கள். பின் வெளியில் வந்து சாவடியின் வாசலில் நின்றுகொண்டிருக்கும் வணிகர்களிடமும் மற்றவர்களிடமும் உரத்த குரலில் சோழ நாட்டின் பாதுகாப்பு பற்றி மீண்டும் விமர்சனம் செய்து ஏசிப் பேசுகிறீர்கள்... இந்தச் சிறு கலவரங்களின் முக்கிய நோக்கம் சாவடியின் உள்ளிருப்பவர்கள் - வெளியிலிருப்பவர்கள் அனைவரும் உங்களை கவனிக்க வேண்டும் - அவர்களை நீங்கள் கவனிக்க வேண்டும் என்பதுதான். ஒரு வழியாக ஓய்ந்துபோய் நேராக வந்து பலகாரக் மீண்டும் கடையிலேயே அமர்ந்து சுற்றிலும் இருப்பவர்களிடம் பேச்சுக்கொடுத்துக்கொண்டிருங்கள் - நான் வந்துவிடுவேன். இடையில்

எக்காரணம் கொண்டும் நான் எங்கிருக்கிறேன் என்று தேட முயற்சிக்க வேண்டாம் - அது உங்கள் நடிப்பிற்கு குந்தகமாய் முடியும் !"

ஒரு வித தயக்கமான மௌனம். பின் "...சரி!என்னால் முடிந்ததைச் செய்கிறேன் !"

சற்று நெருங்கிவந்து அம்பலவாணரை அணைத்துக்கொண்டார் மழபாடியார்.

"இம்முறை அவனை தவறவிடுவதற்கில்லை அம்பலவாணரே ! நான் சொன்னபடி நடந்துகொள்ளுங்கள் - வெற்றி நம் பக்கம் !"

"வருகிறேன் ஐயா !"

"இருங்கள் - முத்திரை மோதிரத்தை கழற்றித் தருகிறேன் !"

சில வினாடிகளில் அங்கிருந்து சாவடியை நோக்கி நகர்ந்த அம்பலவாணருக்கு உள்ளுக்குள் ஒரு சங்கடம் ஓடிக்கொண்டேயிருந்தது. மழபாடியார் சொல்கிறார் என்பதால் அவரால் எதற்கும் மறுப்புச் சொல்லமுடியவில்லை.... ஏதேது, தெருவில் போன ஓணானை வீணில் விலைகொடுத்து மடியில் கட்டிக்கொண்டுவிட்டோம் போலிருக்கிறதே ! ஏதோ நம் பயிற்சிப் பள்ளி உண்டு நாம் உண்டு செங்கமலம் உண்டு என்று நிம்மதியாய்ப் போய்க்கொண்டிருந்த பிழைப்பு அந்த பாழாய்ப் போகிற கூத்துப் பார்க்கும் ஆசையால் எங்கோ சென்று எங்கெல்லாமோ நம்மை மாட்டவைத்துவிடும் போலிருக்கிறதே....

இதைப்பற்றியெல்லாம் இனி சிந்தித்துப் பயனில்லை - காலம்

கடந்துவிட்டது. அறிந்தோ அறியாமலோ ஆற்றை பாதிவழி கடந்தாயிற்று - இனி வரப்போவது சுற்றிச் சுழலும் சுழலானாலும் ஆளை அமிழ்த்திவிடும்' சகதியானாலும் தைரியமாக மனதில் கொற்றவையை வேண்டிக்கொண்டு காலை வைக்க வேண்டியதுதான் !

ஒரு வித தயக்கத்துடன் மெதுவாக முன்னேறிச் செல்லும் அம்பலவாணரை ஆர்வத்துடன் கவனித்துக்கொண்டிருந்தார் மழபாடியார்.

## பரியில் ஒரு நரி !

மாராயர் மழபாடியார் சொல்லியபடி ஓலை தயாரித்துக்கொண்டிருந்த நேரத்தில் - அம்பலவாணர் வாணியஞ்சாவடியை நோக்கி நகர்ந்த அதே உச்சி வேளையில் - வைத்தியர் மகனான அரிகண்ட தேவன் தஞ்சை பெரிய திருக்கற்றளி வடக்குத் தளிச்சேரியின் வடசிறகையொட்டி(1) உற்சாகமாக நடைபழகிக்கொண்டிருப்பதைக் காண்கிறோம். அம்பலவாணரைக் காலையிலிருந்து காணாவிட்டாலும் அதற்கான கவலையையோ ஏமாற்றத்தையோ அவன் முகத்தில் காணக்கூடவில்லை - மாறாக ஒருவித மந்தகாசத்துடனும் உற்சாகத்துடனுமே ஆச்சாரியார் வீட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான் அவன்.

*(1) இராஜராஜீஸ்வரத்தின் தளிச்சேரி வடக்குத் தளிச்சேரி / தெற்குத் தளிச்சேரி என்று இரு பெரும் பிரிவுகளைக் கொண்டிருந்தது. இரண்டுமே வட சிறகு தென் சிறகு என்று அழைக்கப்பட்ட குடியிருப்புப் பகுதிகளைக் கொண்டிருந்தன. பார்க்க - தளிச்சேரிக்கல்வெட்டுக்கள் / இரா.கலைக்கோவன் - பக்கம் 20*

அரிகண்டனின் உற்சாகத்துக்கு வேண்டிய காரணங்கள் இருந்தன. நேற்று அம்பலவாணருடன் வந்ததால் அவனால் வழியில் தென்பட்ட தளிச்சேரிப் பெண்டுகளுடன் உல்லாசமாகப் பேசிமகிழ முடியவில்லை. இன்று அந்தத் தடங்கல் இல்லையல்லவா ? அதைவிட முக்கியமான காரணம் இன்று சிறிய சீருடையாள் கிள்ளிக்குடியிலிருந்து(2) நிச்சயம் திரும்பிவந்திருப்பாள் என்பது ! அவளை தனியே சந்தித்து அளவளாவும்போது ஆசான் அருகிலிருந்தால் அவருக்கும் தொந்தரவு - இவனுக்கும் தொந்தரவு - அல்லவா ?

*(2) இராஜராஜீஸ்வரத்தின் தளிச்சேரிக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ள தளிப்பெண்டு. பார்க்க - தளிச்சேரிக்கல்வெட்டுக்கள் / இரா.கலைக்கோவன் - பக்கம் 22*

சீருடையாளை நினைக்கையில் அரிகண்டனின் வாலிப மனதில் இச்சை அலைகள் ஓங்கி ஓங்கி அடித்தன. சற்றே மஞ்சள் பூசிய இளமாலை நிறம் அவளுக்கு. அதுவே ஆளைக் கிறக்கிவிடுமென்றால் குவிந்து சிவந்த அந்த அதரங்களும் கருமையோடிய மான் விழிகளும் கிள்ளைப் பேச்சும் அவளைச் சந்திப்பவர்களை ஏதோ ஒரு சொப்பன லோகத்திற்கே கொண்டுசென்றுவிடும்.

ஏறக்குறைய ஒரு திங்களுக்கு முன்பு சீருடையாள் தன் தோழி அம்பலக்கூத்தியுடன்(3) ஆச்சாரியார் வீட்டு வாசலில் தயங்கித் தயங்கி நின்றபோதுதான் முதன் முதலில் அவளைச் சந்தித்தான் அரிகண்டன். அவளுக்கு நாடகமென்றால் மிகவும் பிரியமாம். அதனால் ஆச்சாரியாரைப் பார்த்து ஆசிபெற்றுப்போகத்தான் வந்தாளாம். வந்தவளை அவர்களுடைய இராஜராஜீஸ்வர நாடகத்திலேயே ஒரு சிறிய வேடம் கொடுத்துப் பிடித்துப் போட்டுவிட்டான் அரிகண்டன் - அது சம்மந்தமாக அவள் ஆச்சாரியார் வீட்டிற்கு அடிக்கடி

வந்துபோகும் வாய்ப்பு நேருமல்லவா ?

*(3) இவள் பெயரும் தளிச்சேரிக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளது. பார்க்க - தளிச்சேரிக்கல்வெட்டுக்கள் / இரா.கலைக்கோவன் - பக்கம் 23*

சீருடையாளைத் தொடர்ந்து வேறு சில தளிச்சேரிப் பெண்டுகளும் நாடகத்தில் சேர்ந்துவிட்டார்கள். பார்த்தார் ஆச்சாரியார் - முன்பு நாடகத்தில் மிகச் சிறிய பகுதியாகத் திட்டமிட்டிருந்த ஒரு காட்சியை பெண்டுகளின் நடனத்தையெல்லாம் கற்பனையோடு சேர்த்து பிரமாதப்படுத்திவிட்டார். நாடகத்தில் அந்தக் காட்சி மிகச் சிறப்பாக அமையப்போகிதென்று கூித்தப் பெருமக்கள் அனைவரும் பேசிக்கொண்டார்கள்.

ஆச்சாரியார் வீட்டு வாயிலில் நடந்த அந்த முதல் சந்திப்பிலேயே தன்னை ஏறக்குறைய முழுவதுமாக அவளிடம் பறிகொடுத்துவிட்டான் அரிகண்டன் என்றுதான் சொல்லவேண்டும். நேற்று நடந்ததுபோலிருக்கிறது அந்தச் சந்திப்பு - ஆனால் அந்த உறவுதான் எப்படிக் குறுகிய காலத்தில் பூத்துத் செழித்துத் தழைத்தோங்கிவிட்டது ! இலக்கியங்களிலெல்லாம் காவியக் காதல் ஓவியக் காதல் என்றெல்லாம் சொல்கிறார்களே - அது கடைசியில் இதுதான் போலும் ! சீருடையாளும் அவனைச் சந்திக்கும்போதெல்லாம் மிகுந்த நேசத்துடன் நடந்து கொள்கிறாள்தான். ஆனால் அது வெறும் நேசத்துடன் கூடிய மரியாதை மட்டும்தானா அல்லது அவள் மனதிலும் தன் மனதில் உள்ளதைப்போன்றதொரு எண்ணமிருக்கிறதா என்பதை அறிய அரிகண்டன் ஆன மட்டும் முயன்றும் இன்றுவரை வெற்றி கிட்டவில்லை.

இன்று நண்பகலுக்குப்பின் முக்கியமான நாடக ஒத்திகை இருப்பதால்

நிச்சயம் ஆச்சாரியார் வீட்டிற்கு சீருடையாள் வந்துதான் ஆகவேண்டும் ! இறுதி ஒத்திகை என்பதால் மறுநாள் நாடகத்தில் வேடங்கட்டப்போகும் அனைவரும் இன்றைக்கு வந்துதான் ஆகவேண்டுமென்று ஆச்சாரியார் கண்டிப்போடு சொல்லியிருக்கிறார். அதனால் சீருடையாள் இன்று காலை ஊரிலிருந்து திரும்பியிருப்பது உறுதி.

நாடக ஒத்திகை ஆரம்பிப்பதற்கு முன்னரே அவளைத் தனியே சந்தித்து ஆற அமரப் பேச வேண்டும். அவளை இப்போதெல்லாம் பிடிப்பதே பெரும்பாடாயிருக்கிறது - காலை வேளையில் வருகிறேனென்றால் பூஜை / நடனப் பயிற்சி என்று தட்டிக்கழித்து விடுகிறாள் - மாலை வேளைகளில் அவளைப் பிடிக்கவே முடிவதில்லை... ஊர் சுற்றக் கிளம்பிவிடுகிறாள் ! இன்றைக்கு எப்படியும் அவளை விட்டுவிடுவதற்கில்லை.

அவளை சந்திக்கும்போது முதலில் என்ன பேசவேண்டும் எப்படி நாம் கேட்க நினைப்பதை பூடகமாகவாவது கேட்கவேண்டும் என்றெல்லாம் மனதிற்குள் ஒத்திகை பார்த்தவாரே கால்களை எட்ட எட்ட வைத்து நடந்துகொண்டிருந்தான் வைத்தியர் மகன் அரிகண்ட தேவன்.

அம்பலவாணர் மெதுவாக நடந்து பலகாரக் கடையை அடைந்தார். உடனே சென்ற பலகாரம் வாங்காமல் பக்கத்திலிருந்த மாட்டுத் தீவனக் கடைக்குச் சென்று அதையும் ஒரு நோட்டம் விட்டார். பின் நிதானமாக பலகாரக் கடையை மீண்டும் அடைந்து அதிரசத்திற்கும் அரிசி மாவு ஆப்பத்திக்குமாக ஒரு காசு நாற்பத்தைந்து மஞ்சாடிகள் கொடுத்தார். சிறிது நேரக் காத்திருப்புக்குப் பின் பலகார மூட்டை கடைக்காரரால்

கொடுக்கப்பட, அதனை தோளில் சாற்றிக்கொண்டு நேராக சாவடியை நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

மேற்கொண்டு அம்பலவாணரை கவனிக்காமல் மழபாடியாரின் செய்கைகளில் நாம் கவனம் செலுத்த வேண்டியவர்களாகிறோம்.

அம்பலவாணர் தன்னைவிட்டு நகர்ந்த சில வினாடிகளிலேயே மழபாடியார் விசித்திரமான காரியமொன்றில் ஈடுபட்டார்.

மளமளவென்று தான் அணிந்திருந்த தலைப்பாகை, மெய்ப்பை, அணிகலன்கள் முதலியவற்றை மூட்டையாகக் கட்டி அருகிலிருந்த மரப்பொந்தில் வைத்தார். ஒரு முறை தனது துண்டை உதறிப் பார்த்துவிட்டு ஒரு அவசர யோசனையில் அதனையும் சற்றே கிழித்து ஒரு பெரிய ஓட்டையினை உண்டாக்கிக்கொண்டார். வெறும் அரையாடையோடும் தோளில் கிழிந்த துண்டோடும் நேராக குதிரைகள் ஒளித்துவைக்கப்பட்டிருந்த மருத மரத்தடியை அடைந்தார்.

அவரைப் பார்த்துவிட்ட சந்தோஷத்தில் அவரது புரவி ஆசையாய் கனைக்க வாயெடுத்தது - அதனை சற்று சிரமத்தின்பேரில் அடக்கினார்.புரவியின் கடிவாளத்தோடு பிணைக்கப்பட்ட தோல் பட்டை குதிதையின் பிருஷ்டம் வரை நீண்டிருக்க, அதில் அவருடைய ஆயுதப்பை தொங்கிக்கொண்டிருந்தது. அதனை விடுவித்து எடுத்து பக்கத்திலிருந’த கம்பின் நுனியில் முடிந்துகொண்டு தோளில் சுமந்தவாறு அம்பலவாணர் சென்ற பாதையில் விறுவிறுவென்று வேகமாகச் நடந்தார்.

மேற்கூறிய அனைத்தும் சில வினாடிகளிலேயே நடந்து முடிந்துவிட்டதால் அம்பலவாணர் பலகாரக்கடையில் காசு கொடுக்கும்

நேரத்தில் மழபாடியார் மாட்டுத் தீவனக் கடையை ஏறக்குறைய அடைந்துவிட்டார். அவருடைய கிழிந்த ஆடைகளும் லேசாக விந்தியவாறு அவர் நடந்த நடையும் பார்ப்பவர்களிடத்தில் எந்த ஆர்வத்தையும் தோற்றுவிக்கவில்லை.

மாட்டுத் தீவனக் கடையின் கும்பலில் ஒரு ஓரமாக நின்றுகொண்டு அம்பலவாணரை யார் யார் கவனிக்கிறார்கள் என்பதைக' கூர்மையாகக் கவனிக்க ஆரம்பத்தார் மழபாடியார். முக்கியமாக பலகாரக் கடையிலும் தீவனக் கடையிலும் பணிபுரிந்துகொண்டிருந்தோர் மீது அவருடைய முழுக் கவனமும் இருந்தது.

முதலில் யாரும் குறிப்பாக கவனிப்பதாக அவருக்குத் தோன்றவில்லை. கூட்டம் அதிகமாக இருந்ததால் அவரவர் பணியிலேயே அனைவரும் கவனமாக இருந்தனர். மழபாடியாருக்கு ஒரு வினாடி ஏமாற்றமாகக்கூட இருந்தது - ஏனெனில் அவர் எதிர்பார்த்துக்கொண்டிருந்த "நண்பன்" சாவடிக்குள் சேவகனாய் பணிபுரிவதைவிட வெளியில் தினக்கூலி செய்பவனாகவோ கடையில் வேலைசெய்பவனாகவோ இருப்பான் என்றுதான் எதிர்பார்த்தார்.

ஆனால் வெகு சீக்கிரமே தீவனக் கடையில் வைக்கோல் அள்ளி வைத்துக்கொண்டிருந்த ஒரு மனிதன் அவரைக் கவர்ந்தான். சராசரி உயரத்திற்கும் குறைவாக கருநிற மேனியனாய் காணப்பட்ட அவன் பணியில் தீவிரமாக இருந்தாலும் அம்பலவாணரை சற்று கூர்மையாக கவனிப்பதுபோல் தோன்றியது. கூட்டத்தரோடு கூட்டமாக அவனை நெருங்கினார் மழபாடியார்.

வைக்கோல் அள்ளி வைப்பது அவன் வேலையாக இருந்ததால் அவன் நொடிக்கொருமுறை கடையின் பின்புறம் அமைந்திருந்த வைக்கோல்

போருக்குச் சென்று வர வேண்டியிருந்தது. இருந்தாலும் ஒவ்வொருமுறை திரும்பும்போதும் அம்பலவாணரை நோட்டமிட்டுக்கொண்டேயிருந்தான் அவன்.அம்பலவாணர் பலகாரக் கடையிலிருந்து கிளம்பிய சில வினாடிகளில் வைக்கோல் அள்ளிக்கொண்டு வந்தவன் அவர் கிளம்பி சாவடியை நோக்கி நகரத்துவங்கியதும் சற்று பரபரப்படைந்துவிட்டான். நொடியில் கடையிலிருந்த மற்றவனிடம் சிறுநீர் கழிக்கச் செல்வதாகக் கூறிவிட்டு அவன் நழுவியதை கவனித்தார் மழபாடியார்.

"சீக்கிரம் வந்து சேரப்பா - ஒவ்வொரு முறையும் தாமசிக்கிறாற்போல் செய்யாதே - கூட்டம் அலைமோதுகிறது !" என்ற கடைக்காரரின் எச்சரிக்கைகூட அவருக்கு ஒரு செய்தியைச் சொல்லிற்று.

விந்தியபடி நடந்தவாறே அவன் செல்லும் திசையைக் கவனித்தார் மழபாடியார். சிறுநீர் கழிப்பதுபோல் பாவித்துவிட்டு அவன் பெருவழிக்கு ஏறாமல் வாய்க்காலின் கரையோரமாகவே நடந்து சாவடியை நோக்கிச் செல்லும் அம்பலவாணரை தீவிரமாக கவனித்துக்கொண்டிருந்தான். போக்குவரத்து அதிகமாக இருந்ததால் அம்பலவாணரை கவனித்துக்கொண்டிருக்கும் அவனையோ அவனையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்த மழபாடியாரையோ ஒருவரும் இலட்சியம் செய்யவில்லை.

அம்பலவாணர் சாவடியின் வாசலை அடைந்து காவலனிடம் உரத்த குரலில் "நான் நாடுகாவலதிகாரியிடமிருந்து வருகிறேன் - இந்தப் பகுதியில் சில தினங்களுக்கு முன் நடந்த ஒரு கொலை பற்றி விசாரிக்க வேண்டி உங்கள் சாவடி அதிகாரியிடம் பேசவேண்டும் !" என்றெல்லாம் பேசப்பேச அவரைக் கவனித்துக்கொண்டிருந்த தீவனக் கடைப் பணியாளன் பரபரப்படைவதை கண்டார் மழபாடியார்.

அம்பலவாணர் சாவடிக்குள் நுழைந்ததும் ஒரு கணம் நின்று நிதானித்து யோசித்தான் அவன். பின் ஒரு முடிவுக்கு வந்தவனைப்போல் வேகவேகமாக - கடையை நோக்கி வராமல் சாவடியைத் தாண்டி ஆலமரப் பாதையையும் தாண்டி மரங்களடர்ந்த ஒரு பகுதிக்குள் விடுவிடுவென்று பிரவேசித்துவிட்டான் ! அவன் ஆலமரப்பாதையில்தான் நுழைவான் என்று எதிர்பார்த்துக் காத்திருந்த மழபாடியார் அதைக் கடந்து அவன் சென்றதை ஒரு திடுக்கிடலுடன் கவனித்தக்கொண்டு வேகவேகமாய்ப் பின் தொடர்ந்தார். அவன் அவ்வப்போது திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றதால் சற்று தாமதத்துடன்தான் அவன் நுழைந்த இடத்தை அவரால் அடைய முடிந்தது.

நிழல் தரும் பெரிய மரங்களும் அவற்றின் மீது பின்னிப் படர்ந்திருந்த கொடிகளும் அடர்ந்திருந்த அந்தப் பகுதியில் மழபாடியார் புகுந்தார். புகுந்த சில வினாடிகளிலேயே சற்று தொலைவில் பரபரப்பான சில சப்தங்கள் கேட்பதை அவரால் உணர முடிந்தது. ஆனால் செடிகொடிகள் உருவாக்கிய இருளில் பாதை கண்டுபிடித்துப் போவது மிகச் சிரமமாக இருந்தது.

ஒரு கணம் நிதானித்துக்கொண்டு -அவன் இந்தப் பாதையில் எவ்வாறு வழிகண்டுபிடித்துக்கொண்டு போயிருப்பான் என்று யோசித்தபோதுதான் ஒரு கொடிப்புதரின் மறைவில் ஒற்றயடிப் பாதையொன்று போவது அவர் கண்களுக்குப் புலப்பட்டது ! சரிதான் ! நாம் பின்தொடர்வது சாதாரண நரியன்று போலுள்ளதே என்று நினைத்த அதே வினாடி தொலைவில் ஒரு புரவியின் கனைப்பு சப்தம் கேட்டது.

புரவி சப்தம் கேட்டவுடனேயே மழபாடியாருக்கு மிகுந்த கவலை

உண்டாகிவிட்டது... நாசமாய்ப் போயிற்று காரியம் ! இவன் ஆலமரப் பாதையில் வருவான் என்று நினைத்துக்கொண்டல்லவா அங்கே நாம் நம் புரவிகளை ஒளித்திருந்தோம் ! இவனோ சற்று தள்ளி அமைந்துள்ள ஒரு இரகசியப் பாயையை அல்லவா உபயோகப்படுத்திக்கொண்டிருக்கிறான்... இனி நாம் ஆலமரப் பாதைக்குச் சென்று புரவிகளை அவிழ்த்துக்கொண்டு வருவதற்குள் இவன் புரவியில் நான்கு காத துரத்தைத் தாண்டிவிடுவானே... அடடா !

ஒரு அவஸ்தையுடன’ பரபரப்பாக அந்தப் பாதையில் நுழைந்தவர் சற்று தூரத்தில் அவன் ஒரு கறுப்பு நிறப் புரவியில் ஆரோகணிப்பதைக் கண்டார். கெட்டது குடி ! வேறு வழியில்லை - முடிந்தவரை இவனைப் பின்தொடர வேண்டிததுதான்.

பாதை செடிகொடிகள் படர்ந்து அடர்த்தியாக இருந்ததாலோ என்னவோ புரவி சற்று மந’த கதியிலேயே நடந்தது. மழபாடியாரும் முடிந்தவரை ஓசை செய்யாமல் ஓட்டமும் நடையுமாக அவனைப் பின்பற்றினார். புரவி போன பாதை சிறிது தூரம் கழித்து ஒரு திருப்பம் திரும்பியதில் ஆலமரப் பாதை வந்துவிட்டது ! அடடா.... இதுதான் இரகசியமா ? ஆலமரப் பாதையை அடைவதற்கு இதுவும் ஒரு வழி போலும்... அடக் கடவுளே ! நாம் புரவியை ஒளித்து வைத்திருக்கும் இடத்திற்கருகே செல்கிறானே ! நமது நண்பர்கள் இந்த நேரம் பார்த்து கனைக்காமலிருக்க வேண்டும்...

மழபாடியாரின் எண்ணத்தில் மண் விழுந்தது ! அப்போதுதான் நினைத்துக்கொண்டாற்போல் அம்பலவாணரின் புரவி பெரிதாக ஒரு உறுமல் உறுமி தன் இருப்பை சந்தேகத்திற்கிடமில்லாமல் அவனுக்கு அறிவித்தது !

அவ்வளவுதான் ! ஒரு பெரிய ஆச்சரியத்துடன் மரத்தின் பின் நோக்கியவன் அங்கு இரு குதிரைகளை கண்டு முகம் வெளிறினான்... சுளீரென சாட்டையைச் சொடுக்கி புரவியின் வயிற்றையும் கால்களால் அழுத்த ஒரூ கோபாவேசத்துடன் அந்தக் கறுப்புப் புரவி நாலுகால் பாய்ச்சல் பாய்ந்தது !மழபாடியாருக்கு வேறு வழியில்லை ! ஒரே ஓட்டத்தில் அவருடைய புரவியை அடைந்து அதன் கடிவாளத்தை மரத்திடமிருந்து விடுவித்துவிட்டுவிட்டு நொடியில் ஆரோகணித்து அவன் சென்ற திசையில் முடிந்தவரை வேகமாகப் புரவியைச் செலுத்தினார் !

## முன்னைத் தீய வினை

உச்சி வெய்யிலில் காய்ந்துகொண்டிருந்த அந்தக் காட்டுவெளிப் பிரதேசத்தில் உஷ்ணக் காற்று லேசாக வீச, அந்தத் தாழம்புதர் சிலிர்த்துக் கொண்டது. அதுவரை ஏதோ ஒரு சோம்பேறித்தனத்தின் காரணமாக அந்தத் புதருக்குள் ஒடுங்கிக்கிடந்ததொரு நீண்ட நாக சர்ப்பமானது இரைதேடும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்து வெட்டவெளிக்கு வந்து கம்பீரமாக தன் படத்தை உயர்த்தி சில கணங்கள் சுற்று முற்றும் பார்த்தது.

நடமாட்டம் எதுவும் இருப்பதுபோல் தெரியவில்லை. வேட்டையை ஆரம்பிக்க வேண்டிததுதான் என்று முடிவெடுத்து சர்ப்பம். மெல்ல ஊர்ந்து செல்ல ஆரம்பிக்க முனைகையில் - நிலத்தில் அதிர்வுகள்.....!

சரி, விலகி வேறு பாதையில் சென்றுவிடலாம் என்று முனைந்து உடலை வளைப்பதற்குள் அதிர்வுகள் பல மடங்கு அதிகரித்துவிட்டன...! இத்தனை விரைவாகத் தன்னை நோக்கி வரும் அந்தப் பிராணி எது ?

இனி விலக அவகாசமில்லை - வருவது யாராக இருந்தாலும் எச்சரிக்க வேண்டியதுதான் என்ற முடிவுடன் சடாரென்று திரும்பி தலையை முடிந்த மட்டும் உயர்த்தி "புஸ்....புஸ்..." என்று பெரிதாக எம்பிச் சீறியது.

ம்ஹூம் ! சீறலுக்குப் பயனேதும் விளைந்ததுபோல் தெரியவில்லை ! அதிர்வுகளோ மிகவும் அதிகரித்து விட்டன...

சர’ப்பம் சற்றே கோபமாகி ஒரு ஆவேசமான தாக்குததுக்கு தயாரானது.

மழபாடியாருக்கு முகம் முழுவதும் வியர்த்துவிட்டது...அதோ ! கண்முன்னே எதிரி நழுவிக்கொண்டிருக்கிறான்... இவனை விட்டால் காரியம் அடியோடு கெட்டது ! எப்பாடு பட்டாவது இவனை வளைத்துவிட வேண்டும் !

வேகம் ! புரவிக்கு இன்னும் வேகம் தேவை ! என்னதான் அடிவயிற்றில் கால்களால் அழுத்தி பிடரியைத் தட்டிக்கொடுத்து உற்சாகப் படுத்தினாலும்..ம்ஹூம்...புரவியால் ஓரளவிற்குமேல் வேகம் பிடிக்க முடியவில்லை - என்ன பிரச்சனையென்று தெரியவில்லை - குளம்புகளை நாளை பரிசோதிக்கவேண்டும்.....

தப்பித்துக்கொண்டிருக்கும் எதிரியின் கறுப்புப் புரவியோ கோபாவேசத்தில் தறிகெட்டு ஓடிக்கொண்டிருப்பதுபோல் தெரிகிறது - சவுக்கால் அந்தப் பிராணியை விளாசிக் கொண்டிருக்கிறான் போலும்... கயவன் ! வளரி வீச முடியுமா ? இல்லை, முடியாது - தூரம் மிக அதிகம் - இன்னும் சற்று நெருங்கினால்தான் அது சாத்தியப்படும்.

எதற்கும் முன்னெச்சரிக்கையாக எடுத்து வைத்துக் கொள்வோ....

அடக் கடவுளே - எங்கே நமது ஆயுதப் பை ? கிளம்பும் அவசரத்தில் எடுத்துக்கொள்ள மறந்து விட்டோமா ? நாசமாய்ப் போயிற்று ! கெட்டது காரியம் அடியோடு !

மழபாடியார் அத்தனை சீக்கிரம் ஆவேசப் படுபவர் அல்லர். என்றாலும் அந்த நெருக்கடி நிலையில் அவருக்கு யார்மீதோ எல்லையில்லாத கோபம் பொங்கிக்கொண்டு வந்தது !

அடேய் - தப்பிவிடுவாயா நீ ? சோழ சாம்ராஜ்ஜிய சேவையில் ஈடுபட்டிருந்தவனின் உயிரை ஈவு இரக்கமின்றிப் பறித்த நீ இந்த மழபாடியான் கண்களின் முன்னால் தப்பி விடுவாயா ? நீ உலகத்தின் மறுமூலைக்கு ஓடினால்கூட துரத்தி வருவேனடா ! இந்தக் காட்டு வெளி எம்மாத்திரம் ? குதிரையை ஆவேசப்படுத்தி அசுர வேகத்தில் செலுத்தித் தப்பித்துவிடலாமென்று பார்க்கிறாயா ? நடக்காது ! கச்சிப்பட்டு ஐஞ்சந்தி துர்க்கா பரமேசுவரி என்னை ஒருநாளும் கைவிட்டதில்லை ! அம்மா ! தாயே ! முடிந்தவரை என்னாலியன்ற முயற்சிகளை செய்துவிட்டேன் - இனி நீதான் மிச்சத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டும் !

திடீரென்று சில வித்’தியாசமான காட்சிகள் சற்று தூரத்தே மழபாடியாரின் முன் அரங்கேறத் துவங்கின...

முன்னால் ஆவேசமாக ஓடிக்கொண்டிருந்த கரும்புரவி சடாரென்று நின்று முன்னங்கால்களை உயர்த்தி வினோதமாக கனைத்தது. அது தன்முன் கோபாவேசத்துடன் படமெடுத்து நிற்கும் சர்ப்பத்தைப் பார்த்துத்தான் நின்றுவிட்டது என்பது மழபாடியாருக்குப் புரியவில்லை.

இந்த எதிர்பாராத சேஷ்டைகளுக்கு புரவியிலிருந்தவன் தயாராக இல்லைபோலும் - சடாலென்று புரவியிலிருந்து கீழே விழுந்து புரண்டான்...

புரண்டவன் அவசர அவசரமாக எழுந்து நிற்பதையும் அடுத்த கணம் ஒரு காலை வினோதமாக உதறிக்கொள்வதையும் கவனித்துக்கொண்டிருந்த மழபாடியாருக்கு ஏதோ விபரீதம் அங்கு நடந்துகொண்டிருப்பது புரிய, வேகவேகமாக அவனை நெருங்க முற்படுகையில்...

**ஆ!**

ஆவேசமான மரணக் கூச்சல் அது ! அதோ, அவன் எழுந்து நிலத்தை உற்றுப் பார்த்தபடி - அப்படி என்ன அங்கே இருக்கி...ற.....அட, ஆண்டவா ! அம்பலவாணர் இந்தப் பிராந்தியத்தில் விஷ ஜந்துக்களின் நடமாட்டம் அதிகம் என்றாரே... ஒரு வேளை.....ஒரு வேளை.....

மழபாடியார் அவன் விழுந்த இடத்தை சில கணங்களில் அடைந்தார்.

புரவியை விட்டுக் கீழிறங்கி அவனை நெருங்குகையில் - அவன் வாயில் நுரை வழிய... மரணவாயின் கோரப்பிடியில் அகப்பட்டுக்கொண்டிருந்தான். அதோ - சற்று தூரத்தில் இன்னும் படத்தை இறக்காமல் செருக்குடன் நிமிர்ந்து நிற்கும் நாகம் !

அவனுடைக கண்களில் தெரிந்த அவநம்பிக்கைதான் எத்தகையது ! தான் இறக்கப்போகிறோம் என்பது சர்வ நிச்சயமாகத் தெரிந்தும் அதனை ஏற்றுக்கொள்ளமுடியாமல் - சில கணங்களில் நடந்துவிட்ட அசம்பாவிதத்தை இன்னமும்கூட ஜீரணிக்க முடியாமல் - இது

நிஜத்தில்தான் நடந்துகொண்டிருக்கிறதா அல்லது ஏதாவது கனவுதான் கண்டுகொண்டிருக்கிறோமா என்பதான குழப்பத்துடன் விழிகள் நிலையில்லாமல் அங்குமிங்கும் அலைய...

அடடா - மரணம் என்பது ஏதோ எதிர்காலத்தில் ஏதோ ஒரு நாளில் தனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது என்று மனிதன் நினைத்துக்கொண்டிருப்பது எத்தனை பெரிய அறியாமை ? அது அவனுடைய தோள்களின் மீதே அல்லவா உட்கார்ந்துகொண்டிருக்கிறது ! எந்தக் கணத்தில் எந்த வடிவில் எப்போது அழைப்பு வரும் என்பது யாருக்குத்தான்' தெரியும் ?

மழபாடியார் அவனுக்கு அருகில் முழங்கால்களை மடக்கி அமர்கையில், அவன் கண்கள் ஒரு சோர்வுடன் சொருகிக்கொண்டன.கன்னங்களைத் தட்டித்தட்டி - உடலை ஒரு உலுக்கல் உலுக்கி - கடைசி முறையாக அவனுடைய உணர்ச்சியூட்ட மழபாடியார் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை.மிக ஆழமானதொரு மயான மயக்கத்திற்குள் அவன் வேகவேகமாக அமிழ்ந்துகொண்டிருந்தான்.

தன்னுடைய வேலையை முடித்துக்கொண்ட திருப்தியுடன் சற்று தூரத்தில் அந்தக் கருநாகம் விலகிச் செல்வதை வேதனை மிகுந்த ஒரு வெறுமை உணர்வுடன் கவனித்துக் கொண்டார் பரமன் மழபாடியார்.

நண்பகல் முதல் ஜாமத்தின் இரண்டு நாழிகைகள் கழிந்திருக்கும் நேரத்தில் பரபரப்பு மிகுந்த அந்தத் திருக்கற்றளி வளாகத்திற்குள் நாம் நுழைகிறோம். அடடா - எத்தனை பெரிய ஒரு பேரியக்கம் இங்கே உருப்பெற்று வளர்ந்துகொண்டிருக்கிறது ! வர்ணிப்பதற்கு வார்த்தைகள்

போதாது போலிருக்கிறதே...

ஒரு பக்கம் நான்கு சக்கரப் பெருவண்டிகளில் சிறு துண்டுப் பாறைகளும் பெரும் பாறைகளும் சாரி சாரியாக அணிவகுத்து இறங்கிக்கொண்டிருக்கின்றன. அப்படி இறக்கப்படும் பாறைகளில் சிறு பாறைகளை ஒரு பக்கமாகவும் பெரும் பாறைகளை வேறொரு பக்கமாகவும் அடுக்கப்பெறுகின்றன. பெரும் பாறைகளில் காவியால் எண்ணிக்கையிடப்படுவதையும் காண்கிறோம்.

சற்று தள்ளி நகர்ந்தோமானால் உளி சப்தம் பெரிதாகக் கேட்கத் துவங்குகிறது. உளிகளின் ஓசை சமயத்தில் ஒரே சீராகவும் மறு சமயத்தில் லயம் பிரிந்தும் கேட்பது இளங்காதலரின் ஊடலையும் பின் கூடலையும் நமக்கு ஞாபகப்படுத்துகின்றன.

கற்களை உளிகளால் பொளிந்து கொண்டிருப்போர் பற்பல குழுக்களாகப் பிரிந்து பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவரவர் குழுவிற்கென்று சிறு பாறைகள் தனித்தனியே குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன. பாறைகளின் அளவைக் கொண்டு அதன் பயன்பாடு தீர்மானிக்கப்பட்டு அவை விதவிதமான வடிவங்களில் விமானக் கற்களாக - அதிட்டானக் கற்களாக - சுவர்க் கற்களாக - படிக்கற்களாக - உருப்பெற்றுக்கொண்டிருக்கின்றன. இந்தக் கற்கள்தான் எத்தனை பாக்கியம் செய்தவை ! காலகாலத்திற்கும் சோழ சாம்ராஜ்ஜியத்தின் புகழைச் சொல்லிக்கொண்டு நிற்கப்போகும் ஒரு மகத்தான கட்டுமானத்தின் சிறு பகுதிகளாகவல்லவா இவை ஆக்கம் பெறப் போகின்றன ?

அதிக கலைத்திறன் தேவைப்படாத இந்தப் பணியில் ஈடுபட்டிருப்போர் பெரும்பாலும் துவக்கநிலைச் சிற்பிகாக இருப்பார்களோ என்று

அவர்களுடைய வாலிபம் மிகுந்த முகங்களிலிருந்தும் இடைவிடாத பேச்சிலிருந்தும் சந்தேகிக்கிறோம். இவர்களில் ஆர்வம் மிகுந்த சிலர் இன்னும் சில திங்களில் சிறு சிற்பவேலைகளை எடுத்துச் செய்யலாம் - மற்றவர்கள் இருக்கும் பணியே போதும் என்கிற எண்ண ஓட்டத்தோடு இதே பணியில் தொடர்ந்து ஈடுபடலாம். பல குழுக்களுக்குமாக சேர்த்து ஒரு சில மேற்பார்வையாளர்களும் தெரிகின்றனர். அவர்கள் இதே பணியில் பல நாட்கள் ஈடுபட்டு அனுபவம் வாய்ந்தவர்களாக இருக்கக்கூடும்.

இவர்களைக் கடந்து அடுத்தபடியாக அமைந்துள்ள பெரும் பாறைகள் அடுக்கப'பட்டுள்ள பகுதிக்கு வந்துவிட்டோம். ஓ! இந்தப் பெரிய பாறைகளெல்லாம் கற்றளியின் பெருஞ்சிற்பங்களை வடிப்பதற்காக ஒதுக்கப்பட்டுள்ள பாறைகள் போலும் !

புதியதாக இறங்கும் பாறைகளை சிலர் ஆர்வத்தோடு அணுகி சோதிக்கின்றனர். இவற்றில் எந்த தெய்வத் திருவுருவை வடிப்பது என்பது பற்றிய லேசான விவாதங்களும் நமது காதுகளில் விழுகின்றன. இவர்களின் அனுபவம் மிகுந்த சிலர் தங்கள் காதுகளை பாறையில் பதித்து அதன் பல்வேறு பகுதிகளைத் தட்டி ஒலியுண்டாக்கிக்கொண்டிருக்கின்றனர் - பாறை ஆண்பாறையா, பெண்பாறையா அல்லது நபும்சகப் பாறையா(1) என்று கண்டறியும் முயற்சிகள் போலும் இவை !

*(1) கற்களை சோதித்தறியும் பல்வேறு முறைகளை சிற்பிகள் கையாண்டுள்ளனர். இன்னின்ன விதமான கற்களை இன்ன திருமுன் வடிக்கப் பயன்படுத்தலாம் என்பதுபோன்ற விதிமுறைகளும் சிற்ப வழக்கிலிருந்தன.*

இதற்கு அடுத்தபடியாக நாம் அரைகுறையாக முடிக்கப்பட்ட பல்வேறு சிற்பங்களைக் காணும் பாக்கியத்தைப் பெறுகிறோம் ! அதோ ஒரு நீண்ட பெரிய பாறை படுக்க வைக்கப்பட்டு அதை நான்கு சிற்பிகள் பொளித்துக் கொண்டிருக்கின்றனரே - அந்த சிற்பத்தில் கவனத்தைப் பதிப்போம்.அடேயப்பா ! எத்தனை பெரிய கால்கள் ! எத்தனை நீண்ட கைகள் ! கைகால்கள் அமைத்திருக்கும் பாங்கிலிருந்து இவர் துவாரபாலர்களில் ஒருவராக இருக்கலாம் என்று எளிதாக ஊகிக்க முடிகிறது. முகம் இன்னும் சரியாக வடிக்கப்படவில்லையாதலால் இந்தச் சிற்பத்தின் முழு அழகையும் நம்மால் பருக முடியவில்லை.

இதற்கெல்லாம் அப்பால் கண்களை ஓட்டினால் - அடடா ! நம் கண்முன்னே விரிகிறது அந்த மிகப் பெரிய திருக்கற்றளி வளாகம்...

அடேயப்பா - எத்தனை பெரிய மதில்சுவர் ! எத்தனை நீளம் - எத்தனை அகலம் ! மதில்சுவரின் வடக்கு மற்றும் மேற்குப் பகுதிகள் நன்கு வளர்ந்த நிலையில் காட்சியளிக்க தென்புறத்தில் இன்னமும் வேலைகள் சரிவரத் துவங்கப்படாத நிலையைக் காண்கிறோம்.

அதோ ! நாம் முன்பு காலையில் சந்தித்த மூன்று பெரிய மனிதர்களும் மதில்சுவற்றின் தென்மேற்கு மூலையில் நின்றுகொண்டு உரையாடிக்கொண்டிருக்கின்றனரே... அவர்களோடு நான்காவதாக வேறொரு மனிதரும் தெரிகிறார். ஆடை அணிகலன்களைப் பார்த்தால் அரசியல் அதிகாரிபோல்தான் தெரிகிறது.

மேற்கொண்டு கற்றளி வளாக வேலைகளை கவனிக்காமல் நாம் இவர்களது பேச்சில் கவனம் செலுத்த வேண்டியவர்களாகிறோம்.

"இதோ - இதுதான் கூத்து மேடை ! காலையிலேயே மேடையமைக்கும்

வேலையை துவக்க எண்ணியிருந்தேன் - ஆனால் நாம் எண்ணுவது எங்கே நடக்கிறது ? கிட்டத்தட்ட மதிய நேரத்தில்தான் ஆச்சாரியாரின் ஆட்களே வந்து சேர்ந்தார்கள் ! எப்படியும் நாளை விடிவதற்குள் மேடை தயாராகிவிடவேண்டுமாதலால் இரவு போஜனத்திற்குப்பின்பும் பணியில் ஈடுபட்டச் சொல்லியிருக்கிறேன்...."

உற்சாகமாகப் பேசிக்கொண்டிருக்கும் இந்த நான்காவது மனிதரை நாம் இதுவரை சந்தித்ததில்லை.

பிராயம் ஐம்பதிற்கு மேல் நிச்சயம் சொல்லலாம். கம்பீரமான மீசை - தாடி. உறுதியான முகவாய். தலையின் முன்புறம் நரையும் கறுப்புமான முடி நன்கு முடிந்துவிடப்பட்டு பின்புறம் பெரிய கொண்டையாகி முடிந்தது. மார்பில் பெரிய முத்துமாலை. தோள்களிலும் முத்தினாலான கங்கணங்கள்.(2) பிரம்மராயர், மாராயர் முதலியோரிடமே கைகளை நீட்டிப் பேசிக்கொண்டிருப்பதார் அவரும் அரசாங்க உயர் அலுவலர்களில் ஒருவராக இருக்கக்கூடும் என்று ஊகிக்கிறோம்.

*(2) இந்த வர்ணனை தஞ்சை பெரியகோயில் ஓவியங்கள் அறிமுகப்படுத்தும் அரசாங்க பெரிய மனிதர்கள் அத்தனை பேருக்கும் ஓரளவிற்கு பொருந்தும்.*

"தென்னவன் மூவேந்த வேளாரே ! மேடையமைப்பெல்லாம் ஒருபுறம் கிடக்கட்டும் - நாடகம் நடக்கும்போது பேரரசர் முதலானோர் அமரப்போகும் இடம் எது ? இராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களை எங்கே அமரவைக்கப் போகின்றீர்கள் ? பெண்டுகளுக்கான இடம் எது ? இதையெல்லாம் விபரமாக எடுத்துரைக்க வேண்டும்..."

ஆஹா ! இவர்தான் பெரிய திருக்கற்றளியின் ஸ்ர்காரியமாக(3) அமரப்

போகும் பொய்கை நாட்டுக் கிழவன்(4) ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளாரா ! இவரை இங்கே சந்திப்போமென்று நினைக்கவில்லை - இவர் கற்றளிக்கு அள்ளிக'கொடுத்த நிவந்தங்கள்தான் எத்தனை எத்தனை ! அரச குடும்பத்தினருக்கு சரிசமமாக இறைத் திருமேனிகளை செப்புத் திருமேனிகளாக வழங்கத் தயங்கி இறை அடியார்களின் திருமேனிகளை பெரிய கோயிலில் எழுந்தளுவித்த பெரிய மனிதரல்லவா இவர் !

*(3) திருக்கோயில் அலுவலர்களின் பிரதான மேலாளர்*
*(4) கிழவன் என்ற சொல்லை வயதானவர்களைக் குறிக்க இன்று உபயோகப்படுத்துகிறோம். அன்றைய நிலையில் இந்தச் சொல்லின் பயன்பாடு சற்று வேறுமாதிரி இருந்திருக்கக்கூடும். ஆதித்தன் சூரியனார் இராஜராஜர் காலத்திற்குப் பின்னும் ஜீவித்திருந்து இராஜேந்திரர் காலத்தில் நிவந்தமெல்லாம' கொடுத்து - பொய்கை நாட்டுக் கிழவர் நிச்சயம் தொண்டுக் கிழமில்லை !*

"அதையெல்லாம் முடிவுசெய்ய நான் யார் ? விழாநாளில் இன்னின்ன நிகழ்ச்சிகள் நடைபெற வேண்டும். பேரரசர் இன்ன இடத்தில் இத்தனை நேரம்தான் செலவழிக்க வேண்டும் என்று முடிவுசெய்யத்தான் இதோ - நமது அருமை நண்பரும் இராஜராஜதேவரின் திருமெய்க்காப்புப்படைத் தலைவருமான வேளாண் ஆட்கொண்ட வில்லியார் இருக்கிறாரே ! அவரிடமல்லவா நீங்கள் இந்தக் கேள்விகளை வினவ வேண்டும்..."

ஆட்கொண்ட வில்லியார் தொண்டையை செருமிக் கொண்டார் - "ஆஹா - உமது குத்தல் பேச்சு இன்னும் குறையவேயில்லை ! திருக்கற்றளி வளாக நிகழ்ச்சி நிரலில் நான் கொஞ்சக் கெடுபிடியாக இருப்பதற்குத் தகுந்த காரணமுள்ளது மூவேந்த வேளாரே..."

"என்ன பெரிய காரணம் ? விட்டால் அரசர் இறைவனைக்கூட இத்தனை மணித்துளிகள்தான் தொழலாம் என்று நிபந்தனை விதித்துவிடுவீர்கள் போலுள்ளதே...!"

"அவசியம் நேர்ந்தால் அதையும் செய்வோம் ஐயா. நம்முடைய விவகாரங்களைத் தனியே வைத்துக் கொள்வோமா ? இப்போது மாராயரும் பிரம்மராயரும் ஒரு முக்கிய விஷயம் பற்றி உங்களுடன் கலந்தாலோசிக்க வந்துள்ளனர்... நாளைய சதயநாள் கொண்டாட்டங்களின்போது அரசரின் உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்த எதிரிகள் முயற்சிப்பதாக நம்பகமான தகவல்கள் நமது ஒற்றர் படைக்கு வந்து சேர்ந்துள்ளன. அது சம்மந்தமாகத்தான் மாராயரும் பிரம்மராயரும் உங்களுடன் கலந்து பேசி திருக்கற்றளி வளாகத்தில் தகுந்த முன்னேற்பாடுகளைச் செய்யலாமென்று நினைக்கின்றனர்...மேற்கொண்டு இதுபற்றிய விபரங்களை மாராயரே உங்களிடம் கூறுவார்..."

ஆட்கொண்ட வில்லியாரைத் தொடர்ந்து மாராயர் நடந்த சம்பவங்களை சுருக்கமாக மூவேந்த வேளாரிடம் எடுத்துரைத்தார். இடையே மழபாடியாரைப் பற்றிய பேச்சு வந்தபோது வில்லியார் இடையில் குறுக்கிட்டு அவருடைய பராக்கிரமங்களையும் சுருக்கமாக எடுத்துரைத்தார்.

"பரமன் மழபாடியானிடமிருந்து எந்த நேரத்திலும் நல்ல செய்தி வரலாம். ஆனால் அதற்குமுன் நம்மாலியன்ற ஏற்பாடுகளை செய்துவிட வேண்டுமல்லவா ?" என்று முடித்தார் மாராயர்.

"பரமன் மழபாடியார்.....கேள்விப்பட்ட பெயராக இருக்கிறதே ! நமது குருகாடிக் கிழாருக்கு(5) உறவினனா என்ன ?"

*(5) இந்தக் குருகாடிக் கிழார் ஒரு முக்கிய அரசு அலுவலராக உடையார்குடியின் அனந்தீசுவரம் கோயில் "இரவிதாசன்" கல்வெட்டுக்களில் தோன்றுகிறார்*

"உறவினன் இல்லை - ஆனால் இவனும் குருகாடியூர்க்காரன்தான் ! பெரும்பாலும் வடதிசை சைன்யத்துடனே காலத்தைக் கழிப்பதால் மழபாடியானை தஞ்சை வட்டாரங்களில் அடிக்கடி பார்ப்பது இயலாது !"

"அப்படியா ! நாளை அவசியம் அவரையும் திருக்கற்றளி வளாகத்துக்கு அழைத்து வாருங்கள் ! நீங்களிருவரும் அவரைப் பற்றிச் சொல்வதைக் கேட்கக் கேட்க அவரைப் பார்க்கவேண்டுமென்கிற அவா உண்டாகின்றது..."

"மழபாடியார் இல்லாமலா ? அவசியம் அவரையும் அழைத்து வருகிறோம். சரி - இங்கேயே நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டோம். சூரியன் மறைவதற்குள் கற்றளியின் பல பிரதேசங்களை சுற்றிப்பார்த்தாக வேண்டும் - முதலில் இளங்கோயில் வளாகத்திற்குச் செல்வோமா ?"

"சரி, நீங்கள் மூவரும் முதலில் அங்கு செல்லுங்கள். வட தளிச்சேரியிலிருந்து சிலர் வந்து என்னைப் பார்ப்பதற்காக நீண்ட நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள்... அவர்களை அனுப்பிவைத்துவிட்டு நானும் இளங்கோயிலுக்கே வந்துவிடுகிறேன் !" என்றபடி அங்கிருந்து கிளம்பினார் தென்னவன் மூவேந்த வேளார்.

நால்வரும் அங்கு உரையாடிக்கொண்டிருந்த நேரம் முழுவதும்

அவர்களை நோட்டமிட்டவாறே இருந்த ஒரு ஜோடிக் கண்கள், அவர்கள் நகரத் துவங்கிவிட்டதை அறிந்து சற்றே பரபரப்படைந்தன.

## அரிதாரத்தில் அரிகண்டன்

ஆச்சாரியார் வீட்டுத் திண்ணையில் காத்துக்கொண்டிருந்த வைத்தியர் மகன் அரிகண்ட தேவன் கோபம், அவஸ்தை, ஏமாற்றம், மனக்கிலேசம் என்று பல்வேறு விதமான மன உணர்ச்சிகளுக்கு ஆளாகியிருந்தான். அவன் எதிர்பார்த்ததுபோல் சீருடையாள் நண்பகலுக்குள் வந்து சேரவில்லை ! அது மட்டுமல்ல - எந்தத் தளிச்சேரிப் பெண்டையுமே அந்தப் பக்கம் காணவில்லை...

"எங்கே போய்த் தொலைந்துவிட்டார்களோ இந்தப் பெண்டுகள் !" என்று அவர்களை வாயார வைதான் அரிகண்டன்.

ஆச்சாரியாரின் வீட்டினுள்ளோ ஒத்திகையில் பங்குபெறப்போகும் கூத்தப் பெருமக்களுக்கு அரிதாதப் பூச்சு தடபுடலாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆச்சாரியார் தனது சிஷ்யகோடிகள் அனைவருக்குமே அந்த நாடகத்தில் ஏதோ ஒரு சிறிய / பெரிய பாத்திரம் வழங்கி கௌரவித்திருந்தாராகையால் இருநாழிகை நேரம் கழிந்தும் அரிதாரப் பூச்சுப் படலம் இன்னும் முடிந்தபாடில்லை. இதில் முக்கியப் பாத்திரம் ஏற்று நடிப்பவர்களுக்கு முதலில் அரிதாரம் பூச வேண்டுமா அல்லது துணைப் பாத்திரங்களுக்கு வேடம் முதலில் இடவேண்டுமா என்கிற சண்டை வேறு. குறிப்பாக நாடகத்தின் முதல் காட்சிகளில் இடம்பெறவேண்டிய சில நடிகர்கள் அரிதாரப் பூச்சை அவசர அவசரமாக முடித்துக்கொள்ளும் கவலையில் இருந்தார்கள்.

வாயிலில் காத்துக்கொண்டிருந்த அரிகண்டனுக்கு உள்ளே வரச்சொல்லி

ஆள்மேல் ஆள்வந்துகொண்டிருந்தது. அவனைா சாக்கு போக்குச் சொல்லிக்கொண்டு வாயிலிலேயே பழியாய்க் காத்துக்கிடந்தான். அவனைப்போலவே வேறு சிலரும் பற்பல சொந்தக் காரணங்களுக்காக அரிதாரப் பூச்சை தள்ளிப்போட்டுக் கொண்டிருந்தனர்.

இரண்டு நாழிகைக்கு மேல் கழிந்தும் அத்தனை நடிகர்கள் இன்னும் தயாராகவில்லை என்பதையறிந்த ஆச்சாரியார் "இன்னும் ஒரு நாழிகை நேரத்தில் ஒத்திகை துவங்கும் - எவன் வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி !" என்று கடைசி எச்சரிக்கை விட்டபின்தான் அரிகண்டன் உள்ளே நுழைந்தான். அவன் வீட்டினுள்ளே நுழைவதற்கும் எவரெவர் இன்னும்கூட அரிதாரம் பூசாமல் காலந்தாழ்த்திக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நேரில் அறியப் புறப்பட்ட ஆச்சாரியர் முற்றத்திலிருந்து வெளிப்படுவதற்கும் சரியாக இருந்தது !

"என்ன அரிகண்டா ! நாடகத்தில் நடிக்க இஷ்டமில்லையென்றால் சொல்லிவிடலாமே ! கடைசிவரை காலந்தாழ்த்தி ஏன் என்னைக் கழுத்தறுக்கிறாய் ?" என்றார் கடுகடுப்பில்.

ஏற்கனவே சீருடையாளைக் காணாமல் வெறுத்துப் போயிருந்த அரிகண்டனுக்கு மேற்கூறிய வார்த்தைகள் எந்தவிதமான உணர்ச்சிகளைத் தோற்றுவித்திருக்குமென்று நேயர்களே ஊகித்துக் கொள்ளலாம். வாழ்க்கையே ஒருநிமிடம் வெறுத்துவிட்டது அவனுக்கு ! அவரிடமே நேரிடையாக தளிப் பெண்டுகள் பற்றி விசாரித்துவிடலாம் என்றிருந்தவன் அவருடைய குரலிலிருந்த கடுகடுப்பால் வாய்திறவாமல் நின்றான்.

"உன்னுடைய வயதான நண்பராவது அரிதாரம் பூசிக்கொண்டு தயாராக

நிற்கிறாரா ?" என்றார் ஆச்சாரியார் விடாமல். அவருக்கு நாடகத்தில் பங்குபெறும் அத்தனை கூத்தர்களும் - அவர்களுடையது சிறிய வேடமானாலும் சரி / பெரிய வேடமானாலும் சரி - முன் ஒத்திகையில் இருந்தேயாக வேண்டும்.

சரிதான் ! நமக்கு இன்றைக்கு நேரம் சரியில்லை போலிருக்கிறது என்று நினைத்துக்கொண்டான் அரிகண்டன். ஆச்சாரியாருக்கு என்ன பதில் சொல்வது ? உண்மையில் ஆசான் எங்கு போய்த் தொலைந்தாரோ தெரியவில்லை - அவரும் நாடகத்தில் நடிக்கிறார் என்பதையே கிட்டத்தட்ட மறந்துவிட்டோம். அவர் ஆளையே காணவில்லையென்றால் ஆச்சாரியார் நாளை ஆசானை உள்ளேவிடக்கூட மறுத்துவிடுவார். அதனால் இப்போதைக்கு பொய் புகன்றுவைக்க வேண்டியதுதான்.

நல்லவேளையாக அந்த சமயத்தில் எவரோ அழைக்கவே அவன் பதில்சொல்லும்வரை காத்திராமல் ஏதோ முணுமுணுத்துக்கொண்டே ஆச்சாரியார் நகர்ந்துவிட்டார்.

அரிகண்டனுக்கு ஒரு விஷயம் புரியாத மர்மமாயிருந்தது. சிறிய வேடம் கட்டும் கூத்தர்கள்கூட தவறாமல் முதல்நாள் நாடக ஒத்திகையில் கலந்துகொள்ளவேண்டும் என்கிற கண்டிப்பான நோக்குடைய ஆச்சாரியர் தளிப்பெண்டுகளைப் பற்றி கவலைப்படாமல் இருக்கிறாறே...! அது எப்படி ? யோசிக்க யோசிக்க இது பற்றிய ஏதோ ஒரு முன்னேற்பாடு ஆச்சாரியாருக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கவேண்டும் என்கிற எண்ணம் அவனிடம் வலுப்பட்டது...ஒருவேளை அவர்களுக்கு மட்டும் இன்றைய ஒத்திகையிலிருந்து விலக்களித்துவிட்டாரா ஆச்சாரியர் ? அது சாத்தியமில்லையே - ஆச்சாரியாரின் பிடிவாதம் நாம் நன்கறிந்த

விஷயமாயிற்றே....

மேற்கொண்டு இதுபற்றி சிந்திக்க விடாமல் அவனைப் புற நிகழ்வுகள் ஆக்கிரமித்தன.

"வாருங்கள் மன்மதரே !" என்று அவனைக் கிண்டலாக அழைத்தார் கூத்தக் குழுவினருக்கு அரிதாரம் பூசிக்கொண்டிருந்த கலைஞர்களில் ஒருவர். ஓ, ஸ்ர் இராஜராஜ விஜயம் நாடகத்தில் அரிகண்டனுக்கு மன்மதன் வேஷமா ? சரிதான் - வேடப் பொருத்தம் மிகப் பிரமாதம் ! என்று நமக்கு நாமே எண்ணிக்கொள்கிறோம். அவனை மனையில் அமரவைத்து நடுநெற்றியில் குங்குமப் பொட்டிட்டு(1) முகத்தில் அரிதாரம் பூச ஆரம்பித்தார் அந்தக் கலைஞர்.

*(1) இன்றும்கூட கேரளக் கதக்களியாட்டத்தில் வேடமிட்டுக்கொள்ளும் கலைஞர் முதலில் பொட்டிட்டுக்கொண்டபிறகே அரிதாரம் பூச ஆரம்பிப்பது வழக்கமாக உள்ளது.*

சிறிது சிறிதாக அரிகண்டன் "மன்மதனாக" உருப்பெற்றான். மார்பில், கைகளில், தலையில் மலர் அலங்காரங்கள் சூட்டப்பெற்றன. முகத்தில் - குறிப்பாக கன்னப் பகுதிகளில் - மெலிதான சிவப்பு வர்ணம் கொடுக்கப்பட்டது. கைகளில் கரும்பு வில் - நிஜக் கரும்பையே வளைத்து வில்லாகத் தயாரித்திருக்கிறார்கள் போலும்.

அரிகண்டனுக்கு சற்று பெண்மையின் சாயல் முகத்தில் அதிகமாதலால் மன்மத வேஷம் அவனுக்கு கனகச்சிதமாக பொருந்திவிட்டது என்றுதான் கூறவேண்டும். பாவம் ! அவனுக்கிருந்த மனக்கிலேசத்தால் தன்னுடைய

வேஷப்பொருத்தத்தை அவனால் சரிவர இரசிக்க முடியவில்லை.

தன்னுடன் வேடம் கட்டிக்கொண்டிருந்த கூத்த நண்பர்களிடம் தளிச்சேரிப் பெண்டுகள் பற்றி மெதுவாக விசாரித்துப் பார்த்தான் அரிகண்டன். அவர்களிடமிருந்து ஒரு உருப்படியான விபரமும் தெரிந்துகொள்ள முடியவில்லை என்பதோடு மட்டுமல்லாமல் இத்தகைய விசாரிப்புக்காக அவர்களுடைய கிண்டல் பேச்சுக்களிலும் அகப்பட்டுக்கொள்ள வேண்டியதாகிவிட்டது. உண்மை என்னவென்றால் அவர்களில் ஒரு கோஷ்டியினருக்கு அரிகண்டனின் "தளிப்பெண்டு சிநேகிதம்" மற்றும் "செல்வாக்கால்" கடுமையான பொறாமை ஏற்பட்டிருந்தது. கேவலம் - நேற்றுப் பிறந்த பயல் நம்மோடு ஒட்டிக்கொண்டு ஆச்சாரியாரின் நன்மதிப்பையும் பெற்றுவிட்டானே என்கிற எரிச்சல் வேறு. அதனால் அவர்கள் தங்களுக்குத் தெரிந்த சிறு விபரங்களைக்கூட அரிகண்டனிடம் பகிர்ந்து கொள்ளாததில் வியப்பில்லை அல்லவா ?

இடையில் எவரோ வந்து "ஒத்திகை ஆரம்பித்துவிட்டது !" என்று அறிவித்துவிட்டுச் செல்லவே அரிகண்டன் உட்பட அங்கிருந்த அனைவரும் பரபரப்படைந்தனர்.

****************************************************************************************
*******

பலகாரக் கடையில் அமர்ந்திருந்த அம்பலவாணருக்கு கிட்டத்தட்ட பையித்தியம் பிடித்துவிடும் நிலை ஏற்பட்டிருந்தது. மழபாடியார்

சொல்லிக்கொடுத்ததுபோல் அவரும் வாணியஞ்சாவடியில் நுழைந்து வேண்டிய மட்டும் கூச்சலிட்டுவிட்டு அங்கு வந்து அமர்ந்துவிட்டார். ஆனால் மழபாடியாரையோ கடந்த ஒரு நாழிகை நேரமாகக் காணவில்லை ! தம்மை சிலைபோல அமர்த்தி உட்காரவைத்துவிட்டு எங்குதான் போய்த் தொலைந்தாரோ....

உண்மையில் தம்மை முழுவதுமாக ஒரு விஷயத்தில் ஈடுபடுத்தாமல் மழபாடியார் சிந்திப்பதிலும் செயல்படுவதிலும் அம்பலவாணருக்கு சற்று வருத்தம் இருந்தது. என்றாலும் மழபாடியாரின் ஒவ்வொரு சிந்தனையிலும் செயல்பாட்டிலும் ஒரு குறிக்கோள் இருப்பது பின்னால் தெரிய வருவதால் அவரால் அதிகம் பேசமுடியவில்லை.

பலகாரக் கடையில் காத்திருப்பதில் மற்றொரு வேண்டாத சிக்கலும் முளைத்தது. நொடிக்கொருதடவை கடையின் சிறுவன் வந்து "வேறு ஏதாவது வேண்டுமா ஐயா ?" என்று அங்கு அமர்ந்திருந்தவர்களைத் தொந்தரவு செய்துகொண்டேயிருந்தான். "வாங்குவதற்கு வேறு எதுவும் இல்லையென்றால் கிளம்ப வேண்டியதுதானே..." என்பதுபோல இருந்தது அவன் செய்கை. ஒருவேளை கடையில் அதிகம் கூட்டம் வம்பளந்துகொண்டு உட்காராமல் இருக்க கடை முதலாளி செய்த ஏற்பாடோ இது என்றுகூட நினைக்கவேண்டி வந்தது.

ஒரு கட்டத்தில் அந்தச் சிறுவனின் தொந்தரவு தாங்கமுடியாமல் கடைக்கு வெளியில் வந்து நின்றுகொண்டார் அம்பலவாணர். வேடிக்கை பார்த்தபடியே மற்றொரு நாழிகையும் கடந்துவிட்டது....அம்பலவாணருக்கு மேற்கொண்டு என்ன செய்வதென்று தெரியவில்லை. பேசாமல் எல்லாவற்றையும் உதறிவிட்டு துழாய்க்குடிக்குக் கிளம்பிவிடலாமா

என்றுகூட நினைத்தார்.

நல்ல வேளையாக அந்த முடிவை செயல்படுத்துமுன் மழபாடியார் வந்து சேர்ந்துவிட்டார். அவருடைய பரதேசிக்கோலம் அம்பலவாணரை திகைப்புக்குள்ளாக்கியது !

"என்ன ஐயா இது கோலம்..." என்பதாக பேச்சை ஆரம்பித்தார் அம்பலவாணர்.

"நிறைய சம்பவங்கள் நடந்துவிட்டன அம்பலவாணரே - கிளம்புங்கள் உடனடியாக...போய்க்கொண்டே பேசுவோம் !"

இருவரும் தத்தம் புரவிகளில் ஆரோகணித்துக்கொண்டு மீண்டும் ஆலமரப் பாதையில் விரைந்தார்கள். செல்லும் வழியில் சுருக்கமாக நடந்தவற்றை விவரித்தார் மழபாடியார்.

"அம்பலவாணரே - நம்மை மீறிய சக்தி ஒன்றுதான் நம் எல்லோரையும் எப்போதும் வழிநடத்திச் செலுத்திக்கொண்டிருக்கிறது என்கிற கட்சியைச் சேர்ந்தவன் நான் ! இந்த விவகாரத்தைப் பொறுத்த வரையிலும்கூட என் நம்பிக்கை வீண்போகவில்லை. இதுவரை பெரிதாக ஒன்றும் சாதிக்க முடியவில்லையென்றாலும் கொற்றவையின் பூரண அருள் நமது பணிக்கு உண்டு என்றே திடமாக நம்புகிறேன்... பாருங்களேன் ! இரண்டு நாட்களுக்கு முன்னர் இதே இடத்தில் நமது எதிரி நம் சேவகனை(2) அநியாயமாகப் படுகொலை செய்தான். இப்பொது அவனே எதிர்பாராத விதமாகப் பரலோகப் பயணம் புறப்பட்டு விட்டான்.... ஒரு வகையில் அவனை நாம் உயிரோடு பிடிக்க முடிந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

இன்னொரு வகையில் யோசித்துப் பார்க்கும்போது அவனை உயிரோடு நம்மால் பிடித்திருக்கவே முடியாது - அவனுக்கு இப்போது நேர்ந்த முடிவுதான் சரியானது - என்று தோன்றுகிறது. ஏனெனில் அகப்பட்டுக்கொள்ளும் சூழ்நிலை வந்தால் உயிரை சடுதியில் போக்கிக்கொள்ளும் உத்திகள் சேர நாட்டினருக்கு - குறிப்பாக காந்தளூர்ச்சாலை கடிகையில் பயின்ற ஒற்றர்களுக்கு -கைவந்த கலை - இதோ பாருங்கள் !"

*(2) ஒற்றன் என்கிற வார்த்தையை மழபாடியார் தவிர்ப்பதை நேயர்கள் கவனிக்கவும்*

மழபாடியார் புரவியின் வேகத்தை சற்றே மட்டுப்படுத்தி அம்பலவாணரிடம் ஒரு பொருளைக் கொடுத்தார்.

"மிகச் சிறிய கத்தி போலத் தெரிகிறது !"

"ஆம் - கத்திதான். ஆனால் இரண்டு விதங்களில் இந்தக் கத்தி விசேஷமானது. ஒன்று : இந்தக் கத்தியின் முனை - வழக்கமான சிறு கத்தியின் முனையைப் போலல்லாமல் கிட்டத்தட்ட ஊசியைப்போன்ற கூர்முனையைக் கொண்டிருக்கிறது பாருங்கள் ! இரண்டாவது : இந்தக் கத்தியின் முனை முழுவதும் கொடிய மலைநாட்டு விஷச்செடிகளின் சாறு தடவப்பட்டிருக்கிறது... இதோ சற்றே வண்ணம் மாறித் தெரியும் பகுதிதான் !கத்தியால் ஓங்கிக் குத்தவேண்டுமென்பதில்லை - லேசான சிறு கீறல்கூட ஆளைப் பரலோகத்திற்கு அனுப்பிவிடும். இது எதிரிகளைக் கொல்வதற்கு மட்டுமல்ல - சமயம் நேர்ந்தால் தங்கள் உயிரையும் சடுதியில் பிறருடைய கவனத்தைக் கவரா வண்ணம் மாய்த்துக்கொள்ளவும்தான் !"

அம்பலவாணருக்கு மெய் நடுங்கிற்று. போரில் வீரமாகப் போராடி உயிரை விடுவது ஒரு விதம் - ஆனால் மழபாடியார் சொல்லும் பிராணத் தியாகம் வேறு விதம்.

"அப்படியானால் கருநாகத்தால் தீண்டப்படாமல் அவன் உங்கள் கைகளில் அகப்பட்டுக்கொண்டிருந்தால் இதனால் தன் உயிரைப் போக்கிக்கொண்டிருப்பானல்லவா ?"

"நிச்சயம் அவ்வாறுதான் செய்திருப்பான் - அத்தகைய கௌரவமான மரணம்கூட அந்தக் கொடியவனுக்குக் கிட்டக்கூடாதென்றுதான் கொற்றவை அவன் உயிரைக் குடிக்க அந்த நாக சர்ப்பத்தை அனுப்பினாள் போலும் !"

"இவனுடைய மரணத்தினால் எதிரிகளின் திட்டம் பாதிக்கப்படுமா ?"

"நிச்சயம் கிடையாது ! அதற்குத்தானே இந்தப் பிராணத் தியாகத் திட்டங்களெல்லாம்... மேலும் இவனுடைய பணி துழாய்க்குடி சுற்றுப்புறங்களில்தான். தஞ்சையில் இவனுக்கு வேலை கிடையாது - அங்கு வேறு ஆட்கள் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்..."

"எப்படி இத்தனை உறுதியாகச் சொல்கிறீர்கள் ?"

"நம்முடைய எண்ணத்தின்படி இவர்கள் நாளைதான் தங்கள் கைவரிசையைக் காட்ட இருக்கிறார்கள். நாளைக்குத் தன்னுடைய பெருந்திட்டத்தை நிறைவேற்ற எண்ணங்கொண்டுள்ளவன் இன்று தஞ்சையை விட்டு வெகு தூரம் தள்ளி அமைந்திருக்கும் துழாய்க்குடியிலா

வந்து உட்கார்ந்துகொண்டிருப்பான் ? நிச்சயம் கிடையாது. நமது முக்கிய எதிரிகள் தஞ்சையில்தான் இருக்கிறார்கள். எத்தனை பேரென்று தெரியவில்லை. நீங்கள் அன்று கண்ட காட்சியை வைத்துப் பார்க்கும்போது குறைந்தபட்சம் இருவர் தஞ்சையில் இருக்கிறார்கள். அதில் ஒருவன் மாராயர் மாளிகையிலேயே வட்டமிட்டுக்கொண்டிருக்கிறான்....மற்றவன் ? மற்றவன் என்ன செய்துகொண்டிருக்கிறான் ?"

இந்தக் கேள்வியோடு மழபாடியார் பேசுவதை நிறுத்திக்கொண்டு மௌன சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். சர்ப்பத்தின் விஷக்கடியால் இறந்தவன் சடலம் இருக்கும் இடத்தை அடையும்வரை அவர் மேற்கொண்டு அதிகம் பேசவில்லை.

"கறுப்புத் துணியை நீங்கள்தான் போர்த்திவிட்டு வந்தீர்களா ?"

"ஆம் - பகலில் நரிகள் இந்தப் பகுதியில் வரமாட்டா என்று என்ன நிச்சயம் ?"

அம்பலவாணர் துணியை விலக்க - ஐயோ ! மிகக் கோரமாக அந்த உடல் நீலம் பாரித்துக் கிடந்தது !

"மிகக் கொடிய விஷ நாகம் போலும்..."

"ஆம் ! கிட்டதட்ட ஐந்தடி நீள நாகம் - அதனைக்கண்டு நானே சற்று கலங்கிவிட்டேன்..."

"இவனுடைய மெய்ப்பையை சோதித்தீர்களா ? புரவி என்ன ஆயிற்று ?"

"மெய்ப்பையில் சொல்லிக்கொள்ளும்படியாக ஒன்றுமில்லை - ஒரே ஒரு முத்திரை மோதிரத்தைத் தவிர. அது யாருடைய முத்திரை என்பது எனக்கு இன்னும் விளங்கவில்லை. புரவியின் கடிவாளத்தில் ஒரு சிறு பை தொங்கிக்கொண்டிருந்தது. அதில் சிற்சில அம்புகள் கத்திகள் தவிர மாட்டுத் தோலில் எழுதப்பட்ட இந்தப் படமும் கிடைத்தது...."

மழபாடியார் தன் மெய்ப்பையில் சொருகி வைத்திருந்த அந்தப் படத்தை எடுத்துக் கொடுக்க அம்பலவாணர் அதனைப் பிரித்தார்.



மழபாடியார் மீட்ட படம்

"??"

"என்ன, ஏதாவது தெரிகிறதா ?"

"இதென்ன மழபாடியாரே ?......ஒன்றுமே விளங்கவில்லையே ?"

"இதுதான் - இது ஒன்றுதான் இப்போதைக்கு நமக்கு அகப்பட்டிருக்கும் ஒரே தடயம் ! இதுதான் நமக்கும் அவர்களுக்கும் இடையில் இப்போதைக்கு இருக்கும் ஒரே கண்ணி - பாலம் ! இதனை வைத்துக்கொண்டுதான் எதிரிகளை அடையாளம் கண்டாக வேண்டும் அம்பலவாணரே !" என்றவாறு நீண்டதொரு பெருமூச்செறிந்தார் பரமன் மழபாடியார்.

**ஒத்திகை**

நாடக ஒத்திகை ஆச்சாரியாரின் வீட்டில் பிரமாதமாக ஆரம்பமாகிவிட்டது. ஆச்சாரியாரின் அணுக்க கோஷ்டியினர் மற்றும் நாடகத்தில் வேடங்கட்டுகிறவர்கள் தவிர வேறு எவரும் வீட்டிற்குள் அனுமதிக்கப்படவில்லை. நாடகத்தின் கதையை அரங்கேற்றம் வரை கட்டிக்காக்க உறுதிபூண்டிருந்த ஆச்சாரியாரின் நடவடிக்கைளில் அதுவுமொன்று. என்றாலும் இந்த ஒத்திகை விஷயம் எப்படியோ வெளியில் தெரிந்துபோய் அவருடைய வீட்டிற்கு வெளியே கும்பலொன்று கூடிவிட்டது. வீட்டிற்குள் நுழைய அனுமதி மறுக்கப்பட்டாலும் அந்த ஆர்வலர்கள் அவ்வப்போது வீட்டினுள்ளிருந்து எழும் பாடல்கள் மற்றும் இசைக்கருவிகளின் ஓசைகளை கேட்டவாறு தங்களை

சமாதானப்படுத்திக்கொண்டார்கள்.

ஆச்சாரியரின் கோபத்துக்கு பயந்துகொண்டு நாமும் ஒத்திகை நடக்கும் இடத்திற்கு நேரே செல்லாமல் வேடங்கட்டிக்கொண்டு தத்தம் காட்சிகள் வருவதற்காக தயாராக நிற்கும் கூத்தப் பெருமக்கள் கூடியிருக்கும் பின் அறைக்குச் செல்கிறோம்.

அறையில் அரிகண்டன் நிம்மதியின்றிக் காணப்பட்டான். ஆச்சாரியாருக்கும் மற்றவர்களுக்கும் முன்னால் மன்மதனாகவே மாறி நல்ல பெயர் எடுத்தாலன்றி "கலைத்துறையில்" காலூன்ற முடியாது என்பது அவனது திண்ணமான முடிவு. அதனால் பேசவேண்டிய வசனங்களையும் பாடல்களையும் ஒருமுறைக்குப் பலமுறை மனதில் சொல்லிப் பார்த்துக்கொண்டான்.

மனதின் அடியாழத்தில் சீருடையாள் உள்ளிட்ட தளிச்சேரிப் பெண்டுகளைக் காணாதது அவனுக்குப் பெருங்குறையாக இருந்தது. சீருடையாளுக்கு முன்னால் வேடம்கட்டி பிரமாதமாக நடித்துக் காண்பிக்கவேண்டும் என்று பலநாட்களாக நினைத்துக்கொண்டிருந்தவனுக்கு அது பெரிய ஏமாற்றமாக இருந்ததில் வியப்பில்லையல்லவா. பல்வேறு விதமான எண்ணங்கள் மனதில் எழும்பியவண்ணம் இருந்தன..

என்னதான் ஆகியிருக்கும் ? ஏன் இத்தனை முக்கியமான ஒத்திகைக்கு வராமலிருந்துவிட்டார்கள் ? ஆச்சரியார் தம் மனதை மாற்றிக்கொண்டு அந்தக் காட்சிகளை மாற்றியமைத்துவிட்டாரா ? அப்போது நாம் பேசப்போகும் வசனங்களும் மாறியாகவேண்டுமே...அப்படி எதுவும்

நடந்ததாகத் தெரியவில்லையே ?

எது எப்படியோ - தன்னுடைய குழப்பங்களுக்கெல்லாம் இன்னும் சிறிது நேரத்தில் விடை கிடைத்துவிடும். தான் மேடையில் தோன்றும் முதல் காட்சியில்தான் தளிச்சேரிப் பெண்டுகளும் தோன்றியாக வேண்டும். அப்போது என்ன நடக்கிறதென்று பார்ப்போம். அதுவரை பொறுமை காக்க வேண்டியதுதான்.

அவன் தோன்றவேண்டிய காட்சி நெருங்கும் சமயத்தில் ஆச்சாரியாரின் அணுக்க சீடன் ஒருவன் - "அடுத்த காட்சியில் மன்மதன் மற்றும் அப்ஸர ஸ்த்ரீகள் தோன்றவேண்டும்...அனைவரும் தயாராக இருங்கள் !" என்று அழைத்துவிட்டுப் போனான். "அப்ஸர ஸ்த்ரீகள்" பற்றிய குறிப்பு அரிகண்டனுடைய மனதில் பாலை வார்த்தது. அடுத்த சில நிமிடங்களில் அவன் அறையை விட்டுக் கிளம்பி ஒத்திகை நடக்கும் முற்றத்தினை அடைந்தான்.

முற்றத்தின் ஒரு பகுதியே மூன்று பக்கங்களிலும் தடுப்புக்களால் மறைக்கப்பட்டு மேடையாக்கப்பட்டிருந்தது. தடுப்புக்களில் மலர் அலங்காரங்களும் செய்யப்பட்டிருந்தன. மேடையின் பின்புறம் ஒரு துணிச்சீலையில் அந்த அந்த காட்சிக்கேற்ற பின்னணி ஓவியமாகத் தீட்டப்பட்டிருந்தது. மேடையின் தெற்குப் பகுதியில் அடுத்த காட்சியில் தோன்றப்போகும் நடிகர்கள் தயாராகக் காத்துக்கொண்டிருக்க, நடந்து முடிந்த காட்சியிலிருந்து வேளியேறும் கலைஞர்கள் வடக்கு முகமாக வெளியேறிக்கொண்டிருந்தார்கள். மேடைக்கு சற்று முன்புறம் வாத்திய மாராயர்களும் உவச்சப் பெருமக்களும் தத்தம் இசைக்கருவிகளுடன் அமர்ந்து நாடகத்தின் காட்சிக்கும் பாடலுக்கும் ஏற்ப பின்னணி

இசையமைத்துக்கொண்டிருந்தார்கள். ஒத்திகையின் முதல் வரிசையில் ஆச்சாரியார் ஒரு திண்டில் ஒய்யாரமாக சாய்ந்துகொண்டு அமர்ந்து நடப்பவற்கை கவனித்துக்கொண்டிருந்தார்.

மேடையின் தெற்கு முகமாகக் கூடிநிற்கும் கூத்தர்களுடன் அரிகண்டனும் சேர்ந்துகொண்டான். அடுத்த காட்சிக்கு அடுத்த காட்சியில் அவன் தோன்ற வேண்டும். முற்றத்திற்கு வரும்வரைகூட தளிச்சேரிப் பெண்டுகள் இன்னேரம் ஒருவேளை வந்து சேர்ந்திருக்கக்கூடும் என்கின்ற நப்பாசை அவனுக்கிருந்தது. ஆனால் மேடையின் எந்தப் பக்கத்திலும் அவர்கள் வந்து சேர்ந்திருக்கும் அறிகுறி தெரியாமலிருக்கவே ஏமாற்றம் அவன் நெஞ்சை கசக்கிப் பிழிந்தது.

அந்தக் காட்சி முடிந்துவிட்டது. அரிகண்டன் மேடைக்கு மிக அருகில் நின்றுகொண்டு அடுத்த காட்சியில் நுழையத் தயாரானான். சில நிமிடங்கள் கழிய - இதோ ! அவன் அறிமுகமாகும் காட்சி வந்துவிட்டது ! மேடையில் நுழைந்து கம்பீரமாக கரும்பு வில்லினை வலக்கரத்திலேந்தி நின்றுகொண்டான். அவனுக்கு ஜோடியாக இரதி வேடத்தில் ஒரு ஆண்பிள்ளை பெண் வேடம் கட்டிக்கொண்டு வந்து நின்றது.

மேடையின் முன்புறத்திரை விலக காட்சி ஆரம்பமானது. அவன் பேசிய வசனங்களையும் அந்தக் காட்சி நிகழ்வுகளையும் ஆச்சாரியாரின் கோபாவேசத்தை மனதில் கொண்டு நேயர்களிடம் இப்போதைக்குப் பகிர்ந்துகொள்ளாமல் விட்டுவிடுகிறோம். பல்வேறு நீண்ட வசனங்களையும் நன்றாகவே உணர்ச்சி வயத்துடன் பேசி கடைசியில் ஒரு பாடலையும் பாடி முடித்தான் அரிகண்டன்.

பாடல் முடிந்தவுடன் மேடையில் தளிப்பெண்டுகள் தோன்றியாக வேண்டும்... ஆனால் அவர்களைத்தான் காணவில்...

அட, பொறுங்கள் ! இதென்ன அதிசயம் ?

ஒரு மாயாஜாலம் நடந்ததுபோல் மேடையின் பின்புறம் அதுவரை பின்னணியாகச் செயல்பட்டுக்கொண்டிருந்த துணித்திரை சரேலென்று விலக அங்கு ஆறு தளப்பெண்டுகளும் - சீருடையாள் உட்பட - சகல அலங்காரங்களுடனும் கைகளில் மலர்களுடனும் திடீதென்று தோன்றி கைகளிலிருந்த மலர்களை ஆடியபடியே தூவி மேடையை வலம் வந்தார்கள் ! அவர்களுடைய இந்த திடும் பிரவேசம் அரிகண்டனை மட்டுமல்லாது பார்வையாளர்களாக அமர்ந்திருந்த பலரையும் அதிர்ச்சிப் பரவசத்திலாழ்த்தியது !

ஒரு கணத்தில் கரகோஷமும் ஜெயகோஷமும் முற்றமெங்கிலும் எழுந்தன..... ஆச்சாரியார் மட்டும் அதிக உணர்ச்சிவயப்படாமல் ஒரு பெருமிதப் பார்வையை அனைவரின் மீதும் வீசியதிலிருந்து அவருக்கு முன்னரே இந்த ஏற்பாடு தெரிந்த விஷயம் என்பதைப் புரிந்துகொள்கிறோம்.

அரிகண்டனுடைய நிலைமையைச் சொல்லவே வேண்டாம் - போதாக்குறைக்கு சீருடையாள் வேறு மேடையை வலம் வந்துகொண்டே ஆடும்போது ஓரக்கண்களால் அவனை நோக்கி ஒரு கணம் சிரித்து வைக்கவே நேராக சொர்க்கத்திற்கே சென்றுவிட்டான் அவன் !
சீருடையாளின் கொண்டை அலங்காரமும் அதில் செய்யப்பட்டிருந்த மலர் / முத்து வேலைப்பாடுகளும் - மார்பகங்களை மறைத்தும் மறைக்காமல்

குறுக்கே சென்ற குறுகிய பட்டாடையும் ஒடிந்து விழுந்துவிடுவதுபோன்ற மஞ்சள் பூசிய மெல்லிய பஞ்சிடையும் கடைவாய்ப் புன்னகையும் ஒன்றன் மேல் ஒன்றாக அவன்மீது மோதி ஆளையே கிறங்க அடித்தன.(1) ஒரு வழியாக சமாளித்துக்கொண்டு மேற்கொண்டு பேசவேண்டிய வசனங்களைப் பேசி முடித்தான் அரிகண்டன்.

*(1) இந்த வர்ணயையோடு கூடிய பெண்களை தரிசிக்க விரும்பும் நேயர்கள் தஞ்சை பெரியகோயிலின் சாந்தாராச் சுற்றுக்கு வருகை புரிந்து அங்கு தீட்டப்பட்டிருக்கும் சிதம்பர வழிபாடு ஓவியத்தை கண்ணுறும்படி கோருகிறோம்*

காட்சி முடிந்ததும் மீண்டும் முற்றத்தில் கரகோஷம் எழுந்தது.

நாளை இதே காட்சி முடிந்ததும் பேரரசர் அனைவருக்கும் முன்னால் முத்து மற்றும் வைரங்கள் பதித்த வடங்களை தன் கழுத்திலிருந்து எடுத்து தனக்கு அணிவிப்பதாக ஆச்சாரியார் கற்பனை செய்துகொண்டார்.

**************************************************************************************

*******

அம்பலவாணரும் மழபாடியாரும் ஆதிச்ச சேர்வையைச் சந்தித்து இறந்தவன் சடலத்தை எரிப்பதற்குரிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அவசர அவசரமாகத் தஞ்சைக்குக் கிளம்பினார்கள்.

தன் கண்காணிப்பிலிருக்கும் வட்டாரத்தில் இரண்டாவது முறையாக மரணம் நிகழ்ந்ததைக் கேள்விப்பட்டு ஆதிச்ச சேர்வை கலங்கிப்போய்விட்டார்... போகிற போக்கில் எங்கே விசாரணைக்காக தஞ்சைக்கே வரச்சொல்லி தமக்கு அழைப்பு வந்துவிடுமோ என்ற பயம் அவருக்கு ஏற்பட்டுவிட்டது ! அவருக்கு பலவிதமான சமாதானங்கள் சொல்லித் தேற்றிவிட்டுக் கிளம்புவதற்குள் மழபாடியாருக்கு உன்பாடு என்பாடு என்றாகிவிட்டது.

தஞ்சைக்கப் போகும் வழியில் நண்பர்கள் அதிகம் பேசிக்கொள்ளவில்லை. இருவருமே அவரவர் சிந்தனைகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். தாம் கால்வைத்த விவகாரம் மேலும் மேலும் சிக்கலாகவும் ஆபத்து நிறைந்ததாகவும் ஆகிவருவதை அம்பலவாணர் உணர்ந்தார். இதில் தமக்கு மிகப் பெரிய கடமை ஒன்று இருப்பதைப்போலவும் அதற்காகவே தாம் இந்த நிகழ்ச்சிகளில் வலுக்கட்டாயமாக இழுத்துவிடப்பட்டதைப்போலவும் அவருக்குத் தோன்றியது. அரசியல் உலகில் பாவ புண்ணியங்களுக்கெல்லாம் அதிக மரியாதையில்லை போலும் ! என்று நினைத்துக்கொண்டார் அவர். காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள மிக நீசத்தனமான கொலைபாதங்களில்கூட தயங்காமல் மனிதர்கள் ஈடுபடுவது அவருக்கு ஒருவித அருவருப்பையே உண்டாக்கிவிட்டது எனலாம். மேற்கொண்டு எதுவும் பேசத்தோன்றாமல் புரவியை விட்டுக்கொண்டு சென்றார்.

அம்பலவாணரின் எண்ணங்கள் இந்த மாதிரியாக அமைந்திருந்ததென்றால் மழபாடியாரின் எண்ணங்களோ துழாய்க்குடியில் நடந்து முடிந்துவிட்ட நிகழ்ச்சிகளை அக்கு வேறு ஆணி வேராக அலசி ஆராய்ந்துகொண்டிருந்தன.

நாகத்தால் தீண்டப்பட்டு இறந்தவன் யார் ? மொத்த சதித்திட்டத்தில் அவனுடைய பங்கு என்ன ? இவனுடைய மரணம் மற்ற சதிகாரர்களை - குறிப்பாக தஞ்சையிலுள்ளவர்களை - எட்டிவிடுமா ? அதற்கான சாத்தியக்கூறுகள் என்னென்ன ?

நாளை ஒருவேளை இவன் தஞ்சையில் மற்றவர்களை சந்திப்பதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால் ? இவன் வராவிட்டால் அவர்கள் தங்கள் திட்டத்தை மாற்றிக்கொண்டு விடுவார்களா என்ன ?

மழபாடியாருக்கு அடிப்படையாக இரண்டு நோக்கங்கள் முக்கியமானவையாகத் தெரிந்தன.

முதலாவது - அசம்பாவிதம் எதுவும் நடவாமல் தடுக்கப்படவேண்டும். அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தால் அவை வெற்றிகரமாகக் கண்டறியப்பட்டு முறியடிக்கப்பட வேண்டும்.

இரண்டாவது - இது முதலாவதை விட முக்கியமானது என்று சொல்லலாம் - இந்த சதியில் ஈடுபட்டுள்ள அத்தனை நபர்களையும் கண்டறிந்து முடிந்தவரையில் உயிரோடு பிடிக்க வேண்டும். ஒருவன் உயிரோடு அகப்பட்டால்கூடப் போதுமானது.... அவனிடமிருந்து சிறிதளவு செய்திகளையாவது தெரிந்துகொண்டு இந்தச் சதியின் ஆணிவேர் எங்கிருக்கிறது என்று கண்டறியலாம்.

இந்தக் கொலைகாரர்களை தகுந்த முறையில் தயாரித்து அனுப்பியுள்ள அந்த சூத்திரதாரி யார் என்பதை முக்கியமாகக் கண்டறிந்தே

ஆகவேண்டும். இல்லையேல் இதுபோன்ற முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டேயிருக்கும்... நாமும் இவர்களின் கண்ணாமூச்சி ஆட்டத்தில் கண்களைக் கட்டிக்கொண்டு எப்போது எந்தத் திசையிலிருந்து ஆபத்து வருமோ என்று கலங்கியபடி தேடிக்கொண்டேயிருக்க வேண்டியதுதான் !

துழாய்க்குடியானை உயிரோடு பிடிக்க முடிந்திருந்தால் எத்தனையோ நன்றாக இருந்திருக்கும். ஆனால் அது இயலாத காரியம் என்பதையும் நாம் அறிவோம். ஒருவேளை நேற்று நம்மிடம் அகப்பட்டுக்கொள்ளக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருந்தால் நிச்சயம் அவன் உயிரோடிருந்திருக்க மாட்டான். இத்தனை உறுதிமிக்க திறமைமிக்க சதிகாரர்களை உருவாக்கியவன் எப்பேர்பட்டவனாயிருப்பான் ! எங்கோ ஒரு கோடியில் அமர்ந்துகொண்டு எங்கோ நடக்கும் நிகழ்வுகளை எப்படியெல்லாம் ஆட்டி வைக்கிறான் அவன் ! அவனுடைய இருப்பிடம் எதுவாயிருக்கும் ? அவனுடன் சேர்ந்துள்ள கூட்டத்தார் எத்தனைபேர் ? இது சேரதேசத்தில் மையம்கொண்டுள்ள சதிக்கும்பல் என்னும் மாராயரின் சந்தேகம் சரியானதுதானா ?

இப்போதைக்கு நமக்கு அகப்பட்டுள்ள உறுதியான தடயம் அந்த மாட்டுத்தோல் படம்... அது என்னவாயிருக்கும் ? வரையப்பட்டுள்ளது என்ன என்பதைப் பற்றி உறுதியான முடிவுக்கு வர இயலவில்லை - உண்மையில் அது என்ன ? அது ஒரு பொருளின் படமா அல்லது ஏதேனும் இரகசியச் செய்தியை தாங்கி நிற்கும் மடலா ? யார் இதை வரைந்து இவனிடம் கொடுத்திருப்பார்கள் ? இதனை அவன் வெகு முக்கியமாக தனது மெய்ப்பையிலேயே வைத்திருந்ததற்குக் காரணம் என்ன ?

படம் ஏன் முழுமையாக வரையப்படாமல் ஒரு பாதி மட்டும் வரையப்பட்டுள்ளது ? ஒரு பாதியை வைத்து மறுபாதியை ஊகித்துக்கொள் ! என்பதாகக் கொள்வோமா ? முழுமையடைந்தால் இந்தப் படம் எதனைக் குறித்திருக்கும் ? சூரிய சந்திரர்களையா ? ஒருவேளை சூரியனும் சந்திரனும் சந்தித்துக்கொள்ளும் கிரகண காலம்தான் சங்கேதமாகக் குறிக்கப்படுகிறதா என்ன ? இந்தப் படத்தை மாராயரிடமும் மற்றவர்களிடமும் காண்பித்து அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

நிகழ்ச்சிகள் பலவாறாக நடந்துகொண்டிருக்கின்றன - ஆனால் இன்னும் இவற்றையெல்லாம் இணைக்கும் கண்ணி - அந்த அடிப்படைத் தத்துவம் - நமக்குக் கிட்டமாட்டேன் என்கிறதே ! நடந்து முடிந்துவிட்ட நிகழ்ச்சிகள் தொடர்பற்றவையாகத் தோன்றினாலும் அது உண்மையில்லை. இவை எல்லாவற்றையும் ஏதோ ஒன்று இணைக்கிறது - அது எது ?

உச்சி வெய்யில் மேற்கில் சாய ஆரம்பித்து மேற்கு வானமே அக்கினிப் பிழம்பாகக் காட்சிதந்துகொண்டிருந்த முன்மாலை வேளையில் தஞ்சைக்கோட்டையின் மதில் அவர்கள் கண்களுக்கு தூரத்தே புலனாயிற்று.

## காயா? பழமா ?

கோட்டைக்குள் நுழையும் வேளையில் மழபாடியாரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டார் அம்பலவாணர். தன்னுடைய அரண்மனைவரை

வந்துவிட்டுப் போகும்படி மழபாடியார் வற்புறுத்தியும் அவர் மறுத்துவிட்டார்.

தன்னுடைய பேத்தி செங்கமலத்தைக் காணவேண்டுமென்று அவர் மனம் துடிதுடித்துக்கொண்டிருந்தது. பாவம் குழந்தை ! கிளையூர் வைத்தியர் நன்றாக கவனித்துக்கொள்வார்தான்... என்றாலும் வியாதியஸ்தர்கள் வந்துவிட்டால் அவர்களுக்கு மருத்துவம் செய்வதிலும் அவர்களுடன் வம்பளந்து கொண்டிருப்பதிலும்தான் அவருக்கு பிரியம் அதிகம் - குழந்தை ஒழுங்காக சாப்பிட்டாளா என்று கவனிக்க அவருக்கு நேரமிருக்காது...

கிளம்பிவிட்ட மழபாடியார் மீண்டும் திரும்பினார் - "அம்பலவாணரே ! உங்களிடமிருந்த முத்திரை மோதிரத்தை நான் வாங்கிக்கொண்டு விட்டதால் நாளை கோட்டைக்குள் நுழைவதில் பிரச்சனைகள் ஏற்படும். அதனால் நான் மாராயருடைய இலச்சினை பதித்த மோதிரமொன்றைத் தருகிறேன் - அதனைக் காட்டினால் கோட்டை வாயிலுக்குள் உங்களை விட்டு விடுவார்கள் - நமது அரண்மனைக்கு வருவதிலும் உங்களுக்கு சங்கடங்கள் இருக்காது !"

"நாளை உங்களை சந்திக்க இயலுமா ?"

"இல்லை - நாளை என்னுடைய பணி மிகக் கடுமையானதாக இருக்கும் - அதனால் நானே உங்களை கூப்பிட்டனுப்புகிறேன் - நீங்கள் கிளையூர் வைத்தியர் வீட்டில்தானே நாளை முழுவதும் தங்கியிருப்பீர்கள் ?"

அம்பலவாணர் சற்றே வெட்கப்பட்டார்..!

"அது..வந்து...ஐயா... நாளை மதியத்திற்குமேல் குழந்தையையும் கூட்டிக்கொண்டு சதய நாள்விழாவைக் காண வரலாமென்றிருக்கிறேன். மேலும்.. நாளை திருக்கற்றளி வளாகத்தில் நடக்கப்போகும் நாடகத்தில் அடியேனுக்கும் ஒரு சிறு வேஷம் கட்ட ஏற்பாடாகியிருக்கிறது..!"

தன்னுடைய பல பிரச்சனைகளையும் மறந்துவிட்டு மழபாடியார் மனதார சிரித்தார்.

"ஆஹா ! உங்களுக்கு நாடகத்தில் நடிப்பதெல்லாம்கூட வருமா ? மிக நல்லதாகப் போயிற்று ! அப்போது மாலை திருக்கற்றளி வளாகத்திலேயே உங்களை சந்திக்கிறேன் - நாடக கோஷ்டியாரிடம் அம்பலவாணரைக் கூட்டிக்கொண்டுவாருங்களென்றால் உங்களை பிடித்துக்கொண்டு வந்துவிடப் போகிறார்கள் !"

"ஐயா - நாடகக் குழுவிற்கு நான் புதியவன் - அதனால் எனது நண்பன் அரிகண்ட தேவனை கூப்பிட்டனுப்பி அவன் மூலம் என்னை அடையலாம் !"

"அப்படியே செய்கிறேன் ! அம்பலவாணரே - நீங்கள் சோழராஜ்ஜியத்திற்குச் செய்திருக்கும் உதவி கொஞ்சநஞ்சமல்ல ! அதற்குரிய பலன் கிட்டாமல் போகாது - வருகிறேன் !"

"வந்தனம் ஐயா !"

ஒரு குழந்தையின் குதூகலத்துடன் கிளையூர் வைத்தியரின் வீட்டிற்குக்

கிளம்பினார் அம்பலவாணர். அவரைப் பொறுத்தவரை அவருடைய கடமை முடிந்தது - இனி மற்றவற்றை மழபாடியார் பார்த்துக்கொள்வார் ! ஒரு கணத்தில் துழாய்க்குடி நிகழ்வுகளையெல்லாம் துடைத்தெறிந்துவிட்டு செங்கமலத்தை மட்டும் மனதில் நிறுத்தி வேகவேகமாக வீட்டை அடைந்தார் அம்பலவாணர்.

வீட்டில் அவருக்கு ஏமாற்றமே காத்திருந்தது. செங்கமலம் அவரைப் பார்த்தவுடன் ஓடிவந்து "தாத்தா !" என்று கட்டிக்கொண்டுவிட்டு மறுகணம் தன் தோழிகளுடன் விளையாடச் சென்றுவிட்டாள் ! அவளுடைய விளையாட்டு அவளுக்கு...

தன்னை நேற்றிரவு பார்க்காமல் சரியாகத் தூங்கியிருக்க மாட்டாள் - சாப்பிட்டிருக்க மாட்டாள் என்றெல்லாம் கற்பனை செய்து வைத்திருந்த அம்பலவாணருக்கு சிறிது ஏமாற்றமாகவே இருந்தது.... "குழந்தைதானே - அவளுக்கென்ன தெரியும் !" என்று தனக்குத்தானே சமாதானம் செய்து கொண்டார் அவர்.

குளித்துவிட்டு சிரம பரிகாரங்களெல்லாம் முடிந்தபின் என்ன செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை. அதுவரை அமுக்கி வைக்கப்பட்டிருந்த அவரது நாடக ஆர்வம் போர்வையை உதறிக்கொண்டு வெளியில் வந்து இராட்சத உருவமெடுத்து நின்றது !

ஒரு நடை போய் அரிகண்டனை பார்த்துவிட்டு வந்தால் என்ன என்று முதலில் மனதின் ஓரத்தில் லேசாக ஒரு எண்ணம் எழுந்தது. சில கணங்களில் அதுவே மிகப் பெரியதாகி அரிகண்டனை கண்டு நான்கு வார்த்தைகள் பேசினால்தான் அன்றிரவு தூக்கம் வரும் என்ற வளர்ச்சியை

அடைந்து விட்டது. தலைப்பாகையை இறுக்க முடிந்து கொண்டு படைவீடு வரை சென்றுவிட்டு வருகிறேன் என்று வைத்தியரிடம் பொய் புகன்றுவிட்டு சிறிது நேரத்தில் வீட்டிலிருந்து கழன்றுகொண்டார் அம்பலவாணர்.

***************************************************************************************
*******

ஆச்சாரியாரின் வீட்டில் ஒத்திகை கனஜோராகத்
தொடர்ந்துகொண்டிருந்தது.

தன்னுடைய வேடத்தை சிறப்பான முறையில் செய்து முடித்துவிட்ட திருப்தி அரிகண்டன் முகத்தில் தெரிந்தது. மற்ற எல்லோருக்கும் மேலாக ஆச்சாரியாரே அவனுடைய வேடம் சிறப்பாக அமைந்துவிட்டதாகச் சொல்லிவிட்டதால் அவன் தலைகால் புரியாத உலகத்தில் இருந்தான். ஆச்சாரியாரிடமே நல்ல பெயர் வாங்கிவிட்டதால் நாடக உலகில் தன் சிறப்பான எதிர்காலத்தை தடுக்கும் சக்தி எவருக்குமே இல்லையென்பதாக இறுமாந்தது அவன் மனம். இருக்கட்டும் ! இருக்கட்டும் ! இந்த நாடகம் மட்டும் சிறப்பாக நடக்கட்டும்... ஒரே நாளில் நமது பெயர் சோழ தேசம் முழுவதும் தெரிந்துவிடப் போகிறது - அதற்குப்பிறகு நம்மை உதாசீனம் செய்த பயல்களெல்லாம் - நமது வைத்தியத் தகப்பன்கூடத்தான் - நம்மை அண்ணாந்துதான் பார்த்தாகவேண்டும் !

வீட்டில் கும்பல் அதிகமாக இருந்ததால் சீருடையாளோடு நான்கு வார்த்தைகள் தனியே பேசமுடியவில்லைதான் - என்றாலும் அவளுடைய

புன்னகை ஒன்றே அவனுடைய அப்போதைய நிலைமைக்கு போதுமானதாக இருந்தது.

பெரிய நடிகனாக வளரப்போவதால் அதற்குரிய குணாதிசயங்களையும் வளர்த்துக்கொள்ள வேண்டுமல்லவா ? குறிப்பாக நாள் முழுவதும் வாய் நிறைய வெற்றிலையைக் குதப்பியபடியே பல பெரிய நடிகர்களும் காட்சி தருவதை அவன் கண்டிருக்கிறான் - அதில் சிறப்பான வருமானமுடைய சிலர் வெள்ளி ஒரு வெற்றிலைப் பெட்டியும் அதற்குத் துணையாக வெள்ளிச் சொம்பில் தண்ணீரும் அதனைக் கூடவே சுமந்துகொண்டுவர ஆட்களையும் வைத்துக்கொள்வதுண்டு. இப்போதைக்கு பெட்டி சுமக்கும் ஆட்களெல்லாம் வேண்டாம் - வெறும் வெற்றிலை போதும் - என்ற முடிவுடன் ஒரு கவுளி வெற்றிலை மற்றும் பாக்கை எடுத்துக்கொண்டு வீட்டிற்கு வெளியே வந்தான் அரிகண்டன். வேடத்துடன் வெளியில்செல்லக்கூடாது என்கிற ஆச்சாரியாரின் கட்டளை இருந்ததால் (இதுவும் நாடகத்தின் கதை வெளியில் தெரியாமலிருக்க செய்யப்பட்ட ஏற்பாடாம் !) தன்னுடைய கரும்பு வில், கிரீடம் மற்றும் அணிகலன்களை தனியே கழற்றிவைத்துவிட்டுத்தான் வந்தான் அரிகண்டன்.

என்னதான் வேடத்தைக் கலைத்துவிட்டாலும் முகத்தில் இன்னும் ஒப்பனை பாக்கி இருந்ததால் நாடகத்தில் அவனும் ஒரு நடிகன்தான் என்று வெளியில் கூடியிருந்த கும்பலுக்குத் தெரிந்துவிட்டது ! அவன் வீட்டிற்கு வெளியில் வந்து நின்றதும் கூட்டத்தில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது (1). சிலர் அவனை பெரும் நடிகன் என்று எண்ணிக்கொண்டு ஆஹாகாரம் செய்தார்கள்.... வேறு சிலர் இவன் சிறிய வேடக்காரனாய் இருப்பான் - அதனால்தான் வெளியில் வந்து நிற்கிறான் - என்று தமக்குள் பேசிக்கொண்டார்கள். கும்பலிலேயே தைரியமுள்ள சிலர் அவனை

நெருங்கி பேசவும் துணிந்தார்கள்.

*(1) இன்றைக்கு நடிகர்கள் மீதும் கலைத்துறையினர் மீதும் தமிழர் கொண்டிருக்கும் கவர்ச்சியில் சிறிதளவாவது நாடகக் கலை செழித்தோங்கிய சோழர் காலத்தில் இருந்திருக்கும் என்று கொள்வதில் தவறில்லை அல்லவா ?*

அவர்கள் அனைவரையும் தன்னுடைய அலட்சியப் பார்வையில் புறந்தள்ளினான் அரிகண்டன். அவனுக்கு அந்தக் கணத்தில் கலைத்துறையினர் பலருக்கும் ஏற்படும் கர்வம் மனதில் ஏற்பட்டுவிட்டது என்றுதான் கூறவேண்டும். அதிக நேரம் வெளியிலிருந்தால் தனக்கு மரியாதை இருக்காது என்பதைப் புரிந்துகொண்டு வேகவேகமாக உள்ளே திரும்புகையில்தான் அம்பலவாணரின் தலை கூட்டத்தில் தெரிந்தது. கும்பலுக்கு முன் அவரை "ஆசானே!" என்று விளிப்பதற்கு அவன் மனம் தயங்கியது ! அதனால் அவரை மட்டும் உள்ளே விடும்படி ஆச்சாரியார் வீட்டுக் காவலனிடம் சொல்லிவிட்டு மீண்டும் ஒத்திகை நடக்கும் இடத்திற்குச் சென்றான் அரிகண்டன்.

அரிகண்டன் தன்னை கண்டபின்னும் ஒன்றும் சொல்லாமல் வீட்டிற்குள் நுழைந்ததை வேறுவிதமாக அம்பலவாணர் எடுத்துக்கொண்டார். "அவனுடைய கோபம் நியாயமானதுதானே ! நேற்று எத்தனை சிரமத்திற்கிடையில் தமக்கொரு வேடத்தை அவன் வாங்கித் தந்தான் - ஒத்திகைக்கு சரியாக வந்துவிடும்படி எத்தனை முறை வற்புறுத்திச் சொன்னான் ! இருந்தும் அவனிடம் ஒரு வார்த்தைகூட கூறாமல் நாம் பாட்டிற்கு துழாய்க்குடி சென்று விட்டோம் - அதனால் அவனை ஆச்சாரியார் திட்டினாலும் திட்டியிருக்கலாம் - அந்தக் கோபம்

போலிருக்கிறது ! எனவே அவனுடைய கோபத்தைக் குறைப்பதே தன்னுடைய தலையாயக் கடமையென்பதாக நினைத்துக்கொண்டு ஆச்சாரியார் வீட்டுக்குள் நுழைந்தார் அம்பலவாணர்.

**************************************************************************************
*******

அம்பலவாணரை கோட்டை வாயிலில் பிரிந்த மழபாடியார் நேராக மாராயர் மாளிகைக்குச் சென்றார். அங்கு மாராயரைத் தவிர தித்தனையும் பூபலனையும் முடிந்தால் சந்தித்து விபரங்கள் பெறவேண்டியிருந்தது.

மழபாடியார் மாளிகையை அடைந்த நேரத்தில் மாராயர் அலுவல் நிமித்தமாக அரசவைக்குக் கிளம்பும் அவசரத்திலிருந்தார். அவரிடம் மழபாடியார் வந்துள்ள செய்தி தெரிவிக்கப்பட்டது. அரசவைக் கூட்டத்திற்கு சிறிது நேரம் தாமதமாக வருவதாக முறியனுப்பிவிட்டு பரமன் மழபாடியாரை தன்னுடைய பிரத்யேக அறையில் சந்தித்தார் மாராயர்.

இருவரும் கட்டித்தழுவி முகமன் கூறிக்கொண்டார்கள்.

"என்ன ஆயிற்று ? விஷயம் காயா பழமா ?"

"காயென்றும் சொல்வதற்கில்லை - பழமென்றும் சொல்வதற்கில்லை. இரண்டும் கெட்டான் நிலையில்தான் காரியம் நிற்கிறது..."

"என்ன பரமா - நாளை சதயத்திருநாள் ! இன்றுவரை உறுதியாக சதி தெளிவடையவில்லையென்றால் அது ஆபத்தாயிற்றே..."

"மாராயரே ! நான் என்னுடைய நாற்பது சொச்சம் வாழ்க்கையில் எத்தனையோ சிக்கல்களையும் பிரச்சனைகளையும் சந்தித்திருக்கிறேன் ! ஆனால் இந்தப் பிரச்சனை போன்று வழுக்கிக்கொண்டு செல்லும் காரியத்தை இதுவரை கண்டதில்லை - நான் எத்தனையோ முயன்றும் கண்ணாமூச்சி காட்டிக்கொண்டிருக்கிறது இந்தப் புதிர் !"

"சரி - விஷயங்களை சுருக்கமாகச் சொல் - நான் அரண்மனைக்கு ஒரு அலுவல் நிமித்தம் அவசரமாகச் செல்லவேண்டியிருக்கிறது !"

மழபாடியார் மாராயர் தனக்குப் பணியிட்ட நாளிலிருந்து நடந்த விஷயங்களை வரிசைக்கிரமமாக - சுருக்கமாக - விளக்கினார்.

மாராயர் அவசரத்தில் இருந்ததால் அத்தனை தகவல்களையும் சரிவர உள்வாங்கிக்கொள்ளவதில் சிரமம் ஏற்பட்டது. அது மழபாடியாருக்கும் புரிந்தது.

"மாராயரே - நீங்கள் இப்போது அரண்மனைக்குச் செல்லுங்கள் ! இன்னும் ஒரு ஜாம நேரத்தில் உங்களையும் மற்றவர்களையும் மும்முடிச்சோழன் திருமாளிகையின் மந்திராலோசனை மண்டபத்தில் சந்திக்கிறேன் - மேற்கொண்டு அங்கே பேசிக்கொள்வோம் !"

"நீ சொல்வதுதான் சரி - மனம் பரபரப்பில் இருக்கிறது ! இரவு

சாவகாசமாகப் பேசிக்கொள்வோம் ! இப்போது நீ சென்று சிரம பரிகாரிங்கள் செய்துகொள் - நான் கிளம்புகிறேன் !"

"சரி !"

மாராயர் கிளம்பியதும் மழபாடியாருக்கு உடனே தன்னுடைய மாளிகைக்குச் செல்வதா அல்லது அங்கேயே பூபலன் மற்றும் தித்தனை சந்திப்பதா என்கிற கேள்வி எழுந்தது. நாள் முடிந்து இரவு நேரப் பணிகள் துவங்க சிறிது நேரமே இருந்ததால் இருவரும் விரைவில் மாராயர் மாளிகைப் பணியிலிருந்து விடுவிக்கப்படுவார்களென்று எதிர்பார்த்தார் அவர்.

உக்கிராண அறைப்பக்கம் நின்றுகொண்டு சற்று நோட்டமிட்டார். உள்ளே தித்தன் ஒரு பெரிய பாத்திரத்தில் எதையோ கிளறிக்கொண்டிருப்பது தெரிந்தது.அதற்குள் உக்கிராண அறையின் பிரதான அலுவலர் வந்து மழபாடியாரிடம் என்ன ஏதென்று விசாரித்தார். அவரிடம் "நான் பரமன் மழபாடியானான மும்முடிச் சோழன் ! இன்னும் சிறிது நேரத்தில் என்னுடைய மாளிகைக்கு உங்கள் அலுவலரை விட்டு இரண்டு இரவு உணவுத் தட்டுகள் கொடுத்தனுப்புங்கள் ! அப்படியே உங்கள் நந்தவனத்திலிருந்து சிறிதளவு பூக்களையும் அனுப்பி வையுங்கள் !" என்றார் உரத்த குரலில். அவருடைய உத்தரவு உக்கிராணத்து அலுவலனை குழப்பினாலும் உள்ளே பாத்திரத்தை கிளறிக்கொண்டிருந்த தித்தனுக்கு செய்தி முழுவதும் புரிந்தது.

****************************************************************************************
*******

"என்ன ஆசானே ! என்ன ஆயிற்று தங்களுக்கு ! காலையிலிருந்து ஆளைக் காணவில்லை ! எப்போது வருவீர்கள் என்று செய்தியனுப்பவுமில்லை - இன்றைய ஒத்திகை எத்துணை முக்கிமானது என்று நேற்றே கூறியிருந்தேனல்லவா ?"

"அரசாங்க அலுவல்களில் இதெல்லாம் சகஜமப்பா - இதனால் உனக்கு தொந்தரவு நேர்ந்திருந்தால் மன்னித்துக்கொள் !" என்றார் அம்பலவாணர் கூப்பிய கரங்களுடன்.

"என்ன ஆசானே இது - பெரிய பெரிய வார்த்தைகளெல்லாம் சொல்கிறீர்கள் ! நான் பிறந்த நாள் முதல் என்னை நீங்கள் அறிவீர்கள் - நீங்களாவது என்னிடம் மன்னிப்புக் கேட்பதாவது !" என்று அரிகண்டனும் குழைந்தான். உண்மையில் அவனுடைய வருத்தமெல்லாம் அம்பலவாணர் அருகிலிருந்து தன்னுடைய நாடகப் பிரதாபங்களையெல்லாம் பார்த்து வைத்தியரிடம் நல்லபடியாக நான்கு வார்த்தைகளை காதில் போட்டு வைக்கவில்லையே என்பதாகத்தான் இருந்தது.

"கிடக்கட்டும் - ஒத்திகையெல்லாம் எப்படி நடந்தது ? உன்னுடைய வேடம் எவ்வாறாக அமைந்திருந்தது ? பாடலும் வசனங்களும் நன்றாகப் பேசினாயா ?"

"எல்லாம் மிகப் பிரமாதம் ஆசானே - எல்லோரும் என்னுடைய வேடப்பொருத்தத்தைப் பாராட்டிப் பேசினார்கள் ! ஆச்சாரியாரே ஒரு கணம் என்னுடைய நடிப்பில் அசந்துவிட்டார் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன் !"

அரிகண்டன் பேசப்பேச அம்பலவாணரின் கண்கள் விரிந்தன... தேவையில்லாத சிக்கலில் காலை வைத்துவிட்டு முக்கியமான நாடகக் காட்சிகளை இழந்துவிட்டோமே என்று அவருடைய மனம் வருந்தியது. அதற்கும் மேலாக இன்றைய ஒத்திகையில் கலந்துகொள்ளாததினால் நாளை நாடகத்திலிருந்து விலக்கி வைத்துவிடுவார்களோ என்கிற கவலையும் எழுந்தது. தன்னுடைய கவலையை மெல்ல அரிகண்டனிடம் பகிர்ந்துகொண்டார் அவர்.

"அதற்கெல்லாம் நானாயிற்று ஆசானே - உங்களை அப்படி அந்தரத்தில் கைவிட்டு விடுவேனா என்ன ! நீங்கள் பேசவேண்டியது ஒரே ஒரு வசனம்தான் ! எங்கே - வெற்றிவேல் ! வீரவேல் ! என்று ஒருமுறை முழங்குங்கள் பார்ப்போம் !"

அம்பலவாணருக்கு அந்த முழக்கம் மிகவும் பிடித்திருந்தது - எத்தனை நாட்களாயிற்று போர்க்களத்தில் இந்த முழக்கத்தைக் கேட்டு !

நேராக நெஞ்சு நிமிர்த்தி கம்பீரமாக "வெற்றிவேல் ! வீர வேல் !" என்று வீரமுழக்கம் செய்தார் அவர். அந்தச் சமயத்தில் அங்கு நுழைந்த ஆச்சாரியாரும் அம்பலவாணரின் கம்பீரமான முழக்கத்தைக் கேட்டு "நன்று ! நன்று!" என்று ஆசிகூறிச் சென்றார்.

அம்பலவாணருக்கு உச்சி குளிர்ந்து போய்விட்டது - சற்று வெட்கம்கூட ஏற்பட்டது !

*************************************************************************************
*******

தித்தனும் பூபலனும் மழபாடியாரின் மாளிகையில் அவர்முன் அமர்ந்திருந்தார்கள்.

"மாராயர் என்னிடம் கேட்ட அதே கேள்வியை நான் உங்களிடம் கேட்கிறேன் - விஷயம் காயா பழமா தித்தரே!"

"பழம் என்று நிச்சயம் சொல்வதற்கில்லை - என்றாலும் சில உபயோகமான தகவல்கள் கிடைத்திருக்கின்றன. அதனால் விஷயம் முழுக் காயுமில்லை !"

"மாராயருக்கு நான் சொன்ன அதே பதிலை நீங்கள் எனக்கு திருப்பிச் சொல்கிறீர்கள் !" என்று முறுவலித்தார் மழபாடியார் - "சரி - விபரங்களைக் கூறுங்கள் !"

"கிழவரைப் பற்றி ஒரு அப்பழுக்கு சொல்ல முடியாது - சிறு வயதிலிருந்தே மாராயர் அரண்மனையில் பணிபுரிகிறார். யாரோடும் அதிகம் பேச்சு வைத்துக்கொள்வதில்லை. பல்வேறு அறைகளிலிருந்து முறிக்குடத்தை எடுத்துவந்து முறிகளை ஒவ்வொன்றாக தீயிட்டுப் பொசுக்கிவிடுகிறார் ! அதனைப் படிப்பதற்கு எந்தவிதமான முயற்சியும்

செய்வதில்லை.."

"அவரிடம் பேச்சுக் கொடுக்கும் சாக்கில் யாராவது..."

"அப்படியெதுவும் கிடையாது. இவர் எவரிடமும் அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளாததால் நண்பர்கள் என்று ஒருவரும் கிடையாது !"

மூக்கை பரபரவென்று ஒருமுறை தேய்த்துக்கொண்டார் மழபாடியார்..."பின் என்ன விபரங்கள்தான் கிடைத்தன...?"

"இரண்டு முக்கிய விபரங்கள் கிடைத்தன. ஒன்று - கிழவர் சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட முறிக்குடத்தில் அதிக ஓலைகள் இல்லையென்றால் வேறு ஏதாவது அறைக்குச் சென்று அந்த ஓலைகளையும் சேகரித்துக்கொண்டு திரும்பி பின் எல்லாவற்றையும் ஒன்றாக எரிக்கிறார். இந்த இடைவெளியில் முறிக்குடம் காபந்து எதுவுமின்றி அனாதையாகக் கிடக்கிறது - இந்தக் குறுகிய இடைவெளியில் யாராவது முறிக்குடத்தை எடுத்து அதிலுள்ள ஓலையையும் பிரித்துப் படிக்கலாம்..."

"இதெல்லாம் தங்களுக்கு எப்படித் தெரிந்தது ?"

"உக்கிராண அறையிலிருந்து கிழவரின் நடவடிக்கைகள் முழுவதையுமே ஏறத்தாழ கவனித்து விடலாம் !"

"அப்படியென்றால் குறுகியதொரு இடைவெளியில் அவசர அவசரமாக எவராலும் முறிக்குட ஓலைகளை எடுத்துப் படிக்க முடியாது - மேலும்

ஓலைகள் அதிகம் இல்லாத பட்சத்தில்தான் அந்த வாய்ப்பும் கிடைக்கும் ! உக்கிராண அறை ஆட்களிடம் அகப்பட்டுக்கொள்ளும் ஆபத்து வேறு - ம்ஹூம் ! நீங்கள் முதலில் கூறிய நிகழ்வு நடக்கும் சாத்தியக்கூறுகள் குறைவு - இரண்டாவது விபரத்தைக் கூறுங்கள் !"

"கிழவனுடைய குலம் கோத்திரம் - பெண்டு பிள்ளைகள் பற்றி அறிய முயன்றேன். அவரைப் பற்றி ஒருவருக்குமே சரியான விபரங்கள் தெரியவில்லை. கடைசியில் நீண்ட முயற்சிக்குப்பின் உக்கிராண அறைக் கிழவனொருவன் வாயைத்திறந்தான். அவனும் நமது முறிக்கிழவரும் ஒரு காலத்தில் நண்பர்களாம் - முறிக்கிழவருக்கு குடும்பமென்று ஒன்றும் கிடையாதென்று அவன் சாதிக்கிறான். இதனால் பேத்தி ஒருத்தி எப்படி முளைத்தாளென்பது தெரியவில்லை... இன்று அவள் வரவில்லை !"

"கிழவனுடைய கடைசி காலத்தில் உறவினர் எவராவது உதவிக்காக இந்தப் பெண்ணை அனுப்பிவைத்திருக்கலாம் ! என்றாலும் நாளை அவள் வந்தால் அவளை பகிரங்கமாகவே விசாரியுங்கள். சந்தேகமே கூடாது !"

"சரி !"

"பூபலரே - உங்களை நான் காயா பழமா என்று கேட்கவே வேண்டாம் ! உங்கள் முகவோட்டம் வாடியிருப்பதிலிருந்தே பெரிய செய்திகள் எதுவுமில்லையென அறிகிறேன்..."

"ஆம் - என்னிடமும் பெரிதாக செய்திகள் ஒன்றுமில்லை ஐயா ! நாம் தேடிப்போன ஆள் இன்றைக்கு பணிக்கே வரவில்லை. முப்பது நாற்பது பேர் தோட்டப் பணியில் ஈடுபட்டிருந்தாலும் நம்மவர் பற்றிய செய்திகளை

அதிகம் திரட்ட முடியாததற்குக் காரணம் இவர்கள் அனைவரும் தினக்கூலிகள் என்பதே ! அதனால் ஒரு நாள் வருபவன் மறுநாள் வருவதில்லை - வேறு நல்ல வேலையெதுவும் கிடைக்காத ஒருசிலர்தான் நிரந்தரமாக அங்கேயே பணிபுரிந்துகொண்டிருக்கிறார்கள்.

அவர்களை விசாரித்ததில் நாம் தேடிக்கொண்டிருக்கம் நபரின் பெயர் வீரன் என்று அறிகிறோம். இவன் ஒழுங்காக வேலைக்கு வருவது கிடையாது - ஒரு நாள் வந்தால் மறு நாள் வரமாட்டானாம். இவனும் மற்றவர்களிடம் அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளாதவன்தான் - அதனாலும் அவனைப் பற்றிய விஷயங்கள் சேகரிப்பது அரிதாக இருந்தது.

இதுவரை சேமித்த தகவல்களில் வித்தியாசமாகத் தெரிபவை இரண்டுதான் - ஒன்று, அவன் பணி நேரங்களில்கூட மெய்ப்பை அணிபவனாம். மாலையில் மெய்ப்பை முழுவதும் மண்ணாகியிருந்தால்கூட அதனை கழற்ற மாட்டானாம் !"

"அட - வித்தியாசமாக இருக்கிறதே !"

"ஆம் - இரண்டாவது அவன் எப்போதும் தலைப்பாகை அணிவானாம் ! வெய்யில் தகிக்கும் நேரங்களிலும் தலைப்பாகையை கழற்றுவதில்லையாம் !"

"ம்.. இதுவும் வித்தியாசமாகத்தான் இருக்கிறது - என்றாலும் இந்தத் தகவல்கள் நமது பணிக்கு உபயாகமானவையா என்பது கேள்விக்குறி. நாளையும் இதே பணிக்குச் சென்று அவன் திரும்பி வருகிறானா என்று கவனியுங்கள் !"

"சரி !"

"நான் மந்திராலோசனை மண்டபத்திற்குச் செல்ல வேண்டும். அவசர தகவல்களிருந்தால் மாராயர் மூலமாக நானிருக்குமிடத்தை தெரிந்து கொள்ளலாம் - நீங்கள் இப்போதைக்கு சென்று வாருங்கள் !"

"உத்தரவு ஐயா !"

அவர்கள் அகன்றதும் தன்னுடய ஆசனத்தில் சாய்ந்துவிட்டார் மழபாடியார் ! மிகப்பெரியதொரு மனச்சோர்வு அவரை ஆக்கிரமித்தது...

பரமா ! உன்னுடைய திறமைகளைப் பற்றியும் வீரத்தைப் பற்றியும் நீ இறுமாந்திருந்த காலம் ஒன்றுண்டு - ஆனால் இன்று ? உனக்கும் தண்ணீர் காட்ட முடியும் என்று ஒருவன் நிரூபித்து விட்டான்.... இரண்டு நாட்களாக நீ அலையாத இடமில்லை - சிந்திக்காத விஷயமில்லை - ஆனால் உறுதியாக ஒன்றையும் கண்டுபிடிக்க முடியவில்லை ! அந்தத் துழாய்க்குடியானின் மரணம் உனக்குப் பெரியதொரு இடிதான் - அவனை மட்டும் உயிரோடு பிடித்திருந்தாயானால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்.... சென்றதைக் குறித்து சிந்தித்து ஆவதென்ன - இனி நடக்க வேண்டியதை கவனிப்போம் !

நாளை உன்னுடைய பணி மிகவும் கடினமான ஒன்றாகிவிட்டது ! தாக்குதல் எந்த இடத்திலிருந்த எந்த நேரத்தில் வருமென்பதை சொல்வதற்கில்லை. சதய நாளில் இத்தனைபேர் கூடியிருக்கும் வேளையில் இந்த அசம்பாவிதம் நடந்தால் அதைவிட சோழதேசத்திற்கு

கேடுவிளைவிக்கும் விஷயம் கிடையாது - எனவே மிக மிக எச்சரிக்கையுடன் இரு !

கொற்றவையை நம்பு - அவள்தான் உன்னை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்றக்கூடிய ஒரே சக்தி !

"தாயே ! எனக்கு உதவிசெய் ! இந்த இக்கட்டிலிருந்து விரைவில் மீளும் வழியை காண்பித்து அருளம்மா !" என்று வாயார வேண்டினார் மழபாடியார்.

## மந்திராலோசனை

விளக்கு வெளிச்சம் சற்றே குறைவாக இருப்பதால் அந்த அறையின் நீள அகலங்களை நம்மால் சரிவர அனுமானிக்க இயலவில்லை.

அறையில் வட்ட வடிவமாக நமக்கு சென்ற அத்தியாயங்களில் அறிமுகமான பல்வேறு பெரிய மனிதர்களும் அமர்ந்திருக்கக் காண்கிறோம். அவர்கள் அமர்ந்துள்ள இடத்திற்கு சற்று அருகாமைய ல் நீண்ட நெடிய குத்து விளக்கொன்று அறைக்குள் மிதமான ஒளிவழங்கிக் கொண்டிருந்தது. விளக்கில் எண்ணைக்கு பதில் நெய் மற்றும் வாசனாதி திரவியங்கள் விட்டிருந்ததால் அறைமுழுவதும் மென்மையான நறுமணம்.

மாராயர் சற்றே தொண்டையை செருமிக்கொண்டார்.... "நண்பர்களே - நாம் அனைவரும் பேசுவதற்காகக் கூடியுள்ள பிரச்சனை மிக முக்கியமானது மற்றும் அவசரமானது என்பதோடு மிகவும் சிக்கலான

ஒன்றாகி வருகிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். பரமன் மழபாடியார் வந்து சேர்ந்தவுடன் இந்தச் சிக்கலுக்கு ஒரு முடிவு தெரியும் என்ற உறுதியோடு இருந்தேன் - ஆனால் கடந்த ஒரு நாழிகை நேரம் முன்பு அவரை நான் எனது மாளிகையில் மிகவும் சுருக்கமாக சந்தித்தபோது அந்த நம்பிக்கை உறுதிப்படவில்லை. சொல்லப்போனால் விஷயம் நாம் நினைத்ததைவிட மிகவும் ஆபத்தான பாதையில் சென்றுகொண்டிருப்பதுபோல் தெரிகிறது. விபரங்களை உங்கள் அனைவரிடமும் அவரே நேரில் தெரிவித்து சிற்சில விஷயங்கள் பற்றி உங்களுடைய அபிப்பிராயங்களை நேரே கேட்டறிய விரும்பியதால் அவரை இந்த மாளிகையின் மந்திராலோசனை மண்டபத்திற்கு வரச்சொல்லிவிட்டேன் - அவர் எந்நேரமும் வந்து சேரலாம்...."

"வாயிலில் ஏதோ அரவம் கேட்கிறதே - அவர்தானா...."

வாயில் கதவு திறக்க அந்த மெல்லியவிளக்கொளியில் மழபாடியாரின் ஆஜானுபாகுவான தோற்றம் மங்கலாகத் தெரிந்தது. கைகளை பணிவோடு கூப்பியபடி நுழைந்தார் அவர். அவரை முதன் முதலாக சந்திக்கும் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளாருக்கு உடனடியாக மனதில் அவரைப் பற்றிய நல்லபிப்பிராயம் முளைத்தது.

"அனைவருக்கும் வணக்கம் ! தாமதத்திற்கு மன்னிக்கவும்..." என்று சொல்லிவிட்டு வட்டத்தில் மாராயருக்கு அருகே சற்றே இடைவெளி இருந்த இடத்தில் வந்து அமர்ந்தார் மழபாடியார். "நாங்கள் வந்தே சிறிது நேரம்தான் ஆகிறது - அதனால் அப்படியொன்றும் பெரிதாக நீங்கள் தாமதித்துவிடவில்லை...." என்று தோழமையின் காரணமாக சமாதானம் கூறினார் வேளாண் ஆட்கொண்ட வில்லியார்.

மாராயர் மேலும் நேரத்தைக் கடத்தாமல் நேரடியாக விஷயத்திற்கு வந்தார். "பரமா - இங்கு கூடியுள்ள அனைத்து பெருமக்கைளயும் நீ அறிவாய் என்று நம்புகிறேன்...ஓ ! தென்னவன் மூவேந்த வேளாரை நீ பார்த்திருக்க மாட்டாய்... இதோ ! பெரிய திருக்கற்றளியின் பிரதம நாயகர் இன்றைய தேதியில் இவர்தான் !"

இருவரும் பரஸ்பரம் முகமன் கூறிக்கொண்டார்கள்.

"நண்பர்களே - முதலில் பரமன் சொல்ல வந்ததை சொல்லி முடிக்கட்டும். பிறகு என்ன செய்வதென்று கூடி ஆலோசிப்போம் !"

மழபாடியார் சுருக்கமாக - ஆனால் முக்கிய விஷயங்களை விட்டு விடாமல் - தாம் இந்தப் பணியில் ஈடுபட்ட சென்ற இரு நாட்களாக நிகழ்ந்த நிகழ்வுகளையும் புரிந்த ஆய்வுகளையும் எடுத்துரைத்தார். அவருடைய விவரணையை அனைவரும் இடைமறிக்காமல் கேட்டுக்கொண்டிருந்தார்கள். தனக்கு எல்லாம் தெரியும் என்பதாக ஓரளவிற்கு இறுமாந்திருந்த மாராயருக்குக்கூட பல விஷயங்கள் புதிய தகவலாக இருந்தன. குறிப்பாக அவருடைய அரண்மனையிலேயே அவரையறியாமல் நடந்துகொண்டிருந்த சிலநிகழ்வுகளை - என்னதான் மழபாடியார் சற்றே காரத்தைக் குறைத்து விவரித்தாலும் - கசப்பாகவே இருந்தன.

"துழாய்க்குடியில் நிகழ்வுகள் இப்படியாக முடிந்தன. இறந்தவனுடைய உடலை துழாய்க்குடி ஊர்க்காவலதிகாரியிடம் ஒப்படைத்துவிட்டு தாமதமின்றி கிளம்பி ஏறக்குறைய ஒரு ஜாம நேரத்திற்குமுன் தஞ்சை

அடைந்தோம். ஆனால் கோட்டை வாயிலிருந்து உள்ளே வருவதற்குள் மிகுந்த தாமதமாகி விட்டது - வாயிலுக்கருகிலும் கோட்டைக்குள்ளும் ஜன சந்தடி மிக அதிகம் - சதய நாள்விழாவிற்காக வெளியூர்களிலிருந்து வந்து சேர்ந்துள்ள சோழநாட்டு மஹாஜனங்கள் போலும் ! நான் அம்பலவாணரை அவரது நண்பர் வீட்டிற்கு அனுப்பிவிட்டு மாராயரை அவசர அவசரமாக சந்தித்துவிட்டு என் மாளிகைக்குச் சென்று நீராடி புத்துடையுடுத்திக்கொண்டு நேராக இந்த மந்திராலோசனை மண்டபத்திற்கு வந்திருக்கிறேன்.."

நிதானத்தோடு பேசினாலும் மழபாடியாரின் குரலில் அதிக உற்சாகமில்லை.

"மழபாடியாரே - நமது சிக்கலுக்கு உங்களால் இன்னமும் விடைகாணமுடியவில்லை என்றாலும் உங்களது பணி மிகவும் போற்றத்தக்கதாயிருக்கிறது! உங்களைப் பற்றி முன்னரே பாகி நாட்டுப் போரின்போது கேள்விப்பட்டிருந்தாலும் இப்போதுதான் நேரில் உங்களுடைய பராக்கிரமங்களை அறிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது - ஜெயலட்சுமி உங்கள் பக்கம் துணையிருப்பாள் - மனச்சோர்வடைய வேண்டாம் !" என்று உற்சாகப்படுத்தினார் மும்முடிச்சோழ பிரம்மாதிராயர்.

"ஆம் - நாங்கள் அனைவரும் மனதில் நினைத்ததை பிரம்மராயர் புகன்றுவிட்டார் - மழபாடியாரே ! உங்களுடைய முயற்சியால்தான் இந்தப் பிரச்சனை எத்தனை முக்கியமானது மற்றும் தீவிரமானது என்பது புரிந்தது. நீங்களும் அம்பலவாணரும் சோழதேசத்தின் நன்றிக்கு உரியவர்களாகிவிட்டீர்கள் !"

"உங்கள் அன்புக்கு மிக்க நன்றி. இத்தகைய சூழ்நிலையில் இனி

செய்யக்கூடியது என்ன என்பது பற்றியும் இதுவரை நான் விவரித்த நிகழ்வுகளிலிருந்து உங்களுக்குப் பிரத்யேகமாக புலப்படக்கூடிய விஷயங்கள் ஏதாகிலும் உண்டா என்பது பற்றியும் விவாதிக்க விரும்புகிறேன்..."

மழபாடியாரின் பேச்சை இடைமறித்தார் மாராயர்...

"என்னுடைய தனிச்சேவகர்களை இன்றைக்கு என்னுடைய அரண்மனைக்கே உளவறிய அனுப்பியிருப்பதாகச் சொன்னாயே - அவர்களிடமிருந்து தகவல் ஏதாவது உண்டா ?"

"துரதிருஷ்டவசமாக அந்த இருவரிடமிருந்துகூட நமக்கு உதவக்கூடிய தகவல்கள் எதுவுமில்லை - நான் மந்திராலோசனை மண்டபத்திற்குக் கிளம்பும்போதுதான் ஓலைகளை கவனித்தேன். நந்தவனத்தில் குறிப்பாக ஒருவனை - அம்பலவாணர் முன்பு சந்தித்தவனை - எதிர்பார்த்தோம். ஆனால் அவன் இன்றைக்கு வரவில்லை. நமது தனிச்சேவகர் விசாரித்ததில் அதிகம் தகவல்களைப் பெறமுடியவில்லை - ஏனெனில் திருத்துவார் பணி தினக்கூலி வேலையாகும். அதனால் ஒரு நாள் வேலைக்கு வருவோர் மறுநாளும் வருவார்கள் என்று சொல்ல முடியாது. மேலும் திருத்துவார் பணியில் நாட்கூலி சற்று குறைவுதான் - அதனால் பிற பணி கிடைக்காத நாட்களில் அவ்வப்போது இந்தத் தொழிலில் ஈடுபடுவோர்தான் அதிகம். இத்தனை சிக்கல்களால் நாம் தேடிக்கொண்டிருந்தவனைப் பற்றி அதிக தகவல்கள் திரட்ட முடியவில்லையென்று பூபலன் செய்தியனுப்பியிருக்கிறான்.

தித்தன் விடாப்பிடியாக அந்த குடவோலைக் கிழவரின் நடவடிக்கைகளை

நோட்டமிட்டதிலும் நமக்கு அதிருஷ்டமில்லை. கிழவர் ஓலைகளை சேகரித்துக்கொண்டு அவ்வப்போது எரித்துவிடுகிறார் - அதன் செய்திகளைப் படிக்க முயற்சிப்பதில்லை. அந்த ஓலைகளை வேற்றாள் காண்பதற்கு வேறு வழியேயில்லை. மாலையில் வழக்கமாக அவனுக்கு உணவு கொண்டுவரும் பேத்தி இன்றைக்கு வரவில்லையென்பதால் கிழவர் விரைவிலேயே கிளம்பிவிட்டார் - அவ்வளவுதான் !"

இதனைக் கேட்ட அனைவருக்கும் ஏமாற்றமே மிஞ்சியது என்றாலும் ஒரே ஒருவருக்கு மட்டும் சற்று மகிழ்ச்சியும் பிறந்தது.

அந்த ஒருவர் மாராயர்தான் ! என்னதான் இருந்தாலும் தனது அரண்மனை எதிரிகளின் கூடாரமாக ஆகிவிட்டது என்று சொல்லிக்கொண்டிருக்கிறானல்லவா பரமன் ? அப்படியானால் இன்றைக்கு ஏதாவது வித்தியாசமாக நடந்திருக்க வேண்டுமே ? அப்படி எதுவும் நடக்கவில்லையென்பதிலிருந்து மாராயன் மாளிகை அப்படியொன்றும் எவர் எவரோ வந்துபோகக்கூடிய இடமில்லையென்பது தெளிவாகின்றதல்லவா ?

மீசையை சந்தோஷமாக ஒருமுறை முறுக்கிக்கொண்டார் அவர்.

"மழபாடியாரே - அந்த துழாயக்குடி மர்ம மனிதனிடமிருந்து ஒரு படத்தைக் கைப்பற்றியதாகக் குறிப்பிட்டீர்களே - அதனை நாங்கள் காணலாமா ?"

"நிச்சயமாக - சொல்லப்போனால் இந்தப் படத்திலிருந்து இது எதனைக் குறிக்கிறதென்று என்னால் உறுதியான அனுமானத்திற்கு வரமுடியவில்லை...

உங்களில் எவருக்காவது இந்தப்படம் பரிச்சயமானதுதானா என்று பாருங்கள் !"

மாட்டுத் தோலில் கறுப்புத் தாவர மையினால் தீட்டப்பட்டிருந்த அந்த ஓவியம் விரிக்கப்பட்டது.

"ஏதோ அணிகலன்போல் தெரிகிறது - ஆனால் விளக்கமான உருவம் பாதி வரையப்பட்டு மறுபாதி கோட்டு எல்லைகளால் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளதே..."

"நானும் அணிகலனாக இருக்கும் என்று முதலில் நினைத்தேன் - ஆனால் பின்னால் யோசிக்கையில் ஒரு அணிகலனின் படத்தை அவன் வெகு முக்கியமாக தன்னுடைய மெய்ப்பையிலே வைத்துப் போற்றிப் பாதுகாக்கவேண்டிய அவசியமென்ன ?"

"அதுவும் யோசிக்க வேண்டிய விஷயம்தான். என்றாலும் நமது அரண்மனைப் பொற்கொல்லனை இன்னும் சிறிது நேரத்தில் இந்த மாளிகைக்கு வரச்செய்து அவனிடம் இது அணிகலனுக்குரிய படம்தானா என்று விசாரித்து விடுவோம்..."

பிரம்மராயர் குறுக்கிட்டார்.

"நமது அரண்மனைப் பொற்கொல்லனைத்தவிர மலைநாட்டிலிருந்து வந்துள்ள ஆசாரி எவனாவது அகப்படுகிறானா என்று பாருங்கள் !"

"அப்படியே செய்வோம். என்றாலும் இது அணிகலனைக் குறிக்காமல்

சங்கேதமாக வேறு விஷயங்களைக் குறிப்பிடுவதாக இருக்குமோ என்பதுதான் என் ஐயம் - பயம் எல்லாமே !"

"மழபாடியாரே - என் அனுபவத்தை வைத்துச் சொல்கிறேன். இது சங்கேதச் செய்தியாயிருக்கும் வாய்ப்புக் குறைவுதான். ஏனெனில் சங்கேதச் செய்தி ஒரு ஒற்றனிடமிருந்து அவனுடைய சொந்த நாட்டிற்குப் போவதைக் கண்டிருக்கிறேன்... அதேபோல அவனுடைய நாட்டிலிருந்தும் அவனுக்கு செய்திகள் வரலாம். எப்படியிருந்தாலும் செய்தியை படித்துத் தெரிந்துகொண்டபிறகு செய்தி தாங்கி வந்த ஓலையை அல்லது முறியைக் கிழித்துவிடுவதே மரபாகும்...அதனை மெய்ப்பையில் வைத்துப் போற்றிப் பாதுகாகக்க வேண்டிய அவசியமேயில்லை. மேலும் ஒரு சங்கேத செய்தியைக் குறிப்பதற்கு மாட்டுத்தோலில் படம் எழுதி வைத்துக்கொள்ளவேன்டிய அவசியமேயில்லை. சதிகாரர்களின் உறுதியான எண்ணம் என்னவெனில் இந்தப் படம் தப்பித் தவறி எவர் கைகளிலாவது அகப்பட்டாலும்கூட அதனால் பெரிதாக பாதிப்பு ஒன்றும் வந்துவிடாது என்பதே - அவர்களின் எண்ணப்படியே இந்தப் படம் நமது கையில் கிடைத்துவிட்டாலும் அது எதனைக் குறிக்கிறது என்று அறியமுடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறோம் !"

"சரி - மேற்கொண்டு எதுவும் அறியமுடியாத பட்சத்தில் இதைப் பற்றிப் விவாதித்துக்கொண்டிருப்பதில் அதிக பயனில்லை. நடந்து முடிந்த நிகழ்வுகளிலிருந்து வேறு ஏதாவது அறியமுடிகிறதா என்று யோசிப்போம் !" என்றார் மாராயர்.

"அப்படியே ஆகட்டும் ! மழபாடியாரே - நடந்துவிட்ட நிகழ்வுகளை மீண்டும் முதலிலிருந்து வரிசைக்கிரமமாக மனதில் நிறுத்திப்பாருங்கள் !

அவ்வப்போது மனதில் தோன்றும் கேள்விகளைக் கேளுங்கள் - உங்களுக்குத் தோன்றாதது எங்களுக்குத் தோன்றுகிறதா என்று கவனிப்போம் !"

மழபாடியாரும் தன்னை அம்பலவாணராகவே மனதில் கருதிக்கொண்டு நிகழ்வுகளை மனதில் ஓடவிட்டார்.

"என்னை முதலில் உறுத்துவது இறக்கும் நிலையில் ஐங்கரன் வாயிலிருந்து வெளிப்பட்ட வார்த்தைகள்..."

"எங்கே - மீண்டும் அதனை நிதானமாக ஒருமுறை கூறுங்கள் !"

"தஞ்ஞையில்..........சதி.........அரசர்...........பாதுகாப்பத்த.....வேளையில்.......ப டுகொலை !"

"அம்பலவாணருக்கு காதுகள் இன்னும் நன்றாகக் கேட்டுக்கொண்டுதானே இருக்கின்றன - ஐங்கரன் வேறு ஏதாவது சொல்லி இவர் காதில் வாங்கிக்கொள்ளாமல்..."

"அதற்கான வாய்ப்பே இல்லை - அவருடைய காதுகள் தீட்சிண்யமானவை ! மேலும் இந்த விவகாரத்தைப் பொறுத்த வரையில் மிகவும் பொறுப்புடன் நடந்துகொண்ட முதல் மனிதர் அவர் - அதனால் ஐங்கரனுடைய கடைசி வார்த்தைகள் அவைதான் !"

"அவன் இருந்த நிலையில் கடைசியாகச் சொல்ல நினைத்த வார்த்தைகள் அந்த ஓலையில் இருக்கும் வார்த்தைகளாகவே இருக்குமென்று

கொள்ளலாமா ?"

"சாதாரணமாக தாம் கொண்டுபோகும் ஓலைகளைப் படிக்கும் உரிமை ஒற்றர்களுக்கில்லை. ஆனால் மிக நெருக்கடியான சமயங்களில் எதிரிகளிடம் அகப்பட்டுக்கொள்ளும் நிலை வரும்போது ஓலையின் செய்திகளைப் படித்துவிட்டு அதனை கிழித்தெறிந்துவிட அவர்களுக்கு உரிமையுண்டு !"

"ஆனால் ஓலையை அவன் கிழித்தெறியவில்லை போலிருக்கிறதே - அது கடைசியில் எதிரிகளிடமல்லவா அகப்பட்டுக்கொண்டது !"

"ஐங்கரன் போன்ற அனுபவம் வாய்ந்த ஒற்றர்கள் எப்போதும் இடைக்கச்சில் ஒரு மாற்று ஓலை வைத்திருப்பார்கள். அதில் மிகப் பரபரப்பான ஆனால் முழுவதும் தவறான செய்தி எழுதப்பட்டிருக்கும். ஒருவேளை அகப்பட்டுக்கொண்டாலும் இதுதான் தாம் கொண்டுபோகும் செய்தி என்று சாதிக்க முயல்வார்கள் !"

மாராயரின் நிலை தர்மசங்கடமாக இருந்தது. அவருடைய தலைமையில் அமைந்திருந்த ஒற்றர்படைக்கேயுரிய சில பிரத்யேக இரகசியங்கள் சபையில் விவாதம் செய்யப்பட்டுக்கொண்டிருக்கின்றன. இது நாளடைவில் அனைவருக்கும் அம்பலமாகிவிடும் சாத்தியக்கூறு உள்ளதல்லவா ? பாவம் ஐங்கரன் ! இராஜ்ஜிய சேவையில் பிராணத் தியாகமே செய்து விட்டான்....

"சரி ! அப்படியெனில் ஐங்கரனின் கடைசி வாய் வார்த்தைகளே ஓலையில் எழுதப்பட்டிருக்கும் செய்தி என்று வைத்துக்கொண்டாலும் கொல்லிமழவர் பெரிதாக ஒன்றும் செய்தியனுப்பிவிடவில்லை போலிருக்கிறதே !"

"அப்படிக் கூறுவதற்கில்லை ! ஓலையிலிருந்த செய்தி முழுவதும் சொல்லி முடிக்க முடியாது என்பதால் முக்கியமான செய்தியை மட்டும் ஐங்கரன் இரத்தினச் சுருக்கமாக சொல்லியிருக்கலாம்..."

"அப்படியே எடுத்துக்கொண்டாலும் கொல்லி மழவருக்கே குறிப்பாக இன்ன இடத்தில் இன்ன விதமான சதி நடக்கப்போகிறது தெரியாது என்பதுபோல் உள்ளதே.."

"ஐயா - கொல்லி மழவர் ஒற்றரல்ல - அரசர் ! அவருக்கு மலைநாட்டில் இருக்கும் சில தொடர்புகள் மூலம் பூடகமாக சில செய்திகள் வந்து சேரும் - அவ்வளவுதான் ! அதற்கப்புறம் அந்த செய்தி உண்மைதானா அல்லது வதந்தியா என்று ஒற்றர்களை விட்டு கண்டறியும் பணி என்னுடையதல்லவா ? அதனால் அவரிடம் வரும் ஓலைகளில் குறிப்பான செய்திகளை எதிர்பார்க்க முடியாது ...!"

"துரதிருஷ்டவசமாக நமது கையிலிருக்கும் சிக்கலைப் பொறுத்தவரையில் தீர விசாரிப்பதற்கு நேரமின்றி அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம் !"

"அதுதான் எனக்கும் கவலையாயிருக்கிறது. இந்தச் செய்தி ஒரு திங்களுக்கு முன்பே தெரியவந்திருந்தால் உரிய ஆட்களை அனுப்பி விசாரித்திருப்பேன். ஆனால் இது கடைசி நிமிடத்தில் வெளிவந்ததிலிருந்து இந்தச் சதி இறுதிக் கட்டம் வரை பரம இரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு கடைசி நாட்களில் ஏதோ ஒரு தொடர்பினால் கொல்லி மழவருக்குத் தெரிந்திருக்கிறது..."

மழபாடியார் முகத்தில் லேசான முறுவல் மலர்ந்தது.

"இறுதிக் கட்டம் வரை தன்னுடைய திட்டத்தை காக்க முடிந்தவனுக்கு கடைசிவரை இதனைப் பாதுகாப்பது ஒரு பிரச்சனையாகவே இருந்திராது மாராயரே ! இது வேண்டுமென்றே வெளியில் கசியவிடப்பட்ட செய்தி !"

"என்ன - வேண்டுமென்றே சதிகாரர்கள் தங்கள் திட்டம் பற்றி கொல்லி மழவருக்கு செய்தியனுப்பியிருப்பார்கள் என்கிறீர்களா ?"

"ஆம் - அதற்கான சாத்தியக்கூறுகள் அதிகம். அதனால்தான் சதி பற்றித் தெரிந்துகொண்ட மழவரால் அதில் ஈடுபட்டுள்ள நபர்கள் பற்றியோ அந்தச் சதி நிறைவேறப்போகும் வழிமுறைகள் பற்றியோ அதிகம் தெரிந்திராமல் போய்விட்டது. அதனால்தான் ஓலையில் அவர் குறிப்பாக எதனையும் எழுதியிருக்க வாய்ப்பில்லை. அதனால்தான் உயிர் போகும் நிலையிலும் ஓலையின் செய்திகளை சுருங்க விவரித்த கடமை வீரன் ஐங்கரனின் வார்த்தைகளிலிருந்தும் அதிகம் தெரிந்துகொள்ள முடியாதவர்களாக இருக்கிறோம் ! அரசர் - பாதுகாப்பற்ற வேளையில் - நிச்சயம் பாதுகாப்பற்ற வேளையில்தானே சதி நிகழும் ? - படுகொலை செய்யப்பட இருக்கிறார் ! அவ்வளவுதான் அந்த ஓலையில் விவரிக்கப்பட்டிருந்த செய்தியின் சாராம்சம் ! பாதுகாப்பற்ற வேளை எது என்பது பற்றிய விவரங்கள் கொல்லி மழவருக்குத் தெரியவில்லை - அந்தச் சதியில் எத்தனைபேர் ஈடுபடப்போகிறார்கள் என்பதும் தெரியவில்லை - மிக மிக இரகசியமாக நாட்கணக்கில் - மாதக்கணக்கில் - வருடக்கணக்கில் திட்டமிடப்பட்டு - ஒவ்வொரு காய் நகர்த்தலும் ஒருமுறைக்கு பலமுறை சரிபார்க்கப்பட்டு - பழுதே இல்லாமல் தயாரிக்கப்பட்ட மிகக் கொடிய சதித்திட்டம் மாராயரே இது ! அதனால்தான் இத்தனை தரவுகள் நமக்கு

அங்கொன்றும் இங்கொன்றுமாக அகப்பட்டும் நம்மால் ஒரு அடிகூட முன்னேற முடியவில்லை ! கச்சிப்பட்டு ஐஞ்சந்தி துர்கை மனது வைத்தாளானால்தான் இதிலிருந்து நம்மால் மீள முடியும் !"

"சோழ அரசர் மீதும் சோழ மண்ணின் மீதும் இப்படியொரு தீவிர சதித்திட்டம் தீட்டுமளவிற்கு யாருக்கு அத்தனை கோபமிருக்க முடியும் ?"

மாராயரும் பிரம்மராயரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

"சரி - அப்படியொரு கும்பல் - சேர அரசர்களால் ஆதரிக்கப்படும் கும்பல் - உள்ளதென்றே வைத்துக் கொள்வோம் ! இப்படித் தீவிர யோசனையுடன் தயாரிக்கப்பட்ட சதித்திட்டத்தை கடைசி நிமிடத்தில் கசிய விடுவதனால் என்ன பயன் ?"

பெரியதொடு ஹூங்காரம் கிளம்பியது மழபாடியாரிடமிருந்து...." இது ஒரு சவால் மாராயரே ! இதோ இன்ன தேதியில் நீங்கள் எல்லோரும் தலையில் வைத்துக் கொண்டாடும் உங்கள் பேரரசரை வீழ்த்தப் போகிறேன் - அதனை உங்களுக்கும் தெரிவித்துவிட்டேன் - முடிந்தால் தடுத்துக்கொள்ளுங்கள் ! என்கிற சதிகாரர்களின் அறைகூவல் இது மாராயரே - அறைகூவல் !"

அறையில் அமர்ந்திருந்த அனைவருக்கும் சிலீரென்று ஒரு அச்சம் பந்தாக எழும்பி மேலண்ணத்தில் உடைந்தது. உடல் மயிர்கூச்செறிந்தது. அவர்கள் எவரும் தங்களுடைய உயிரைப் பற்றிக் கவலைப் படவில்லை. அவர்களுடைய கண்ணுக்குக் கண்ணான அரசரின் உயிரைப் பற்றிக் கவலைப்பட்டார்கள். அவரை ஏதோ ஒரு சூழ்நிலையில்

இழந்துவிடுவோமா என்று அஞ்சினார்கள். பல்வேறு கொடிய போர்க்களங்களில்கூட பறிக்கமுடியாத அவரது உயிரை கேவலம் ஒரு கொடிய சதிகாரன் பறித்துக்கொண்டு போவதா என்று வேதனைப்பட்டார்கள்.

அவ்வண்ணம் நிகழ அனுமதிக்கக்கூடாது - அந்தப் பணியில் தமது உயிரே போனாலும் சரி என்று மனதார அந்தக் கணத்தில் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள்.

அறையில் சங்கடமானதொரு அமைதி நிலவியது.

"சரி - நாளை அரசர் செல்லும் பாதையில் பாதுகாப்பு ஏற்பாடுகளை மிகத் தீவிரமாக கண்காணிக்க வேண்டும் ! இந்த விஷயங்களெல்லாம் வேளாண் ஆட்கொண்ட வில்லியாருக்கு நாம் சொல்லித்தான் தெரியவேண்டுமென்பதில்லை - அவருடைய முன்னெச்சரிக்கையை நாம் அனைவரும் அறிவோம் ! என்றாலும் எச்சரிப்பது என்னுடைய கடைமை என்பதால் சொல்கிறேன். அரசர் நாளை செல்லப்போகும் பல்வேறு இடங்களின் பாதுகாப்பையும் தலைக்கொருவராக நாம் எடுத்துக் கொள்வோம் ! அனைவரும் நேரில் சென்று தத்தம் இடங்களின் பாதுகாப்பை உறுதி செய்துகொள்வோம் ! மழபாடியார் முதலிலிருந்து கடைசிவரை ஆட்கொண்ட வில்லியாரின் திருமெய்க்காப்புப்படை வீரரோடு வீரராக அரசரின் அருகிலேயே இருக்க வேண்டும். எக்காரணம் கொண்டும் ஒரு கணம் கூட அவரை விட்டுப் பிரிதல்கூடாது. சந்தேகத்திற்கிடமாய் நடமாடும் நபர்களை உடனடியாக கைதுசெய்யும் உரிமையை நான் உங்கள் அனைவருக்கும் இப்போதே அளிக்கிறேன் ! யாரங்கே - உடனடியாக முறிஓலைகளையும் ஒரு எழுத்தாணியையும்

எடுத்து வாருங்கள் !"

"நாம் இப்போது அமர்ந்திருக்கும் மும்முடிச் சோழன் திருமாளிகையின் பாதுகாவலை பிரம்மராயர் ஏற்கட்டும் ! காலையிலிருந்து நண்பகல் வரை அரசர் அரண்மனையை விட்டு வெளிவரப் போவதில்லை ! முன்மாலை வேளையில் தளிக்குளத்தார் ஆலயப் பாதுகாவலை நான் ஏற்கிறேன் ! அங்கிருந்து பெரிய திருக்கற்றளி வளாகத்துக்கு அரசரை பத்திரமாகக் கொண்டு சேர்ப்பதுவரை என்னுடைய பொறுப்பு - அதற்குப் பிறகு திருக்கற்றளி வளாகத்தில் அரசரின் பாதுகாப்பு ஏற்பாடுகளை தென்னவன் மூவேந்த வேளார் கவனிக்க வேண்டியது !"

"அவ்வாறே செய்வோம் !"

"உங்கள் அனைவருக்கும் உதவியாக என்னுடைய படையிலிருந்து தலைக்கு இருபது ஆட்களை நாளை விடியற்காலை உங்கள் அரண்மனைக்கு அனுப்பி வைக்கிறேன் ! நம்முடைய திருமெய்க்காப்புப் படை சிறப்புப் பயிற்சிகள் பலவும் பெற்றிருப்பதால் இந்த சமயத்தில் உங்களுக்கு உபயோகமாக இருக்கும் !" என்றார் ஆட்கொண்ட வில்லியார்.

"விடிவதற்குமுன் உங்களுடைய திருமெய்க்காப்புப்படை ஆயுதசாலைக்கு நான் செல்ல வேண்டுமே ! சில ஆயுதங்கள் தேவைப்படுகின்றன..."

"அதற்கென்ன மழபாடியாரே - இந்தக் கூட்டம் முடிந்ததும் நேராக அங்கே சென்றுவிட்டு வரலாம் !"

## அந்த நாளும் வந்தது !

அந்தப் பெரிய தோட்டத்தில் புத்தம் புதிதாக மலர்ந்திருந்த பல்வேறு மலர்களிலும் அமர்ந்து ஒரு தேன்சிட்டுக்குருவி தன்னுடைய கூரிய அலகுகளால் மனமாற தேனருந்தியது. வயிறு நிரம்பியதும் அந்தத் தோட்டத்தின் பக்கலில் தென்பட்ட சாளரத்தில் அமர்ந்து கீச் கீச்சென்று இனிமையான குரலெழுப்பியது.

அந்தக் குரல் படுக்கையில் அதுவரை ஆழ்ந்த உறக்கத்திலிருந்த அவரை எழுப்பிற்று. அவர் நேராக சாளரத்தை நோக்கினார்.

வானம் சிவப்பும் நீலமுமாக கோடி சூரிய வர்ணங்களை வாரி இறைக்க, அந்தப் பின்னணியில் தேன்சிட்டுக் குருவியின் அறைகூவல் அவருக்கு மிகுந்த உற்சாகத்தையளித்தது.

அவர் தன்னுடைய பெரிய கொண்டையை முடிந்துகொண்டு அப்படியே பத்மாசனமிட்டு அமர்ந்து இருகை கூப்பி வானத்தைத் தொழுதார்.

"இறைவா ! இன்னொரு நாளை எங்களுக்கெல்லாம் அளித்திருக்கிறீர் - நன்றி ! இந்த நாளில் மன்னுயிரெல்லாம் இன்பம் எய்தட்டும் ! மனிதர்கள் பிறர்க்கு இரந்துண்டு வாழட்டும் ! அல்லவை தேயட்டும் - அறம் பெருகட்டும் !"

அவர் மூக்கின் ஒரு துவாரத்தை மூடி மறு துவாரத்தால் தோட்டத்திலிருந்து முகிழ்த்த தூய காற்றை நூறையிரலில் நிரப்பி பூரகம், கும்பகம், ரேசகத்தில்

மூழ்கினார். முதுகின் கீழ் மூலாதாரத்திலிருந்து இடகலை / பிங்கலை வழியாக சக்தியொன்று பரபரவென்று மேலெழும்பியது. அதனை சூட்சும்னா நாடியில் செலுத்தினார்.(1)

*(1) இவற்றை புரிந்துகொள்ள குண்டலினி யோக சாத்திரம் பற்றிய நூல்களை நோக்குக*

இதனை பலமுறை செய்ய புத்தி சட்டென்று கட்டுப்பாட்டுக்குள் வந்தது. மனதில் அமைதியும் புத்துணர்ச்சியும் பரவின. எண்ணங்கள் அலைச்சல் குறைய எதிரிலிருக்கும் காட்சியை தடையீடின்றி மனம் உள்வாங்கிக்கொண்டது. உள்முகம் கூராயிற்று.

அவர் மடக்கி வைக்கப்பட்டிருந்த கால்களைப் பிரித்து படுக்கையை விட்டு இறங்குகையில் கால்மாட்டில் முதல் நாளிரவு தவறுதலாக வைக்கப்பட்ட வெள்ளி வெற்றிலைப்பெட்டியில் கால்பட்டு பெருத்த சப்தத்துடன் உருண்டது. அதிலிருந்த பல்வேறு பொருட்களும் சிதறின.

படுக்கையை விட்டு இறங்கும்போது வெற்றிலைப் பெட்டி உருள்வது துர்நிமித்தம். அதிலுள்ள பொருட்கள் சிதறுவது அதைவிட துர்சகுனம். பிராணாபாயம் வரப்போவதை அது குறிப்பிடும் என்று அவர் படித்திருந்தார். ஒரு கணம் துணுக்குற்றார்.

அவருக்கு ஏதோ புரிந்தது. "இறைவா ! இன்றைக்கு எனக்கு பெரியதொரு சோதனை என்று கோடி காண்பித்திருக்கிறாய். வெற்றிலை பொருட்கள் சிதறியதிலிருந்தது என் உயிருக்கு இன்று ஆபத்து என்று புரிந்து கொள்கிறேன். நல்லது. வரட்டும் - வரவேண்டிய ஆபத்து நன்றாக

வரட்டும். உயிர் இன்றைய இரவு என்னுடம்பில் தங்க வேண்டுமென்று விதியிருந்தால் தங்கட்டும். இல்லையேல் செல்லட்டும். எப்போதோ சென்றிருக்கவேண்டிய உயிர் ! இதுநாள்வரை பிழைத்திருந்ததே உன்னுடைய அருளால்தான் ! விதிப்படி நடக்கவேண்டியது நடக்கட்டும் !"

மனதில் தோன்றிய கிலேசத்தை அவர் புத்தி பலத்தாலும் ஆன்ம பலத்தாலும் உடனடியாக அடக்கினார்.

சப்தம் கேட்டு ஒரு வேளக்காரன் ஓடிவந்து வணங்கி நின்றான். அவர் வெற்றிலைப் பெட்டிப் பொருட்களை எடுத்துவைக்கச் சொல்லிவிட்டு தன்னுடைய சிறிய தாடியை தடவியபடியே அமைதியாக அவ்விடம் விட்டு அகன்றார்.

அவருடைய நடையில் கம்பீரமும் அமைதியும் ஒருங்கே பரிமளித்தன. அசைவுகளில் ஒரு மோன அழகு சுடர்விட்டது.

ஐம்பது வயதைக் கடந்துவிட்டாலும் உடலில் தளர்ச்சி தெரியவில்லை - ஆனால் கற்றளி கட்டத் துவங்கியதிலிருந்து அந்தத் தோற்றத்தில் அமைதி கூடிவிட்டதாக வேளக்காரன் உணர்ந்தான்.

அவர் அந்த அறையை விட்டு அகலும்வரை அவரையை கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான் அவன்.

*****************************************************************************************
*******

விடியற்காலையிலேயை மழபாடியார் தன்னை எழுப்பச்சொல்லிவிட்டார். ஐப்பிசை மாதக் குளிருக்காக இதமான வெந்நீரில் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு புத்தாடை உடுத்திக்கொண்டார். தன்னுடைய குலதெய்வமான கச்சிப்பட்டு ஐஞ்சந்தி துர்க்கா தேவியை மனதில் நிறுத்தி பூசை அறையில் சிறிது நேரம் பிரார்த்தனை செய்தார்.

பின் முதல் நாளிரவு திருமெய்க்காப்புப் படையின் ஆயுதசாலையிலிருந்து கொண்டுவந்திருந்த ஆயுதங்களை தரித்துக்கொண்டார். அந்த ஆயுதங்கள் ஒவ்வொன்றுமே விசேஷமான முறையில் குறிப்பிட்ட நோக்கத்திற்காக தயாரிக்கப்பட்டிருந்தன.

வில் இரண்டு அடிதான் இருந்தது - ஆனால் தாமிர நாண் மிக வலுவாகப் பூட்டப்பட்டு சுண்டினால் டொய்ங் என்று கம்பீரமான நாதமெழுப்பியது. அது தெரிந்ச சோழ வில்லிகள்(2) படையினருக்காக தயாரிக்கப்பட்ட வில் - தற்போது திருமெய்க்காப்புப்படையும் அதனையே உபயோகப்படுத்துகிறது. வில்லில் பூட்டுவதற்காக விசேஷமான அம்புகளும் தயாரிக்கப்பட்டிருந்தன. சிறகுகளை குறிப்பிட்ட முறையில் சொருகி சிறு விசையிலேயே காற்றைக் கிழித்துக்கொண்டு செல்லும் வல்லமை அவற்றுக்குண்டு. மேலும் காற்றினால் அவை அதிகம் திசைதிரும்பமாட்டா.

*(2) கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ள சோழர் படை*

கூரிய முனையில் இராஜநாக விஷம் தடவப்பட்ட குறுவாட்களை இடையில் தரித்துக்கொண்டார். வாட்களின் வடிவமும் வித்தியாசமாகவே இருந்தன - அவை நேராக உடலில் செலுத்துவதற்காக தயாரிக்கப்பட்டவை அல்ல - கைகளில் குறிப்பிட்ட விதத்தில் பிடித்துக்கொண்டு உரிய விதத்தில் வீசினால் எதிரிலிருப்பவர்களின் சதையை பதம்பார்த்துவிட்டு மீண்டும் வாளை வீசிய பக்கத்திற்கே அவை திரும்ப வந்து விழுந்துவிடும்(3). இதனால் ஆயுத இழப்பு அதிகமிருக்காது - எதிரியின் உடலில் விஷம் கலந்து உடனடி மரணம் நிச்சயம்.

*(3) கிட்டத்தட்ட இந்நாளைய பூமராங் போன்றது.*

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் மேற்கூறிய ஆயுதங்கள்தான் பெரிதும் பயன்படும். என்றாலும் எதற்கும் இருக்கட்டுமென்று தன்னுடைய ஈட்டியையும் எடுத்துக்கொண்டார். அந்த ஈட்டி அவருடன் பலமுறை போர்க்களங்களுக்கு வந்திருக்கிறது. பல எதிரிகளை சாய்த்திருக்கிறது. ஒவ்வொரு முறையும் ஞாபகமாக போர் முடிந்தவுடன் எதிரிக் களத்திலிருக்கும் தன்னுடைய ஈட்டியை எப்படியாவது தேடி எடுத்துவிடுவார் மழபாடியார் !

வாயிலுக்கு வந்தவரை வாயிற்காவலன் வழிமறித்தான். வில்லியார் படையிலிருந்து ஆட்கள் வந்திருக்கிறார்களாம்.

அவர்கள் அனைவருக்கும் நீர்மோர் தர ஆணையிட்டார். விடியற்காலையில் மோர் வெறும் வயிற்றில் அருந்துவது உடல் சூட்டைக் குறைக்கும். நாள்முழுவதும் வெய்யிலில் அலைப்போகும் அந்த

தரைப்படை வீரர்களுக்கு அது ஆறுதலாயிருக்கும்.

அவர்களை கூட்டிக்கொண்டு உடையார் அரண்மனையான மும்முடிச்சோழன் திருமாளிகைக்கு தாமதமின்றி கிளம்பினார்.

**************************************************************************************
*******

மழபாடியார் அரண்மனையை அடையும்போது பிரம்மராயர் அங்கு ஏற்கனவே வந்திருப்பதைக் கண்டார். பிரம்மராயருடைய ஆட்களும் மழபாடியாரின் ஆட்களும் எந்த எந்த பகுதிகளை கவனித்துக்கொள்வது என்பது பற்றிய விவாதம் நடந்தது.

"தேவரிடம் இதைப்பற்றியெல்லாம் தெரிவித்தாகிவிட்டதா ?"

"அதை ஏன் கேட்கிறீர்கள் மழபாடியாரே ! திருமஞ்சன சாலைக்குள் செல்லுமுன் அவரை அவசரமாக சந்தித்து நடந்த விஷயங்களை மிகச் சுருக்கமாகக் கூறி நாம் மேற்கொண்டுள்ள பாதுகாப்பு ஏற்பாடுகளைச் சொன்னேன். அசந்தர்ப்பமாக சிரித்தார். நீங்கள் என்ன செய்தாலும் இன்றைக்கு என் தலைக்கு ஆபத்து வருவது உறுதி - அதிலிருந்து மீள்கிறேனா இல்லையா என்று ஈசன் முடிவு செய்யட்டும் ! என்று கூறிவிட்டு சட்டென்று அகன்றுவிட்டார். நாளும் கிழமையுமாக அவரிடம் இப்படியொரு சொல்லை நான் எதிர்பார்க்கவில்லை..."

மழபாடியாருக்கும் ஏதோ மாதிரி இருந்தது. எதிர்மறை வார்த்தைகளே வராரே அவரிடமிருந்து - அவரா சொல்கிறார் ?

ஒரு கணம் மனம் துவண்டது. அடுத்த கணம் அவருக்கே உரிய பிடிவாதத்துடன் அவர் எழுந்து நின்றார். " தலைக்கா ஆபத்து வரப்போகிறது ? வரட்டும் ! இந்த மழபாடியானைத் தாண்டி ஒருவன் தேவருடைய உயிருக்கு ஆபத்து விளைவிக்கிறான் என்றால் அதற்கப்புறம் வில்லையும் வாளையும் எதற்காக ஏந்துவது ? இருக்கட்டும் - இரண்டிலொன்று பார்த்து விடுகிறேன் - சதிகாரர்களுக்கு நானாயிற்று !"

"என்ன ஐயா - என்ன யோசனை ?"

"வந்து... ஒன்றுமில்லை. நாம் நம் கடமையைச் செய்வோம். மாராயருடைய உத்தரவு நமக்கு இருக்கிறது. நம்மை மீறி யார் அவர்மேல் கை வைத்து விடுகிறார்களென்று பார்த்து விடுவோம் !"

"அப்படியே செய்வோம் - நீங்கள் உங்களை படைகளை திருமஞ்சன சாலை, நந்தவனம், திருக்கோயில் உள்ளிட்ட பகுதிகளை பார்வையிட அனுப்பிவிடுங்கள் - நானும் என்னுடைய படைகளும் மந்திராலோசனை மண்டபம், அத்தாணி மண்டபம் முதலியவற்றை கவனித்துக்கொள்கிறோம். சந்தேகத்திற்கிடமாக எவர் தென்பட்டாலும் உடனடியாக விசாரணையின்றி கைது செய்ய நமக்கு உரிமையுள்ளது..."

"சரி - அப்படியே செய்வோம். நான் ஓரிடத்தில் இருப்பேனென்று சொல்ல முடியாது. அங்கும் இங்குமாக சுற்றிக்கொண்டிருப்பேன்..."

"அரசரை விட்டு நீங்கள் விலகக்கூடாதென்றல்லவா மாராயர் சொன்னார்..."

"அது உண்மைதான்.. என்றாலும் அவசியம் நேர்ந்தால் வெளியில்செல்ல நேரும். அதனால் திருமெய்க்காப்புப் படை வீரர்களோடு நிற்கும் மூவேந்தனிடம் உங்கள் செய்தியை சொல்லிவிட்டீர்களானால் என் கவனத்திற்கு உடனடியாக வந்துவிடும்..."

பிரம்மராயர் "இவன் என்னதான் மனதில் நினைத்துக்கொண்டிருக்கிறான் ?" என்பதான யோசனையுடன் "சரி !" என்று சொல்லிவிட்டு அகன்றார்.

மழபாடியார் அரசரை தரிசிக்கக் கிளம்பினார். அவருடைய ஆசி அப்போதைக்கு அவருக்குத் தேவையாயிருந்தது.

****************************************************************************************
*******

அவர் உடல் நிறைய திருநீறணிந்து கால்களை ஸ்வஸ்திகமாக மடக்கி(4) அவருடைய பூஜையறையில் அமர்ந்தார்.

*(4) தஞ்சை பெருவுடையார் கோயில் ஓவியத்தைக் காண்க*

ஒரு கரத்தில் மழுவும் ஒரு கரத்தில் மானும் ஏந்திய உருவினராய் சற்று

ஒயிலாக மடங்கிய கால்களுடன் அவருக்கெதிரே தேவார தேவர் என்று அவரால் பெயரிடப்பட்ட சந்திரசேகர மூர்த்தியின் உலோக உருவம் தென்பட்டது.

அவர் அமர்ந்ததும் அவரை நோக்கி அந்த உரு புன்முறுவல் பூப்பதாக அவருக்குத் தோன்றியது. அவரும் பதிலுக்குப் புன்முறுவல் பூத்தார். "நண்பா - நலமா ?" என்று விசாரித்தார்.

இறைவனை தாச பாவத்தில் எவரும் வழிபட்டுவிடலாம். "நீ எசமான் - நான் அடிமை !" என்கிற மனோபாவம் எளிது. ஆனால் சிநேகிதம் என்னும் புனிதமான உறவை இறைவனுடன் கொள்வது எளிதில் கைவராது. அதற்கு மிகுந்த மன முதிர்ச்சி வேண்டும். சிநேகிதம் என்றால் என்ன தோழமை என்றால் என்ன என்று மிகத் துல்லியமாகத் தெரிய வேண்டும்.

அந்த உறவை அவருக்குச் சில நூற்றாண்டுகளுக்குமுன் வாழ்ந்த நம்பியாரூரன் என்ற பெயருடைய தொண்டர் அவருக்குச் சொல்லிக் கொடுத்திருந்தார். இறைவனைத் தந்தையாக விளித்த ஆளுடைய பிள்ளையைவிட - இறைவனை சகல உயிர்களுக்கும் தலைவனாக ஏற்றுக்கொண்ட அப்பர் பெருமானை விட - இறைவனின் தோளில் கைபோட்டு அவனுடன் உரிமையாகப் பேசி / சண்டையிட்டு காதலியின் இல்லத்திற்கே தூதனுப்பிய நம்பியாரூரரான சுந்தரமூர்த்தி அவரைக் கவர்ந்தார். அந்த சிநேக பாவத்தில் இறையுடன் கலப்பது அவருக்கு எளிதாக இருந்தது.

மீண்டும் கண்மூடி பிரார்த்தனையிலும் தியானத்திலும் ஆழ்ந்தார்.

எல்லையில்லாத மோனப் பெருவெளியில் அவருடைய ஆன்மா கால்பதித்தது. முதலில் சில கணங்களுக்கு "நான் அருள்மொழிவர்மனான இராஜகேசரி இராஜராஜசோழன் !" என்னும் எண்ணம் இருந்தது. பின்னர் அந்த எண்ணம் புகையாகி காற்றில் கலக்க அந்த மோனத்துடன் ஒன்றுபடுதல் சாத்தியமாயிற்று. அந்தகாரமாகிய முடிவற்ற ஒரு பேரியக்கத்தில் அந்த ஆன்மா கலந்து நிலைபெற்றது.

கால தேச வர்த்தமானங்களற்ற அந்தப் பெருவெளியில் மூழ்கி நின்ற அவரை எங்கோ தொலைதூரத்தில் எழுப்பப்பட்ட தளிக்குளத்து ஆலய மணி கலைத்தது.

அவர் எழுந்தார். புன்னகை கலையாமல் தன்னுடைய தோழனிடமிருந்து விடைபெற்றார்.

**************************************************************************************
*******

"சக்கரவர்த்திகள் சமூகத்திற்கு வணக்கம். மும்முடிச் சோழரான பரமன் மழபாடியார் தங்களைக் காணவேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிறார் !"

"மழபாடியாரா ? உடனடியாக உள்ளே அனுப்பு !"

உள்ளே நுழைந்த மழபாடியாருக்கு பிரமிப்பாக இருந்தது. இவர்தானா ?

அவர் இவர்தானா ? ஆறு திங்களில் ஒரு மனிதரின் தோற்றம் இத்தனை மாறிவிடுமா ? எதிரே நிற்பது மனிதம்தானா அல்லது பழுத்து உதிரத் தயாராக நிற்கும் சிவப்பழமா ! அடடா -

"வரவேண்டும் - வரவேண்டும் மழபாடியாரே ! எத்தனை நாட்களாயிட சந்தித்து ! என்ன அப்படிப் பார்க்கிறீர்..... ஓ! என் தோற்றம் பெருமளவு மாறிவிட்டதாக்கும் - வயதாகின்றதல்லவா - புறப்படும் நேரமும் நெருங்கிவிட்டதே - பயணத்திற்கு ஏற்றார்போல் நம்மை நாமும் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டாமா...."

"சக்கரவர்த்திகளே - தங்களின் தோற்றம் கற்றளி கட்டத்துவங்கியதிலிருந்து அடியோடு மாறி விட்டதென்று கேள்விப்பட்டும் நேரில் காணும்போது பிரமிப்பாக இருக்கிறது. சிவப் பழமாகவே தாங்கள் காட்சியளிக்கிறீர்கள் - பயணம் புறப்பாடு என்றெல்லாம் பேசி எங்கள் மனதை வாட்ட வேண்டாம் - தாங்கள் சாதிக்க வேண்டிய விஷயங்கள் இன்னும் அநேகம் உள்ளன... கற்றளிவேறு இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது.."

"ஆஹா ! நீங்கள் சொல்லிவிட்டீர்கள் - சாதனைகளுக்கு நான் ஒரு மனிதன்தான் கிடைத்தேனா என்ன ! ஆனால் திருக்கற்றளி பற்றி சொன்னீர்களே அது முக்கியமான விஷயம்தான் - நாளை வரப்போகும் மக்கள் இராஜராஜன் என்றால் போர்க்களத்தையும் மெய்க்கீர்த்தியையுமா சொல்லிக்கொண்டிருக்கப்போகிறார்கள் ? நிச்சயம் கிடையாது. இந்தக் கற்றளியை மட்டும் நான் நினைத்ததைப்போல் கட்டி முடிக்க முடிந்தால்......"

"அதிலென்ன சந்தேகம் சக்ரவர்த்திகளே - நிச்சயமாக தாங்கள் அந்த

மாபெரும் கற்றளியை ஒரு குறைவும் இன்றிக் கட்டி முடிக்கத்தான் போகிறீர்கள்...."

"மழபாடியாரே ! மனிதன் நினைப்பது ஒன்று - தெய்வம் நினைப்பது வேறொன்று. ஒருவேளை கற்றளி நல்லபடியாக கட்டிமுடிக்கப்பட்டாலும் அது அவனே அவனுக்காக கட்டிக்கொண்ட இல்லமாகத்தான் இருக்கும் - நமச்சிவாய..."

அவர் கண்மூடி கரம்குவித்து அந்தத் திருக்கற்றளியில் குடியிருக்கப்போகும் தட்சிண மேரு விடங்கரை தியானித்தார். பழைய சாந்தமும் புன்னகையும் மீண்டும் அந்த முகத்தில் குடிகொண்டன.

"சமூகத்திற்கொரு விண்ணப்பம் - இன்று முழுவதும் அடியேனை தங்களுடன் இருக்க அனுமதிக்க வேண்டும் !"

"ஹா...ஹா...ஹா...!" அவர் பெரிதாக சப்தம் செய்து சிரித்தார் - "தாராளமாக இருக்கலாம் மழபாடியாரே ! தாராளமாக இருக்கலாம் ! இது மாராயருடைய திட்டம் போலிருக்கிறது ! தன்னுடைய மிகச் சிறந்த சிஷ்யனை இந்தப் போரில் இறக்கி விட்டுவிட்டாரா... நல்லது ! நல்லது ! மழபாடியாரே - மாராயருடைய திட்டங்கள் எனக்கு சிரிப்பையே வரவழைக்கின்றன. காலன் எனக்கு நாள் குறித்துவிட்டால் அதை நீங்கள் எல்லோரும் தடுக்கவா முடியும் ? உங்களுடைய திறமைகளை நான் நன்கறிவேன் - ஆனால் எவருக்கும் கட்டுப்படாத காலனின் திறமைகளை நீங்கள் அறிவீர்களா ? ஹா....ஹா...ஹா!"

"காலனும் அந்தப் பரம்பொருளின் காலின்கீழ் உதைபட்டவன்தானே -

அந்தக் காலகாலனிடமே கேட்கிறேன் ! எத்தனையோ போர்க்களங்கள் பறிக்கமுடியாத எங்கள் சக்கரவர்த்திகளின் உயிரை கேவலம் ஒரு சில சதிகாரர்களின் கையால் பறிக்கப்படவேண்டுமா என்று..."

"உயிர் போவதைப் பற்றிக் கவலைப்படவில்லையென்றாலும் இந்தச் சதி இத்தனை தூரம் வளர்ந்துவிட்டதே எனக்கு சற்று கவலை கொடுக்கிறது. என்னைச் சுற்றியே எத்தனை சேனைகள் - அக்ரோணிகள் - படைகலன் - திருமெய்க்காப்பு - வேளக்காரர் - கோட்டை கொத்தளங்கள் - ஒற்றர்கள் ! அத்தனையும் ஒரு சதிகாரனின் திட்டத்திற்குமுன் வீணாக நிற்கிறது பார்த்தீர்களா..."

"இது மிக மிக யோசனை செய்து நீண்ட காலம் பொறுமையுடன் யோசித்து தீட்டப்பட்ட திட்டம்போலத் தெரிகிறது சக்ரவர்த்திகளே - குறிப்பாக சோழராாஜாங்கத்தின் அத்தனை நுட்பங்களையும் கருத்தில் கொண்டே எதிரிகள் செயலாற்றுகிறார்கள் என்பதால்தான் இந்த நிமிடம் வரை என்னால் இந்தச் சதியை முறியடிக்க முடியவில்லை - விஷயம்வேறு மிகத் தாமதமாக நம் காதுகளுக்கு வந்து சேர்ந்ததால் அதிக அவகாசமில்லை..."

"இன்றைக்கு நடப்பது நடக்கட்டும் ! ஆனால் இந்தக் கொடிய சதிக்குக் காரணமான ஆணிவேர் அடியோடு களைந்தெறியப்பட வேண்டும் ! அது உங்களால்தான் முடியும் மழபாடியாரே - இதனை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள் !"

"சக்ரவர்த்திகள் ஆணை ! இப்போதைக்கு எனக்கு விடைகொடுங்கள் - பலரும் உங்களை சந்தக்கக் காத்துக்கொண்டிருப்பார்கள் !"

"ஈசனை நினைத்துப் பணியில் ஈடுபடுங்கள் - உங்களுக்குத் தோல்வி என்பதே கிடையாது !" என்று கைகளை உயர்த்தி ஆசி கூறினார் அவர்.

## திருவருளும் குருவருளும்

அரண்மனை விருந்தினர் அறையில் அரச பிரதானிகளுடன் காலைச் சிற்றுண்டிக்காக அமர்ந்திருந்த மழபாடியாருக்கு அரசருடைய பாதுகாவலைத் தவிர வேறு சில முக்கிய பணிகளும் இருந்தன.

முதல் நாளிரவு மந்திராலோசனைக் கூட்டத்தில் முடிவுசெய்தபடி தஞ்சை அரண்மனைப் பொற்கொல்லரை கூட்டம் முடிந்தபின் சந்திக்க முடியவில்லை - அவர் பழையாறையில் இருந்தார். அவரை அழைத்துக்கொண்டுவர இரவோடிரவாக ஆள் அனுப்பியிருந்தார் மாராயர். அவரை முதல் வேலையாக சந்தித்து துழாய்க்குடியில் கிடைத்த படத்தப் பற்றிய அவருடைய அபிப்பிராயத்தை கண்டறியவேண்டும். முக்கியமாக அது அணிகலன்களின் படம்தானா - இல்லையா ? அணிகலன்களின் படமெனில் வழக்கமாகச் செய்யப்படும் நகையா அல்லது குறிப்பாக சிலர் மட்டும் அணியக்கூடிய அணிகலனா ? என்பனபோன்ற கேள்விகளுக்கு விடைதெரிய வேண்டும்.

அடுத்ததாக தித்தனையும் பூபலனையும்கூட சந்திக்க வேண்டியிருந்தது. அவர்கள் நேற்று சேகரித்த தகவல்கள் சிறிதுதான் என்றாலும் உபயோகமானவையாகவே இருக்கக்கூடும் - சிந்திக்க வேண்டும் ! மெய்ப்பையை எப்போதும் கழற்றாத நந்தவனத் திருத்துவான் - முகம் தெரியாத ஒரு பேத்தி - இல்லை, இவர்களைப் பற்றி மேலும் தகவல்கள்

தேவை ! தற்போதைக்கு கிடைத்திருக்கும் தகவல்களை வைத்து இவர்கள் இருவரையும் தீவிரமாக சந்தேகிக்கவும் முடியவில்லை - முற்றிலும் சந்தேகப் படாமல் இருக்கவும் முடியவில்லை.

நேற்று நடந்தது மறைமுக தகவல் சேகரிப்பு. ஆனால் இன்று பங்கிரங்க விசாரணையை துவக்கச்சொல்ல வேண்டியதுதான் - வெள்ளம் தலைக்குமேல் சென்றுகொண்டிருக்கிறது....மறைந்து மறைந்து வேலை செய்யும் முறை இனி உதவாது - களத்தில் இறங்கி இரண்டிலொன்று பார்த்து விட வெண்டியதுதான்.

உணவில் துளியும் மனம் செல்லாமல் பெயருக்கு சிற்றுண்டியை முடித்துக்கொண்டார். அவ்வப்போது அவரிடம் முகமன் கூறிய பிரதானிகளின் முகங்களைக்கூட அவரால் சரிவர உள்வாங்கிக்கொள்ள முடியவில்லை.

*****************************************************************************************
*******

ஒரு இரவு முழுவதும் தங்கு தடையின்றி நீடித்த நீண்ட நெடிய உறக்கத்திற்குப் பின் சாவகாசமாக எழுந்தார் அம்பலவாணர்.

இன்று ஐப்பசி சதயம் !

மனதில் உற்சாகம் பொங்கியது அவருக்கு.... அவருடைய நீண்ட நாள்

கனவு இன்று அரிகண்ட தேவனின் உதவியால் நிறைவேறப்போகிறது ! அடடா - இறுதியில் நாமும் வேஷங்கட்டிக்கொண்டு ஒரு மேடையில் - சாதாரண மேடையா அது ? - கூத்தப் பெருமக்களின் தலைவர் என்று அனைவரும் கொண்டாடும் விசயராஜ ஆச்சாரியாரின் புத்தம் புதிய கூத்தை அரங்கேற்றப்போகும் மேடையல்லவா அது ! பார்க்கப் போகும் பார்வையாளர்களும்தான் சாதாரணமானவர்களா... சோழ சாம்ராஜ்ஜியத்தின் அத்தனை அரச பிரதானிகள், அரசருடைய பிறந்தநாள்விழாவிற்காக வருகை தந்துள்ள கடல் தாண்டி அமைந்துள்ள தூர தூர தேசங்களின் தூதர்கள் - பிரதானிகள் - அலுவலர்கள், இராஜ குடும்பத்துப் பிள்ளைகள் மற்றும் பெண்டுகள் - எல்லோருக்கும் மேலாக உடையாரே அல்லவா அமர்ந்து அவர் கூத்துக் கட்டப்போகும் நாடகத்தைப் பார்க்கப்போகிறார் ! எத்தனை பெரிய பெருமை அது ! அடடா - இந்த ஒரு உதவிக்காகவே அரிகண்டனை தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாட வேண்டாமா....

எந்தக் காட்சியில் தாம் வேடங்கட்டப்போகிறோம் என்பது பற்றி அம்பலவாணருக்கு சற்று குழப்பமாக இருந்தது. அரிகண்டனோ "அதெல்லாம் ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள் ஆசானே ! எல்லாவற்றையும் நான் பக்கலில் நின்று பார்த்துக் கொள்கிறேன் !" என்று ஒரே வார்த்தையில் அவரை அடக்கிவிட்டான். ஹூம் - ஒத்திகையில் கலந்துகொண்டிருந்தால் முழு நாடகத்தையுமே அனைவருக்கும் முன்னதாகப் பார்த்திருக்கலாம் - என்ன செய்வது ! பாழாப்ப்போன பணி குறுக்கே வந்து கெடுத்துவிட்டது....

அடக் கடவுளே ! என்ன பேசிக்கொண்டிருக்கிறோம்... நாம் தஞ்சை வந்த காரியம் என்ன ? இப்போது சிந்தித்துக்கொண்டிருப்பது என்ன ? பாவம் -

மழபாடியார் தனியாக என்ன அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறாறோ.. நம்மை வரவேண்டாம் என்று சொல்லிவிட்டார்தான். இருந்தாலும் அரண்மனை வரை சென்று ஒரு நடை பார்த்துவிட்டு வந்தால் என்ன ? அரிகண்டன்தான் மதியத்திற்கு மேல் திருக்கற்றளி வளாகத்தில் நாடகக் குழுவினருக்கென்று அமைந்துள்ள பிரத்யேக கொட்டகைக்கு வந்தால் போதுமென்று உறுதியாகச் சொல்லிவிட்டானே -

காலையிலிருந்து மதியம்வரை என்ன வெட்டி முறிக்கப் போகிறோம் ? இங்கிருந்தால் வைத்தியரின் அனாவசிய வம்பளப்புக்களுக்கு பதில் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும்... பதில் சொல்லாவிட்டாலும் குறைந்தபட்சம் கேட்டுக்கொண்டாவது இருக்க வேண்டும் ! நோயாளிகள் வராத நேரங்களில் துளைத்தெடுத்து விடுவார் மனிதர் - அவரிடமிருந்து தப்பித்தது போலும் ஆகுமல்லவா ?

செங்கமலத்தை எங்கே காணோம் ? காலையிலேயே எழுந்து ஓடிவிட்டாளா என்ன ? இந்த தஞ்சைக்கு வந்து ஆனாலும் கெட்டுத்தான் போய்விட்டாள் குழந்தை ! அடக்குவார் கிடையாது - இருக்கட்டும், இருக்கட்டும், துழாய்க்குடிக்கு சென்று பார்த்துக்கொள்ளலாம்.....

வைத்தியரின் தலை வாசலில் தெரிந்தது.

"என்ன அம்பலவாணரே - சுகமான உறக்கமா ? காலை மூலிகைகள் சேகரிக்க வெளியில் செல்லும்போது உங்களையும் பேச்சுத்துணைக்கு அழைத்துச் செல்லலாமென்று பார்த்தேன்... ம்ஹூம் ! உங்களை எழுப்பவே முடியவில்லை - அப்படியொரு கும்பகர்ண உறக்கத்திலிருந்தீர்கள் ! வந்து இரண்டு நாட்களாயிற்று - உங்களைப்

பிடிக்கவே முடியவில்லையே - எழுந்து காலைக்கடன்களை முடித்துவிட்டு வாருங்கள் - இருவரும் திரிபுவனமாதேவிப் பேரங்காடிக்குச் சென்று காய்கறிகள் வருவோம் !"

அம்பலவாணருக்கு வைத்தியருடைய முகத்தைப் பார்க்கவே சங்கடமாக இருந்தது. எல்லாம் அரிகண்டன் விவகாரம் சம்மந்தமாகத்தான் ! அவன் நாடகத்தில் நடிப்பதையே ஒப்புக்கொள்ளாத வைத்தியர் அவனோடு சேர்ந்துகொண்டு தாமும் வேடங்கட்டி நடிப்பதைப் பற்றி என்ன நினைப்பாரோ என்ற கவலை அவரை வாட்டியது. அதென்னவோ பாட்டு கூத்து என்றால் வைத்தியருக்கு அறவே பிடிக்காது. வேறு எவரையாவது வையவேண்டும் என்றால்கூட "கூத்தாடிபோல் மெய்ப்பை அணிந்துகொண்டு நிற்கிறான் பார் !" என்றுதான் வைவார். அவருக்கும் நமக்கும் நேற்று - இன்று பழக்கமா என்ன...ஏறக்குறைய முப்பது வருடப் பழக்கம் ! அந்த சிநேகிதத்துக்கு நமது நாடக வெறியினால் ஆபத்து வந்துவிடுமோ ?

எது எப்படி இருந்தாலும் இனி இவரிடம் விஷயத்தை விளக்கிப் பயனில்லை. காலம் கடந்துவிட்டது. இப்போது இந்த விஷயத்தை இவரிடம் பிரஸ்தாபித்தால் முன்பின் யோசியாமல் நேராக அரிகண்டனிடம் சென்று நிச்சயம் அத்தனை பேருக்கும் முன்னால் நரசிம்மாவதாரக் கூத்துக் கட்டிவிடுவார் ! அதனால், பாவம் ! அவனுடைய எதிர்காலமே கெட்டுப் போகும். போதாக்குறைக்கு இவையத்தனைக்கும் நீரும் உடந்தையா என்று நம் மீதும் பாயலாம் ! எதற்கு வீண் வம்பு ? ஆனது ஆகட்டும் - கடைசிவரை விவகாரத்தை மறைத்துவிட வேண்டியதுதான். வைத்தியருடைய காதுக்கு விஷயம் தெரியும்போது தெரியட்டும்.

"அட - இன்று என்ன ஆயிற்று உங்களுக்கு ? ஏன் அப்படி என்னை வெறித்தப் பார்க்கிறீர்கள் ? ஸ்நானம் செய்துவிட்டுக் கிளம்புங்கள் அம்பலவாணரே - நாளங்காடிச்(1) சந்தை மூடிவிடப் போகிறது !"

*(1) நாளங்காடி - பகல் சந்தை. அல்லங்காடி - இரவுச் சந்தை*

அம்பலவாணர் ஒன்றும் பேசாமல் புழக்கடைக்கு(2) அகன்றார்.

*(2) வீட்டின் பின்புறம்*

**************************************************************************************
*******

"சக்ரவர்த்திகளுக்கு வணக்கம். குருதேவர் அரண்மனைக்கு வந்துவிட்டார் !"

தன்னைச் சுற்றியிருந்த அத்தனை மனைவிமார்கள் மற்றும் குடும்ப அங்கத்தினர்களையும் விலக்கிக்கொண்டு அவர் பதிலளித்தார்.

"உடனடியாக உள்ளே அனுப்புங்கள் - இல்லை - நானே அவரை எதிர்கொண்டு அழைத்து வருகிறேன்...."

அவர் பரபரப்புடன் வாயிலுக்கு வந்தார்.

"வரவேண்டும் ! வரவேண்டும் !"

குருவை எதிர்கொண்ட கணத்தில் இரு கரங்களையும் சிரசின் மீது உயர்த்தி அவர் நெடுஞ்சாண்கிடையாக நிலத்தில் வீழ்ந்தார்.

சகல ஞானத்தின் உருவானவரும் ஆன்ம வித்தையை போதிப்பவரும் பரம்பொருளை இடைவிடாமல் சிந்தையில் நிறுத்தியவருமான குருதேவரை வணங்குகிறேன் !

உலகப் பொருட்களின் மீதான பற்றுதலை ஒழித்தவரும் பிறவிக்கடலை கடக்கும் மார்க்கம் தெரிந்தவரும் இராஜராஜனுக்கு சிவ தீட்சை எனும் பெரும் பேற்றை அளித்தவருமான குருதேவரை வணங்குகின்றேன் !

ஞான யோகத்தில் சிறந்தவரும் பக்தி யோகத்தை மனதில் விதைத்தவரும் கர்ம யோகத்தில் பலனை போதித்தவரும் இராஜ யோகத்தில் கரை கண்டவருமான குருதேவரை வணங்குகிறேன் !

தன் பாதங்களில் வீழ்ந்த ஆன்மாவை அன்புடன் தூக்கி நிறுத்தியவருக்கு நீண்ட தாடி - மீசை. முன்னே உயர்ந்து பின்புறம் நீண்டு தொங்கும் தூய வெண்ணிற சடாமுடிகள். மிகக் கூர்மையான கண்கள். இதழ்களில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட புன்னகை. மிக எளிய ஆடைகள்.

கைகளில் கமண்டலமும் தண்டமும் ஏந்தி மிக மிக நிதானமாய் நடக்கையில் கையிலாயத்தில் தவம் செய்துகொண்டிருந்த சப்த ரிஷிகளில் ஒருவர்தான் திடீரென்று பூமிக்கு வருகைபுரிந்துவிட்டாரோ எனும்படியான திகைப்பை ஏற்படுத்தும் தோற்றம் ! லகுளீச பாசுபத சைவ சமயத்தைச்

சார்ந்தவரும் பேரரசர் இராஜராஜருடைய ஆன்மீக வழிகாட்டியாக விளங்கியவரும் சோழ ராஜகுருவானவருமான ஈசான சிவ பண்டிதர்(2) ஒரு புன்னகையுடன் அரசரை தூக்கி நிறுத்தினார்.

*(2) இராஜராஜருடைய குருவாக விளங்கியவர் கருவூர்த்தேவர் என்பது தவறான கூற்றாகும். இராஜராஜரின் குருவாக விளங்கியவர் பாசுபத குருவான ஈசான சிவ பண்டிதர் என்று தஞ்சை இராஜராஜேச்சுரத்துக் கல்வெட்டுக்கள் (எண்.90) தெளிவாக இயம்புகின்றகன. கருவூராரைப் பற்றிய குறிப்புக்கள் கோயில் கல்வெட்டுக்களில் இல்லை.*

இருவரும் அரசரின் பிரத்யேக பூஜையறைக்குள் மௌனமாக நுழைந்தார்கள்.

குரு அமைதியாக அரசர் காட்டிய மான் தோல் இருக்கையில் கால்களை மடக்கி பத்மாசனமிட்டு அமர்ந்தார். ஒரு கரத்தை மடக்கி சின் முத்திரையுடன் மூலாதார ஸ்தலத்தில் வைத்து மறுகரத்தை தண்டத்தில் ஏந்தி கண்களை மூடினார். பிராணாயாமம் புரிந்து தியானத்தில் ஆழ்ந்தார்.

ஏறக்குறைய துங்கபத்ரா நதிவரை பரவியிருந்த தென்னாடு முழுவதையும் தன்னாட்சிக்குட்படுத்திய அந்தப் பெருந்தகை தன்னுடைய குருவின் காலடியில் கைகூப்பி அமைதியாக அமர்ந்தார்.

யுக யுகாந்திரங்கள் என்று சொல்லத்தக்க சில நிமிடங்கள் கழிந்தன.

"அருமொழி !"

"சொல்லுங்கள் குருதேவா !"

"இன்றைக்கு பெரியதொரு கண்டம் உனக்கு ஏற்படப்போகிறது என்பதற்கான துர்நிமித்தங்கள் தென்பட்டிருக்க வேண்டுமே !"

அவர் புன்னகைத்தார் - "ஆம், குருதேவா ! ஏற்பட்டன...காலையில் எழுந்திருக்கும்போது..."

குருவும் புன்னகைத்தார் - "அறிவோம். உன் மனதின் ஓரத்தில் அதனால் சிறிதளவு கிலேசம் ஏற்பட்டுள்ளது..."

"ஆம் குருதேவா ! கிலேசம் ஏற்பட்டுள்ளது உண்மைதான். ஆனால் பிராணாபாயத்தைப் பற்றிய பயம் அல்ல அது. சோழ நாட்டிற்கு எதிராக ஒருவன் துணிந்து சதி செய்து அது இத்தனை தூரத்திற்கு வளர்ந்துவிட்டதே என்றுதான்...."

குரு ஒரு கணம் கண்களை மூடினார். திறந்தார்.

"மேற்கிலிருந்து துர்காற்று வீசுகிறது. அங்கே ஒருவன் உன்மீது மிக மிகக் கோபமாய் உக்கிரமாய் இருக்கிறான். உன்னை அழிப்பதே தனது குறிக்கோள் என்று முடிவெடுத்து செயல்பட்டுக்கொண்டிருக்கிறான்.

அவன் பிறப்பால் அந்தணன். அக்கினி வளர்த்து ஹோமங்கள் செய்பவன். தனுர் வேதத்தில் நிகரற்றவன். காள பிடாரியான தட்ஷிணத்து மாகாளியின் உபாசகன். ஆன்ம பலம் பெற்றவன். அரசியலில் ஈடுபட்டவன். உன்னால் - உன் படைகளால் - குறிப்பாக உன் படைத் தலைவன் ஒருவனால்

குடும்பத்தை இழந்து அழிந்து பட்டவன். அதனால் உன்மீது எல்லையற்ற கோபம் வரப் பெற்றவன்.

அவனுடைய தவம் அவனுடைய முன்னோர்களின் தவம் அவனுடைய அரணாக விளங்குகின்றன. அதனால்தான் உன்னுடைய ஆட்களால் அவனை இதுவரை நெருங்க முடியவில்லை.

ஷத்திரியனின் கோபத்துக்கும் அந்தணனின் கோபத்துக்கும் வேறுபாடு உண்டு அருமொழி ! ஷத்திரியன் நேருக்கு நேராக மோதுவான் - ஒன்று அழிப்பான் இல்லை அழிவான். ஆனால் அந்தணன் நேருக்கு நேராக மோதமாட்டான். மோதினால் நிற்கமாட்டான். அதனால் முன்புறம் வந்து மோதாமல் மறைந்திருந்து தாக்குவான். எப்படி மறைந்து எவ்வாறு தாக்கினால் எதிரி அழிவான் என்று பலமுறை யோசித்துச் செயல்படுவான்.

அதிலும் இந்த அந்தணன் மிகுந்த புத்திபலம் உடையவன். அதனால் அவனுடைய திட்டம் சாதாரணமாகப் பழுதாவதில்லை. அவன் கைகளால் தொடுக்கப்பட்ட அம்புகள் தஞ்சைக்கு வந்து காத்துகொண்டிருக்கின்றன. உன் உயிரைக் காவு கொள்ளும் தருணத்தை எதிர்நோக்கி பல காலமாகப் பொறுமையோடு காத்துக்கொண்டிருக்கின்றன...

அவற்றின் காத்திருப்பு இன்றோடு ஒரு முடிவுக்கு வரும் !"

குரு ஒரு புன்னகையோடு சொல்லிக்கொண்டு போனதை அவரும் புன்னகை மாறாமல் கேட்டுக்கொண்டிருந்தார்.

"ஆனால் எத்தனை புத்தி பலமும் ஆன்ம பலமும் இருந்தாலும் நல்ல

நோக்கங்கள் இல்லாத எந்த முயற்சிக்கும் இறையருள் கைகூடுவதில்லை அருமொழி ! அப்படிப்பட்ட தீய முயற்சிகள் இறுதியில் ஆக்கியவனையே அழித்துவிடும்.

கண்மூடித்தனமான கோபம் எல்லா நல்ல குணங்களையும் ஆன்ம சக்திகளையும் அழித்துவிடுகிறது. அதனால்தான் கோபத்தை ஒரு கட்டுக்குள் வைத்திருப்பதைப் பற்றி எல்லா மறைநூல்களுமே போதிக்கின்றன. கோபத்தை நாம் அடக்கியாளவேண்டுமேயொழிய அது நம்மை அடக்கியாளக்கூடாது. அப்படி ஆளவிட்டால் அது நம் வாழ்வையும் நம்மைச் சேர்ந்தவர்களின் வாழ்வையும் சூறையாடிவிடும்.

தெரிந்தோ தெரியாமலோ அன்றொருநாள் உன்னுடைய படைத்தலைவனொருவன் கோபாவேசப்பட்டதன் விளைவே இன்று உன் தலைக்கு ஆபத்தாய் வந்திருக்கிறது. இந்த ஆபத்து நடந்தே தீரும் - தடுக்க முடியாது ! கர்ம வினை இது !"

குரு சற்று நேரம் நிறுத்தினார். எதிரில் அமர்ந்திருந்தவரை வாஞ்சையுடன் நோக்கினார்.

"ஆனால் சிவத்தின் பூரண அருளானது உனக்கு சித்தித்திருக்கிறது. பரம்பொருளின் எல்லையற்ற ஆற்றலுக்கு முன்னால் மற்றதெல்லாம் துச்சம்.

உனக்கு இன்றும் இனியும் வரப்போகும் சோதனைகளையெல்லாம் அந்தப் பரம்பொருளின் திருவருள் ஒரு கவசமாக பகலும் இரவும் காக்கும். அந்தக் கவசத்தைக் கிழிக்கும் சக்தி எந்தவிதமான தீய சக்திக்கும்

கிடையாது.

மேலும் பலகாலங்களுக்கு நீ ஜீவித்திருந்து பற்பல நற்காரியங்களை சாதிப்பாய் ! ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வரப்போகும் சந்ததியரெல்லாம் வியந்து போற்றும் வண்ணம் சிவத்துக்கு நீ எழுப்பும் திருக்கற்றளி அமைந்திருக்கும் ! தேவார தேவர் உனக்கு என்றும் துணையிருப்பார் ! எமது ஆசிகள் !"

குரு கைகளை உயர்த்தி அவரை ஆசீர்வதித்தார். வானத்திலிருந்து ஆயிரமாயிரம் வெளிச்சங்கள் குருவின் கரங்கள் வழியாக அவருடைய தலையில் இறங்கின. சிரம் தாழ்த்தித் தலை வணங்கிக் கரம் குவிக்க அவை அவருடைய உடலுக்குள் இறங்கின. குரு அரும்பாடுபட்டுத் தாம் சேமித்த தவத்தின் வலிமையில் ஒரு பகுதியை தனக்குள் இறக்குவதை அவர் புரிந்துகொண்டார். கண்களில் நீர்மல்க மீண்டும் குருவின் பாதம் பணிந்தார்.

பளிச்சென்று குரு ஆசனத்தை விட்டு எழுந்தார்.

"வருகிறேன் அருமொழி !"

"வந்தனம் குருதேவா !"

குரு சில அடிகள் நடந்தார். பின் மெதுவாகத் திரும்பினார்.

"எனக்குத் தவத்தில் தோன்றிய நிமித்தங்களை பிரம்மராயர் சொல்லிய சில செய்திகளுடன் இணைத்துப் பார்த்துத்தான் இத்தனையும் கூறினேன்.

துளியும் கவலைப்படவேண்டாம். உன் ஏற்கனவே குடிகொண்டிருந்த ஆன்ம சக்தி இந்தக் கணத்திலிருந்து பல்கிப் பெருகிவிட்டது. உனக்கு ஒருவரும் தீங்கிழைத்துவிட முடியாது.

மற்றுமொரு விஷயம். உன் படையில் கொற்றவையான துர்க்கா தேவியின் பூரண அருளுக்குப் பாத்திரமானவன் ஒருவன் இருக்கிறான் - அறிவாயா ?"

அவர் மெலிதாக சிரித்தார்... "அறிவேன் குருதேவா !"

"அவன் இன்று முழுவதும் உனக்குத் துணையிருப்பான் ! அவனுக்கு முழு சுதந்திரம் கொடு - அவன் எதைச் சொன்னாலும் மறுப்பின்றி செய் ! அவன் கைகளால்தான் அந்த மலைநாட்டு அந்தணனுக்கும் அவனைச் சேர்ந்த துர்சக்திகளுக்கும் அழிவு என்று எமக்குத் தோன்றுகிறது !"

"உத்தரவு குருதேவா !" என்று அவர் சிரம் தாழ்த்தினார்.

## குன்னத்தூர் ஆசாரி

சிற்றுண்டியை முடித்துக்கொண்ட ஒரு நாழிகைப் பொழுதில் மழபாடியார் அரண்மனைப் பொற்கொல்லரான செம்பொற் சோதியாரை சந்தித்தார்.

"இது தங்க அணிகலனுக்குரிய படம்போலத்தான் எழுதியிருக்கிறது. ஆனால் இதனை எழுதியவன் பொற்கொல்லனோ ஆசாரியோ அல்ல என்பது நிச்சயம் !" என்று படத்தைப் பார்த்தவுடனேயே திட்டவட்டமாக

அறிவித்துவிட்டார் சோதியார்.

"எப்படிச் சொல்கிறீர்கள் ?"

"ஐயா - எங்களுக்கென்று காலங்காலமாகக் கடைபிடிக்கப்பட்டுவரும் சில நெறிமுறைகள் - விதிகள் இருக்கின்றன. சாதாரணமாக அணிகலன்களை படமெழுத மாட்டுத்தோலை நாங்கள் பயன்படுத்துவது கிடையாது - ஏனெனில் மாட்டுத்தோல் படம் நீண்ட நாட்களுக்குத் தாக்குப்பிடிக்காது. மேலும் மாட்டுத்தோலை மங்கலமான இடங்களில் வைக்கவும் முடியாது.

இந்தப் படத்தைக் கூர்ந்து கவனித்தீர்களானால் இது கற்பனையில் வரையப்பட்ட படமல்ல என்பது விளங்கும். இதோ - தோலில் சிற்சில இடங்களில் கூரான கீறல்கள் விழுந்துள்ளது பாருங்கள் ! இவை எதனால் ஏற்பட்டுள்ளன என்றால் இதே போன்ற வடிவமுள்ள வேறொரு பொருளை இந்தத் தோலின் மீது வைத்து அதன் எல்லைக் குறித்துக்கொண்டு அதன்பின் படத்தை எழுதிக்கொண்டிருக்கிறார்கள்..."

"ஆஹா - இது என் கவனத்திலிருந்து தப்பிவிட்டதே..."

சோதியார் சிரித்தார்.

"இதெல்லாம் எங்கள் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்குத்தான் உடனடியாகப் புரியும் ! மேலும் சொல்கிறேன் கேளுங்கள் !

படம் முழுமையாக வரைந்து முடிக்கப்படவில்லை... எழுதியவருக்கு என்ன அவசரமோ தெரியவில்லை. இப்படி அரைகுறையாக நகை நட்டுக்களின்

வரைபடங்களை வைத்துக்கொள்வது எங்களுக்கு வழக்கமில்லை. இரத்தினங்கள் முதலான கற்கள் நகையில் ஏதாவது உண்டா, உத்தேசமாக எத்தனை கழஞ்சு பொன் தேவைப்படும் என்பது பற்றியும் விபரங்களில்லை...

சுருக்கமாகச் சொன்னால் இது அணிகலன்கள் செய்யும் தொழிலில் ஈடுபட்டுள்ள என்போன்ற பொற்கொல்லர்களால் தயாரிக்கப்பட்ட படமே அல்ல. எவரோ ஒரு அணிகலன் அல்லது நகையின் மாதிரியை எழுதிவைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த மாதிரியை எங்களிடம் கொண்டுவந்தால் இதைப்போன்ற அணிகலனை உத்தேசமாகச் செய்து தருவோம்...."

"இது என்ன மாதிரியான அணிகலன் என்பதுபற்றி ஏதாவத தோன்றுகிறதா ?"

"அதைப்பற்றித்தான் முதலிலிருந்தே யோசித்துக்கொண்டிருக்கிறேன்....இது சாதாரணமாக நமது சோழநாட்டுப் பெண்கள் அணியும் அணிகலன்கள் போல் தெரியவில்லை. விசேஷமாக ஒரு சில சாதியார் சிற்சில நகைநட்டுக்கள் செய்துகொள்வதுண்டு - அதைப்போன்றதாயிருக்குமோ ? இன்னும் கொஞ்சம் யோசித்தால் முதலில் இது நகைதானா என்பதே சந்தேகமாக இருக்கிறது ! இது அணிகலனின் வரைபடம்தான் என்று நிச்சயமாகத் தெரியுமா ?"

மழபாடியாருக்குள் ஒரு தர்மசங்கடம் ஓடியது - "தெரியாது !"

"அடடா - அப்போது இது அணிகலனா என்பதே சந்தேகம் ஐயா !"

சோதியார் தம்மால் முடிந்த தகவல்களைக் கூறிவிட்டார் என்று தோன்றியது மழபாடியாருக்கு.

"மிக்க நன்றி ஆசாரியாரே !" என்று கைகூப்பினார்.

"அடடா - இதற்கெல்லாம் என்ன நன்றி ?"

அவர் விலகப்போகிற சமயத்தில்...."ஐயா - கேட்க மறந்துவிட்டேன் - உங்களுக்குத் தெரிந்த மலைநாட்டுப் பொற்கொல்லர்கள் யாராவது தஞ்சையில் உண்டா ?"

"அதிகம் பேர் கிடையாது. சேர தேசத்து அணிமணிகளுக்குப் பெயர் போனவரென்றால் குன்னத்தூர் ஆசாரியைச் சொல்லலாம் - அவரை வேண்டுமானால் அரண்மனைக்கு வரச் சொல்லவா ?"

"உடனடியாகப் புறப்பட்டு வரச் சொல்லுங்கள். நீங்கள் கண்ட படத்தைப் பற்றி எதுவும் அவரிடம் கூற வேண்டாம் - அரண்மனையில் அழைக்கிறார்கள், பரமன் மழபாடியார் என்று ஒருவரை சந்தியுங்கள் என்று கூறினால் போதும் !"

"சரி !" - சோதியார் ஒரு யோசனையுடன் அந்த இடத்திலிருந்து அகன்றார்.

*************************************************************************************
*******

விடியற்காலையில் எழுந்ததிலிருந்து மாராயருக்கு மூச்சு விடக்கூட நேரமில்லை ! இத்தனைக்கும் சூரியோதயத்திற்கு இரண்டு நாழிகைகள் முன்னரே எழுந்து குளித்துவிட்டு பூஜைகளையும் முடித்துக்கொண்டுவிட்டார் அவர்.

சதய நாள் விழாவிற்காக நாடெங்கிலுமுள்ள பல்வேறு ஊர்களிலிருந்தும் கிளம்பி தஞ்சை வந்திருந்த பிரமுகர்கள், வணிகர்கள், அரசாங்க அதிகாரிகள், படைத் தலைவர்கள் என்று பலரும் அவரைக் காணக் காத்துக்கொண்டிருந்தார்கள். தஞ்சை வரை வந்துவிட்டு மாராயரைப் பார்க்காமல் போவானேன் என்கிற நினைப்பு !ஆனால் மாராயருக்கோ அனைவரையும் சந்திக்க அவகாசமில்லை. அதனால் பொறுக்கி எடுத்த சில முக்கியமானவர்களை மட்டும் சந்திக்க வேண்டியிருந்தது - அப்படிப்பட்ட முக்கியஸ்தர்களை ஒவ்வொருவராக விடச்சொல்லி சேவகருக்கு ஆணைபிறப்பித்துக்கொண்டிருந்தார்.

இடையிடையே நேற்றிரவு மந்திராலோசனை கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட பல விஷயங்களும் அடிமனதில் வந்துபோய் அவரை சங்கடப்படுத்திக்கொண்டிருந்தன. இன்றைக்கு அருமொழிக்கு ஆபத்து எந்த திசையில் எந்த நேரத்தில் எந்த உருவத்தில் காத்துக்கொண்டிருக்கிறதோ... யார் கண்டார்கள் ! "அரண்மனையில் குறுவாளோடு பதுங்கிப் பதுங்கிச் சென்றுகொண்டிருந்த ஒருவன்

அகப்பட்டான். அடித்து விசாரித்ததில் அவனே சதிகாரன் என்பது தெரியவந்தது !" என்பதைப்போன்றதொரு முறி மழபாடியாரிடமிருந்து வரக்கூடாதா என்று அங்காலயத்தது அவர் மனம். அத்தனை எளிதாக முடியக்கூடிய காரியமாக இருந்தால் விஷயம் இத்தனை தூரத்திற்கே வளர்ந்திருக்காதே ! என்று தம்மைத்தாமே சமாதானமும் செய்துகொண்டார். சந்திப்புக்களை விரைவில் முடித்துக்கொண்டு அரண்மனைக்குச் செல்லும் அவசரம் வேறு ! காலையில் நடைபெறும் அரசவைக் கூட்டத்தில் மற்ற அவைப் பிரதானிகளுடன் அவரும் கலந்துகொண்டாக வேண்டும்.

இருக்கட்டும், இருக்கட்டும்...ஒருநாள் இல்லை ஒருநாள் அருமொழியிடம் கண்டிப்பாக இதைப் பற்றி பேசிவிட வேண்டும். வயதாகிவிட்டதப்பா ! என்னை இனியும் வாட்டாமல் விட்டுவிடு ! என்று சொல்லிவிட்டு பழுவூருக்கு கழன்றுகொள்ள வேண்டியதுதான். குறைந்தபட்சம் இந்த ஒற்றர்படைத் தலைமைப் பதவியிலிருந்தாவது விடுதலை பெற்றுவிட வேண்டும்...

மாராயர் இப்படி பல்வேறு சிந்தனைகளுக்கிடையே பிரமுகர்களை சந்தித்துக் கொண்டிருந்த நேரத்தில் உக்கிராண அறையின் வேளத்தானாக இரண்டாவது நாள் பணிக்கு வந்து சேர்ந்தான் தித்தன். விருந்தினர்களின் எண்ணிக்கை அதிகமென்பதால் உக்கிராண அறை காலை நேரத்திலேயே மிகச் சுறுசுறுப்பாகத் தெரிந்தது. அரிய வேண்டிய காய்கறிகள் ஒருபுறம் மலைபோல் குவிந்து கிடந்தன. பல்வேறு பெண்டுகளும் ஆட்களும் தத்தம் பணிகளில் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தார்கள்.

இதுவரை உருப்படியான தகவல்களை மழபாடியாருக்கு சேகரித்துத்

தராதது ஒரு குறையாகவே இருந்தது தித்தனுக்கு. மாராயர் மாளிகைக்கு வருமுன் மழபாடியாரையும் சந்தித்து விட்டுத்தான் வந்திருந்தான் அவன். பகிரங்க விசாரணைக்கே அதிகாரம் கொடுத்துவிட்டார் அவர் ! ஆனால் அதனைக் கடைசித் தருணத்தில்தான் பிரயோகிக்க வேண்டுமென்றும் சொல்லியனுப்பியிருந்தார்.

இன்றைக்கு எப்படியாவது வேளக்காரக் கிழவன் வாயைக் கிளறி ஒரு சில தகவல்களையாவது திரட்டிவிடவேண்டும் என்று உறுதி பூண்டான் அவன்.

************************************************************************************
*******

திரிபுவன மாதேவிப் பேரங்காடியின் ஒரு பகுதியாக அமைந்திருந்த நாளங்காடிக்குச் செல்லும் வழியில் வைத்தியரின் நூற்றுக்கணக்கான கேள்விகளால் தாக்குண்டு செயலிழந்து கிடந்தார் அம்பலவாணர். பொய் சொல்வது அவருக்கு மிகச் சிரமமாக இருந்தது. ஒரு பொய் சொன்னால் அதிலிருந்து பல்வேறு கேள்விக்கணைகள் வைத்தியரிடமிருந்து எழுந்தன. அவற்றை சமாளிக்க மேலும் மேலும் பொய்களை சொல்லிக்கொண்டே செல்ல வேண்டியிருந்தது. ஒரு கட்டத்தில் தாங்க முடியாமல் தன்னுடைய கடைசி அஸ்திரத்தை மீண்டும் பிரயோகித்து விட்டார் அம்பலவாணர்.

"என்னுடைய பணி பற்றிய பேச்சை விடுங்கள் ! அரிகண்டனை இரண்டு நாட்களாக வீட்டிலேயே காணோமே - அவனை சந்திப்பதே பெரும்பாடாக இருக்கும் போலிருக்கிறது - எங்கேதான் இருக்கிறான்

அவன் ?"

"அம்பலவாணரே, உங்களிடம் மறைப்பானேன் ? சுந்தரச் சோழ விண்ணகர ஆதுர சாலை சம்பவத்திற்குப் பிறகு ஏறக்குறைய வீட்டிற்கு வருவதயே நிறுத்திவிட்டான் அவன். பல்வேறு கூத்துக் கட்டும் குழுக்களோடு அவனைப் பார்த்ததாக அவ்வப்போது செய்திகள் கிடைக்கின்றன... என்னதான் நினைத்துக்கொண்டிருக்கிறானென்று தெரியவில்லை. இருப்பது ஒரே மகன் - அவனும் இப்படிப் பொறுப்பற்றுத் திரியவேண்டுமென்று என் தலையில் எழுதியிருக்கிறது..."

அதற்குப் பிறகு வைத்தியரின் புலம்பல்கள் அம்பலவாணரின் காதுகளில் ஏறவில்லை. மிக அக்கறையாகக் கேட்பதுபோல தலையை ஆட்டிக்கொண்டே அரண்மனையில் இப்போது என்ன நடந்துகொண்டிருக்கும் ? மழபாடியாருக்கு புதிய தகவல்கள் ஏதாவது கிடைத்திருக்குமா ? அவருடைய பணியில் தம்மால் ஏதாவது உதவ முடியுமா என்றெல்லாம் யோசித்துக்கொண்டே நடந்தார்.

நாளங்காடியில் வைத்தியர் காய்கறிகள் மற்றும் மருத்துவத்திற்குத் தேவையான சில கீரை வகைகளை வாங்கி முடித்தவுடன் அவரிடமிருந்து கழன்றுகொள்ள வேண்டுமென்று முடிவு செய்தார்.

*******************************************************************************************

*******

"வணக்கம் - குன்னத்தூர் மார்த்தாண்ட ஆசாரி என்பார்கள் என்னை !" - அந்த வயது முதிர்ந்த மனிதர் மழபாடியாருக்கு முன் நின்று கைகூப்பினார்.

"வணக்கம் - அமருங்கள். நான் குருகாடியூரனான பரமன் மழபாடியான். சோழ சைன்யத்தின் மேற்திசை தண்ட நாயக்கன் - இராஜராஜப் பேரந்தளகப் படைத்தலைவன் !"

அவர் சட்டென்று எழுந்தவிட்டார் - "தண்ட நாயக்கரா..."

"அட, அமருங்கள் ! நீங்கள் வயதில் பெரியவர். எனக்கு அதிக அவகாசமில்லை - ஒரு சிறு விஷயத்தில் உங்கள் உதவி தேவையாயிருக்கிறது !"

"சொல்லுங்கள் - என்னால் முடிந்ததைச் செய்கிறேன்..."

"நீங்கள் மலைநாட்டிலிருந்து வந்துள்ளவர் என்று அறிகிறேன் - சேர தேசத்து அணிகலகன்கள் பற்றி உங்களுக்கு அத்துப்படியாகத் தெரியுமில்லையா !"

குன்னத்தூரார் மெதுவாகச் சிரித்தார் - "அத்துப்படியாக என்றெல்லாம் சொல்ல முடியாது ! ஏதோ ஓரளவிற்கு அறிந்து வைத்துள்ளேன்..."

"அப்படியானால் இது என்னவென்று பார்த்துச் சொல்லுங்களேன் !"

ஆசாரியார் அந்தப் படத்தை மெதுவாக ஆராய்ந்தார். "கண்கள் முன்னைப்போல் சரிவரத் தெரியவில்லை - அதோ அந்த சாளரத்திற்கு

அருகில் நின்று காண முடிகிறதா என்று பார்க்கிறேன்..."

"தாராளமாகச் சென்று காணுங்கள் - நானும் வருகிறேன் !"

அவர் அந்த அதிகாலை வெளிச்சத்திலும் கண்களுக்கு அருகில் படத்தை வைத்து உற்றுப் பார்த்தார்.

"இது சேர தேசத்து அணிகலன்போல் தெரியவில்லை - கொல்லர்கள் எழுதிய படம் போல்கூட இல்லை - எங்கே கிடைத்ததையா இந்தப் படம் ?"

"இது ஒரு சிக்கலான சூழ்நிலையில் பெயர் தெரியாத ஒரு நபரிடமிருந்து கைப்பற்றப்பட்ட படம் இது ! அணிகலக்தான் என்று நிச்சயமாகச் சொல்வதற்கல்லை - வேறு ஏதாவது தங்களுக்குத் தோன்றுகிறதா !"

"இதே போன்றதொரு சூரிய சந்திர முத்திரையிட்ட படத்தை சில நாட்களுக்கு முன் வேறெங்கோ பார்த்ததாக ஞாபகம். ஆனால் எந்தச் சூழ்நிலையில் யாரிடம் பார்த்தேனென்று ஞாபகம் வரமாட்டேன் என்கிறது - வயதாகின்றதல்லவா ?"

மழபாடியார் சற்றே பரபரப்படைந்தார்...."எங்கே யாரிடம் இதே போன்ற படத்தைப் பார்த்தோமென்று தயவு செய்து ஞாபகப்படுத்திச் சொல்லுங்கள் ! நீங்கள் அளிக்கப் போகும் தகவல் மிக முக்கியமானது !"

"அதற்குத்தான் முயன்றுகொண்டிருக்கிறே... ஆம் ! கொஞ்சம்போல ஞாபகம் வருகிறது. சேரதேசத்திலிருந்து வந்திருந்த வணிகரொருவர் சில

நாட்களுக்குமுன் என்னை சந்தித்து இதைப்போன்றதொரு அணிகலனை மூன்றே நாட்களில் செய்து கொடுக்க முடியுமா என்று வினவினார். நிறையப் பொன் தருவதாகவும் வாக்களித்தார். ஆனால் தற்போது எனக்கு வயதாகிவிட்ட காரணத்தினால் அவசரமான பணிகளை எடுத்துக்கொள்வதில்லையென்று கூறினேன் - அவரும் வேறு கொல்லரைப் பார்த்துக்கொள்வதாகச் சொல்லிச் சென்றுவிட்டார் !"

"அவருடைய அங்க அடையாளங்கள் தற்போது ஞாபகத்தில் உள்ளதா ?"

"அவருடைய வேலையை ஒப்புக்கொண்டிருந்தால் ஒருவேளை ஞாபகம் இருந்திருக்கும் - இப்போது முகம் சரியாக நினைவில் இல்லை. பெரியதொரு தலைப்பாகையும் மீசையும் வைத்திருந்ததாக ஞாபகம்...."

"கொஞ்சம் சிரமப்பட்டு ஞாபகப்படுத்திப் பாருங்கள் - சிறிதளவு முகம் ஞாபகத்திற்கு வந்தாலும் நமது அரண்மனை சைத்ரிகரில்(1) ஒருவரை விட்டு...."

*(1) ஓவியர்*

"இல்லை ஐயா - அந்த அளவிற்கு மனதில் உருவம் பதியவில்லை. ஆனால் மற்றொன்று ஞாபகம் வருகிறது. அதிகம் கூலி தருவதாகச் சொன்னாலும் அவருடைய வேலையை நான் ஒப்புக் கொள்ளாததற்குக் காரணம் இருக்கிறது. அவரைப் பார்த்தால் ஏதோ ஒரு இனம்புரியாத அருவருப்புத் தோன்றியது. சிலரைப் பார்த்தவுடன் நமக்குப் பிடித்துப் போகின்றது - வேறு சிலரைப் பார்த்தவுடன் நமக்குப் பிடிக்காமல் போய்விடுகிறது..."

குன்னத்தூரார் பேசப் பேச மழபாடியாரின் எண்ணங்கள் வாயுவேக மனோவேகமாகச் சுழன்றுகொண்டிருந்தன. ஆசாரி வணிகர் என்று சொன்னவுடன் துழாய்க்குடி வாணியஞ்சாவடி சதிகாரனாக இருக்குமென்றுதான் அவர் முதலில் நினைத்தார். ஆனால் ஆசாரியார் கடைசியாகச் சொன்ன செய்தி அவரை சிந்திக்க வைத்து விட்டது. முன்பொருமுறை அம்பலவாணர் மாராயர் நந்தவனத்தில் சந்தித்தவனைப் பற்றிக்கூறும்போது "அவன் முகத்தில் இன்னதென்று சொல்லமுடியாத வேறுபாடு தெரிந்தது !" என்றாரே... அதைத்தான் ஆசாரியார் வேறுவிதமாகச் சொல்கிறாரா ? அப்படியானால்...ஒருவேளை....

"ஐயா - அவரைப் பார்த்தால் ஏன் உங்களுக்கு ஒருவிதமான அருவருப்புத் தோன்றியதென்பதை விளக்க முடியுமா ?"

"இதற்கெல்லாம் காரணம் கண்டு சொல்வது சிரமமான விஷயம் ஐயா - அவருடைய முகம்தான் சரியாக ஞாபகத்தில் இல்லை என்கிறேனே..."

"அவருடைய முகத்தில் - குறிப்பாக நெற்றியில் ஏதாவது..வித்தியாசமாகத் தெரிந்ததா ?" என்றார் மழபாடியார் விடாமல். "புருவங்கள் முடிச்சிட்டதுபோல் நெருக்கமாக அமைந்திருந்தன !" என்று ஆசாரியார் சொல்லிவிட்டால் நந்தவனத்தான்தான் வணிகனாக வந்திருக்கிறான் என்று உறுதிப்படுத்திக்கொண்டு விடலாம் என்று அவர் மனம் எண்ணமிட்டது.

"அப்படியொன்றும் ஞாபகத்தில் இல்லை ஐயா !" என்றார் ஆசாரியார் பரிதாபமாக. எனடா இங்கு இவரிடம் அகப்பட்டுக்கொண்டோம் என்கிற நிலையை அவர் அடைந்துவிட்டதாக மழபாடியாருக்குத் தோன்றியது.

"சரி - உங்களை மேலும் சிரமப்படுத்த விரும்பவில்லை ! உங்கள் உதவிக்கு மிக்க நன்றி ! இந்த சேர தேசத்து வணிகரைப் பற்றி வேறு ஏதாவது விஷயம் - எத்தனை சிறிய தகவலாக இருந்தாலும் - உங்கள் ஞாபகத்திற்கு வந்தால் உடனடியாக எனக்குச் சொல்லியனுப்புங்கள். ஒரு முறியில் உங்கள் தகவலை எழுதி மழபாடியாருக்கு என்று சொல்லி அரண்மனைக்கு அனுப்பிவிட்டீர்களானால் போதும் !"

"அப்படியே செய்கிறேன் ஐயா - வந்தனம் !"

"தங்கள் உதவிக்கு மிக்க நன்றி !"

தகவல்கள் கிடைத்துக்கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் அங்கொன்றும் இங்கொன்றுமாக - ஒன்றுக்கொன்று சம்மந்தம் இல்லாமல் - உடனடியாக அவற்றை வைத்துக்கொண்டு செயலாற்ற முடியாத வகையில்....

என்னதான் நடக்கிறதென்று பொறுத்திருந்து பார்க்க வேண்டியதுதான்.

நம்பிக்கையே வாழ்க்கை. பலவீனம் மரணம்.

## இராஜகம்பீரன் சபை

தஞ்சை உள்ளாலையின் நடுநாயகமாக அமைந்திருந்த அந்த பிரம்மாண்டமான அரண்மனையின்மீது ஆதவன் தன்னுடைய கிரணங்களை ஒரு புதிய உற்சாகத்துடன் பிரயோகித்துக்கொண்டிருந்தான்.

கிட்டத்தட்ட அரண்மனையின் நட்டநடுப் பகுதியில் உத்தியான வனத்தையொட்டி அமைந்திருந்த மும்முடிச்சோழன் திருமாளிகையின் ஒரு பகுதியான திருவோலக்க மண்டபம் பல்வேறு விதமான மலர் அலங்காரங்கள் செய்யப்பட்டு கவினுற காட்சியளித்தது. மண்டபத்தைத் தாங்கியிருந்த நீண்டு உயர்ந்த தூண்களை முல்லை மல்லி இருவாட்சி பாரிஜாதம் போன்ற மலர்கள் கோர்க்கப்பட்ட நீண்ட சரங்கள் தழுவிச் சென்றன. தூண்களின் முடிவில் அமைந்திருந்த போதிகைகளிலிருந்து தாமரை, குமுதம், அல்லி முதலான மலர்கள் தொங்கிக்கொண்டிருந்தன.

திருவோலக்க மண்டபத்தின் நடுநாயகமாக இராஜகம்பீரன் என்று அழைக்கப்பட்ட அந்த சிம்மாசனம் காட்சியளித்தது. அது சோழர்களின் வழிவழிவந்த பரம்பரைச் செல்வமாகும். அந்த சிம்மாசனத்தில் அமர்ந்துதான் கோச் செங்கட்சோழன் முதலான பண்டு அரசர்கள் அமர்ந்து நீதி நெறி வழுவாமல் ஆட்சி செலுத்தியதாகச் சொல்லப்பட்டது. அந்த சிம்மாசனத்தில் அரசர் அமர கூடும் அவை இராஜகம்பீரன் சபையென்றே அழைக்கப்பட்டது.

அந்த சிம்மாசனத்தையொட்டி எழுந்த முத்துப் பந்தல் சிறிது உயரம் வரை வளர்ந்து மிக அழகான அணிமணிகளாலான விதானத்தில் முற்றுப் பெற்றிருப்பதைக் காண்கிறோம்.

விதானம் சூழ்ந்த அந்த சிம்மாசனத்தைச் சுற்றி சற்றே உயரம் குறைவான இடத்தில் நாலா பக்கங்களிலும் வீரர்கள் மண்டியிட்டபடி அமர்ந்து தத்தம் திசைகளை கூரிய கண்களால் அளவளாவியபடி இருந்தார்கள். சற்றே நெருங்கி உற்றுப் பார்ப்போமாகில் அவர்கள் பரமன் மழபாடியாரைப்

போலவே சில விசேஷமான ஆயுதங்களை தரித்திருப்பதைக் காணலாம். அனைத்தையும் ஒப்பிட்டு நோக்கி அவர்கள் அரசரின் திருமெய்க்காப்புப்படையைச் சேர்ந்த வேளக்காரப்படை வீரர்களாய் இருக்கலாமென்று யூகிக்கிறோம்.

மண்டபத்தில் அரசவை நெருக்கமாகக் கூடியிருந்தது.

மந்திரிகள், பிரதானிகள், உடன்கூட்டத்தார், கரணத்தார், கண்காணி நாயகம், ஓலை நாயகம், கணக்கர்கள் என்று பலரும் அவரவருக்கு உரிய இடத்தில் அமர்ந்து தத்தம் பக்கத்திலிருந்தவர்களுடன் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் பின்புறம் சற்று கண்களை ஓட்டினால் மண்டபத்திற்கு வரும் கிழக்குப்புற நுழைவாயில் புலனாகும். அங்கே சிறிய அளவில் சந்தடிகள் கேட்டவண்ணம் இருந்தன…ஏனெனில் அந்த வாயிலின் வழியாக உள்ளே நுழைந்த அரசப் பிரதானிகள் மாராயரின் படைவீரர்களால் சிறிய அளவில் சோதனைகளுக்கு உட்படுத்தப்பட்டுக்கொண்டிருந்தார்கள்.

அந்தச் சோதனையானது பிரதானிகளில் பலரையும் அதிருப்திக்குள்ளாக்கிக்கொண்டிருந்தது. சிலர் முணுமுணுப்போடு நகர வேறு சிலரோ சோதனை வீரர்களுடன் பகிரங்க வாக்குவாதத்தில் இறங்கினார்கள். இவற்றையெல்லாம் முன்னரே எதிர்பார்த்ததைப்போல் மாராயர் உடனுக்குடனே அதிகாரிகளிடம் மன்னிப்புக்கேட்க தன்னுடைய தனிச்சேவகரையும் வாயிலிலேயே நிறுத்தியிருந்தார் !

மண்டபத்தின் சில பகுதிகள் தனியே பிரிக்கப்பட்டிருக்க அங்கே பொதுமக்கள் அனுமதிக்கப்பட்டார்கள். அந்தப் பகுதிகளிலும்

கூட்டத்திற்கக் குறைவில்லை. அந்தப் பகுதிகளும் திருமெய்காப்புப் படையின் கடுமையான கண்காணிப்பிற்கு உள்ளாகியிருந்தன



இராஜகம்பீரன் சபை அமைப்பை விளக்கும் வரைபடம்

திருவோலக்க மண்டபத்தின் மேற்குப்புறத்தையொட்டி அரண்மனை அந்தப்புறத்தின் ஒரு பகுதி வந்து முடிந்தது. அப்படி இரு பகுதிகளும் சேருமிடத்தில் விசாலமான இரு சாளரங்கள் உருவாக்கப்பட்டு திரைச்சீலைகளால் மறைக்கப்பட்டிருந்தன. அந்த சாளரங்களையொட்டி அமர்ந்திருந்த அரண்மனைப் பெண்டுகள் சீலைகளை லேசாக விலக்கி மண்டபத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் நிகழ்வுகளை கவனித்துக்கொண்டிருந்தார்கள்.

முதல் சாளரத்தையொட்டி அமர்ந்திருந்த பெண்டுகள் வயது முதிர்ந்த இராஜரீக மூதாட்டிகளாகத் தென்பட்டார்கள். இளம் பெண்களுக்கு இந்தக் கும்பலில் அமர்ந்திருக்க விருப்பமில்லை போலும் - அவர்கள் தனியாக இரண்டாவது சாரளத்திலிருந்து சபையின் நடவடிக்கைகளை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தப் பகுதியிலிருந்து விடாமல் சளசளவென்ற பேச்சு சப்தம் கேட்டபடியிருந்தது.

திடீரென்று மந்திரம் போட்டதுபோல் சபையில் நிசப்தம் குடிகொண்டது. மண்டபத்தின் மேற்குப்புற வாயிலில் சடசடவென்று நான்கு வாயிற்காவர் குழுமினர். அவற்றில் ஒருவன் தன் இடுப்பில் இருந்த சிறுபறையைக் கொட்டி ஓசையெழுப்பினான்.
மற்றொரு வாயிலோன் சற்றே விலகி நின்றுகொண்டு உரத்த குரலில் கீழ்க்கண்டவாறு முழங்கினான்...

"அபயகுல சேகரர் ! அழகிய சோழர் ! இரணமுக பீமர் ! இரவிகுல மாணிக்கம் ! இராஜ சர்வக்ஞர் ! சோழேந்திர சிம்மர் ! உய்யக் கொண்டார் ! கேரளாந்தகர் ! சண்ட பராக்கிரமர் ! சிங்களாந்தகர் ! நித்த வினோதர் ! நிகரிலி சோழர் ! பண்டித சோழர் ! பாண்டிய குலாசனி ! பெரிய பெருமாள் ! மும்முடிச் சோழர் ! மூர்த்திவிக்கிரமாபரணர் ! ஜனநாதர் ! ஜெயங்கொண்ட சோழர் ! கீர்த்தி பராக்கிரமர் ! சோழ நாராயணர் ! அருள்மொழிவர்மர்..சிவபாத சேகரர்...இராஜகேசரி வர்மரான உடையார் ஸ்ரீ ஸ்ரீ இராஜராஜ சோழதேவர் பராக் ! பராக் ! பராக் !"(1)

*(1) அனைத்துமே கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ள இராஜராஜரின் பட்டப்பெயர்கள் ஆகும்*

அந்த முழக்கத்தைத் தொடர்ந்து அவர் கூப்பிய கரங்களுடன் அந்த அத்தாணி மண்டபத்திற்குள் நுழைந்தார்.

அவர் நுழைந்த மறுகணம் "ஜெயவீஜயீபவ !" என்ற கோஷம் ஒரு புறத்திலிருந்து எழுந்தது. கூடவே மறுபுறத்திலிருந்து "உடையார் இராஜராஜசோழ தேவர் வாழ்க ! வாழ்க !" வென்ற வாழ்த்தொலியும் வானளாவ எழுந்தது.

அவர் மெதுவாக இராஜகம்பீரன் சிம்மாசனம் அமைந்துள்ள முத்துப் பந்தலை அடைந்தார். சிம்மாசனத்தின் அருகில் நின்று ஒருகணம் அதனை வணங்கினார்.

கண்மூடி தியானித்தார்.

"சான்றோர்களும் ஆன்றோர்களுமான என் முன்னோர்களை வணங்கி இந்த அரியாசனத்தில் அமர்கிறேன். என் முன்னோரே ! மூத்தோரே ! இந்த சிம்மாசனத்தின் கீழ் அமர்ந்து சோழவள நாட்டிற்கு நல்லாட்சி வழங்கும் பேற்றை இன்றும் அளிப்பீர்களாக ! என்னை இந்த அரியாசனத்தில் ஏற்றி வைத்த மக்களின் மனம் கோணாமல் நீதிநெறி வழுவாமல் என் செங்கோல் வழி நடத்தவதாக !"

அமைதியாக அவர் சிம்மாசனத்தில் அமர மீண்டும் ஜெயகோஷம் எழுந்தது.

அரசவையிலேயே மிக மூத்தவரும் உடையாரின் திருமந்திர ஓலை நாயகங்களில் ஒருவருமான வேளார் உத்தமச் சோழராகிய மதுராந்தக மூவேந்த வேளார்(2) எழுந்து நின்றதும்தான் அந்தக் கரகோஷம் ஒருவாறு ஓய்ந்தது.

*(2) Epigraphica India, Vol XXII, No.34*

வேளார் சற்றே நெகிழந்த குரலில் "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் "(3) என்று ஒவ்வொரு அடியாக எடுத்துக்கொடுக்க சபை ஏறக்குறைய ஒத்த குரலில் உடையாரின் மெய்க்கீர்த்தியை பாடி முடித்தது.

*(3) முழு மெய்க்கீர்த்தியையும் இராஜகேசரி - ஐந்தாம் அத்தியாயத்தில் காண்க*

வேளாருக்கு அடுத்தபடியாக சபையில் பெரியவரான சோழ சாம்ராஜ்ஜிய சேனாதிபதியும் நமக்கு நன்கு அறிமுகமானவருமான குரவன்

உலகளந்தானான இராஜராஜ மாராயர் எழுந்து நின்றார். நெற்றி முழுவதும் திருநீறு துலங்க மார்பில் பலவித அணிமணிகளுக்கிடையே உருத்திராட்ச மாலையும் பிரதானமாகத் தெரியும்படி அணிந்திருந்த மாராயரின் கம்பீரமான தோற்றத்தை உடையாரே இரசித்தார்.

"சோழ சாம்ராஜ்ஜியத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் கூடியிருக்கும் பிரதானிகளே ! மண்டல நாயக்கர்களே ! மந்திரிகளே ! குடிமக்களே ! மாதண்ட - சாமந்த நாயகர்களே ! நம் அனைவருக்கும் இன்றைய தினம் ஒரு நன்னாள் ! சோழ மண்டலமே கூடிக் களிக்கும் பொன்னாள் ! ஐம்பத்து நான்கு வருடங்களுக்கு முன்பு அவதரித்து அருமொழியென்னும் நாமம் பெற்று வளர்ந்து உடையார் இராஜராஜ சோழராக இன்றைக்கு இந்த அத்தாணி மண்டபத்தில் கொலுவீற்றிருந்து நமது அரசராக விளங்கும் தேவரின் பிறந்த தினம் இது ! இன்றைய தினத்தில் நம் அரசரின் நலனுக்காகவும் பிராட்டியார் தந்தி சக்தி விடங்கியாரான உலோகமாதேவியாரின் நலனுக்காகவும் இதர பிராட்டிகள் அனைவரின் நலனுக்காகவும் அவர்தம் மக்கள் நலனுக்காகவும் நாம் அனைவரும் பிரார்த்தனை செய்வோம் ! ஓம் நமச்சிவாய !"

சபை அந்தப் பிரார்த்தனையில் கலந்துகொள்வதுபோலும் ஓரிரு நிமிடங்கள் மௌனத்தில் மூழ்கியது.

*****************************************************************************************
*******

மாராயரின் உய்யக்கொண்டான் திருமாளிகையின் உக்கிராண அறை ஒரே புகை மூட்டமாகக் காட்சியளித்தது. அந்தப் புகைமூட்டத்தினூடே சற்று சிரமத்தின் பேரில் கண்களைத் துழாவிப் பார்ப்போமாயின் மற்ற உக்கிராணத்தாருடன் தித்தனையும் காணலாம்.

தித்தன் ஒரு பெரிய பாத்திரத்தில் காய்கறிகளுடன் கூடிய கூட்டாஞ்சோறு கிண்டிக்கொண்டிருந்தான் - ஆயிற்று, இன்னும் சில நிமிடங்களில் காய்கறிகள் வெந்து முடிந்துவிடும். இந்த புகைமூட்டத்திலிருந்து தப்பித்து வந்த வேலையைக் கவனிக்கலாம் என்று எண்ணமிட்டது அவன் மனம்.

கைகள் வேலையில் மும்முரமாக இருந்தாலும் கண்கள் வாயில் பக்கமே பதிந்து நின்றன. அடடா, குடவோலைக் கிழவர் மீண்டும் பின்கட்டுப் பக்கமாகச் செல்கிறாரே ! இப்போது அவரைப் பிடித்தால்தான் உண்டு. இல்லையெனில் அடுத்தமுறை வருவதற்குள் இரண்டு மூன்று நாழிகைகள்கூட ஆகலாம். உடனடியாக அடுப்பை யாரிடமாவது ஒப்படைத்துவிட்டு...

"ஐயா - சற்று அவசரமாக வெளியில் செல்ல வேண்டியிருக்கிறது ! அடுப்பைப் பார்த்துக் கொள்கிறீர்களா ? காய்கறிகள் அநேகமாக வெந்துவிட்டன - இன்னும் சில நிமிடங்கள் இருந்தால்..."

"சரி - நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் போய் வாருங்கள் !"

முறிக்கிழவர் ஒரு வித நடுக்கத்துடன் பின்கட்டுக்குச் விரைந்துகொண்டிருக்க அவரைத் தொடர்ந்தான் தித்தன்.

"தாத்தா ! எப்படி இருக்கிறீர்கள் ?"

அவர் சற்று மெதுவாகத் திரும்பி கண்களைச் சுருக்கி அவனைப் பார்த்தார்....."யாரது ? புவன கங்கனா ?"

சரியாய்ப் போயிற்று. கிழவருக்கு கண்பார்வை அத்தனை கூர்மையில்லை போலும்.

"இல்லை தாத்தா ! என் பெயர் தித்தன். நியமத்தூரான். புதிதாக உக்கிரணத்தானாக வேலைக்கு சேர்ந்திருக்கிறேன் !"

"ஓ ! அப்படியா !"

சம்பாஷணை இந்தக் குறுகிய கேள்வி பதில்களோடு முடிந்துபோக கிழவர் பின்கட்டைச் சுத்தம் செய்வது, மற்ற குப்பை கூளங்களோடு ஓலைகளை எரிப்பது என்று தன்னுடைய வேலைகளில் மூழ்கிவிட்டார். தித்தன் விடாக்கண்டனாக பின்கட்டின் வாயிலில் வெற்றிலை போடும் சாக்கில் அமர்ந்துகொண்டான்.

"வெற்றிலை போடுவீர்களா தாத்தா ?"

கிழவர் முகத்தில் லேசாகப் புன்னகை அரும்பியது. அப்பாடா ! இதுவே நல்ல முன்னேற்றம்தான்.

"அட, சற்று ஓய்வுதான் எடுத்துக்கொள்ளுங்களேன் !"

"உன்னைப்போன்ற இந்நாளைய இளவட்டங்களுக்கெல்லாம் ஒரு நாழிகை வேலைசெய்தால் ஒரு நாழிகை ஓய்வு கேட்கிறது. உன்னுடைய வயதில் நாங்களெல்லாம் வைகறையில் வேலையை ஆரம்பித்தால் உச்சிப் பொழுதுக்குத்தான் அக்கடாவென்று ஓய்வோம் !"

தித்தன் மனதில் சட்டென்று பொங்கிய கோபத்தை அடக்கிக்கொண்டான். கிழவரிடம் ஏன் மற்றவர்கள் அதிகம் பேச்சு வைத்துக்கொள்வதில்லையென்பது ஒருவாறு புரிந்தது.

"அந்த நாட்களைப்போல் வருமா தாத்தா ! அது கிடக்கட்டும் - வந்து வெற்றிலை போடுங்கள்..."

கிழவர் அவனுடைய பக்கலில் வந்து அமர்ந்தார் - "வருகிறேன் ! வருகிறேன் ! விடமாட்டாய் போலிருக்கிறதே - நியமத்திலிருந்து ஏனப்பா இத்தனை தூரம் கிளம்பி வந்தாய் ? "

"எல்லாம் பிழைப்புக்காகத்தான் - பாழாய்ப்போன வயிற்றைக் கழுவ வேண்டியிருக்கிறதே !"

"உன் குடும்பம் - தாய் தந்தையர்...."

"அட நான் ஒரு அனாதை தாத்தா ! தாய் தந்தையரை சிறு வயதிலேயே இழந்துவிட்டேன். என்னுடைய தாய்மாமன் சிறிது நாட்கள் வரை என்னை வளர்த்தார்... அவர் போய்ச்சேர்ந்தபின் கதியற்றுப் போய்விட்டேன். சீ ! இந்த ஊரே வேண்டாம் ! என்று வெறுத்துப்போய் தஞ்சைக்குக் கிளம்பிவிட்டடேன்...!"

"அடடா ! கேட்கவே மிகப் பரிதாபமாக இருக்கிறதே - நானும்கூட இதுபோல் ஏறக்குறைய உன்னுடைய வயதில் கதியற்றுக் கிளம்பியவன்தான். தஞ்சைதான் எனக்கு வாழ்வளித்தது. ஏதோ வாழ்நாளைக் கழித்துவிட்டேன்... ஆனால் நான் உன்வயதில் செய்த ஒரு தவறை நீயும் செய்து விடாதே !"

"அது என்ன தவறு தாத்தா ?"

"காலா காலத்தில் திருமணம் என்று ஒன்றை செய்துகொண்டுவிடு ! இல்லையேல் என்னைப்போல் கடைசிக்காலத்தில் திண்டாட வேண்டி வரும் !"

"என்ன தாத்தா அப்படிச் சொல்கிறீர்கள் ? உங்களுக்குச் சொந்த பந்தமென்று எதுவுமே கிடையாதா ?"

"அதெல்லாம் இருந்தால் இந்தத் தள்ளாத வயதில் நான் எதற்கு வேளத்திற்கு வருகிறேன் - ஒன்றும் கிடையாதப்பா ! அதனால்தான் சொல்கிறேன் - காலாகாலத்தில் திருமணம் செய்துகொண்டுவிடு... !"

"கையகல நிலம் நீச்சு கூட இல்லாத அனாதை நான் - எனக்கு யார் தாத்தா பெண் கொடுப்பார்கள் ?"

"தேடினால் அகப்படுவார்களப்பா ! உன்னைப்போன்ற வாலிப வயதில் நான் சற்று அசட்டையாக இருந்துவிட்டேன் - அதனால்தான் இப்போது போக்கிடமின்றி தனியாக காலத்தைக் கழிக்கிறேன்... அதனால்தான் நான்

செய்த தவறை நீயும் செய்துவிடாதே என்கிறேன்.."

"உங்களுக்கு பேத்தியொருத்தி இருப்பதாகக் கேள்விப்பட்டேன்...."

"அவள் என்னுடைய சொந்தமல்ல அப்பனே - என்னுடைய பழைய நண்பனொருவனுடைய பேத்தி ! பாவம் - அதற்கும் போக்கிடம் கிடையாது. ஏதோ காய்கறி பழங்களெல்லாம் விற்று வயிற்றைக் கழுவிக்கொண்டிருக்கிறது...."

தித்தனுக்கு மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. ஒரேயடியாக ஆர்வத்தைக் காட்டப்போய் கிழவர் தவறாகப் புரிந்துகொண்டுவிடப்போகிறாரே என்ன பயமும் ஏற்பட்டது.

"இரண்டு நாட்களாக அவளையும் காணவில்லை - ஒரு செய்தியும்கூட வரவில்லை - என்ன ஆயிற்றோ தெரியவில்லை - விசாரித்துவிட்டு வர ஆள் அனுப்பலாம் என்றால் எனக்கென்று யார் இருக்கிறார்கள் ?"

"அப்படியானால் அவள் உங்களோடு தங்கிக்கொள்ளவில்லையா தாத்தா ?"

"நன்றாகக் கேட்டாய் போ ! நான் வேளத்தில் ஆண்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் இடத்திலல்லவா தங்கிக்கொண்டிருக்கிறேன்.. பெண்பிள்ளைகளை அங்கே தங்கவைக்க முடியாதே ! அவள் புறம்படியில் வீடு எடுத்துக்கொண்டு வேறு சில தோழிகளுடன் தங்கிக்கொண்டிருக்கிறாள் !"

"நான் வேண்டுமானால் விசாரித்துக்கொண்டு வரட்டுமா தாத்தா ?"

கிழவருடைய முகத்தில் லேசான சந்தேகக் கீறல்கள் விழுந்தன.. "அட, உனக்கெதற்கப்பா வீண் சிரமம் ?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை தாத்தா ! மதியம் பணியை முடித்துக்கொண்டு சென்று வருகிறேன் !"

"அப்பனே ! உன்னுடைய வயதைக் கடந்துதான் நான் வந்திருக்கிறேன். எனக்குப் புரிந்துவிட்டது - என்னுடைய பேத்தியை நீ பார்த்திருப்பாய் போல ! நல்ல இலட்சணமாக இருப்பாள் அவள் - அவளின் பேரில் ஒரு கண் வைத்துவிட்டாய் ! அதனால்தான் இந்தக் கிழவனிடம் வந்து இத்தனை நேரம் கதையளந்துகொண்டிருக்கிறாய் - சரிதானே ?"

தித்தனின் மனம் வேகமாக வேலைசெய்தது. கதையை கிழவரின் விருப்பப்படியே கொண்டுபோய்விட்டால் என்ன ? அவருடைய குரலை வைத்துப் இதில் அவருக்கு அப்படியொன்றும் எதிர்ப்பு இருக்காது என்று நம்பலாம்.

"தாத்தா ! உங்களைப்போன்ற அனுபவஸ்தர்களிடம் இளவட்டங்களான எங்கள் வேலை பலிக்குமா ? சரிதான் ! நேரடியாக ஒப்புக்கொண்டு விடுகிறேனே - உங்கள் பேத்தியிடம் நான் ஒரு கண் வைத்திருப்பது உண்மைதான். ஆனால் அவளைத்தான் பிடிக்கவே முடிவதில்லையே ! ஒரு நாள் வந்தால் ஒரு நாள் வருவதில்லை.."

"அட, அப்படி வா வழிக்கு ! அவளை என்னாலேயே பிடிக்க முடிவதில்லையே ? இந்தக் கால இளவட்டங்கள் நாம் சொல்வதைக்

கேட்டு நடக்கின்றனவா என்ன ? திடீர் திடீரென்று வருவாள் - போவாள் ! அவளுக்கென்று தோன்றிவிட்டால் தினமும் வந்து நிற்பாள். ஒருநாள் சொல்லாமல் கொள்ளாமல் வரவும் மாட்டாள். அவளை இரவுச்சாப்பாட்டுக்கு இப்போதெல்லாம் நான் எதிர்பார்ப்பதில்லை - வேளத்திலேயே உணவை முடித்துக்கொண்டு விடுகிறேன்..."

"நான் உக்கிராண அறைக்குச் செல்லவேண்டும் தாத்தா - மிகுந்த நேரமாகிறது. உங்கள் பேத்தி எங்கே தங்கியிருக்கிறாளென்று சொல்லுங்கள். மதியம் விசாரித்துவிட்டு வருகிறேன்..."

"அவள் தங்கியிருக்கும் இடத்திற்கெல்லாம் நான் சென்றதில்லை. நாளங்காடியில் கீரை விற்கும் சுத்தமல்லி என்று விசாரித்தாள் வீடு இருக்கும் இடத்தைக் காட்டிவிடுவார்களென்ற சொன்னாள் !"

"எந்த நாளங்காடியைச் சொல்கிறீர்கள் ?"

"திரிபுவன மாதேவிப் பேரங்காடியைத்தாண்டி புறம்படி ஆரம்பிக்கும் இடத்தில் உள்ளதே - அதுதான்..."

"அடேயப்பா - அத்தனை தூரம் தள்ளியிருக்கிறதா ?"

"அட, அவள் அருகிலேயே வசித்தால் நானே ஒரு எட்டு விசாரித்தவிட்டு வந்துவிட மாட்டேனா என்ன ..."

"சரிதான் தாத்தா ! நான் மதியத்திற்குமேல் அங்கு சென்றுவிட்டு வருகிறேன் - வரவா ?"

"அவளிடம் நான் விசாரித்ததாக ஒன்றும் கேட்க வேண்டாம் - பொசுக் பொசுக்கென்று கோபித்துக்கொண்டுவிடுவாள் !"

"சரிதான் தாத்தா !"

பேத்தியென்ற பெயரில் இந்தக் கிழவரோடு ஒட்டிக்கொண்டிருக்கும் அந்த மர்மப்பெண் கிழவருக்கு உதவும் சாக்கில் ஒரு சில ஓலைகளை படித்திருக்கலாம் - அல்லது கிழிக்கப்பட்ட முறிகளை எரிக்காமல் தன்னுடன் எடுத்துச்சென்றும் இருக்கலாம் - கண்பார்வை சரியில்லாத, ஆதரவற்ற நிலையில் இருக்கும் இவரை ஏமாற்றுவது அத்தனை சிரமமான காரியமாக இருக்காது என்று எண்ணமிட்டான் தித்தன்.

ஏன் அவள் சொல்லாமல் கொள்ளாமல் கடந்த இரண்டு நாட்களாக வரவில்லை ? கிழவனுடைய தயவு இனித் தேவையில்லையா என்ன ? அப்படியானால்..... ஒருவேளை....

நாளங்காடிக்குச் செல்லுமுன் மழபாடியாரை சந்திக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டான்

## அதே கண்கள் !

பேரரசரோடு இராஜகம்பீரன் சபைக்குள் அதிக ஆரவாரமில்லாமல் நுழைந்த மழபாடியாரை நாம் கவனிக்காமல் விட்டுவிட்டோம்.

மழபாடியார் இந்த இடைவெளியில் சபைக்குள் நுழைந்து வேளக்காரப் படையினரில் ஒருவராக நின்று முத்துப் பந்தலையும் ஒரு சுற்று சுற்றிவிட்டு வந்துவிட்டார். சபையின் நடவடிக்கைகளில் சிறிதும் கவனத்தைச் செலுத்தாமல் கருமமே கண்ணாக சபையில் தெரியும் முகங்களை தீவிரமாக நோட்டமிட்டுக்கொண்டிருந்தார். குறிப்பாக பொதுமக்கள் கூடியிருந்த பகுதியை நோக்கி அடிக்கடி அவர் கண்கள் விரைந்தன.

சபையின் இருபுறங்களிலும் பொதுமக்களுக்காகத் திறந்துவிடப்பட்டிருந்த பெரும் வாயில்களில் கூட்டம் பொங்கிவழிந்ததால் மழபாடியாரின் பணி சற்று சிரமமானதாகவே இருந்தது. அத்தனை விதமான முகங்கள் ! அவற்றில் விதவிதமான பாவங்கள் - உணர்ச்சிகள் ! ஆனால் அவர்களில் பெரும்பாலோரின் கண்கள் பேரரசர் அமர்ந்திருந்த முத்துப்பந்தலிலேயே பதிந்திருந்தன. அப்படி அவர்களின் அத்தனைபேர் பார்வைக்கும் இலக்காகியிருந்தவரும் அமைதியான புன்முறுவல் பூக்கும் முகத்துடன் அவ்வப்போது பொதுமக்களின் மீது தன் கவனத்தைச் செலுத்திவந்தார்.

மழபாடியாரின் கண்கள் ஓரிடத்தில் நிலைபெறாமல் சுற்றிச் சுற்றி எதையோ அல்லது யாரையோ தேடுவதைப்போல வட்டமிட்டுக்கொண்டிருந்தன. அவர் தேடிக்கொண்டிருக்கும் முகத்துக்கு இன்னமும் திட்டவட்டமான ஒரு வடிவம் கொடுக்க முடியவில்லை - "நெருக்கமாக சேர்ந்திருக்கும் புருவங்கள் - ஓரளவிற்கு அருவருப்பை அல்லது இன்னதென்று தெரியாததொரு உணர்ச்சயை சந்திப்பவர்களிடத்தில் உண்டாக்கும் முகம்" - இவ்வளவுதான் அவர் அறிந்திருந்தது.

இராஜகம்பீரன் சபையில் அன்று தென்பட்ட பல்வேறு முகங்களுள் ஒன்று அவர் தேடிக்கொண்டிருக்கும் முகம் என்பதாக அவருக்குத் தோன்றியது.

ஏன் அவருக்கு இப்படியொரு எண்ணம் ஏற்பட்டது என்பதை விளக்கப்புகுவது கடினமான பணியாகும்.

நம்மில் பலர் தர்க்க ரீதியான மனத்தை மட்டுமே நம்பி நம்முடைய வாழ்நாளைக் கழித்து வருகிறோம். தர்க்க ரீதியான மனம் தெரிந்தவற்றைக் கொண்டும் அறிந்தவற்றைக் கொண்டும் அலசி ஆராய்ந்து செயல்படும் மனமாகும். தெரிந்ததற்கு அப்பால் விஷய ஞானத்திற்கு அப்பால் செல்லும் ஆற்றல் அதற்கில்லை. ஆனால் விஞ்ஞானமும் சரி, மெய்ஞ்ஞானமும் சரி - மனமானது தர்க்க ரீதியான சிந்தனைகளோடு முடிந்து விடுவதில்லை என்று உறுதியாக எடுத்தியம்புகின்றன. தர்க்க ரீதியான மனத்திற்கு அப்பால் செல்லும் நிலையைத்தான் ஆழ்நிலைச் சிந்தனை அல்லது ஆழ்நிலை மனம் என்கிறோம். இதன் அளப்பறிய ஆற்றல்களை இன்னமும் மெய்ஞானம் உணர்ந்துகொண்ட அளவிற்கு விஞ்ஞானம் உணர்ந்துகொள்ளவில்லை.

ஆழ்நிலை சிந்தனைக் கீற்றுகள் அவ்வப்போது நமக்குள் வந்து போய்க்கொண்டுதான் இருக்கின்றன - நாம்தான் அதனை சரிவர கவனிப்பதில்லை. "இன்றைக்கு நீங்கள் வருவீர்களென்று நிச்சயமாக எதிர்பார்த்தேன் !" என்கிறோம். அது உண்மைதான். ஏதோ ஒன்று நம் மனதிற்கு நெருங்கியவர் இன்று வரப்போகிறார் என்று இரகசியமாகச் சொல்லிவிடுகிறது. "நேற்றிலிருந்து மனதே சரியில்லை !" என்போம். ஏதாவது அசம்பாவிதமான செய்தி இரண்டு நாட்கள் கழித்து வந்து சேரும். இவையெல்லாம் நமது ஆழ்மன உலகின் அலைச்சல்களுக்கு ஒரு சில எளிய உதாரணங்கள்.

மழபாடியாரின் மனம் முற்றிலும் விஷய ஞானத்தைச் சார்ந்திருக்கும் -

அதனை மட்டும் பற்றியிருக்கும் - தர்க்க ரீதியான மனம் அல்ல. தெரிந்ததற்கு அப்பால் - தெளிவாக விளங்குவதற்கு அப்பால் செல்லக்கூடிய ஆழ்நிலை மனமும் அவருக்கு வாய்த்திருந்தது. பல சமயங்களில் அந்த ஆழ்நிலை மனமே பல தெரியாத ஆபத்துக்களிலிருந்து அவரைக் காப்பாற்றியிருக்கிறது என்று சொல்லலாம்.

சதியினைப் பற்றியும் சதிகாரர்களைப் பற்றியும் விடாமல் ஆழ்ந்து சிந்தித்ததன் பயனாக ஆழ்நிலை மனத்தில் அவருக்கும் சதிகாரர்களுக்கும் ஒரு ஒட்டுறவு ஏற்பட்டுவிட்டதுபோல் தெரிந்தது. அவர்கள் இன்னமாதிரி சிந்திப்பார்கள் - இன்னமாதிரி செயல்படுவார்கள் என்பதான உணர்ச்சி அவ்வப்போது அவருக்குத் தோன்றி மறைந்தது. அப்படிப்பட்ட உணர்ச்சிகளுள் ஒன்றுதான் சதிகாரர்களில் ஒருவராவது அன்று அந்த சபைக்கு வந்து அரசரை நோட்டமிட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பதாகத் தெரிவித்தது ! வேடன் குறிபார்த்து அம்பெய்யுமுன் தன்னுடைய இரையை முற்றிலுமாகப் புரிந்துகொள்ளும்பொருட்டு சற்றுநேரம் மௌனமாக நோட்டமிடுவதில்லையா...அதைப்போல....

தர்க்க ரீதியான மனம் அதனை சிந்தனைக் குழப்பம் என்று வர்ணித்தாலும் அவரால் அதனை முற்றிலுமாகப் புறக்கணித்துவிட முடியவில்லை.

அவர்கள் யார் ? எங்கே நின்றுகொண்டிருக்கிறார்கள் ? பொதுமக்களில் ஒருவராக நின்றுகொண்டிருக்கிறார்களா - அல்லது பெருந்தன அதிகாரிகளில் ஒருவராக வேடமிட்டு வந்திருக்கின்றார்களா ? அல்லது...ஒருவேளை... சோழதேசத்திற்கு ஊழியம் புரியும் ஒருவரே சதிக்கு உடந்தையா என்ன ? சதிகாரர்களை எங்கோ நாம் தேடிக்கொண்டிருக்க பிரதானிகளில் ஒருவரே துரோகியாகி அரசரை

நோக்கி கத்திவீசப் போகிறார்களா ? நாம் இருக்கும் நிலையில் அரசரைத் தவிர மற்ற அனைவரையுமே சந்தேகிக்க வேண்டியதுதான், மாராயர், பிரம்மராயர் முதலாக முக்கியப்பட்டோர், பெண்டுகள் முதலானவர்களைத் தவிர்த்துவிடலாம். மற்றபடி அதிகப் பொறுப்பில் இல்லாத உத்தியோகஸ்தர்கள், கணக்கர்கள், நாயகங்கள் முதலான அனைவரையுமே கவனித்தாக வேண்டும் - வேறுவழியில்லை.

இப்படியெல்லாம் பல்வேறு விதமாக சிந்தித்தபடி அங்குமிங்கும் அலைபாய்ந்துகொண்டிருந்த மழபாடியாரின் கண்களுக்கு - ஒரு கணம் - ஒரே ஒரு கணம் அல்லது அதற்கும் குறைவான நேரத்தில் - அந்தக் கண்கள் சிக்கின ! பொதுமக்கள் நின்றுகொண்டிருந்த வலப்புறப் பெருவாயில் பகுதியில் - பல நூற்றுக்கணக்கான முகங்களுக்கு நடுவில் - இரண்டு பொதுமக்களுக்கு நடுவில் - அந்தக் கண்களை கணநேரம் மழபாடியாரின் கண்களை சந்தித்தன.

கூர்மை பொருந்திய மழபாடியாரின் கண்கள் அந்தக் காட்சியைத் தவறவிடவில்லை. அடுத்த கணம் அந்தக் கண்களைத் தாங்கியிருந்க முகம் கூட்ட நெரிசலில் அமிழந்துவிட்டது.

இதுதான் ! இதுதான் அவர் எதிர்பார்த்தது. இதுதான் அவர் தேடிக்கொண்டிருந்தது...

பொறு ! அவசரப்படாதே - உடனடியாகப் பரபரப்படைந்தால் பட்சி பறந்துவிடும். நிதானம்.

தன்னுடன் நின்றுகொண்டிருந்த திருமெய்க்காவல் படை வீரனின் காதில்

யாரும் கவனிக்காத வண்ணம் குனிந்து மெல்லக் கிசுகிசுத்தார் மழபாடியார். அடுத்த சில நிமிடங்களில் பரபரப்பான ஏற்பாடுகள் சபை கூடியிருந்த திருவோலக்க மண்டபத்தின் வெளியில் - எவரும் கவனிக்காத வண்ணம் நடக்கத்துவங்கின. சபையின் உள்ளும் வெளியிலும் அமைந்திருந்த பல்வேறு பகுதிகளிலும் திசைக்கொருவராக நிறுத்திவைக்கப்பட்டிருந்த வேளாண் ஆட்கொண்டவில்லியாரின் ஆட்களுக்கு இரகசிய ஆணைகள் பறந்தன. பொதுமக்களைப்போல சாதாரண உடை தரித்திருந்த அந்த வீரர்கள் பெருமக்கள் கூடியிருந்த மூன்று வாயில்களையும் நெருக்கமாக நின்று நோட்டமிடுவதற்காக முன்னேறத் துவங்கினர்.

மழபாடியார் மிகுந்த எச்சரிக்கையுடன் செயல்பட்டும் வலை விரிக்கப்படுவதை பட்சி எப்படியோ புரிந்துகொண்டிருக்க வேண்டும். அடுத்த சில கணங்களில் நடந்தேறிய நிகழ்ச்சிகள் அதனை உணர்த்தின.

****************************************************************************************
*******

மலர் அலங்காரங்களாலும் தென்னங் குருத்துக்களாலும் வாழை மரங்களாலும் வெவ்வேறு வகைகளிலும் அலங்கரிக்கப்பட்டிருந்த தஞ்சை நகரின் பெருவீதிகளில் அம்பலவாணர் உற்சாகத்துடன் நடைபழகிக்கொண்டிருந்தார்.

ஆங்காங்கே வீட்டு வாயில்களில் பெரிய அளவில் வண்ண மாக்கோலங்கள் சாணம் மெழுகிய தரைகளில் இடப்பட்டிருந்தன. ஒரு சில

கோலங்களில் சாணம் கட்டியாக உருட்டப்பட்டு கோலத்தின் பல்வேறு முனைகளிலும் வைக்கப்பட்டிருக்க அவற்றில் பரங்கிப்பூ, சம்பங்கிப்பூ, அடுக்கு செம்பருத்திப்பூ முதலியவை ஆங்காங்கே சொருகப்பட்டு கவினுறக் காட்சியளித்தன. ஒரு சில கோலங்கள் அளவில் மிகப்பெரியனவாகி தெருவை அடைத்துக்கொண்டிருக்க அவற்றின் மேல் இரதங்கள் ஊர்ந்து சேதம் விளைவிப்பது தவிர்க்கமுடியாததாகிவிட்டது.

ஒரு சில தெருமுனைகளில் மேடைகளும் பந்தல்களும் காணப்பட்டன. அவற்றில் நாடகங்களும் நாட்டிய நிகழ்ச்சிகளும் ஆதவன் அடங்கியபின் ஆரம்பமாகும்.

அம்பலவாணருக்கிருந்த மனநிலையில் முடிந்தால் நாரணனைப்போல் பத்து அவதாரங்கள் எடுத்துக் குறைந்தபட்சம் பத்து நாடகங்களையாவது சேர்ந்தார்போல் இரசிக்க வேண்டுமென்று தோன்றியது. மற்றொரு பக்கம், ஹ ! இதெல்லாம் என்ன ? இன்றைக்குக் கட்டப்போகும் கூத்துக்களிலேயே மிக முக்கியமானதான ஆச்சாரியாரின் கூத்தையே மேடையில் நின்று காணப்போகிறோம் - அதுமட்டுமா, ஒரு காட்சியில் மேடையின் மேலும் தோன்றப்போகிறோம் ! இதற்குமேலும் என்ன வேண்டிக்கிடக்கிறது - என்றும் தோன்றியது.

ஆச்சாரியாரின் நாடகத்தைப் பற்றிய நினைவு வந்ததும் அரிகண்டனும் கூடவே நினைவுக்கு வந்தான். மதியத்திற்கு முன்னரே கற்றளி வளாகத்திற்குச் சென்று அவனுடன் அரட்டைக் கச்சேரி நடத்துவது சுவாரஸ்யமாகத்தான் இருக்கும். ஆனால் மழபாடியார்....? அவரை நினைத்துப் பாவமாக இருந்தது. நமக்கென்னவென்று காரியம் நேற்று முடிந்ததும் கழன்றுகொண்டு விட்டோம்...அவரால் அப்படி வரமுடியுமா

என்ன ? எதையெல்லாம் நினைத்து அலைபாய்ந்துகொண்டிருக்கிறாறோ....

இந்தக் கடமையுணர்வு மனதில் தோன்றியவுடன் நடையை சற்று வேகமாகவே எட்டிப் போட்டார் அவர்.

ஆயிரக்கணக்கான மக்கள் புழங்கும் அரண்மனைக்குள் மழபாடியாரை எங்கே எவ்வாறு பிடிப்பது என்பதுபற்றி அவருக்குக் குழப்பங்கள் இருந்தன. என்றாலம் மழபாடியார் கொடுத்த இலச்சினை மோதிரத்தை வைத்துக்கொண்டு ஒருவாறு சமாளித்துவிடலாம் என்பதாகப் பட்டது.

மும்முடிச்சோழன் திருமாளிகை என்று அழைக்கப்பட்ட அந்த பிரதான அரண்மனை அமைந்திருந்த பகுதியை நெருங்க நெருங்கத் தோரணங்களும் அலங்கார வேலைப்பாடுகளும் அதிகமாகி விட்டதை அம்பலவாணர் உணர்ந்தார். திருமாளிகையின் பேரால் அந்தப் பெருவீதியும் மும்மடிச்சோழன் திருவீதியென்றே அழைக்கப்பட்டது.

அதோ, சற்று தூரத்தே அரண்மனையின் பிரதான வாயில் தெரிகிறது. அடேயப்பா ! என்ன போக்குவரத்து - நெருங்கவே முடியாது போலிருக்கிறதே ! ஒருபுறம் பிரதானிகளும் அதிகாரிகளும் வந்திறங்கும் இரதங்களையும் குதிரைகளையும் வேகவேகமாக அப்புறப்படுத்தச்சொல்லி மெய்க்காவல் படையினர் இரதசாரதிக்களை விரட்டிக்கொண்டிருந்தனர்.

பொதுமக்களின் போக்குவரத்தும் அதிகமாகவே காணப்பட்டது. குறிப்பாக அவர்களுக்காக திறந்துவிடப்பட்டிருந்த வடக்கு வாயில் மற்றும் தெற்கு வாயில் பகுதிகளில் கூட்டம் முண்டியடித்தது. மெய்க்காவல் வீரர்கள் மக்களை உள்ளேவிட மறுத்துக் கொண்டிருந்தார்கள். "இராஜகம்பீரன் சபை

கொள்ளக்கூடிய அளவிற்கு மேலாகவே பொதுமக்களை அதிகாலையிலேயே விட்டுவிட்டோமம்மா ! இனி ஒரு நபர்கூட உள்ளே நுழைவதற்கு வழியில்லை ! மாலை தளிக்குளத்தார் ஆலயத்திலிருந்து திரும்பும் வழியில் பேரரசரை தரிசித்துக் கொள்ளுங்கள் !" என்று அவர்களில் ஒரு சிலர் தங்கள் மறுப்புக்குக் காரணம் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

இதனால் பொதுமக்களிடம் கிளம்பிய அதிருப்தியை சொல்ல வேண்டியதில்லை.

"அதிகாலையிலேயே புறப்பட்டு வந்துவிடலாமென்று சொன்னேன் ! இவள் கிளம்பினால்தானே ! கொண்டையலங்காரத்தை(1) முடிக்கவே மூன்று ஜாமம் ஆகிவிட்டதே !" என்று ஆண்களில் சிலர் வாய்விட்டே புலம்பிக்கொண்டிருக்க அவர்தம் பெண்டிர் "சற்று சும்மா இருக்கிறீர்களா !" என்று ஆரம்பித்து சம்மந்தமில்லாமல் வேறு பல விவகாரங்களையும் பதிலுக்கு இழுத்து ஒருவாறு அவர்களை அடக்கினார்கள்.

*(1) அந்நாளில் தமிழ்ப் பெண்டிர் விதவிதமான கொண்டையலங்காரங்களில் நிகரற்று விளங்கினார்கள். தஞ்சை இராஜராஜேஸ்வரத்தின் சுவரோவியங்கள் இதனை கம்பீரமாகப் பறைசாற்றுகின்றன. சமஸ்கிருத ஆகமங்கள் விளக்கும் கொண்டையலங்காரங்களில் "தமிழம்" என்றே ஒரு விதமான அலங்காரம் அழைக்கப்படுகிறது.தமிழரின் அழகுணர்வு அன்று இந்தியா முழுக்க அறியப்பட்டதற்கு இதுவும் ஒரு சான்று !*

இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் ஈடுகொடுத்து நடந்துகொண்டிருந்த அம்பலவாணருக்கு அவரிடம் இருந்த மோதிரத்தை வைத்துக்கொண்டு

அரசப் பிரதானிகள் நுழையும் பிரத்யேக வாயில் வழியாகவே அரண்மனைக்குள் நுழைந்து விடலாம் என்பது தெரியவில்லை. போதாக்குறைக்கு வைத்தியரை ஏமாற்றுவதற்காக நாளங்காடிக்குச் செல்லும்படியாகவே எளிமையான உடையலங்காரங்கள் செய்துகொண்டிருந்ததால் பிரதானிகள் வாயிலை அணுக அவருக்குத் தயக்கமேற்பட்டது. மீண்டும் எந்த வகையிலும் அவமானப்பட அவர் தயாராக இல்லை. வடக்கு வாயிலை அடைந்து இந்த முத்திரை மோதிரத்தை நீட்ட வேண்டியது - உள்ளே விட்டால் விடுகிறான், இல்லையேல் போகிறதென்று துண்டை உதறிக்கொண்டு "நீங்களும் உங்கள் அரசாங்கமும் எக்கேடு கெட்டாவது போங்கள் !" என்று கிளம்பிவிட வேண்டியதுதான்.

**********************************************************************************************

திருமெய்க்காப்பு வீரர்களுக்கு மழபாடியாரின் ஆணை கிடைத்து அவர்கள் செயல்பட ஆரம்பித்த அந்தக் கணத்தில் வடக்கு வாயிலில் ஏதோ குழப்பம் ஏற்பட்டதுபோல் தெரிந்தது.

எவரோ "அரவம் (2) ! கரிய அரவமொன்று கூட்டத்தினுள் புகுந்து விட்டது!" என்று கூக்குரல் எழுப்பினார்கள். அவ்வளவுதான் ! வடக்கு வாயிலில் கூடியிருந்த அத்தனை பொதுமக்களும் கண நேரத்தில் திசைக்கொருவராக ஓட்டம் பிடிக்கத்துவங்கினார்கள். வாயிலின் வெளிப்பக்கம் நின்றிருந்தவர்கள் வசதியாக வெளியில் ஓடிவிட, சபையின்

உள்பக்கமாக நின்றுகொண்டிருந்தவர்கள் சிறு தடுப்பைத் தாண்டி உள்ளே குதிப்பது தவிர்க்கமுடியாததாகிவிட்டது. அப்படி குதித்தவர்கள் வடக்கு வாயிலின் அருகே ஆசனமிட்டு அமர்ந்திருந்த பிரதானிகளின் மேலும் அவர்தம் ஆசனங்களின்மேல் விழுந்தார்கள் ! என்ன நடந்துகொண்டிருக்கிறதென்பதே சபையில் பலருக்கும் புரியவில்லை.

*(2) பாம்பு*

ஒரு கணத்தில் இராஜகம்பீரன் சபையே களேபரமாகிவிட்டது. "அமைதி ! அமைதி !" என்று மாராயர் முடிந்தவரை குரலெடுத்துக் கூவியும் பயனேதும் விளையவில்லை.

மழபாடியாரின் மனநிலையைச் சொல்ல வேண்டியதில்லை. சொல்லி வைத்தாற்போல் தாம் நடவடிக்கை எடுப்பதற்கும் குறிப்பாக வடக்கு வாயிலில் குழப்பம் நடப்பதற்கும் தொடர்பிருக்க வேண்டும்.... அப்படியானால் ? அப்படியானால் ? தாம் இந்த நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதுகூட சதிகாரர்களுக்குத் தெரிந்திருக்கிறதா என்ன ? அல்லது திருமெய்க்காப்பு வீரர்கள் வாயிலுக்கு வருவதைப் பார்த்து இப்படியொரு நாடகம் அரங்கேற்றப்பட்டதா...

அல்லது - ஒருவேளை தற்செயலாக நாம் நடவடிக்கை எடுப்பதற்கும் உண்மையாகவே அரவமொன்று கும்பலில் புகுவதற்கும் நேரம் சரியாக அமைந்துவிட்டதா ? என்னே நமது துரதிருஷ்டம் ! இனி நாம் பார்த்த கண்களுக்குரிய முகத்தைப் பார்ப்பது இயலாத காரியமாயிற்றே !

ஒரு கணமே கண்களில் தென்பட்டாலும் அந்தக் கண்களை மழபாடியார்

மறவார் ! அந்தக் கண்களுக்குரிய முகத்தை அவர் எங்கோ எப்போதோ சந்தித்திருக்கிறார் என்று பட்டது. ஆனால் எங்கே எப்போது என்பது நினைவுக்கு வரவில்லை. பலப்பல காலம் முன்பு எங்கோ ஏதோ ஓரிடத்தில் சந்தித்ததுபோல் சில சமயங்களில் தோன்றியது... வேறுசில சமயங்களில் தஞ்சைக்கு வந்து சேர்ந்த நான்கு ஐந்து நாட்களில் அவர் சந்தித்த முகம்தான் இது என்பதுபோலவும் தோன்றியது.... இல்லை - தெளிவாக ஒரு முறை நேருக்கு நேராக அந்த முகத்தைப் பார்த்தாலொழிய அவரால் ஒரு முடிவுக்கு வர முடியாது.

அது மட்டுமல்ல - இரண்டு நாட்களுக்கு முன் காலையில் மாராயர் மாளிகையில் வேளத்தார் நுழையும் தெற்கு வாயிலில் சந்தித்த கண்களும் அதுதானா ? ஏதோ ஒரு வேகத்தில் மாளிகைக்குள் எவருமறியாமல் புகுந்துவிடும் அளவிற்கு நமக்கு வேகம் பிறந்துவிட்டதல்லவா ?(3) மாராயரின் வீரர்கள் மட்டும் சந்தடி செய்யாமலிருந்திருந்தால் அன்றே அவனைப் பிடித்திருக்கலாமே ? யார் அவன் - அல்லது அவள் ? நந்தவனத்தானா - அல்லது அந்தக் கிழவனின் பேத்தியா ? ஒரு பெண்பிள்ளை இத்தனை தூரத்திற்கு செயலாற்ற முடியுமா ? அல்லது அவளது காதலன் எவனுக்காகவாவது அவள் இத்தகு துரோகச் செயல்களில் இறங்கியுள்ளாளா ? ஏன் தித்தனிடமிருந்தும் பூபலனிடமிருந்தும் இன்னும் ஒரு செய்தியும் வரவில்லை ? ஒவ்வொரு ஜாம நேர முடிவிலும் இருவரையும் செய்தியனுப்பச் சொல்லியிருந்தோமே ?

*(3) அத்தியாயம் 7ல் இந்த நிகழ்வு விளக்கப்பட்டது.*

மழபாடியார் மேற்கொண்டு செய்வதேதும் தோன்றாமல் அப்படியே

நின்றார்.

களேபரத்தை கவனித்த திருமெய்க்காப்பு வீரர்களும் மெய்க்காவல் வீரர்களும் வடக்கு வாயில் பகுதிக்கு விரைந்தார்கள். சிதறி ஓடிய பொதுமக்களை அவர்கள் பிடிக்க முயலவில்லை. வாயில் பகுதியில்தான் ஏதோ அசம்பாவிதம் நேர்ந்துவிட்டதென்று அவர்களில் பலரும் நினைத்ததாலும் அரசரின் பாதுகாப்பே அவர்களின் மனதில் இருந்ததாலும் அவர்களின் கவனமெல்லாம் வாயிலுக்கு உடனடியாக விரைவதிலேயே கழிந்தது.

பொதுமக்கள் வருவதற்கு வசதியாக மும்முடிச் சோழன் திருமாளிகையின் வடக்கு வாயிற் பகுதி சிறிது தூரத்திலேயே நேராக மும்மடிச்சோழன் பெருவீதியில் முடிந்தது. அதனால் வாயில் வழியாக சிதறியோடிய பொதுமக்களில் பலர் நேராக வீதிக்கே வந்து கும்பலில் கலந்தார்கள். அரண்மனைக்குள் நுழைவதற்குமுன் முழுமையாக சோதித்தபிறகே அனுமதித்திருந்ததால் அவர்கள் வெளியில் வருவதை வாயிற்காவலர்கள் தடுக்கவில்லை...ஆனால் எதற்காக கும்பலாக ஓடிவருகிறார்களென்றும் புரியவில்லை.

அவர்களில் சற்று நிதானப்பட்ட ஒரு சிலரை காவலர்கள் மறித்து - "ஏனப்பா ! எதற்காக இப்படி தறிகெட்டு ஓடி வருகிறீர்கள் ?" என்று வினவினார்கள்.

"மற்றவர்கள் ஓட்டமெடுத்ததால் நானும் ஓட்டமெடுத்தேன் !" என்று ஒரு சிலரும் "கூட்டத்தினுள் அரவமொன்று புகுந்து விட்டது !" என்று வேறுசிலரும் "இல்லையில்லை - மண்டபத்தின் தூணொன்று

விழுந்துவிடும்போல ஆடிக்கொண்டிருக்கிறது - உயிர் பிழைப்பதற்காக ஓடிவந்தோம் !" என்று ஒரு சாராரும் தத்தம் கற்பனைகளை விரித்துக்கூற மெய்க்காவல் வீரர்களின் பாடு திண்டாட்டமாகிவிட்டது.

அவர்களின் தலைவன் - "பொறுங்கள் - நான் தீர விசாரித்துவிட்டு வருகிறேன் !" என்று கிளம்பினான்.

வடக்கு வாயிலிலிருந்து கும்பல் சிதறியோடி வீதிக்கு வருவதற்கும் அம்பலவாணர் அரண்மனை வாயிலை நெருங்குவதற்கும் சரியாக இருந்தது. மற்றவர்களைப்போலவே அம்பலவாணரும் சற்று தூரத்திலிருந்து ஓடிவருபவர்களை என்னமோ ஏதோ என்ற ஆர்வமிகுதியில் கவனித்துக்கொண்டிருந்தார். சில கணங்களிலேயே அப்படி ஓடிவந்த கும்பல் வாயிலில் நின்றுகொண்டிருந்த பொதுமக்கள் பகுதியில் வந்து கலந்தது.

அப்படிக் கலந்தவர்களில் சிலர் ஏற்கனவே அங்கு நின்று கொண்டிருந்த பொதுமக்களை இடித்துத் தள்ளிக்கொண்டு முன்னேறத் தலைப்பட்டார்கள்.

"அட ! சற்று மெதுவாக வரக்கூடாதா அப்பனே !"

"அடடா - என்னை இடித்துத் தள்ளி விட்டார்களே !" என்பனபோன்ற குரல்கள் எழுந்தன.

கூட்டத்தோடு கூட்டமாக நின்ற அம்பலவாணரும் இடிபட்டார். குறிப்பாக சற்று ஒல்லியான சரீரமொன்று அவர்மேல் சற்று பலமாகவே மோதி முன்னேறத் தலைப்படவே அம்பலவாணர் ஏறக்குறை மண்ணில் விழுந்தே

விட்டார் ! "அடேய் !" என்று அவர் எழ முயற்சிக்கையில் அந்த உருவத்திற்குரிய முகம் ஒரு கணம் அவர் கண்களில் பட்டது...

திடுக்கிட்டார் அம்பலவாணர் ! அடக்கடவுளே ! மருண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பதைப்போல ஆங்காங்கே நமக்கு சதிகார உருவமே கண்களில் படுகிறதே... நம்மை இடித்துக்கொண்டு செல்பவன் முகம் அன்று கொலைபுரிந்த சண்டாளன் முகம்போலல்லவா தெரிகிறது ! இது நிஜம்தானா அல்லது நம் கண்கள்தான் நம்மை ஏமாற்றுகின்றனவா ? அதோ, நம்மைப்போலவை வேறு பலரையும் இடித்துக்கொண்டு செல்லும் அவனுக்கு அப்படியென்ன அவசரம் ? குறிப்பாக நம்மைக் கண்டதும் அந்தக் கண்களில் ஒரு கணம் - ஒரு கணமென்றாலும் - பயப்பிராந்தி தெரிந்ததே ! அவனும் நம்மை அடையாளம் கண்டுகொண்டுவிட்டானா என்ன ? இப்போது மேற்கொண்டு அரண்மனைக்குள் புகுந்து மழபாடியாரை சந்திப்பதா - அல்லது மேற்கொண்டு இவனை இந்த நெரிசலில் பின்தொடர்வதா ?

அம்பலவாணரின் பரபரப்பு மனம் மேற்கொண்டு அதிகம் அவரை சிந்திக்க விடவில்லை. எப்பாடுபட்டேனும் முன்னேறிக்கொண்டிருக்கும் அந்த உருவத்தைப் பிடித்து அதன் முகத்தைப் பார்த்துவிடவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு பரபரவென்று அவனைப்போலவே அம்பலவாணரும் கும்பலை விலக்கிக்கொண்டு முன்னேறினார்.

## தெருவீதிகளில் துரத்தல்

மழபாடியாரை திருமெய்க்காப்புப்படை வீரனொருவன் அணுகினான்.

"ஐயா - தங்களைக் காண தித்தன் என்றொருவர் வந்துள்ளார். அரண்மனையின் தெற்கு வாயிலுக்கருகில் காத்துக்கொண்டிருக்கிறார் - ஏழரை பலமுள்ள முத்திரை மோதிரத்தை வைத்திருந்ததால் உடனடியாக செய்தியனுப்பும்படி காவற்படைத்தலைவர் உத்தரவிட்டுள்ளார் !"

"அவரை திருவோலக்க மண்டபத்திற்கு அருகில் அமைந்துள்ள உத்தியான வனத்திற்கு உடனடியாக வரச்சொல்லுங்கள் !"

"உத்தரவு"

அடுத்த சில நிமிடங்களில் தித்தனை மழபாடியார் சந்தித்தார். தித்தன் முகத்தில் வெற்றிப் பெருமிதம் இல்லாவிடினும் ஓரளவிற்கு முன்னேறிய திருப்தி இருந்தது. மழபாடியாரிடம் தானறிந்த செய்திகளை மளமளவென்று புகன்றான் தித்தன்.

எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுவிட்டு ஒரு பெருமூச்செறிந்தார் மழபாடியார்... "நிச்சயம் நாளங்காடியில் சுத்தமல்லியென்று ஒருவரும் இருக்கப்போவதில்லை - அல்லது அந்தப் பெயரிலேயே வேறு எவராவது இருக்கலாம். அந்தப் பெண் மிகவும் புத்திசாலிதான்... தன்னை அதிகம் வெளிப்படுத்திக்கொள்ளாமலே காரியங்களை சாதித்துக்கொண்டிருக்கிறது.... அதுசரி, அந்தப் பேத்தியை கிழவரைத் தவிர வேறு யாராவது பக்கலில் பார்த்திருக்கின்றார்களா ?"

"உக்கிராண அறையில் வேலை செய்யும் இளவட்டங்கள் அனைத்துமே அவளை கவனித்திருக்கின்றன. ஓரளவிற்கு நல்ல அழகியாகவே

இருப்பாளென்று நினைக்கிறேன் - குறிப்பாக அவளுடைய இளமஞ்சள் நிறத்தை..."

"ம்....அவளைப் பற்றி மிகவும் விபரமாகவே விசாரித்திருக்கிறீர்...." என்று சொல்லிவிட்டு லேசாகப் புன்னகைத்தார் மழபாடியார். சில கணங்களுக்கு அவருடைய சிந்தனைகள் மற்ற இருவரும் கொண்டுவரப்போகும் செய்திகளைச் சுற்றிச் சுழன்றன. பூபலனை இன்னும் காணவில்லை - அவனிடமிருந்து என்ன செய்தி வரப்போகின்றதோ தெரியவில்லை. மூவேந்தனை இரண்டு நாட்களாக சக்ரவர்த்தி ஊர்வலம் போகும் பாதையைச் சுற்றி நோட்டமிடச் சொல்லியிருக்கிறோம். குறிப்பாக அந்தப் பாதையில் மறைந்திருந்து தாக்குவதற்கு ஏற்ற இடம் ஏதாவது உண்டா என்பது தெரிந்து அதனை முழுவதுமாக பரிசோதிக்க வேண்டும்.

"சரி - நீங்கள் நாளங்காடிக்குச் சென்று எதற்கும் ஒரு நடை விசாரித்துவிட்டு வந்துவிடுங்கள். நாம் சந்தேகிப்பதைப்போல் சுத்தமல்லி வேறு யாராகவாவது இருந்தால் மீண்டும் மாராயரின் மாளிகைக்குச் செல்வதில் பயனில்லை - மதிய உணவை முடித்துக்கொண்டு நேராக தளிக்குளத்தார் ஆலயத்திற்கு வந்துவிடுங்கள். அங்கு நான் அரசரோடு வந்து சேருகிறேன்..."

"உத்தரவு ஐயா !"

மீண்டும் திருவோலக்க மண்டபத்திற்குத் திரும்ப எத்தனிக்கையில் சபை கலைந்துவிட்டதற்கான ஆயத்தங்கள் தெரிந்தன. மழபாடியார் மெதுவாக அரசர் அமர்ந்திருந்த முத்துப் பந்தலை நெருங்குகையில் காவல் வீரனொருவன் அவரை அணுகினான்.

"ஐயா - தாங்கள்தான் பரமன் மழபாடியாரான மும்முடிச் சோழரா ?"

"ஆம் !"

"பேரரசரின் பட்டத்தரசியாரான தந்தி சக்தி விடங்கியாரும் தேவியார் பஞ்சவன் மாதேவியாரும் (1) தங்களை உடனடியாக சந்திக்க விருப்பப்படுகிறார்கள்.... "

***(1) இருவருமே கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ள இராஜராஜரின் தேவியர். இருவருக்குமே சோழ அரசாங்கத்தில் நல்ல அதிகாரம் இருந்ததென்பதை பல்வேறு சான்றுகள் கொண்டு புரிந்துகொள்ள முடிகிறது***

துணுக்குற்றார் மழபாடியார். தன்னுடைய நடவடிக்கைகளை யாரும் கவனிக்கவில்லையென்று நினைத்தது எத்தனை பிசகு ? சோழராஜாங்கத்தில் சர்வ வல்லமையும் பொருந்திய இரண்டு பெண்டுகள் நம்மை கூர்ந்து கவனித்திருக்கிறார்கள். சபையில் நடந்த சிறு களேபரத்திற்கும் நமக்கும் தொடர்பிருக்கிறதா என்று விசாரிக்கப் போகிறார்கள். வேறு என்னவெல்லாம் தெரிந்து வைத்திருக்கிறார்களோ தெரியவில்லை. இவர்களிடம் நடந்து கொண்டிருக்கும் அத்தனை விஷயங்களையும் சொல்வதற்கில்லை - மெலிதாக கோடிகாட்டிவிட்டு விட்டுவிடலாமா ? - அப்படி கோடிகாட்டிவிட்டால் நம்மை எளிதாக இவர்கள் விட்டுவிடமாட்டார்களே ! அடடா ! இவர்களை சமாளிப்பது இயலாத காரியமாயிற்றே - இந்த நேரத்தில் அவர்கள் வேண்டுகோளை மறுக்கவும் இயலாது...அதோ, மேற்கு வாயில் சாளரத்திலிருந்து நம்மை இருவருமே

கவனித்துக்கொண்டிருக்கிறார்கள்... சரியாய்ப் போயிற்று ! போய்த்தான் ஆக வேண்டும் - வேறு வழியேயில்லை.

சற்றே தயங்கியபடி மேற்கு வாயிலை நோக்கி சேவகனுடன் நடக்கத் துவங்கினார் மழபாடியார்.

*************************************************************************************
*******

அம்பலவாணர் பரபரப்புடன் தனக்கு முப்பது அடிகள் முன்னால் ஏறக்குறைய ஓடிக்கொண்டிருப்பவனைப் பின்தொடர்ந்தார். முதலில் ஏற்பட்ட சிறிய தயக்கம் முற்றிலுமாக காணாமற்போய் ஏறக்குறைய ஒரு உற்சாகமே அவரைத் தொற்றிக்கொண்டுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். ஒன்றும் புரியாமல் யாரவன் ? யாரவன் ? என்று சிந்தித்துக் குழம்புவதைக் காட்டிலும் கைக்கெட்டும் தூரத்தில் ஓடிக்கொண்டிருக்கும் ஒருவனைப் பிடிக்க முயல்வது அவருக்கு எளிதாகவே இருந்தது.

மேலும் துழாய்க்குடியில் தன்னைத் தனியாக வாணியஞ்சாவடிக்கருகில் விட்டுவிட்டு மழபாடியார் மட்டும் சாமர்த்தியமாக சதிகாரனைப் பின்தொடர்ந்தது அவருக்குப் பிடித்தமானதாக இல்லை. இருக்கட்டும் இருக்கட்டும் ! இதோ, இவனைக் கையும் மெய்யுமாகப் பிடித்து அவர்முன் கொண்டுபோய் நிறுத்தி முகத்திலடிப்பதுபோல் "பார்த்துக்கொள்ளுங்கள் ! இந்த அம்பலவாணன் நீங்கள் நினைப்பதுபோல் அத்தனை லேசுப்பட்டவன் இல்லை ! " என்று சொல்லவேண்டுமென்று அவர் மனம்

பரபரத்தது.

முன்னால் ஓடிக்கொண்டிருப்பவனின் வேகம் சிறிது சிறிதாகக் கூடினாற்போன்று தோன்றியது. முதலில் சற்று வேகமான நடையாக இருந்தது சிறிது நேரத்திலேயே ஓட்டமும் நடையும் என்றாகி ஒரு கட்டத்தில் முழு ஓட்டம் என்றாகிவிட்டது. என்னமாய் ஓடுகிறான் ! இளவட்டம் போலிருக்கிறது என்று நினைத்துக்கொண்டார் அம்பலவாணர். அவரால் மிதமான வேகத்தில்தான் ஓடமுடியும் - அதற்குமேல் முயன்றால் நரம்புகள் இழுத்துக்கொண்டுவிடும் - எல்லாம் பாழாய்ப்போன சேவூர்ப்போரின் மிச்சங்கள் !

கும்பலை விலக்கிக்கொண்டு அவனைத் துரத்துவதும் அத்தனை எளிதாக இல்லை. அப்படி விலக்கிக்கொண்டு ஓடுகையில் பலருடைய வசவுகளும் அவருடைய காதுகளில் விழுந்தன. நின்று நிதானித்து அவர்களை பதிலுக்கு ஆத்திரம் தீர வையவேண்டும் என்கிற தீராத ஆவல் எழுந்தாலும் எடுத்த காரியம் முடிக்கும் பொருட்டு அதனை சிரமப்பட்டு அடக்கிக்கொண்டார் அவர். திடீரென்று நாம் சரியான மனிதனைத்தான் துரத்திக்கொண்டிருக்கிறோமா என்றொரு சந்தேகம் எழுந்தது.ஒருமுறை அவன் திரும்பி தன்னைப் பார்த்துவிட்டானானால் அது "அவன்தானா" அல்லது வேறு யாராவதா என்கிற தனது சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்து கொள்ளலாம்தான் - ஆனால் அவனோ திரும்புகிற வழியாக இல்லையே ! நமக்கு ஏன் வீண் சந்தேகம் ? அவனேதான் இவன் ! இல்லையெனில் தன்னைக் கண்டதும் ஏன் இப்படி ஓடி ஒளியவேண்டும் ? என்று தன்னைத்தானே சமாதானம் செய்துகொண்டு தொடர்ந்து துரத்தலில் ஈடுபட்டார் அம்பலவர்.

சோழர் பெருமாளிகையையொட்டி நீண்டு படர்ந்திருந்த மும்முடிச்சோழன் திருவீதியிலேயே சற்று நேரத்திற்கு நிகழ்ந்த அந்தத் துரத்தல் ஒரு கட்டத்தில் விச்சாதரப் பெருவீதியில் திரும்பி உள்ளாலை சாலியத் தெரு வழியாக பாண்டி வேளத் தெரு, மாமணிக்கோயில் தெரு, உய்யக்கொண்டான் பெருவீதி(2) என்று விடாமல் தொடர்ந்தது. வழியெங்கிலும் கூட்டங் கூட்டமாக நெரிசல் தென்பட்டதால் அம்பலவாணரால் அவனைப் பிடிக்கவே முடியவில்லை. அவனுக்கும் அதே பிரச்சனைதான் - கூட்டத்தில் முண்டியடித்துக்கொண்டுதான் அவனும் சென்றுகொண்டிருந்தான். என்றாலும் அம்பலவாணரைவிட சற்றே வேகமாக அவனால் முன்னேற முடிந்ததென்றுதான் கூறவேண்டும். நேரம் செல்லச் செல்ல அவனுக்கும் அவருக்கும் இருக்கும் இடைவெளி சிறிது சிறிதாக கூடிக்கொண்டே வந்தது.

***(2) சாலியத் தெரு, பாண்டி வேளம் போன்றவை கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ளன. பார்க்க தஞ்சாவூர், குடவாயில் பாலசுப்பிரமணியம் பக்கம் 40***

ஒரு கட்டத்தில் அவன் வேண்டுமென்றே கூட்டம் அதிகமாகத் தென்படும் பாதையைத் தேர்ந்தெடுத்து அதிலேயே ஓடிக்கொண்டிருக்கிறான் என்பதுபோல் தோன்றியது. அடடா ! இந்தத் தெருமுனையில் திரிபுவனமாதேவிப் பேரங்காடி ஆரம்பித்துவிடுமே - அங்காடியில் நுழைந்துவிட்டானானால் கெட்டது காரியம் ! அந்தக் கும்பலில் அவனை நெருங்கவே முடியாது போகும் ! இந்த ஜனங்களுக்கும் சிறிதுகூட அறிவில்லை - ஏதடா, ஒருவன் இப்படிக் கும்பலில் நுழைந்து ஓடிக்கொண்டிருக்கிறானே என்று ஒருவராவது யோசித்து அவனைப் பிடித்து நிறுத்த மாட்டார்களோ... ஊஹூம் ! ஆனால் இருக்கும் நெரிசலில்

இப்படியொருவன் ஓடிக்கொண்டிருப்பதே பலருக்கும் தெரியாமல் இருக்கலாம்...

அதோ ! வீதிமுனையை அடைந்துவிட்டான் ! அட, பேரங்காடியின் கண் நுழையாமல் மேலும் வடக்கே ஓடுகிறானே ! இன்னும் சிறிது தூரத்தில் பெரிய திருக்கற்றிளியின் தளிச்சேரிப் பகுதிகள் ஆரம்பமாகும் தெருவல்லவா இது... அப்பனே - தப்பிச் செல்லும் அற்புதமான வாய்ப்பை கெடுத்துக்கொண்டு விட்டாய் ! இனி என்னிடமிருந்து தப்ப.... அடேய் ! என்ன இது....

அந்தத் திருப்பத்தில் எதிரில் வந்துகொண்டிருந்தவன் ஏறக்குறைய அம்பலவாணரை கட்டிப் பிடித்து வலுக்கட்டாயமாக நிறுத்தினான். ஓடிய வேகத்தில் திடீரென்று நிறுத்தப்பட்டதால் நிறுத்தியவன் மேல் ஏறக்குறைய விழுந்தேவிட்டார் அம்பலவாணர்....சற்றே சமாளித்துக்கொண்டு மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க கோபத்துடன் "யாரடா என்னை இழுப்பவன் ?" என்று ஆவேசமாகத் திரும்பினால் - வைத்தியர் மகன் அரிகண்டன் !

"ஆசானே ! என்ன இது - மூச்சு வாங்க யாரைத் துரத்திக்கொண்டிருக்கிறீர்கள் ?" என்றான் அரிகண்டன் ஆவலுடன். வைத்தியர் இரத்தம்தானே ! அவருக்கு அடுத்தவர் விஷயங்களைத் தெரிந்துகொள்வதிலிருக்கும் பேராவலில் பாதியாவது இவனுக்கும் இருக்காதா என்ன ? அதனால்தான் வேலை மெனக்கெட்டுத் தன்னைப் பிடித்து நிறுத்தி....

அவனுக்கு பதில் சொல்லாமல் வடக்கே கவனித்த அம்பலவாணர் "நாசமாய்ப் போயிற்று !" என்றார். ஏனெனில் முன்னால்

ஓடிக்கொண்டிருந்தவன் இந்த சிறிய களேபரம் நடந்த நேரத்தில் அந்தத் தெருவின் குறுக்கே ஓடிய பல்வேறு சந்துகளில் ஒன்றில் புகுந்து மறைந்துவிட்டிருந்தான். அடடா ! அற்புதமான ஒரு வாய்ப்பு இந்த மௌடீகனால் கெட்டுவிட்டது - மழபாடியாருக்கு முன்னால் கம்பீரமாக நிற்க நமக்குக் கொடுத்துவைக்கவில்லை. இவனை இப்போதைக்கு வாயார வையவும் முடியாத நிலைமை......

"என்ன ஆயிற்று ஆசானே ! எது நாசமாய்ப் போகட்டுமென்கிறீர்கள் ?" என்றான் அரிகண்டன் ஆவல் குறையாமல்.

அவ்வளவுதான் ! அதுவரை அடக்கிவைக்கப்பட்டிருந்த அம்பலவாணரின் ஆத்திரம் அவரை மீறிக்கொண்டு பொங்க... "பாழாய்ப்போன என்னுடைய நாடக ஆர்வம்தான் நாசமாய்ப் போகட்டும் என்கிறேன் !" என்றார்.

இதனைக் கேட்டதும் அரிகண்டன் முகம் சுருங்கிவிட்டது... "ஏன் ஆசானே என்மேல் எரிந்து விழுகிறீர்கள் ? அப்பாவை சந்தித்துவிட்டு வந்தீர்களா என்ன ?" என்றான் கம்மிய குரலில்.

அம்பலவாணருக்கும் சிறிது இரக்கம் பிறந்தது. பாவம் ! இவனென்ன செய்வான் ? எல்லாம் விதி ! நம்மைப் பார்த்ததும் ஆர்வமிகுதியால் பிடித்திழுத்து விட்டான் - இவனுக்குத் தெரியுமா என்ன - துழாய்க்குடிக் கொலையும்... விசாரணையும்... வாணியஞ்சாவடியும்... மழபாடியாரும்... மாராயரும்... எல்லாம் நாமாக இழுத்துப் போட்டுக்கொண்ட வம்புகளல்லவா ?

"அட, வந்து.... ஆம் ! சந்தித்தேன் - உனக்காக உன் தகப்பனிடம் வசவும்

வாங்கிக் கட்டிக்கொண்டு விட்டேன். அதனால்தான் உன்மீது இரண்டு வார்த்தைகள் ஆத்திரமாகப் பேசிவிட்டேன் - மனதில் ஒன்றும் வைத்துக்கொள்ளாதே !"

"அப்பாவிடம் நான் ஆச்சாரியாரின் நாடகத்தில் நடிக்கப்போவதைச் சொல்லிவிட்டீர்களா என்ன ?"

"அட, அதெல்லாம் சொல்வேனா ? பொதுப்படையாகத்தான் பேச்சு அமைந்திருந்தது. என்றாலும் உன்னுடைய நாடக ஆர்வத்தை ஆதரிக்கப்போய் நான் வாங்கிக் கட்டிக்கொண்டேன் !"

"அவரைப் பற்றித்தான் உங்களுக்குத் தெரியுமே ! அவர் மீது இருக்கும் ஆத்திரத்தை என்மீது காட்டி என்ன பயன் ?" என்றான் அரிகண்டன் பரிதாபமாக.

"அட, ஏதோ கிழவன் ஆத்திரத்தில் பிதற்றிவிட்டான் என்று விட்டுவிடப்பா ! அதுதான் மனதில் ஒன்றும் வைத்துக்கொள்ளாதே என்று சொல்லிவிட்டேனே..."

"ஆசானே ! என்னுடைய நாடக ஆர்வத்தை நிஜமாகவே ஊக்குவிக்கும் இருவரில் ஒருவர் நீங்கள். அதனால் நீங்கள் ஒரு வார்த்தை கோபமாகப் பேசிவிட்டால்கூட மனது தாங்கவில்லை..."

"அட ! என்னைத் தவிர வேறொருவரும்கூட உன் நாடக ஆர்வத்தை ஆதரிக்கிறார்களா என்ன ? யாரப்பா அவர்கள் ?"

அரிகண்டன் முகத்தில் வருத்தம் போய் லேசாக நாணத்தின் அறிகுறி தென்பட்டது. சரியாய்ப் போயிற்று ! பெண்டுகள் விவகாரம் ஏதிலாவது இந்த அப்பாவிப் பிள்ளை சிக்கிக்கொண்டு விட்டானா என்ன ?

"உங்களிடம் சொல்வதற்கென்ன ஆசானே ! பெரிய திருக்கற்றளியில் தளிச்சேரிப் பெண்டாகப் பணியாற்ற கிள்ளிக்குடியிலிருந்து ஒரு பெண்பிள்ளை வந்து சேர்ந்திருக்கிறது.... அதற்கும் எனக்கும் ஒரு சிநேகிதம் வளர்ந்து காதலாக அரும்பி நிற்கிறது.... திருமணம் என்று ஒன்று எனக்கு நடந்தால் அந்தப் பெண்ணுடன்தான் இருக்கும் ! (3)"

*(3) பலரும் நினைப்பதைப்போல் ஆடல் கலைஞராக / தளிப்பெண்டாக அக்காலத்தில் கோயில்களில் பணிபுரிந்த பெண்கள் தவறான வழிகளில் செல்லவில்லை. அதற்கான தேவையும் அவர்களுக்கில்லை - நிலம் நீச்சு என்று வசதியாகவே வாழ்ந்துள்ளனர். சமூகத்தில் அவர்களுக்கு நல்ல அந்தஸ்து இருந்தது. சிலர் திருமணமும் செய்துகொண்டுள்ளனர். திருவொற்றியூரில் முதல் இராஜாதிராஜரின் 31ம் ஆட்சியாண்டு கல்வெட்டொன்று நாகன் பெருங்காடனின் மனைவியாக சதுரன் சதுரி என்றொரு தளிப்பெண்டை அறிமுகம் செய்கிறது. தளிப்பெண்டுகளில் பதியிலாராக வாழ்ந்தவரும் உண்டு. அவருக்கு கூடுதலான நிலமானியங்கள் வழங்கப்பட்டன. பார்க்க இரா.கலைக்கோவனின் சோழர்கால ஆடற் கலை பக்கம் 208*

"அட, அப்படியா சங்கதி !" என்று அவனுடைய உறுதியை வியந்தார் அம்பலவாணர். அரிகண்டனுடைய வயதில் வாலிபத்தை அதிகம் அனுபவிக்காமல் போர்...போர்...வாள் பயிற்சி...வேல் பயிற்சி...என்று தாம் சுற்றிக்கொண்டிருந்தது அவருக்கு நினைவுக்கு வந்தது. அரிகண்டனைப்

பார்த்து சற்று பொறாமையாகக்கூட இருந்தது.

"மேலும் அந்தப் பெண்டைப் பற்றி விபரங்கள் சொல்லப்பா - தகுந்த நேரம்பார்த்து உன் அப்பன் காதில் நானே விஷயத்தைப் போட்டு வைக்கிறேன் !" என்றார் அம்பலவாணர் புன்னகையுடன்.

"வேண்டவே வேண்டாம், ஆசானே ! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டாகும் !" என்றான் அரிகண்டன் சிரித்தபடி.

*******************************************************************************************
*******

திருவோலக்க மண்டபத்தின் பின்புறம் பெரும்பாலான பெண்டுகள் அகன்றுவிட, சந்தடியில்லாத ஒரு மூலையில் வீரனொருவனை காவலுக்கு நிறுத்திவிட்டு பேரரசிதந்தியும் மாதேவியாரும் மழபாடியாரைச் சந்தித்தார்கள்.

"வீராதி வீரரென்று பெயர்பெற்ற பரமன் மழபாடியாருக்கு அரண்மனைப் பெண்டுகளை கவனிக்க அத்தனை விருப்பமில்லை போலிருக்கிறதே !"

பேரரசியாரின் பேச்சு ஆரம்பத்திலேயே காரமாக இருப்பதை மழபாடியார் உணர்ந்தார். தாம்தான் கூடுதல் நிதானத்தோடு இருந்தாக வேண்டும்.

"பட்டத்தரசியார் சமூகத்திற்கும் மாதேவியார் சமூகத்திற்கும் நமஸ்காரங்கள்.

அப்படியெல்லாம் ஒன்றுமில்லை - பேரரசருக்கு இன்று முழுவதும் பாதுகாவல் செய்யச்சொல்லி மாராயர் உத்தரவிட்டுள்ளார் - அதனால்தான் அவரைப் பிரிந்து..."

"எங்களிடம் பேசும் நேரத்தில் சக்ரவர்த்திகளை யாரும் அள்ளிக்கொண்டு போய்விடமாட்டார்கள் !" என்றார் பஞ்சவன் மாதேவியார் மெல்லச் சிரித்தபடி.

நிமிர்ந்து அவரை நோக்கினார் மழபாடியார். எத்தனை கூர்மையான கண்கள் ! தாம் வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்லாவிடினும் இந்தப் பார்வை நம் மனதைக் கிழித்து அதன் அத்தனை இரகசியங்களையும் தெரிந்துகொண்டுவிடும் போலிருக்கிறதே ! தலை நரைக்கத் துவங்கிவிட்டதுதான் - என்றாலும் முகத்தில் இளமையும் பொலிவும் சிறிதும் குறையாமல்.... பத்து பதினைந்து வருடங்களுக்குமுன் தென்பட்ட அதே கம்பீரத் தோற்றத்துடன்.... பழுவூர் நக்கனான பஞ்சவன் மாதேவியாரே ! உங்களை தேவியாகப் பெற்றவர் எத்தனை கொடுத்து வைத்தவர் !

பாவம் - பட்டமகிஷியார் இதற்கு நேரெதிர். கண்களில் கவலை வெளிப்படையாகவே தெரிகிறது. பிரம்மராயர் ஏதேனும் புகன்றுவிட்டாரா என்ன ? அல்லது தேவியாரின் ஒற்றர்கள் யாராவது நாம் சக்ரவர்த்திகளை சுற்றிச் சுற்றி வருவதை நோட்டமறிந்து....

"என்றைக்குமில்லாமல் இன்றைக்கு அப்படியென்ன சக்ரவர்த்திகளுக்குப் பாதுகாவல் ?" என்று தந்தி சக்தி விடங்கியார் நேரடியாகவே விஷயத்திற்கு வந்தார்.

"அதென்ன அரசியாரே அப்படிச் சொல்லிவிட்டீர்கள் ! இன்றைக்கு அரசரின் பிறந்தநாளாதலால் தஞ்சையில் சோழதேசமே கூடியிருக்கிறது. இந்த நேரத்தில் அவருக்குப் பாதுகாவல் அதிகம் தேவைப்படுமல்லவா ?"

"மழபாடியாரே ! சுற்றி வளைப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நேரடியாகவே கேட்டுவிடுகிறேன். நானும் மாதேவியும் காலையிலிருந்தே தாங்கள் அவரோடு ஒட்டிக்கொண்டு நிற்பதை கவனித்து வருகிறோம். இராஜகம்பீரன் சபை கூடிய திருவோலக்க மண்டபத்திலும் தாங்களின் நடவடிக்கைகள் சற்று வித்தியாசமாக இருந்ததாக மாதேவியார் தெரிவிக்கிறார்கள். அரசருக்கு ஏதாவது ......... (ஆபத்து என்ற சொல்லை தவிர்த்துவிட்டார்).... இன்றைக்கு நடக்கப்போகிறதென்று ஒற்றர்படைக்கு செய்திவந்திருக்கிறதா என்ன ? மாராயர் உங்களை நேரடியாக காவலில் ஈடுபடவைக்கக் காரணமென்ன ? உங்களுக்குத் தெரிந்ததை மறைக்காமல் புகன்றுவிடுங்கள் ! இது என் ஆணை !"

"அடேயப்பா ! அரசியாரின் ஆணைக்கு மறுப்பேது ? " என்றொரு கனத்த குரல் சற்று தூரத்தில் கேட்டது.

அனைவரும் குரல் வந்த திசையை நோக்கினார்கள்.

புன்னகை தாங்கிய வதனத்துடன் கைகளை குறுக்கே கட்டி சற்று தூரத்தில் கம்பீரமாக நின்றுகொண்டிருந்தார் அவர்.

"சோழ இராஜாங்கத்தில் எது நடந்தாலும் அது இந்த இரு பெருமாட்டிகளுக்கும் தெரிந்தாக வேண்டும் - தெரிந்துகொள்ளுங்கள் மழபாடியாரே !" என்றார் அவர் தொடர்ந்து.

பட்டத்தரசியாரும் பஞ்சவன் மாதேவியாரும்கூட தலையைக் குனிந்து கொண்டார்கள். இருவர் மனத்திலும் என்னவிதமான எண்ணங்கள் ஓடினவோ ? நாமறியோம். பஞ்சவன் மாதேவியார் விரைவிலேயே சுதாரித்துக்கொண்டு "பெண்களை அடுப்பங்கரையுடன் வைக்காமல் இராஜ்ஜிய விவகாரங்களிலும் ஈடுபட்டு அவ்வப்போது தகுந்த அறிவுரைகள் சொல்லவேண்டுமென்று இந்த நாட்டின் சக்ரவர்த்திகள் அவ்வப்போது சொல்வதுண்டு. அவருடைய ஆணையை நாங்கள் மீறிவிடமுடியுமா என்ன ? அதனால்தான் கேட்டோம் - தவறாக இருந்தால் மன்னித்துக்கொள்ளுங்கள்...நாங்கள் கிளம்புகிறோம் !"

"அடடா ! நமது தேவியாருக்கு கோபம் வந்துவிட்டதுபோலத் தெரிகிறதே ! தந்தியின் முகம்கூட வழக்கமாகப் பொலியும் இலட்சணத்தோடு இல்லை - சரிதான் ! பிறந்தநாள் அதுவுமாக சோழ இராஜாங்கத்தில் சர்வ வல்லமையும் பொருந்திய இருவரின் கோபத்தை ஒருசேர சம்பாதித்துக்கொண்டு விட்டேனே !"

தந்தி சக்தி விடங்கியின் முகத்தில் புன்னகை அரும்பியது.

"உங்களின் வேடிக்கைப் பேச்செல்லாம் ஒருபக்கம் கிடக்கட்டும். இன்று

காலையிலிருந்தே நடக்கும் சம்பவங்களெல்லாம் வினோதமாக இருக்கின்றன. வழக்கத்துக்கு மாறாக உங்களைச் சுற்றிச்சுற்றி இந்த மனிதர் சுழன்றுகொண்டிருக்கிறார். மெய்க்காவலும் கடுமையாக இருக்கிறது. குருதேவர் ஒவ்வொரு ஆண்டும் எங்கள் அனைவரையும் வைத்துக்கொண்டுதான் உங்களை ஆசீர்வதிப்பார் - ஆனால் இந்தமுறை இருவரும் தனியாக பூஜையரைக்குள் சென்றுவிட்டீர்கள். ஏனென்று தெரியவில்லை. திருவோலக்க மண்டபத்திலும் வழக்கத்திற்கு விரோதமான காட்சிகள் அரங்கேறின.. இதையெல்லாம் பார்த்தால் எங்கள் மனது குழம்பாதா என்ன ? இதற்கெல்லாம் என்ன அர்த்தம் ?"

"தேவியர்களே ! உங்கள் இருவரிடமும் நான் பெரும்பாலும் எந்த விஷயத்தையும் மறைத்ததில்லை. அதற்குக் காரணம் இருவருமே இராஜாங்க விஷயங்களில் நல்ல மனமுதிர்ச்சியும் அறிவும் பெற்றவர்கள்(1) என்பதோடு படிப்பறிவும் சாத்திர அறிவும் நிறைந்தவர்கள் என்பதுதான் காரணம். அந்த ஒரு நம்பிக்கையின்பேரில் நீங்கள் கேட்டும் கேள்விகளுக்கு சுருக்கமால பதிலளிக்கிறேன். இன்றைக்கு என் தலைக்கு சேர பாண்டிய ஒற்றர்களால் ஏதோ ஆபத்து நேரப்போவதாக மாராயருக்கு ஓரளவிற்கு உறுதிப்பட்ட செய்தி கிடைத்துள்ளது. அதனால்தான் கூடுதல் பாதுகாப்பிற்கும் - இதோ ! நமது அருமை நண்பர் பரமன் மழபாடியாரின் பிரத்யேக மெய்க்காவலுக்கும் ஏற்பாடாகியிருக்கிறது - அவ்வளவுதான் ! வேறொன்றுமில்லை..."

***(1) குறிப்பாக பேரரசியார் தந்தி சக்தி விடங்கியாருக்கு அரசருக்குள்ளது போலவே கணக்கர்களும் ஓலை நாயகங்களும் இருந்துள்ளனர் என்பதை புதிதாகக் கண்டறியப்பட்டுள்ள திருவலஞ்சுழிக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். அவருக்கு தனியாக***

*அரசாணை பிறப்பிக்கும் அதிகாரமும் இருந்துள்ளது. பார்க்க இரா.கலைக்கோவனின் பதிப்பில் உள்ள புத்தகம், வலஞ்சுழி வாணர்.*

தேவியர் இருவர் முகத்திலும் கவலையின் கோடுகள் தோன்றி மறைந்தன. இதற்குத்தானே இவர்களிடம் விஷயத்தை பிரஸ்தாபிக்க வேண்டாமென்று தயங்கினோம்... கடைசியில் பேரரசரே சொல்ல வேண்டியதாகிவிட்டது.

இருவரில் முதலில் தன்னை சமாளித்துக்கொண்டவர் பஞ்சவன் மாதேவியார்தான்.

"தங்களுக்கு ஒன்றும் நேராது - அரண்மனை சோதிடர் உறுதியாகச் சொல்லியிருக்கிறார். அதனால் எனக்குக் கவலையில்லை. தங்களின் நலனுக்காக இன்று முழுவதும் நான் உபவாசம்(2) இருந்து தேவியை வணங்குகிறேன்...."

*(2) உண்ணா நோன்பு*

"உன்னோடு நானும் நோன்பில் கலந்து கொள்கிறேன்... மற்ற தேவியர் அனைவரையும் நம்முடன் சேர்த்துக்கொள்வோம். மாலையில் நாம் வெளியில் சென்று ஆர்ப்பாட்டங்களில் அதிக நேரம் கலந்துகொள்ள வேண்டாம். நமது குலதெய்வமான அன்னை நிசும்பசூதனியை தியானம் செய்து கூட்டு பிரார்த்தனை செய்வோம்... இந்த தேசமும் அந்த தேசத்தை நல்வழியில் வெற்றிப்பாதையில் செலுத்துபவரும் நன்றாக ஒரு குறையுமில்லாமல் இருக்கவேண்டுமென்று மனமுருகி பிரார்த்தனை செய்வோம்..." என்றார் பேரரசி சற்று ஆவேசத்துடன். காலகாலமாக இந்த தேசத்தில் போற்றிப் பாதுகாக்கப்படும் கற்பு என்னும் நெருப்பு அந்தக்

கணங்களில் அவருடைய முகத்தில் தேஜோமயமாக சுடர்விட்டது. மனம் நெகிழ்ந்துவிட்டதால் கண்களிலும் சட்டென்று நீர் கட்டிக்கொண்டு....

அத்தனை எளிதாக உணர்ச்சிவசப்படாத மழபாடியாரின் உள்ளமும் கலங்கிவிட்டது. வீண்போகாது....இவர்களின் வேண்டுதல் வீண்போகாது. மனம் உருகி செலுத்தப்படும் இவர்களின் பிரார்த்தனை மண்ணையும் விண்ணையும் அசைத்துவிடும். நாம் சதிகாரர்களைப் பிடித்தால் என்ன ? பிடிக்காவிட்டால் என்ன ? அரசரைச் சுற்றி வெறும் திருமெய்க்காவல் என்னும் புறவளையம் மட்டுமா இருக்கிறது ? இந்த தேவியர்களைப்போல் தேசமெங்கிலும் இவருடைய நலனுக்காக நீண்ட ஆயுளுக்காக ஆரோக்கியத்திற்காக எத்தனைபேர் இன்று வேண்டுதல் செலுத்துகிறார்கள் ? கிராமம் கிராமமாக... நகரம் நகரமாக... சிறார்களிலிருந்து ஆரம்பித்து வயதான மூதாட்டிகள் வரை... வேளாளர்கள், பரத்தவர்கள், தச்சர்கள், கருமார்கள், வேட்டுவர்கள், மறவர்கள், வணிகர்கள் என்று அத்தனை குலங்களிலிருந்தும்....எத்தனை பேரின் அன்பு இவரைச் சுற்றிப் படர்ந்து கிடக்கிறது ? இதையெல்லாம் தாண்டிக்கொண்டா நமன் வந்து விடுவான் ? நடக்காத காரியமல்லவா அது...
வீணில் அலட்டிக்கொண்டிருக்கிறோமோ ?

"அடடா - கடைசியில் என்னுடைய தேவியர் அனைவரும் அரண்மனையின் பிறந்தநாள் சிறப்பு விருந்தில் கலந்து கொள்ளாமல் பட்டினி கிடக்கப்போவதற்கு நான் காரணமாகி விட்டேனா என்ன..?"

"கடந்த ஒரு வருடமாக மாதம் விடாமல் ஏகாதசி(3) உபவாசத்தை எத்தனை சொல்லியும் பிடிவாதமாக அனுஷ்டிக்கும் தாங்களா இதைச் சொல்வது ?"

*(3) பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை வரும் தினம். இந்த நாட்களில் உபவாசமிருக்கும் பண்டைய பழக்கம் இந்நாள்வரை பெரியவர்கள் மத்தியில் தொடர்கிறது.*

"உங்களிடம் பேசி மீண்டுவிட முடியுமா என்ன ? தேவியர்களே ! நான் கிளம்புகிறேன். அரண்மனையில் சில வேலைகள் உள்ளன. நண்பகலில் அந்தப்புறத்தில் வந்து சந்திக்கிறேன்..."

"சென்று வாருங்கள்.."

"வாருங்கள் மழபாடியாரே ! அரண்மனைக்குச் செல்லுமுன் பெரிய செண்டு வாயிலுக்குச்(4) சென்று பொதுமக்களுக்குக் கொடுக்கப்படும் பானகத்தை ருசிபார்த்துவிட்டுச் செல்வோம்...."

*(4) கல்வெட்டுக்களில் "பெரிய செண்டு வாயில் திருச்சித்திரகூடத்து..." என்று வரும் தொடர்கொண்டு பெறப்படுகிறது. செண்டு வையாளியைக் குறிக்கமென்பதால் இது குதிரை வீரர் பழகும் களத்திற்கருகில் அமைந்த வாயிலாகலாம் என்கிறார் குடவாயில் பாலசுப்பிரமணியன் - தம்முடைய தஞ்சாவூர் புத்தகத்தில்*

"உத்தரவு !"

****************************************************************************************

*******

உற்சாகமே வடிவாகக் காணப்பட்டார் பெரிய திருக்கற்றளியின் ஸ்ரீகாரியமான பொய்கை நாட்டுக் கிழவர் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளார். ஆச்சாரியாரின் கூத்தை வழக்கமாக நடைபெறும் அரண்மனை வளாகத்தில் நடத்தாமல் பெரிய திருக்கற்றளி வளாகத்தில் நடத்துவதற்கு சக்ரவர்த்திகள் சம்மதித்துவிட்டதுதான் அதற்கு முக்கிய காரணம். கற்றளி கட்டப்படுவதற்கு முன்பாகவே அந்த வளாகத்திற்கு பல்வேறு விதமான முக்கியத்துவங்களும் ஏற்பட்டுவிடவேண்டும் என்று அவர் விரும்பினார். இந்த ஆர்வம் சில காலமாக மட்டுமீறி தஞ்சையில் முக்கிய நிகழ்வுகள் - குறிப்பாக கலை நிகழ்ச்சிகள் - எவையும் பெரியதிருக்கற்றளி வளாகத்தைத் தவிர வேறிடத்தில் நிகழ்ந்துவிடக்கூடாது என்று அவர் நினைக்குமளவிற்கு வளர்ந்துவிட்டது.

திருக்கற்றளி வளாத்திற்குள் நடைபெறும் பல்வேறு சிற்ப வேலைகளும் கட்டுமான வேலைகளும் பொதுமக்களின் ஆர்வக்கோளாறுகளால் தடைபடாமலிருக்க வளாகத்தைச் சுற்றி ஆளுயர மூங்கில் வேலியமைத்துவிட்டார் வேளார். வேலியைச்சுற்றி ஆங்காங்கே மெய்க்காவல் வீரர் நடமாட்டம் எப்போதுமே உண்டு. இன்றைக்குக் காலையில் கற்றளி வளாகப் பாதுகாப்பிற்காக அனுப்பப்பட்ட வேளாண் ஆட்கொண்டவில்லியாரின் திருமெய்க்காப்பு வீரர்கள் பாதிபேரை அந்த வேலிக்கருகிலும் முக்கிய வாயில்களுக்கருகிலும் வழக்கமான காவல் வீரர்களுடன் பணிக்கு நிறுத்தியாயிற்று. மீதமிருக்கும் வீரர்கள் அரங்கம் அமைத்துக்கொண்டிருக்கும் தச்சர்களுக்கு உதவி செய்துகொண்டே பாதுகாவலையும் கவனித்தக் கொண்டிருக்கிறார்கள்.

திருக்கற்றளிக்குள் நிருத்த மண்டபமென்றோ சதிர் சாலையென்றோ(5) தனியாக அமையாதது வேளாருக்கு ஒரு குறைதான். கருவறை மற்றும் அர்த்த மண்டபம் / மஹாமண்டபத்தைச் சுற்றிலும் வெற்றிடம் விட்டே ஆகவேண்டும் என்று சக்ரவர்த்திகள் பிடிவாதமாகச் சொல்லிவிட்டாராம். அப்போதுதான் மக்களால் நின்று நிதானமாக கருவறை தேவகோஷ்டங்களையும் வானளாவ நிற்கப்போகும் விதானத்தையும் பல்வேறு திசைகளிலிருந்தும் கண்டு இரசிக்க முடியுமாம் ! அங்க ஆலயங்களையும் மதில் சுவற்றையொட்டி அமையப்போகும் திருச்சுற்று மாளிகைக்குத் தள்ளியாயிற்று. என்றாலும் அவ்வப்போது கூத்து மற்றும் கலை நிகழ்ச்சிகள் நடத்தும் சமயங்களில் தெற்கு வாயிலையொட்டி மேடையமைத்துக்கொள்ளலாம் (6) என்று உத்தரவு வந்துவிட்டது - அதனால் பாதகம் அதிகமில்லை.

***(5) பல திருக்கோயில்களில் இதுபோல பிரத்யேக நாட்டிய / நாடக மண்டபங்கள் அமைக்கப்பட்டன. பார்க்க இரா.கலைக்கோவன், சோழர் கால ஆடற் கலை - பக்கம் 175. பெரியகோயிலில் இதற்கென்று தனியாக மண்டபம் அமைக்கப்பட்டதாகத் தெரியவில்லை - சுற்றுச்சுவர் மண்டபங்களையே நாட்டியமாடப் பயன்படுத்தியிருக்கலாம்.***

***(6) பிற்காலத்தில் அமைக்கப்பட்ட கணபதி ஆலயம் இன்றைக்கு இந்த இடத்தில் காட்சியளிக்கிறது***

அரங்கம் மிக அழகாக எழும்பிக்கொண்டிருந்தது. நீளமான / கனமான பலாப் பலகைகளை அரங்கப் பலகைகளாகப் பொருத்தியிருந்தார்கள். நாடகக் கலைஞர்களில் சிலர் குதித்துக் குதித்து ஆடுவார்களல்லவா -

அப்போது தனியாக மேடையிலிருந்து சப்தங்கள் எழுந்தால் நன்றாக இராதே ? அரங்கப் பலகைகளிலிருந்து விதவிதமாக தச்சு வேலைப்பாடுகள் கொண்ட தூண்கள் எழுந்தன. வாங்கிய பொற்கழஞ்சுகளுக்கு வஞ்சனையில்லாமல் கருந்திட்டைக்குடியின் தச்சர்கள் வேலைசெய்து கொடுத்திருக்கிறார்கள். தஞ்சையிலேயே இருக்கும் நித்தவினோதப் பெருந்தச்சரின் ஆட்கள் கற்றளி வேலைகளில் மூழ்கியிருந்ததால் கருந்திட்டைக்குடிவரை சென்று வேலையை முடித்துக்கொண்டு வரவேண்டியதாகிவிட்டது. (தனியாக வண்டிச்சத்தம் வேறு கொடுக்க வேண்டி வந்துவிட்டதால் செலவு சற்று அதிகம்தான் - பார்த்தக்கொள்ளலாம் !) சக்ரவர்த்தகள் அருகே அமர்ந்து பார்வையிடப்போகும் மேடை என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டிருந்ததும் ஒரு காரணமாக இருக்கலாம். தூண்களின் வெட்டுப் போதிகைக் கைகள்(7) உத்திரப் பலகையைத் தாங்கின. உத்திரப் பலகைகளும் பலாமரம்தான் - என்ன, அவற்றின் கனம் மட்டும் சற்று குறைவு.

*(7) இராஜராஜர் காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட ஒருவகைப் போதிகை. போதிகையென்பது ஒரு தூணின் உச்சியில் உத்திரத்தைத் தாங்குமாறு வளைந்த கைகள்போன்று அமைக்கப்படும் உறுப்பு.*

அரண்மனையின் சைத்ரிகர்கள் இரண்டு நாட்களாக கற்றளி வளாகத்திலேயே தங்கி உத்திரத்திலும் தூண்களிலும் பல்வேறு விதமான வண்ணங்களில் அழகழகாக படங்களையும் பூவேலைப்பாடுகளையும் வரைந்திருந்தார்கள். உத்திரத்தின்மேல் பண்டைய பழக்கமான வச்சிரதேகன் முதலான நால்வகை வருணபூதங்களை வரையும் பழக்கம்(8) வழக்கொழிந்துபோய் அந்தந்த கூத்துக்கு ஏற்றவாறு உருவங்களையும்

வேலைப்பாடுகளையும் வரைந்துகொள்ளும் வழக்கம் ஏற்பட்டிருந்தது.

*(8) சிலப்பதிகாரம் 26:105-121*




கூத்துமேடை அமைப்பை விளக்கும் வரைபடம்

அரங்கிற்கு இரண்டு பக்கங்களிலும் வாயில்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அந்த வாயிலுக்கு பக்கலிலிருந்த பகுதிகள் பொதுமக்கள் பார்வையிலிருந்து மரத்தட்டிகள் கொண்டு மறைக்கப்பட்டிருந்தன. ஏனெனில் கலைஞர்கள் அந்த இரு பக்கங்கிலும் நின்றுகொண்டுதான் அரங்கேறியாக வேண்டும்.

ஒரு காட்சியில் நடித்து முடித்திருப்பவர் வலப்பக்க வாயில் வழியாக இறங்கிக்கொண்டிருக்கும்போதே இடப்பக்க வாயில் வழியாக அடுத்த காட்சியில் நடிக்கப்போகிறவர்கள் மேடையேறிவிடுவார்கள். இதனால் அரங்கத்திரையான பொருமுக எழினி அதிகநேரத்திற்கு தொங்கிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமிராது. இத்தனைக்கும் மேலாக ஆச்சாரியாரின் நாடகங்களுக்கென்று சில பிரத்யேக ஏற்பாடுகளை செய்தாக வேண்டும். அதில் முக்கியமான ஒன்று மேடையின் பின்புறத்தையும் வண்ணம் தீட்டப்பட்ட சீலைகள் கொண்டு மறைத்து விடுவது. காட்சிக்கு ஏற்றவாறு இந்தச் சீலைகள் மாறிக்கொண்டேயிருக்கும். இந்தப் பின்னணி விவகாரங்களையெல்லாம் மற்ற கூத்துக்காரர்கள் செய்வதில்லை. மேடைக்கு ஒளிதரும் தீப்பந்தங்கள் மற்றும் நிலை விளக்குகள் அமைப்பதற்காக சில இடங்கள் விடப்பட்டிருந்தன. விளக்குகள் பொருத்தப்படும்போது தூண்கள் மற்றும் மலர் அலங்காரங்களில் நிழல்கள் ஆடற்கலைஞர்களின்மேல் விழாதவாறு எச்சரிக்கையோடு அமைக்கப்பட்டன.(9)

***(9) இதுவும் நமது கற்பனையல்ல - சிலப்பதிகாரம் காட்டும் செய்திதான் !***

ஒவ்வொரு பொற்கழஞ்சையும் கணக்குப் பார்த்துப் பார்த்துச் செலவழிக்கும் வேளாரின் திட்டம் என்னவெனில் இந்த மேடை மட்டும் நன்றாக அமைந்துவிட்டால் அரங்கப் பலகைகளை பாதுகாத்த வைத்துக்கொண்டு இனி கற்றளிக்குள் நடக்கப்போகும் பல்வேறு கலைநிகழ்ச்சிகளுக்கும் அவற்றையே உபயோகப்படுத்திக்கொள்ளலாம் என்பதுதான். வேண்டுமானால் வண்ணங்களையும் வேலைப்பாடுகளையும் மாற்றிக்கொண்டால் போயிற்று !

மலர் அலங்காரங்களுக்கு ஏரியூர் நாட்டுத் தளி நந்தவனத்திற்குச் சொல்லியாயிற்று. அவை நண்பகலில் வந்து சேர்ந்துவிடும். அலங்கார வேலைகள் செய்வதற்காக தளிப்பெண்டுகள் நால்வரை வரச்சொல்லி ஏற்பாடு செய்திருந்தார் தென்னவன் மூவேந்த வேளார். பெண்டுகள் சில சமயம் அரட்டைக் கச்சேரிகளில் மூழ்கி காலதாமதம் செய்யுமென்பதால் அவர்களை நிர்வகிக்கும் தலைக்கோலியருக்கும் முன்னெச்சரிக்கையாக ஓலையனுப்பிவிட்டார்.

இப்படி ஒவ்வொரு விஷயத்தையும் நுணுக்கமாகத் திட்டம் தீட்டி வேலைசெய்தாலும் தவிர்க்கமுடியாமல் அவ்வப்போது சில பிரச்சனைகள் எழத்தான் செய்தன. அதனால்தான் வேலை நடக்கும் இடங்களுக்குத் தாமே நேரில் சென்று மேற்பார்வையிடுவது என்னும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். அதிலும் இன்றைக்கு வளாகத்தில் நடைபெறப்போகும் விசயராஜ ஆச்சாரியாரின் ஸ்ரீ ராஜராஜவிஜயம் நாடகத்திற்கு ஏக எதிர்பார்ப்பு. அதுவரை இராமாயண, மகாபாரத இதிகாசங்கள் அல்லது பண்டைய தமிழ் மறவர்களின் வீரப்பிரதாபங்கள் முதலியவற்றைப் பற்றியே கூத்துக்கள் கட்டப்பட்டுக்கொண்டிருந்தன. அந்த வழக்கத்திலிருந்து மாறி சமகால சரித்திர புருஷர் ஒருவரைப் பற்றிய நாடகம் என்பதால் ஆச்சாரியாரின் நாடகம் பரபரப்பை ஏற்படுத்தியிருந்தது. சக்ரவர்த்திகள் பல்வேறு தடைகளையும் மீறி சோழ சிங்காதனத்தில் பட்டமேறிய கதையென்று ஒரு சாராரும், இல்லையில்லை - அது அவர் பட்டமேறியபின் படிப்படியாக பல்வேறு தேசங்களிலும் படையெடுத்து வெற்றிபெற்ற கதையென்று மற்றொரு சாராரும், இரண்டும் கிடையாது - அது அவர் கட்டப்போகும் பிரம்மாண்டமான திருக்கற்றளி பற்றிய கதையென்று வேறொரு சாராரும் தம் மனதுக்குகந்தவாறு

கற்பனைகளைப் பரப்பிக்கொண்டிருந்தனர்.

நாடகமே இன்னும் அரங்கேரவேயில்லை - அதற்குள் சோழ சாம்ராஜ்ஜியத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஆச்சாரியாருக்கு இந்நாடகத்தை தங்கள் பகுதிகளில் அரங்கேற்றச்சொல்லி அழைப்பிதழ்கள் வந்தவண்ணம் உள்ளன என்று வேறு செய்தி பரவியிருந்தது.

மேற்கண்ட காரணங்களால் அரங்கம் அமைக்கும் வேலைகளிலோ சித்திர வேலைப்பாடுகளிலோ ஒரு குறையும் வந்துவிடக்கூடாதென்பதில் வேளார் கண்ணும் கருத்துமாக இருந்தார். அரங்கம் சம்மந்தமாக நடைபெறும் வேலைகள் திருப்திகரமாகவே தெரிந்ததால் மதிய உணவை திருக்கற்றளியின் மடைப்பள்ளியில்(10) முடித்துக்கொண்டு சற்று நேரம் ஓய்வெடுத்துக்கொள்ளலாம் என்று தோன்றியதால் மெதுவாக அந்த இடத்திலிருந்து அகன்றார் அவர்.

*(10) திருக்கோயில் சமையலறை*

*******************************************************************************************
*******

பெரிய செண்டு வாயிலுக்கருகில் சக்ரவர்த்திகளுடன் நின்றுகொண்டிருந்த மழபாடியாருக்கு அரண்மனைக் காவலரிடமிருந்து முறியொன்று வந்து சேர்ந்தது. மூவேந்தன் அவரை சந்திக்க வந்திருப்பதாக அதில் கண்டிருந்தது. உடனடியாக அவரைச் செண்டு வாயிலுக்கு வரச்சொல்லி

மறுமுறி கொடுத்தனுப்பினார் மழபாடியார்.

வாயிலில் திரண்டிருந்த பொதுமக்களில் சிலரை தேர்ந்தெடுத்து அழைத்து சக்ரவர்த்திகள் அவர்களுடன் பேச்சுக்கொடுத்துக்கொண்டிருந்தார். அவர்கள் அரும்பிய பானகத்தை அவர்களுக்கு முன்னாலே அவரும் அருந்தியது அவர்களுக்கு பெரியதொரு சந்தோஷத்தைக் கொடுத்திருந்தது. அவர்களில் ஒவ்வொருவரும் தம் வசதிக்குத் தக்கபடி சிறிய / பெரிய அளவிலான அன்பளிப்புக்களை சக்ரவத்திகளுக்கு எடுத்து வந்திருந்தனர்.

"இதோ ! இது எங்கள் கிராமத்தில் விளைந்த பழம் - சக்ரவர்த்திகள் மனமுவந்து ஏற்றுக்கொள்ள வேண்டும் !"

"இது என் வயதான அன்னையார் காலையிலேயே எழுந்து தங்களுக்காக செய்த அரிசி மாவுப் பணியாரம் - தயவு செய்து..." அவர் மேற்கொண்டு அவனைப் பேசவிடாமல் அந்த மூட்டையைப் உடனடியாகப் பிரித்து பணியாரத்தை வாயிலிட்டுக்கொண்டார். அவன் என்னசெய்வதென்று தோன்றாமல் நெடுஞ்சாண்கிடையாக அவருடைய காலில் விழுந்து "சக்ரவர்த்திகள் வாழ்க !" என்றான் நாக்குழற. "நன்றாக இரு ! உன் வயதான தாயாருக்கும் குடும்பத்தாருக்கும் என் அன்பு - இந்தா !" அவர் அருகிலிருந்த துணிமணிகளில் கையில் அகப்பட்டதை அவனுக்களித்தார்.

மழபாடியாருக்குக் கவலை பிறந்தது. இப்படி கொண்டுவருவோர் கொடுப்பதையெல்லாம் சக்ரவர்த்திகள் உண்பதாவது ? அவரை அணுக முயல..

"பரமனாரின் கவலை எனக்குப் புரிகிறது - என்றாலும் அந்த வயதான

தாயின் அன்பை என்னால் புறக்கணிக்க முடியாது...."

"வேண்டுமானால் உணவை நான் சோதித்தவிட்டுத் தங்களுக்குக் கொடுக்கின்றேனே..."

"அதற்கு வேறு ஆட்கள் உண்டு மழபாடியாரே ! " என்று சொல்லிவிட்டு அவர் சிரித்தார்....

"...என்றாலும் இன்றைக்கு தாங்கள் சொல்வதை சிறிதும் மீறவேண்டாமென்று குருதேவரே உத்தரவிட்டுவிட்டதால் இனி பொதுமக்கள் கொண்டுவரும் பண்டங்களை உண்பதை தவிர்க்க முயல்கிறேன்..."

குருதேவரா தன்னைக் குறிப்பிட்டிருக்கிறார் ? அவருக்கு தம்மை எப்படித் தெரியும் ? ஒருமுறைகூட நேரில் சந்தித்ததில்லையே....

மழபாடியாரின் குழப்பதைப் புரிந்துகொண்டும் பதில் சொல்லாமல் சக்ரவர்த்தி சிரித்துக்கொண்டே வந்தவரை கவனிக்கச் சென்றுவிட்டார்.

## பாதையும் பயணமும்

பெரிய செண்டு வாயிலில் சக்ரவர்த்திகளுடன் நின்றுகொண்டிருந்த மழபாடியாரை மூவேந்தன் சந்தித்தான்.

"ஐயா வந்தனம் !"

"யாரது - மூவேந்தரா ! என்ன இரண்டு நாட்களில் ஆளே மாறிவிட்டீர் ! அடடா - கருத்து இளைத்து... தஞ்சையின் தெருக்களில் தாங்கள் பட்டிருக்கும் பாட்டை தங்களின் தோற்றமே சொல்லிவிட்டது..."

மழபாடியாரைப் போலவே நாமும் மூவேந்தரை இரண்டு நாட்கள் கழித்தே சந்திக்கிறோம்.... ஆம் ! தோற்றப்பொலிவு வெகுவாகக் குறைந்துவிட்டதுதான். கடுமையான அலைச்சல் போலும்.

"தாங்கள் மட்டுமென்ன.. கண்கள் மிகவும் பின்னடைந்து காணப்படுகின்றன - உறக்கமே இல்லை போலிருக்கிறதே...."

"போகட்டும் - விஷயத்தைச் சொல்லுங்கள் !"

"இரண்டு நாட்களாக சக்ரவர்த்திகள் இரதம் அரண்மனையிலிருந்து தளிக்குளத்தார் ஆலயத்திற்குப் போகக்கூடிய மூன்று பாதைகளையும் தீவிரமாக சோதித்துவிட்டேன். வீதிகளின் இருமருங்கிலும் இல்லங்கள் உண்டுதான் - என்றாலும் வேகமாக இரதத்தில் பயணிக்கும் ஒருவர்மீது அம்பெய்வதோ வேலெறிவதோ இயலாத காரியம்..."

"அதாவது வேகமாகப் பயணிக்கும் பட்சத்தில் ஆபத்தில்லை - ஆனால் எதிர்பாராத விதமாக வேகத்தைக் குறைக்கக்கூடிய சூழ்நிலையோ இரதத்தை அடியோடு நிறுத்த வேண்டிய சூழ்நிலையோ உருவாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் இல்லையா..."

"ஆம் - இந்த விஷயத்தில் இரதத்தின் சாரதிதான் முக்கிய பணியாற்றியாக

வேண்டும்..."

"அப்போது நானே சாரதியாக அமர்ந்துவிடுகிறேன்...! "

"தாங்களா... நான் வேண்டுமானால்...."

"இல்லை - நான் பார்த்துக் கொள்கிறேன் - தங்களுக்கு வேறு வேலை வைத்திருக்கிறேன். தொடர்ந்து சொல்லுங்கள் !"

"எத்தனை வேகமாக இரதத்தைச் செலுத்தினாலும் வீதியின் திருப்பங்களில் இரதத்தின் வேகம் பெரிதும் மட்டுப்படும் - இந்த இடங்களில் மக்கள் கூட்டமும் சற்று அதிகமாக இருந்தால் இரதத்தை நிறுத்த வேண்டிய சூழல் உருவாகலாம் !"

"...ம்....யோசிக்க வேண்டிய விஷயம்..."

"இதனை சமாளிக்க சில யுக்திகள் எனக்குத் தோன்றின...தாங்கள் விரும்பினால்..."

"தாராளமாகச் சொல்லுங்கள் !"

"அரண்மனையிலிருந்து தளிக்குளத்தார் ஆலயத்திற்குச் செல்வதற்கு மூன்று பாதைகள் உண்டு - பேரரசர் இதில் ஏதாவது ஒன்றில்தான் பயணிப்பார் - என்றாலும் மூன்று பாதைகளிலுமே ஏககாலத்தில் ஒரே மாதிரியான இரதங்களை விட்டுக்கொண்டு செல்லவேண்டும் என்பதுதான் தேவர் திருமெய்க்காப்புப்படைத் தலைவரின் ஏற்பாடு. இந்த ஏற்பாடு சிறந்ததுதான்

- என்றாலும் விச்சாதரத் தெரு வழியாக அரிகுல கேசரிப் பேரங்காடியைக் கடந்து தளிச்சேரியின் வடசிறகு வழியாகத் திரும்பிச் செல்லும் பாதையில் செல்வதே பாதுகாப்புக்கு உகந்ததாக இருக்குமென்று தோன்றுகிறது. ஏனெனில் இந்தப் பாதையில் இல்லங்களும் குறைவு - திருப்பங்களும் அதிகமில்லை..."

"சரி - அவ்வாறே செய்வோம் ! ஆனால் இப்படி குறிப்பிட்ட பாதையை தேர்ந்தெடுக்கும் உரிமையை திருமெய்க்காவல்படைத் தலைவர் நமக்கு வழங்க வேண்டும் - பார்த்துக்கொள்ளலாம் - மேலே சொல்லுங்கள் !"

"..மூன்று இரதங்களுக்கும் முன்னர் பத்து அல்லது இருபது கோல் இடைவெளியில் மூன்று நான்கு புரவிகளை விட்டுக்கொண்டு செல்வது நல்லது.. கூட்டம் சேர்ந்துவிட்டால் அந்தக் கூட்டத்தையும் புரவிகள் கொண்டு எளிதாகப் பிரித்தெடுத்தவிடலாம்..."

"...ஹூம் ! முன்பெல்லாம் சோழர் புலிக்கொடி முன்னால் பட்டொளிவீசிப் பறக்க பல்வேறு கைக்கோளப் படைகளும் முன்செல்ல வெகு நிதானமாக இரத ஊர்வலம் நடைபெறும் - இப்போதோ தஞ்சையின் பெருகிவரும் ஜனத்தொகையைக் காரணமாகச் சுட்டி அதனைக் கலைத்துவிட்டார்கள் - பாவம், பொதுமக்களுக்கு அரசர் தரிசனம் தரும் ஒரே இடம் கஜ ஊர்வலம் மட்டும்தான் என்றாகிவிட்டது..."

"எப்படிப்பட்ட முன்னேற்பாடுகள் செய்தாலும் இரதம் சிற்சில இடங்களில் நிற்கவேண்டிய கட்டாயங்கள் ஏற்படலாம் - தாய்மார்கள் ஆரத்தித் தட்டோடு நிற்பதை பேரரசர் கவனித்துவிட்டால் நிச்சயம் இரதம் நிறுத்தப்படும் !"

"..உண்மைதான் மூவேந்தரே ! அந்த சமயங்களுக்காக நானும் வில்லியாரும் சேர்ந்து தனிப்பட்ட ஏற்பாடொன்று செய்துள்ளோம். அரசர் பயணிக்கும் இரதத்தில் சாரதியாய் நான் அமர, என்னைத்தவிர திசைக்கொருவராக நான்கு திருமெய்க்காப்புப் படை கவச வீரர்கள் கையில் வில்லுடன் இரதத்தின் படிக்கால்களிலும் பின்புறமும் அமர்ந்து பயணிப்பார்கள். இரதம் நிற்க வேண்டிய சூழல் வந்தாலோ மிகவும் மெதுவாகப் போகக்கூடிய சூழல் வந்தாலோ இவர்கள் சற்றே நிமிர்ந்துவிடுவார்கள் - அதனால் அவர்களின் உயரத்திற்குமேல் அரசரின் முகம் மட்டுமே வெளிப்பார்வைக்குத் தெரியும்....வீரர்களின் கவச உடல்கள் அவருக்குப் பாதுகாவலாய் விளங்கும்..."

மூவேந்தன் முகம் மலர்ந்தது.

"மிகவும் சிறப்பான ஏற்பாடாகத் தோன்றுகிறது ஐயா!"

மழபாடியார் குரலைத் தாழ்த்திக்கொண்டார்....."பேரரசர் இதைக் கேட்டால் கோபித்துக்கொண்டே விடுவார் ! மக்கள் என்னைப் பார்க்கவொட்டாமல் செய்கிறீகளாவென்று சீறுவார் !"

"சாதாரணமாக அவ்விதம் சீறுவதுண்டு - ஆனால் உமது முகதாட்சண்யத்திற்காக ஒருவேளை சகித்துக்கொண்டிருக்கவும் கூடும் !" என்று மீண்டும் அந்த கனத்த குரல் குறுக்கிட்டது. இருவருமே திடுக்கிட்டுப் போனார்கள். சக்ரவர்த்திகள் பொதுமக்கள் சந்திப்பில் தீவிரமாக இருப்பதால் தாங்கள் பேசிக்கொண்டிருப்பதை கவனித்திருக்கமாட்டாரென்று நினைத்தால்...

"ஆனால் மழபாடியாரே ! மக்கள் என்னைப் பார்க்கவொட்டாமல் தடுக்கும் இந்த ஏற்பாடு நிச்சயம் எனக்குப் பிடித்தமாக இல்லை. ..."

"மன்னிக்க வேண்டும் சக்ரவர்த்திகளே ! இருக்கும் சூழ்நிலையில் வேறு வழி தெரியவில்லை ! மாற்றாக நீங்கள் மெய்க் கவசம் தரித்தப் போவதென்றால்..."

"அடடா - தளிக்குளத்துப் பெருமானின் தரிசனத்திற்கு போரில் அணிந்து செல்லும் மெய்க்கவசத்துடன் போவதா ? அபச்சாரம் ! மழபாடியாரே - குருதேவர் என் கரங்களைக் கட்டிப் போட்டு விட்டார் - அதனால் உங்கள் ஏற்பாடுகளுக்கு குறுக்கே நாம் நிற்கப்போவதில்லை !"

கேட்டுவிடலாமா ? குருதேவர் அப்படி என்னதான் சொன்னாரென்று கேட்டுவிடலாமா ? அட, சொல்லக்கூடிய விஷயமென்றால் சக்ரவர்த்திகள் முன்பே புகன்றிருக்க மாட்டாரா என்ன.... மீண்டும் அதே சிரிப்பு.....

"இவர் யார் ? "

"மாராயரின் தனிச்சேவகத்தில் அடியேன் உள்ளேன் - பெயர் மூவேந்தன் !"

"ஆம் - மாராயரின் உய்யக்கொண்டான் திருமாளிகையில் உங்களைச் சந்தித்திருக்கிறேன்... அதுமட்டுமல்ல... வேறெங்கோ... சேரனுடனான உதகை மகோதயபுரப் போரில்... கோட்டை வாயிலுக்குள்.... அது நீங்கள்தானே ?"

"ஆஹா ! இந்த அடிமையின் பணியை தாங்கள் இன்னுமா ஞாபகம் வைத்திருக்கிறீர்கள் ? என்னே என் பாக்கியம் !"

"வீரரே ! அன்று மட்டும் நீங்கள் அந்த சாகசத்தைச் செய்திருக்கவில்லையேல் நாம் கோட்டைக்குள் புகுந்திருக்கவும் முடியாது - அப்படியொரு வெற்றி பெற்றிருக்கவும் முடியாது ! எப்படி உங்களை மறக்கவியலும்....இப்போது ஞாபகம் வருகிறது - போர் முடிந்தவுடனேயே உம்மைப்பற்றி மாராயரிடம் விசாரித்தேன் - தமது தனிச்சேவகத்திற்கு எடுத்துக்கொண்டுவிட்டதாகத் தெரிவித்தார்...."

"ஆம் சக்ரவர்த்திகளே ! உதகைப்போருக்குப் பின்னர் முழுக்க மாராயர் பணிதான் !"

"நல்லது ! நல்லது !" என்றபடி அவர் நகர ஆரம்பிக்க, மேற்கொண்டு மூவேந்தன் நண்பகலிலும் மாலையிலும் செய்ய வேண்டிய பணிகளை அரசரைத் தொடர்ந்தபடியே துரிதமாக விளக்கிச்சென்றார் மழபாடியார்.

****************************************************************************************
*******

அம்பலவாணரிடம் தன்னுடைய காதல் விவகாரத்தை பகிர்ந்துகொண்ட அந்தக் கணத்திலிருந்து அரிகண்டனுக்கு மேலும் மேலும் தன்னுடைய உணர்வுகளைப் பகிர்ந்துகொள்ளவேண்டுமென்கிற தீராத ஆவல் எழுந்தது. முதல் முறையாக தீவிரக் காதலில் ஈடுபடுவோர் தனக்கு நெருக்கமான

நண்பர்களிடம் தன் காதல் உணர்வுகளையும் காதலி பற்றிய எண்ணங்களையும் விடாமல் பேசிக்கொண்டேயிருப்பது இயல்பல்லவா ?

அரிகண்டனுக்குப் பல இளவட்ட சிநேகிதர்கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் அவர்களுடன் தன்னுடைய காதல் விவகாரங்களை மனம்விட்டுப் பகிர்ந்துகொள்வதில் அவனுக்குப் பல்வேறு தயக்கங்கள் இருந்தன. குறிப்பாக தனது நண்பர் குழாத்தில் தன்னையோ தன்னுடைய காதல் விவகாரங்களையோ பிடிக்காத ஒருவன் தன்னுடைய தந்தையிடம் சென்று இதுபற்றி பிரஸ்தபித்துவிட்டால் என்ன ஆவது என்பதுதான் அவனுடைய பெரிய பயம் ! வீண் வம்பு எதற்கு என்று தன் மனதிற்குள்ளாகவே காதலை மறைத்து வைத்து மருகிக்கொண்டிருந்தான் அவன்.

அம்பலவாணரின் வடிவத்தில் அவனுக்கு ஒரு சிநேகிதம் - வயதான சிநேகிதமாக இருந்தாலும் பரவாயில்லை - வந்து சேர்ந்தவுடன் அதுவரை கட்டுப்படுத்தப்பட்டு வைத்திருந்த எண்ணங்களும் உணர்வுகளும் பொங்கி வழிந்தன. சீருடையாளை முதன் முதலில் சந்தித்த அந்த அற்புதமாக நிகழ்வு, அதற்குப்பிறகு எத்தனை முறை - எங்கெங்கெல்லாம் அவளைப் பார்த்திருக்கிறான், என்னவெல்லாம் அவர்கள் இருவரும் பேசியிருக்கிறாரகள் என்று சகலவிதமான புராணங்களையும் ஒருமுறை விளக்கமாக அம்பலவாணரிடம் படிக்கவேண்டுமென்று அவனுடைய மனம் துடிதுடித்துக்கொண்டிருந்தது. அதனால்தான் உடனே கிளம்புகிறேன் என்று புறப்பட்டவரை சிற்றுண்டி அது இது என்று சொல்லி காலதாமதப்படுத்திக்கொண்டிருந்தான்.

அம்பலவாணருக்கோ வேறு சில சிறு பிரச்சனைகள் இருந்தன. நண்பகல்வரை பெரிதாக வெட்டி முறிக்க வேண்டிய வேலை

ஒன்றுமில்லைதான். ஆனால் அதற்குமேல் நாடக ஒப்பனைக்குத் தயாராக வேண்டுமாதலால் செங்கமலத்தை நல்லபடியாக சிங்காரித்து மதிய உணவிற்கே நகருக்குள் கூட்டிக்கொண்டுவந்துவிட வேண்டும். குழந்தை நம்முடனேயே இருந்துவிட்டுப் போகட்டுமே ! ஒருவேளை ஆச்சாரியார் ஏதாவது சொல்வாரோ ? தன்னுடைய தயக்கத்தை வெளிப்படையாகவே கேட்டுவிட்டார் அவர்.

"அரிகண்டா ! நான் உடனடியாகச் சென்று செங்கமலத்தை நீராட்டி சிங்காரித்து நேராக பெரிய திருக்கற்றளி வளாகத்திற்கே கூட்டிக்கொண்டு வந்து விடவா ? ஆச்சாரியார் ஏதும் தப்பாக நினைத்துக்கொள்ள மாட்டாரே...."

"ஆச்சாரியார் வீம்பெல்லாம் பெரியவர்களிடம்தான் ! குழந்தைகளை - அதுவும் பெண் குழந்தைகளைக் கண்டுவிட்டால் அவருக்குக் கொள்ளைப் பிரியம் ! அதனால் அந்த பயமே உங்களுக்கு வேண்டாம்... ஆனால் குழந்தையைக் கூட்டிக்கொண்டுவர நான் ஆளனுப்பி விடுகிறேனே - நீங்கள் இதற்காக வேலை மெனக்கெட்டு புறம்படிவரை சென்றுவரவேண்டுமா என்ன ?"

"அட நான் சென்றாலே அவளுடைய விளையாட்டுத் தோழர்களிடமிருந்து அவளைப் பிரித்து அழைத்துக்கொண்டு வருவது பெரிய காரியம் - ஆளை அனுப்புவதாவது ? நான் கிளம்புகிறேனே..."

"என்ன அவசரம் ஆசானே ! இருந்து சிற்றுண்டியை முடித்துக்கொண்டு கிளம்பலாமே...."

"அட அதற்கில்லையப்பா..." என்று இழுத்தார் அம்பலவாணர். வைத்தியர் வீட்டிற்குச் செல்லுமுன் ஒரு நடை அரண்மனைவரை சென்று மழபாடியாரை சந்தித்து தம்முடைய துரத்தல் பிரதாபங்களை ஒருமுறை ஓதிவிட்டு வரலாமா என்று பார்த்தார் அவர். ஆனால் அதனால் தன்மேல் மழபாடியார் கொண்டிருக்கும் மதிப்பு மேலும் குறையும் என்றுதான் தோன்றியது. அரண்மனைக்குப் போகலாமா வேண்டாமா என்று பெரியதொரு பட்டிமன்றமே அவர் மனதில் ஆரம்பமாகிவிட்டது.

"நீங்கள் என்னுடன் ஆச்சாரியாரின் வீட்டில் சிற்றுண்டியை முடித்துக்கொண்டுதான் கிளம்புகிறீர்கள் !" என்று அவரை இழுக்காத குறையாகக் கூட்டிச் சென்றான் அரிகண்டன். ஆச்சாரியாருடைய வீடு அருகிலேயே இருந்தாலும் சுற்றி வளைத்துக்கொண்டு சீருடையாள் தங்கியிருந்த தளிச்சேரிப் பகுதிகளின் வழியாக தன்னை அவன் இழுத்துக்கொண்டு செல்வதை அம்பலவாணரின் அப்பாவி மனது உணரவில்லை.

## குந்தவையாழ்வார்

மதிய உணவை முடித்துக்கொண்டு தனியாக சக்ரவர்த்திகள் ஓய்வெடுத்துக்கொண்டிருந்த அறையின் கதவம் மிக மென்மையாகத் திறக்கப்பட்டது.

அரைக்கண்கள் மூடிய நிலையில் அறிதுயிலில் இருந்த அரசருக்கு அந்த மென்மையான திறப்பே வந்திருப்பவரைப் பற்றிய அறிவிப்பை செய்துவிட்டது. ஒருவேளை தான் முழுவதுமாகத் தூங்கிப்போயிருந்து

கதவு திறக்கும்போது எழும் ஓசையினால் எழுந்துவிடுவோமோ என்றெல்லாம் யோசித்துச் செயல்படும் புத்திகூர்மை தனக்கு மிக நெருங்கியவர்களில் இருவருக்குத்தான் உண்டு. ஒருவர் பஞ்சவன் மாதேவியார் - அவரை இப்போதுதான் சந்தித்துவிட்டு வந்தோம் அதனால் அவராக இருக்க முடியாது. மற்றவர் - அக்கன் குந்தவைப் பிராட்டியார். அக்கனா வந்திருக்கிறார் !

கதவம் திறக்கத் திறக்க வாயிலில் மிக மென்மையான புன்னகையோடு நின்றுகொண்டிருந்த அந்த மூதாட்டியின் உருவம் புலனாயிற்று. மத்திம உயரம். தலை முழுவதும் நரைத்துப்போய் காட்சியளித்தாலும் அந்த நரையே முகத்துக்கு சொல்ல முடியாத ஒரு வசீகரத்தை அளித்துக்கொண்டிருந்தது. நெற்றி நிறைய திருநீற்றுப் புச்சும் அதற்கு நடுவில் துலங்கிய குங்குமப் பொட்டும் களை பொருந்திய அந்த முகத்தின் சோபையை மேலும் கூட்டி விட்டன. மார்பில் ஒரு ஆரம். முத்துமாலை. குறுக்கே செல்லும் பட்டாடை. இடைக்குக் கீழ் தெற்கு தேசத்திலிருந்து வந்திருந்த முத்துக்களை வைத்துத் தைக்கப்பட்ட அங்கி.

அருமொழித் தேவரான இராஜராஜ சோழரை சிறு வயதிலிருந்து தூக்கி வளர்த்தவரும் சோழசாம்ராஜ்ஜியத்தில் சர்வ வல்லமையுடைய பெண்மணியாகத் திகழ்ந்தவரும் தற்போது வயதாகிவிட்டதன் காரணமாக முழுமையான சிவப்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருப்பவருமான வல்லவரையர் வந்தியத்தேவரின் பிராட்டியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையாரைப் பார்க்கும் எவருமே உடனடியாகக் கைகூப்பி விடுவார்கள். அப்படி கம்பீரமும் பக்தியும் கருணையும் கலந்ததொரு தோற்றம் அவருக்கு. இதற்கு அரசரும் விதிவிலக்கல்ல.

தன்னுடைய சாய்மான இருக்கையைவிட்டு எழுந்தவர் அவசர அவசரமாக கொண்டையை முடிந்துகொண்டு "அக்கா !" என்று அழைத்தபடி வாயிலுக்கு...ஏறக்குறைய ஓடினார். அடடா ! அக்கனின் தோற்றப்பொலிவே தனிதான்... இவரைப் பார்த்ததும் ஏன் தன் மனம் இத்தனை குழைகிறது ? அக்கா ! அக்கா ! என்று நெஞ்சு ஏன் இப்படி விம்முகிறது ? அவருடைய மடியில் படுத்துக்கொண்டு பழங்கதைகளையெல்லாம் பேசவேண்டும் என்று ஏன் தோன்றுகிறது ? குருதேவரிடமோ - தன் தேவியரிடமோ - வேறு எவரிடமும் பீறிட்டெழாத உணர்வுகளெல்லாம் இவரைக் கண்டதும் கரையை உடைத்துக்கொண்டு பொங்குகின்றனவே ? இத்தனைக்கும் குறைந்தபட்சம் ஒரு திங்களுக்கு இருமுறையாவது சந்தித்து விடுகிறோம். ஒன்று அவர் வந்துவிடுவார் - அல்லது அவரைப் பார்க்வேண்டுமென்று தோன்றினால் நாமே கிளம்பிவிடுகிறோம்...

இராஜராஜன் என்ற மனிதனுக்குப் பின்னால் எத்தனையோ மனிதர்கள் நிற்கிறார்கள்... நின்றிருக்கிறார்கள் ! ஆனால் அவர்களில் தலையானவர் அக்கனல்லவா ? இதோ ! இத்தனை வயதான பின்புகூட தன்னுடைய பெரிய திருக்கற்றளிப் பணிகளில் விடாமல் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு... அக்கா ! அக்கா ! உங்களுக்கு - உங்கள் அன்புக்கு - என்ன பெரிதாகச் செய்துவிடப்போகிறேன் நான் ? (1)

***(1) தஞ்சை பெரியகோயிலில் வெட்டப்பட்டிருக்கும் இராஜராஜரின் பல்வேறு கல்வெட்டுக்களில் முதலாவதாகத் தொடங்கும் கல்வெட்டில் தனக்கு அடுத்தபடியாக தன் அக்கனையே குறிப்பிட்டிருக்கிறார். "நாம் கொடுத்தனவும் நம் அக்கன் கொடுத்தனவும் நம் பெண்டுகள் கொடுத்தனவும்..." என்று துவங்குகிறது அந்தப் பிரபலமான***

*கல்வெட்டு.*

பாதங்களில் விழப்போன தமையனைத் தடுத்தாட்கொண்டு கட்டித் தழுவிக்கொண்டார் குந்தவையாழ்வார்.

"தம்பீ ! இன்று உன்னுடைய ஜென்ம தினம். நீ நீடூழி வாழ்வாங்கு வாழ்ந்து இந்த தேசத்திற்கும் இந்த தேசத்தைப் புகலிடமாகக் கொண்டுள்ள பல்வேறு உயிர்களுக்கும் பற்பல நன்மைகளைச் செய்ய அருள்புரியவேண்டுமென்று தென்னாடுடைய ஈசனை வேண்டி வாழ்த்துகிறேன்...!"

"உங்களுடைய ஆசியும் வழிகாட்டலும்தான் அக்கா இன்றுவரை என்னைச் செலுத்திக்கொண்டிருக்கிறது ! போர் செய் ! போர் செய் ! சோழ தேசத்தைப் பெரிதாக்கு ! வலிமையுடையதாக்கு ! முன்னவர் காணாதவண்ணம் தென்னக சாம்ராஜ்ஜியத்தைப் பெரிதாக்கு என்றீர்கள் - ஆக்கினேன். பின் போதுமடா தம்பி போரும் வேலும் - நிர்வாகத்தில் கவனம் செலுத்து ! நிலங்களை அள என்றீர்கள் - அளந்தோம் ! சாம்ராஜ்ஜியம் முழுவதையும் அளந்தோம் ! அதனால் அரசாங்கத்தின் வருவாய் பத்து மடங்கு பெருகியது ! பின் போதும் நிர்வாகம் - அதனை அதிகாரிகளிடம் ஒப்படை - சிவப்பணியில் ஈடுபடு - பிரம்மாண்டமான கற்றளி கட்டவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தாயே - அதனைக் கட்டத்துவங்கு - இதுதான் சமயம் என்றீர்கள் ! அந்தப் பணியும் ஆரம்பமாகிவிட்டது !"

"சரியாய்ப் போயிற்று ! ஏதோ நான் சொல்லி நீ வெறும் கிளிப்பிள்ளை போல இத்தனையும் செய்ததுபோலல்லவா பேசுகிறாய் ! உனக்கென்று

எத்தனை கனவுகள் - ஆசைகள் - இலட்சியங்கள் இருந்தன ? அவற்றுக்குத் தக்கவாறு அவ்வப்போது ஆலோசனைகள் மட்டும்தானே நான் சொல்லிவந்திருக்கிறேன் ! உன்னிலிருந்து ஆரம்பித்து இராஜ்ஜியத்திலுள்ள கடைக்கோடி மக்கள்வரை ஏதோ நான்தான் உன்னை பொம்மை போல ஆட்டுவிப்பதாகத்தான் இன்னமும் பேசிக்கொண்டிருக்கிறார்கள் ! நேற்று பல்லக்கில் வரும்போதுகூட....."

"எத்தனை சொன்னாலும் பழையாறையை விட்டு வரமாட்டேன் என்கிறாய் அக்கா ! இந்த வயதான காலத்தில் எதற்காக இத்தனை தூரம் பல்லக்குப் பிரயாணம் ?"

"அதென்னவோ நம் தந்தையார் தம்முடைய அந்திமக் காலத்தைக் கழித்த நந்திபுரத்தையும் பழையாறை மாளிகையையும் விட்டு வரவே மனதில்லை தம்பி ! ஆனால் பல்லக்குப் பிரயாணம் செய்தால்தானே மக்களில் பலரையும் சந்தித்துப் பேசிவிட்டு வரமுடிகிறது ! இராஜ்ஜியத்தின் நிறைகுறைகளையும் புரிந்துகொள்ள வழி ஏற்படுகிறது !"

குந்தவையாரை எவரும் எளிதில் அணுகலாம் - தத்தம் குறைகள் இருப்பின் சொல்லலாம். நியாயமான குறைகள் இருப்பின் அவை சரிசெய்யப்படும் அல்லது அரசரின் காதுகளில் தகுந்த சமயத்தில் சேர்க்கப்படும் என்ற நம்பிக்கை பொதுமக்கள் அனைவருக்கும் இருந்தது. அதனால் அரசரை நேரடியாக சந்திக்க முடியாத அல்லது அவருடைய பார்வைக்குக் கொண்டுபோகவேண்டிய அளவிற்கு இல்லாத சிறு பிரச்சனைகளுடைய பலரும் குந்தவையாழ்வாரைச் சந்திக்க விழைந்தனர். அவரின் வருகை அல்லது அவர் தங்கள் கிராமங்களின் வழி செல்கிறார் என்பது எப்படியோ மக்களுக்கு முன்கூட்டியே தெரிந்துபோக

அவருக்கென்று அமைந்த பிரத்யேகமான சிவப்பும் வெண்பட்டும் கொண்ட பல்லக்கு அடிக்கடி வழிமறிக்கப்படும். அவரும் பொறுமையோடு அவர்களிடம் கலந்துபேசி அவர்களை திருப்திப்படுத்தி அனுப்புவார். அனுபந்தமாக அவர்கள் அனைவருக்கும் குந்தவையார் கடைசியாக வழிபட்ட சிவஷேத்திரத்தின் திருநீற்றுப் பிரசாதம் வழங்கப்படும்.

இப்படிப்பட்ட சிறு பிரயாணங்களின் சுருக்கங்களை - கேள்விப்பட்ட / கவனத்திற்குக் கொண்டுவரவேண்டிய செய்திகளை அக்கனும் தமையனும் அடுத்த சந்திப்பில் பரிமாறிக்கொள்வார்கள்.

"நாம் கட்டிக்கொண்டிருக்கும் திருக்கற்றளி பற்றி என்ன விதமான பேச்சு நடைபெற்றுக்கொண்டிருக்கிறதக்கா ?"

"அதைப் பற்றிப் பேசலாமென்றுதான் வந்தேன். ஆனால் உன்னைச் சந்திக்க வரும்பும் உன் தேவியர் இருவரும் என்னை வழிமறித்துச் சில செய்திகளை காதில் இட்டுவிட்டார்கள். அந்த விஷயத்தைப் பற்றிப் பேசிமுடித்தபின்தான் மற்றதன்மேல் என்னால் கவனம் செலுத்த முடியும் ! குருதேவர் இந்த முறை குடும்பத்தோடு உன்னை சந்தித்து ஆசி வழங்காமல் தனியாக சந்தித்தாராமே ! உனக்கு ஏதோ ஆபத்து நேரப்போவதாகச் சொன்னாராம்... இராஜகம்பீரன் சபையிலும் ஏதோ சிறு கலவரமாம்..... தேவியர் கவலையோடு உள்ளனர்... என்னதான் நடந்துகொண்டிருக்கிறது தம்பி ?"

"அக்கா ! தேவியரிடம் நான் முழு விபரங்களையும் சொல்லவில்லை - என்னதான் மனமுதிர்ச்சி பெற்றவர்களாக இருந்தாலும் கணவன் என்று வரும்போது கவலை அவர்களை ஆட்டிப்படைத்து விடுகிறது. குருதேவர்

சொற்படி இன்றைக்கு எனக்கு முக்கியமான கண்டம். பிராணாபாயம் நேர்வது உறுதி....!"

"என்ன தம்பி ! இப்படிச் சொல்கிறாய் !"

குந்தவையார் சற்றே நெருங்கிவந்து தாடி பொருந்திய அந்த முகத்தை லேசாக வருட அரசர் அந்தக் கைகளை அப்படியே பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டார். அவர்களுக்கிடையே எப்போதும் வற்றாமல் பொங்கிப் பெருகிக்கொண்டிருந்த அன்புப் பிரவாகமானது அந்த ஒரு ஸ்பரிசத்தில் வெள்ளமாகி வழிந்தது.

"ஆம் அக்கா ! ஆனால் குருதேவர் மற்றொன்றும் சொன்னார் ! இந்த அபாயத்திலிருந்து துர்க்கா தேவியின் பூரண அருள் கொண்ட ஒருவனின் உதவியுடன் நான் பிழைத்துவிடுவேனாம் ! இத்தனை பெரிய திருக்கற்றளியை ஆரம்பித்திருக்கிறேன் - ஏதோ திருஷ்டி கழிந்ததென்று நினைத்துக்கொள்ள வேண்டியதுதான்....."

"குருதேவர் சொன்னதைத் தவிர இது சம்மந்தமாக வேறு ஏதாவது நிகழ்ந்துள்ளதா ?"

"என்னத்தைச் சொல்வது - நிறைய நிகழ்ந்துவிட்டன. கொல்லி மழவர் சில நாட்களுக்கு முன்பு மாராயருக்கு ஒரு முக்கிய ஓலையனுப்பியிருக்கிறார். அதில் என்னைக் கொல்ல நடக்கும் சதிபற்றிய சில விபரங்களை எழுதி இரகசியமாக ஒரு ஒற்றனிடம் அனுப்பியிருக்கிறார். அந்த ஒற்றன் மாயமாய் மறைந்துவிட்டான். அநேகமாக கொல்லப்பட்டிருக்கக்கூடும் என்று மாராயர் சந்தேகிக்கிறார். அந்த சந்தேகத்தை விதைப்பது வேறொரு

நிகழ்வு.

நெடுங்களத்திற்கருகில் துழாய்க்குடி என்றொரு கிராமம் உள்ளது - அந்தக் கிராமத்திற்கருகில் நட்ட நடு இரவில் ஒருவனை மூவர் குத்திக் கொன்றுவிட்டு அவன் இடையில் வைத்திருந்த ஓலையையும் பிடுங்கிக்கொண்டு போய்விட்டார்கள். அந்தப் பக்கமாகப் போய்க்கொண்டிருந்த வயதான மனிதர் ஒருவர் இறக்கும் தறுவாயில் அவனைப் பார்த்திருக்கிறார். அப்போது அவன் அரசரைக் கொல்ல சதி அது இதுவென்று குழறியிருக்கிறான் - இவரால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்தப் பெரியவர் இதற்காகவே தஞ்சைக்கு வந்து மாராயரின் சீடர் பரமன் மழபாடியாரை சந்தித்து நடந்ததைச் சொல்லியிருக்கிறார். அவர் சொன்ன செய்தியிலிருந்துதான் கொல்லப்பட்டவன் காணாமல்போன ஒற்றனாயிருக்கலாம் என்று மாராயர் சந்தேகிக்கிறார். உறுதிபடுத்திக்கொள்ள முடியவில்லை.

மழபாடியாரும் பெரியவருமாக மீண்டும் துழாய்க்குடிக்குச் சென்று விசாரித்ததில் வாணியஞ்சாவடிக்கருகில் ஒருவன் சந்தேகத்திற்கிடமாகும் வகையில் அகப்பட்டிருக்கிறான். துரதிருஷ்டவசமாக அவனைப் பிடிக்குமுன் நாகமொன்றின் விஷக்கடியால் உயிர்துறந்துவிட்டான். அதனால் மேற்கொண்டு பெரிதாக ஒன்றும் செய்ய முடியவில்லை. மழபாடியாரும் பலவகைகளில் முயன்றுகொண்டிருக்கிறார். இன்னமும் இன்னார்தான் சதிகாரர் ! அல்லது இன்ன விதமாகத்தான் ஆபத்து வரும் ! என்று அவரால் உறுதிபடுத்திக்கூறமுடியவில்லை. இவ்வளவும் இரண்டு மூன்று நாட்களில் வெகு வேகமாக நடந்து முடிந்துவிட்ட விஷயங்கள்.

எனக்கு என் உயிரைப் பற்றிக் கவலையில்லை - ஈழத்துப் போரிலேயே

நான் போய்ச் சேர்ந்திருக்கவேண்டும் ! ஏதோ இன்றுவரை வாழ்வது ஈசனருளால்தான்... ஆனால் தஞ்சையில் இத்தனைபேர் புழங்கும் இடத்தில் நூற்றுக்கணக்கான ஒற்றர்களையும் அரசாங்கப் பாதுகாவலையும் மீறி ஒருவன் என் கழுத்துக்குக் குறிவைக்கும் சாத்தியக்கூறு உள்ளதே - அதுதான் சங்கடமாக இருக்கிறது !"

"நமது அத்தனை ஒற்றர்களும் பாதுகாவலும் மனம் முழுவதும் கோபமும் குரோதமும் கொண்ட ஒரு புத்திகூர்மைமிக்க சதிகாரனுக்கு முன்னால் ஒன்றுமில்லை தம்பீ ! எனக்கென்னவோ இந்தச் சதிகாரர்கள் அனைவரும் உன்னாலோ உன் படைகளாலோ மிகக்கடுமையாக பாதிக்கப்பட்டதொரு கூட்டத்தைச் சேர்ந்தவர்களென்று தோன்றுகிறது... எங்கிருந்து இவர்கள் முளைத்துள்ளார்களென்று ஏதாவது தகவலுண்டா ? சேர தேசமா - பாண்டி தேசமா - அல்லது சளுக்கரா...."

"குருதேவர் மலைநாட்டிலிருந்து வந்தவர்கள் என்கிறார். மாராயரால் உறுதியாக எதையும் சொல்லமுடியவில்லை..."

நீண்ட பெருமூச்சொன்று வெளிப்பட்டது குந்தவையாழ்வாரிடமிருந்து.

"ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் சதி நடப்பது உறுதி என்பதுபோலத்தான் தெரிகிறது. ஆனால் என்னவிதமான சதி என்பதைப் பற்றி ஒரு தகவலும் இல்லை. நீ மிக எச்சரிக்கையோடு இருக்கவேண்டும் தம்பீ ! மீண்டும் ஒரு தமையனை சதிகார நரிகளுக்கு பலிகொடுக்க நான் தயாரில்லை !"

வேதனை மிக்க அந்தக் கணங்கள் இருவருடைய மனதிலும் வந்து போயின. பட்டத்து இளவரசரும் குந்தவை - அருமொழித் தேவரின் மூத்த

தமையனாருமான பரகேசரி ஆதித்த கரிகாலர் பல வருடங்களுக்கு முன் கொடிய சதிகாரர்கள் சிலரின் வாளுக்கு இரையாகியிருந்தார்.(2) பெருவீரரான அவர் போர்க்களத்தில் வீரமரணம் அடையாமல் கோழைத்தனமாக கொல்லப்பட்டது இருவரின் மனதிலும் ஆழமான வடுவாகப் பதிந்திருந்தது. சதிகாரர்கள் பின்னர் அகப்பட்டு தண்டிக்கப்பட்டாலும் போன தமையனுடைய உயிர் போனதுதானே ?

***(2) உடையார்குடிக் கல்வெட்டுக்களாலும் திருவாலங்காட்டுச் செப்பேடுகளாலும் இத்தகவல் உறுதிபடுத்தப்படுகிறது.***

"உன் பாதுகாவலை இன்று யார் ஏற்றுக்கொண்டுள்ளது ?"

"வழக்கம்போல திருமெய்க்காவல் படைதான். அதனைத்தவிர பரமன் மழபாடியாரின் பிரத்யேகக் கண்காணிப்பு வேறு ! போதாதா என்ன...."

"மழபாடியாரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். பெருவீரர். அவர் அருகில் இருக்கும்போது கவலையில்லைதான். என்றாலும் எந்த விஷயத்திலும் கவனக்குறைவாக இருந்துவிடாதே ..."

"வருவது வரட்டும் அக்கா... நாம் வேறு விஷயத்தைப் பற்றி பேச ஆரம்பித்தோம் - பெரிய திருக்கற்றளி பற்றி மக்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் ?"

"ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பேசுகிறார்கள் - அவர்கள் அபிப்பிராயங்கள் ஒருபக்கம் இருக்கட்டும். நேற்று எனக்கொரு யோசனை தோன்றியது. திருக்கற்றளிக்கென்று பண்டாரம் உண்டல்லவா - அதனால்

பிரத்யேக மெய்க்காவல் படையும் வேண்டுமல்லவா ? அதற்கு வழக்கமான படைப்பிரிவுகளிலிருந்து ஆள் எடுக்காதே ! சோழசாம்ராஜ்ஜியத்தின் ஒவ்வொரு பிரஜைக்கும் உரியது இந்தக் கற்றளி - அதனால் அதன் பாதுகாப்பில் அவர்கள் ஒவ்வொருவருக்கும் பங்கிருக்க வேண்டும். நாளை இந்தக் கற்றளியைக் காப்பாற்ற நீயும் நானும் இருக்கமாட்டோம் - ஆனால் இந்த நாடு இருக்கும். அதன் மக்கள் இருப்பார்கள். அவர்தம் சந்ததியர் இருப்பார்கள். அதனால் ஒவ்வொரு ஊரும் கிராமமும் ஒரு மெய்க்காவல் வீரரை அனுப்ப வேண்டுமென்றும் அவர்களுக்கான வருடாந்திர நிவந்தத்தை அந்தந்த கிராமமோ ஊரோ ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று சொல்லிவிடு ! இதனால் மக்களுக்கு பிடிப்புண்டாகி..."

"ஆஹா ! அக்கா ! என்ன அற்புதமான சிந்தனை.... அப்படியே செய்து விடுவோம் ! (3) எனக்கு மேலும் ஒன்றுகூடத் தோன்றுகிறது ! இந்தத் திருக்கற்றளிக்கு எவர் நிவந்தமளித்தாலும் - அது எவரானாலும் சரி - அதனைக் கல்லிலே வெட்டிவிடவேண்டியது ! இதனால் பின்னால் எதிர்காலத்தில் வரப்போகும் மக்களுக்கு இராஜராஜன் மட்டும் இந்தக் கோயிலைக் கட்டவில்லை - அவன் இராஜ்ஜியத்தின் ஒவ்வொரு பிரஜையும் சேர்ந்துதான் அதனைக் கட்டினார்கள் என்னும் எண்ணமுண்டாகுமல்லவா ? (4)"

***(3) பெரியகோவிலின் ஒட்டுமொத்த மெய்க்காவல் வீரர்களின் பட்டியல் - அவர்களின் ஊர், கூற்றம் முதலான தகவல்களுடன் - கல்வெட்டுக்களில் பதிவாகியுள்ளது. இதிலிருந்து அவர்கள் அனைவரும் சோழதேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்திருப்பது உறுதியாகிறது***

*(4) "நாம் கொடுத்தனவும் நம் அக்கன் கொடுத்தனவும் நம் பெண்டுகள் கொடுத்தனவும் மற்றும் கொடுப்பார் கொடுத்தனவும் இக்கல்லிலே வெட்டியருளுக என்று திருவாய்மொழிஞ்சருளி...." என்னும் கல்வெட்டு வரிகளில் பதில் கொடுப்பார் என்பது பெரியகோயிலுக்கு நிவந்தமளித்த பொதுமக்கள் அனைவரையும் குறிக்கும்.*

"தம்பீ ! உனக்குப் பெரிய மனது - உனக்கு ஒருகேடும் உண்டாகாது - நமன் உன்னை நெருங்க அஞ்சுவான் ! பேசிக்கொண்டிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை - நீ தளிக்குளத்தார் ஆலயத்திற்குப் புறப்பட வேண்டுமல்லவா ?"

"ஆம் அக்கா ! கிளம்புகிறேன் - மாலை ஆச்சாரியாரின் நாடகத்திற்கு நீயும் வருகிறாயல்லவா ?"

"ஸ்ரீ இராஜராஜ விஜயமாயிற்றே - எப்படி வராமல் இருப்பேன் !" என்றார் ஆழ்வார் சிரித்தபடி.

"அப்போது திருக்கற்றளி வளாகத்தில் சந்திப்போம் ! சொல்ல மறந்துவிட்டேன் - நீ நிவந்தமாகக் கொடுத்துள்ள உமா பட்டாரகியார் திருமேனி(5) மிகப் பிரமாதம் ! தட்சிண மேரு விடங்கருக்குப் பக்கத்தில் பிரமாதமாகப் பொருந்திவிட்டது - இளங்கோயிலில் எழுந்தருளப் பண்ணியிருக்கிறேன்....போய்ப் பார் !"

*(5) இராஜராஜரால் நிவந்திக்கப்பட்ட தட்சிண மேரு விடங்கரான ஆடவல்லார் (நடராஜர்) திருமேனிக்கு அருகில் நிற்கும் உமா பட்டாரகியாரின் திருமேனி குந்தவையாழ்வாரால் நிவந்தமளிக்கப்பட்டதற்கு பெரியகோயில் கல்வெட்டு சான்று பகர்கிறது*

## அன்பே சிவம்

அரிகண்டனிடமிருந்து ஒரு வழியாக தப்பித்துப் புறப்படுவதற்குள் அம்பலவாணருக்கு உன்பாடு என்பாடு என்றாகிவிட்டது. சீருடையாளை அவருக்கு அறிமுகப்படுத்தி அவளைப் பற்றிய அவருடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டேயாகவேண்டும் என்கிற அடக்க முடியாத அவஸ்தையில் சிக்கியிருந்தான் அரிகண்டன். சீருடையாளை வழக்கம்போல அவளுடைய வீட்டில் காணோம் ! அவளுடைய தோழி அம்பலக்கூத்தியின் வீட்டில் சென்று தேடினால் அவளும் மாயமாய் மறைந்திருந்தாள் ! அவளுடைய வீட்டைப் பாதுகாக்கும் கிழவி காலையில்தான் சீருடையாளும் கூத்தியுமாக வீட்டை சுத்தமாக ஒழித்துவைத்துவிட்டு வெளியில் சென்றுவிட்டதாகவும் எப்போது திரும்பி வருவார்களென்று தெரியாதென்றும் தெரிவித்தாள்.

"இந்தப் பெண்டுகள் இருக்கிறன்றார்களே !" என்று அவர்களை மனதிற்குள் வைதான் அரிகண்டன். பிழைப்பைப் பார்க்கும் வழியை விட்டுவிட்டு எதற்காக இப்படித் தளிச்சேரிப் பெண்டின் பின்னால் சுற்றிக்கொண்டிருக்கிறோம் என்று விரக்திகூட ஏற்பட்டது - சிறிது நேரத்திற்குள்ளாகவே சீருடையாளின் சிவந்த மேனியழகு மனதில் எழுந்து அந்த விரக்தியை முழுவதுமாக விரட்டிவிட்டது வேறுவிஷயம்.

அம்பலவாணருக்கு ஒன்றும் புரியவில்லை. ஆச்சாரியார் வீட்டில் சிற்றுண்டி என்று அழைத்துவிட்டு எதற்காக இப்படி வேலை மெனக்கெட்டு தளிச்சேரியின் வடசிறகில் அரிகண்டன் சுற்றிக்கொண்டிருக்கிறான் என்று

தெரியவில்லை. அவருக்கு திருக்கற்றளி வளாகத்திலிருந்து ஒரு நடை வைத்தியர் வீடுவரை சென்று குழந்தையைக் கூட்டிக்கொண்டுவரவேண்டுமேயென்ற கவலையேற்பட்டது. புறம்படிக்குச் செல்லும் சாத்து வண்டி ஏதாவது தென்பட்டால் அதில் தொற்றிக்கொள்ளலாம். எல்லாம் அந்தப் பாழாய்ப்போன சதிகாரனைத் துரத்திக்கொண்டு வந்ததினால் வந்த வினை !

உனக்கெதற்கு இந்த வீண் வம்பும் தும்பும் ? என்று தன்னைத்தானே கடிந்துகொண்டார் அம்பலவாணர். இப்போதே கிளம்பினால்தான் வைத்தியர் வீட்டிற்குச் சென்று சுமாராக உடுத்திக்கொண்டு குழந்தையையும் கிளப்பிக்கொண்டு வரலாம். எங்கே தாமதமாக நாடகக் கொட்டகைக்கு வந்து சேர்ந்து ஆச்சாரியாரின் கோபத்துக்கு ஆளாகிவிடப் போகிறோம் என்பதே அம்பலவாணரின் பெருங்கவலையாக இருந்தது. ஏதாவது அசம்பாவிதமாக நடந்து "உன்னை இன்றைக்கு வேடம்கட்டவிடப்போவதில்லை !" என்று ஆச்சாரியார் சொல்லிவிட்டால் அவருடைய மனம் சுக்கு நூறாக உடைந்துவிடும்.

இத்தனை எண்ணங்களும் அவரிடம் அலைபாயவே அரிகண்டனிடம் நொடிக்கொருதடவை கிளம்பிவிடுகிறேனே என்று புலம்பிக்கொண்டிருந்தார். அரிகண்டனுக்கும் சீருடையாளைக் காணாமல் மனம் வெறுத்திருந்ததால் அம்பலவாணரை ஒருவழியாக விட்டுவிட்டான்.

தப்பித்தால் போதுமென்று அம்பலவாணரும் கிளம்பினார். வைத்தியர் இல்லத்தை அவர் அடையும்போது நண்பகல் உணவு வேளை தாண்டி விட்டது. வைத்தியர் சமைத்து வைத்திருந்த சகிக்கமுடியாத அரிசிச்சோற்றையும் காய்கறி வெஞ்சனங்களையும் ஒரு வாய் அவசர

அவசரமாக அள்ளிப்போட்டுக்கொண்டு செங்கமலத்தையும் சிங்காரித்து விட்டுக் கிளம்புவதற்குள் வியர்வைக் குளியலில் மூழ்கிவிட்டார் அம்பலவாணர்.

வைத்தியருக்கு அவருடைய பரபரப்பு வேடிக்கையாகவும் வினோதமாகவும் இருந்தது. நானும் வருகிறேனே - நோயாளிகள் இன்று ஒருவரும் வரவில்லை என்று சொல்லிக் கிளம்பியவரை ஆயிரம் சமாதானங்கள் செய்து வீட்டிலேயே நிறுத்தவேண்டி வந்தது. இவரைக் கூட்டிக்கொண்டு திருக்கற்றளி வளாகத்துக்குள் செல்வதாவது ? சிவபெருமான் மாலையில் வந்து நடத்தி வைக்க வேண்டிய மன்மத (அரிகண்ட) தகனம் மதியமே முடிந்துவிடுமல்லவா ?

**************************************************************************************
*******

நான்கு ஜாதிப் புரவிகள் பூட்டிய அந்த இரதம் கம்பீரமாக அரண்மனை வாயிலில் நின்றது. கனமான பலகைகளைக் கொண்டு செய்யப்பட்ட அந்தப் பெரிய இரதத்தின் நான்கு சக்கரங்களும் மண்ணில் ஊன்றி நிற்பதைப் பார்த்தால் இராஜகஜமொன்று மத்தகத்தை சுழற்றிக்கொண்டு கம்பீரமாக நிற்பதைப்போல் காணப்பட்டது. இரதத்தின் சாரதி அமர வேண்டிய இடத்தில் ஒரு சாதாரண தலைப்பாகையுடனும் சாரதிக்குரிய வெண்ணிற மெய்ப்பையுடனும் மழபாடியார் அமைதியாக அமர்ந்திருந்தார். மக்களின் கவனம் தன்பேரில் திரும்பிவிடக்கூடாது என்பதற்காக இந்த வேடத்தினை அவர் தரித்திருக்கலாம் என்று நாமே யூகம் செய்கிறோம்.

இரதத்தை நல்லபடியாகச் செலுத்துவதற்கு குதிரைகளின் ஒத்துழைப்பு முழுவதும் தேவை. குதிரைகளின் முழு ஒத்துழைப்பிற்கு அவை இரத சாரதியுடன் பரிச்சயப்பட்டிருக்க வேண்டும் என்பது மழபாடியாரின் கோட்பாடு. அதனால் புறப்பட வேண்டிய நேரத்திற்குக் கால் நாழிகை முன்னதாகவே வந்து அந்தப் பிராணிகளுடன் அவற்றுக்கேயுரிய பிரத்யேக பாஷையில் பேச ஆரம்பித்துவிட்டார் மழபாடியார். அவற்றின் பிடரிக்குள் கைகளைவிட்டுக் களைந்தார். பிருஷ்டத்தை அழுத்திப் பிடித்துவிட்டார். கால் குளம்புகளைப் பரிசோதித்து அவற்றில் சிக்கியிருந்த சிறு கற்களை நீக்கிவிட்டார். வாய் நுரை அதிகமாகத் தள்ளியிருந்த புரவியை இரதத்திலிருந்து பிரித்தெடுத்து தனியாக தண்ணீரும் கொள்ளும் காட்டச் சொன்னார்.

புரவிகளுக்கு ஒரே சந்தோஷம் ! தம்மை தம் இயல்பைத் தெரிந்த ஒருவனின் அருகாமையையும் ஸ்பரிசத்தையும் அவை முழுவதுமாக அனுபவித்தவைபோல் காணப்பட்டன. அடிக்கடி கனைத்து தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டன. புரவிகளின் கனைப்பில் பல வகையுண்டு. கூர்மையாகக் கவனித்தால் அவை சொல்ல வரும் செய்தியை விளங்கிக்கொண்டு விடலாம். பல வருட காலமாக இந்த விஷயங்களில் தேர்ந்திருந்த மழபாடியாருக்கு அந்த குதிரைகளை ஸ்நேகிதம் செய்துகொள்வதில் எந்தப் பிரச்சனையும் ஏற்படவில்லை. ஒருவழியாக குதிரைகளுடன் உறவு ஏற்படுத்திக்கொண்டாகிவிட்டது என்பது உறுதியானவுடன்தான் மழபாடியார் சாரதியின் இடத்திலேயே அமர்ந்தார். அமர்ந்தவுடன் முதல் வேலையாக குதிரையின் சவுக்கைக் கண்காணாத இடத்தில் சொருகிவிட்டார். அவர் என்றைக்குமே சவுக்கை உபயோகிப்பது கிடையாது. மெதுவாக கைகளினால் குறிப்பிட்ட இடங்களில் தட்டியும்

கடிவாளத்தை மெல்ல இழுத்தும் பிடித்தும் புரவியை அனாயசமாகச் செலுத்திக்கொண்டுபோய் விடுவார்.

சிறிது நேரத்திலேயே அரண்மனை வாயிலில் எக்காளம் முழங்கப்பட்டது. புலிக்கொடிகளும் அஷ்டமங்கலக் கொடிகளும் வந்தன. சோழப் பேரரசுக்குட்பட்ட பல்வேறு சிற்றரசர்களின் இராஜ முத்திரைகள் பதித்த கொடிகளும் அடுத்தபடியாக வந்தன.

சேனானி நாயகங்கள், திருமந்திர ஓலை, பெருங்கணத்தார், வெண்கொற்றக்குடையார் புடைசூழ உடையார் இராஜராஜதேவர் கம்பீரமாக நடந்து வந்தார். தலையில் சோழ அரசர்களுக்குரிய அணிகளும் மேல்காதுகளில் தங்க பாணம் பூண்ட பாண்டி முத்தும் மார்பில் மிகப் பெரிய முத்துக்கள் பூண்ட ஆரமும் வயிற்றுக்கு மேல் உதர பந்தமும் இடையில் பட்டாடையும் சரசரக்க அவர் நடந்து வருவதைப் பார்க்கவே வாயிலில் பெருங்கும்பல் சூழ்ந்துவிட்டது. பலகணியின் மேலிருந்து அரண்மனைப் பெண்டிர் பூமாரிப் பொழிய இரதத்தில் அமர்ந்தார் அரசர். சில வயதான பெண்டுகள் குதிரைகளுக்கு முன்னால் நின்று ஆரத்தி எடுத்து திருஷ்டி கழித்தார்கள். சக்கரங்களின் முன் குங்குமம் அப்பிய எலுமிச்சைகள் சொருகப்பட்டன. கூப்பிய கரங்களுடன் அரசர் கண்ஜாடைகாட்டவே கடிவாளம் சொடுக்கப்பட்டது.

இரதம் மெதுவாக எலுமிச்சைகளை நசுக்கிக்கொண்டு புறப்பட்டது.

வாழ்த்தொலிகளும் சங்கொலிகளும் வானளாவ எழுந்தன.

தன்னுடைய அரண்மனையை - ஆர்வத்தோடு மேல் பலகணியிலிருந்து

கைகளை உயர்த்தி தன்னை வழியனுப்பிவைக்கும் பெண்டுகளை - தன்னுடைய அரண்மனைப் பட்டாளத்தை ஒரு கணம் நோக்கினார். பலகணியின் முன்னதாகத் தெரிந்த தந்தியின் முகத்திலும் பஞ்சவன் மாதேவின் முகத்திலும் வெளிப்படையான உற்சாகத்தை மீறி கவலைக்கோடுகள் தெரிந்தன.

போர்க்களத்துக்கெல்லாம் செல்லும்போதுகூட ஏற்படாத ஒரு உணர்வு அவரை ஆக்கிரமித்தது. போர் என்பது அவருக்குச் சிறுவயதுமுதல் பழக்கமான ஒன்று. அங்கு யார் எதிரி என்பது தெரியும். எப்படியெல்லாம் தாக்கப்படலாம் அந்தத் தாக்குதல்களை எப்படியெல்லாம் எதிர்கொள்ளலாம் என்பதெல்லாம் அவருக்கு அத்துப்படி. இன்று நடக்கப்போவதும் போர்தான். ஆனால் இது மாயமான் வேட்டையைப்போல் மர்மமான போர். எதிரி யார் என்பது தெரியாது. என்னவிதமான தாக்குதல் நேருமென்பதும் தெரியாது. எப்போது தாக்கப்படுவோமென்பதும் தெரியாது. ஆனால் தாக்குதல் நிச்சயம்.

நாம் செய்யக்கூடியதெல்லாம் ஒன்றுதான். அது இடைவிடாமல் சிவத்தை சிந்தையில் நிறுத்துவது. போகின்ற உயிர் போய்விட்டுப் போகட்டும். ஆனால் இறுதிவரை மனதின் அடியாழம் மகேசனைச் சிந்திக்கட்டும். நான் போய்விட்டால் என்ன ? இராஜேந்திரன் இந்தக் கற்றளியை முடித்துவிடமாட்டானா என்ன ? பெரிய திருக்கற்றளி ! அது மட்டும்தான் நாமாக நம் கைகளால் செய்து முடிக்கவேண்டும் என்று நினைக்கும் ஒரே கடைசிக் காரியம் ! அதை முடித்துவிட்டால் இதுபோன்ற சதிகாரர்களுக்கு வேலையே வைக்காமல் நாமாகப் போய்ச்சேர்ந்துவிடலாம்.

எவனுக்கு என்மேல் இத்தனை விரோதம் ? ஏன் இத்தனை துவேஷம் ?

என்ன செய்துவிட்டேன் ? என்னையுமறியாமல் எவர் குடும்பத்தை நான் அழித்துவிட்டேன் ? போர் என்று வந்துவிட்டால் அதனால் ஏற்படும் இழப்புக்கள் அதிகம்தான். ஆனால் மனமறிந்து யாருக்கும் எந்தக் கெடுதலும் நினைத்ததில்லை. ஏன் என்மேல் இத்தனை ஆவேசம் ? எங்கோ எலியைப் போல் ஒளிந்துகொண்டு உன் கைப்பாவைகளை அனுப்பியிருக்கும் அந்தணனே ! இன்று மட்டும் நான் பிழைத்துவிட்டால் உன்னை யார் என்று நிச்சயம் கண்டுபிடிப்பேன். உன் துவேஷத்திற்கான காரணம் தெரியவேண்டுமெனக்கு. முடிந்தால் உனக்கு என் நிலைபாட்டைப் புரியவைக்க வைண்டும். உனக்கு நான் எதிரி. ஆனால் எனக்கு - சிவ தீட்ஷை பெற்று விட்ட எனக்கு - இனி எவரும் எதிரியில்லை. சகலரும் சகல உயிர்களும் என் சிநேகிதர்கள். குழந்தைகள். சக மானிடர்கள் சிவனடியார்கள்.

உயிர்களனைத்தும் சிவம். பரசிவம். சிவ சக்தி வடிவம். நீயும் சிவம் நானும் சிவம்.

சிவம் என்பது அன்பு. எவரிடமும் எக்காரணம் கொண்டும் சிறிதளவும் வெறுப்புக்கொள்ளாத அன்பு. நண்ப ! உயிர்களின் ஒருவன் என்ற முறையில் உன்னையும் நான் நேசிக்கிறேன். உன்னுடைய குறுவாள் ஒருவேளை என்னுடைய மார்பில் பாய்ந்துவிட்டால் அந்த நிலையிலும் உன்னிடம் நான் அன்பு செலுத்துவேன். பகைவனின் வாள் வஞ்சகமாக மார்பில் பாய்ந்து குருதி வழிந்த நிலையிலும் "தத்தா ! நமரே காண் !" என்கிற மிலாடுடையாரைப்(1) போற்றும் வம்சத்தில் பிறந்தவன் நான்.

***(1) பெரியகோயிலுக்கு நிவந்தமாகக் கொடுக்கப்பட்ட செப்புத் திருமேனிகளில் மெய்ப்பொருள் நாயனார் திருமேனியும் ஒன்று.***

*கல்வெட்டுக்களில் "தத்தா நமரே காண் என்ற மிலாடுடையார் திருமேனி"யென்றே குறிப்பிடப்பட்டுள்ளது.*

உன்னிடம் வெறுப்புக் கொள்வது என் சிந்தனைக்குத் தகாது. உன் அம்புகள் வரட்டும் - நான் ஏற்றுக்கொள்ளச் சித்தமாகிவிட்டேன் !

நமச்சிவாயம்.

அந்த தேசத்திலிருந்து பல ஆயிரம் காத தூரம் தள்ளி அமைந்திருந்த மலைநாட்டின் காடுகளில் பரம இரகசியமாக பல நாட்களாக நடத்தப்பட்டு வந்த அந்த அபிச்சாரக ஹோமத்தின் (2) புகை வானளாவ எழுந்தது. வானத்தில் மேகங்கள் சூல்கொண்டன. பிரிந்தன. மீண்டும் கூடின. தட்ஷிண தேசத்தின் இயற்கை வாய்விட்டுச் சொல்லமுடியாத ஒரு தவிப்பிற்கு ஆட்பட்டது. தெய்வாம்சம் பொருந்திய ஒருவனின் உயிருக்கு பலவந்தமாகக் குறிவைக்கப்பட்டதை சூட்சுமமாக அது புரிந்துகொண்டது. செய்வதறியாது வேதனைப்பட்டது. இவரைக் காக்கும் ! என்று இறையைத் தொழுதது. அழுதது.

வானிலிருந்து வைரச் சாரல்கள் மண்ணில் நீர்த்துளிகளாக வந்து விழுந்தன.

*(2) எதிரிகளை அழிப்பதற்காகவே புரியப்படும் ஒருவகை வேள்வி.*

*********************************************************************************************

*******

அம்பலவாணர் கிளையூர் வைத்தியர் வீட்டிலிருந்து புறப்பட்ட மூன்றாவது நாழிகையில் திருக்கற்றளி வளாகத்தை அடைந்தார். கோட்டை வாயிலிலிருந்து பல நூறு வண்டிகள் திருக்கற்றளி வளாகமிருக்கும் திசையில் சென்றுகொண்டிருந்ததால் அவற்றில் பாட்டனும் பேத்தியுமாக விரைவில் வந்து சேர்வது எளிதாகவே இருந்தது. செங்கமலம் முதலில் கொஞ்சம் சுணக்கமாக இருந்தாலும் நேரம் செல்லச் செல்ல மிகுந்த உற்சாகமாகிவிட்டாள் ! தஞ்சை நகரின் நெருக்கமான ஜன சந்தடியும் விதவிதமான அங்காடிகளும் சதயத் திருநாளுக்காக அமைக்கப்பட்டிருந்த தோரணங்களும் மலர் அலங்காரங்களும் வண்ணக் கோலங்களும் அவளை முழுவதும் வசீகரித்துவிட்டன. அவள் சேர்ந்தார்போல் ஒரு நாழிகை நேரம் கேள்விக்கணைகளை தொடுக்காமல் இருந்ததைப் பார்த்து அம்பலவாணருக்கே ஆச்சரியமாக இருந்தது. "பாவம் குழந்தை ! எப்படி ஏங்கிப்போய் வேடிக்கை பார்க்கிறாள் ! மடையன் நான் - முன்பே தஞ்சைக்குள் இவளைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கவேண்டும் !" என்று எண்ணமிட்டார்.

தனக்கு இன்னமும் இன்னதான் வேடம் என்று அரிகண்டன் சொல்லாதது அவருக்கு சற்று வருத்தம்தான் ! வசனம் ஒன்றும் பெரிதில்லை - என்றாலும் மேடையில் நிற்கும் அந்த சில நிமிடங்களில் தொண்டை கட்டிக்கொண்டு குரல் சிரமப்படாமலிருக்க வேண்டும். "வெற்றிவேல் ! வீரவேல் !" என்று மனதிற்குள் பலமுறை சொல்லிக்கொண்டார். இருக்கட்டும் ! சரியாக வேடம் கட்டிக்கொண்டபிறகு நாடகக் கொட்டகையின் ஒரு ஓரமாகச் சென்று இதே வசனத்தை நான்கைந்து முறை வாய்விட்டு முழங்கி ஒத்திகை பார்த்துவிடலாம்.

அதோ - சிவகங்கைக் குளத்தையொட்டி வளாகம் காணப்படுகிறது. சிவப்பு வண்ண மெய்ப்பை உடுத்தி நிறைய பேர் தெரிகிறார்களே - மெய்க்காவல் வீரர்களா என்ன ? மாலையில்தானே சக்ரவர்த்திகள் வருவதாகச் சொன்னார்கள் ? இப்போதிலிருந்து இவர்களுக்கு என்ன வேலை ? சிற்ப வேலைகள் ஒருபுறம் தடைபடாமல் நடந்துகொண்டுதான் இருக்கின்றன போலும் - கல்லுளியின் சப்தம் கேட்கிறது. ஆனால் கற்றளி வளாகத்திற்குள் கூடுதல் பாதுகாவல் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன - காலையில்கூட இத்தனை பேரைக் காணவில்லையே ! எல்லாம் மழபாடியாரின் ஏற்பாடுபோலும். அப்படியென்றால் - இன்னமும் சதிபற்றிய உண்மைகள் தெளிவாக்கப்படவில்லையென்றா அர்த்தம் ? ஒருமுறை அவரைச் சந்தித்து நமது துரத்தல் விவகாரத்தைச் சொல்லிவிட்டால் நன்றாக இருக்கும் - யார் கண்டது ! அந்தத் தகவல் அவருக்கு ஏதாவது ஒரு வகையில் உபயோகப்படவும் கூடும். அரசரும் மற்ற பிரதானிகளும் சூழ்திருக்கும் வேளையில் அவரை நெருங்குவது சாத்தியமா என்ன ? பார்ப்போம் - இருக்கவே இருக்கிறது அவரது முத்திரை மோதிரம்.

கற்றளியின் மேற்கு வாயிலையொட்டி அமைந்திருந்த நீண்ட பூந்தோட்டத்தின் அருகில் அம்பலவாணரும் செங்கமலமும் இறங்கிக்கொண்டனர்.

"இது என்ன இடம் தாத்தா ?" என்று புறப்பட்டதிலிருந்து ஒன்றும் பேசாமலிருந்த செங்கமலம் திருவாய் மலர்ந்தாள்.

"நமது பேரரசர் மிகப் பிரம்மாண்டமான திருக்கற்றளியொன்றைக் கட்டிக்கொண்டிருக்கிறாரம்மா ! அந்த வளாகம்தான் இது - அதோ !

உளியில் கல்பொளிக்கும் ஓசை கேட்கிறதல்லவா ? கல் தச்சர்கள் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள் பார்...."

"திருக்கற்றளி என்றால் என்ன தாத்தா ? அதை ஏன் அரசர் கட்டவேண்டும் ?"

ஆயிற்று. இப்படியே ஆரம்பித்தால் செங்கமலத்தின் கேள்விக்கணைகளுக்கு ஓய்வே இருக்காது. இவளுக்கு பதில்சொல்லும் பொறுமை தற்போது நமக்கில்லை. நமக்கு வேலையிருக்கிறது.

"குழந்தை ! தாத்தாவுக்கு இனிமேல் நிறைய வேலையிருக்கிறது ! அதனால் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுக்கொண்டிருக்கக்கூடாது ! பேசாமல் என்னுடன் இருந்து வேடிக்கை பார்த்தபடி வரவேண்டும் - சரியா ?"

"சரி தாத்தா !" என்றாள் செங்கமலம். அவளுடைய முகம் சுருங்கிவிட்டது.

மேற்கு வாயிலில் அப்போதிருந்தே கூட்டம் காணப்பட்டது. அரசர் நுழைவதற்கு இன்னும் ஒரு ஜாம நேரத்திற்குமேல் இருந்தாலும் முன்னரே வந்து இடம்பிடித்தால்தான் அணுக்கமாக அவரைக் காணமுடியும் என்பதால் சேர்ந்த கூட்டம் அது. அவர்களில் முன்னால் இடம் பிடித்திருந்த ஒருசிலர் அரசர் மேற்கு வாயில் பக்கம் வராமல் கிழக்கு வாயில் வழியாக வளாகத்திற்குள் நுழைந்துவிட்டால் என்ன செய்வது என்பதைப் பற்றி கவலையுடன் பேசிக்கொண்டனர். "கிழக்கு வாயில் வழியாக வந்தால் வந்துகொள்ளட்டுமே ! இதோ - வேலி வழியாக சற்றே எட்டி நிமிர்ந்து பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் !" என்று வேறு சிலர் அவர்களுக்கு ஆறுதலும் கூறினார்கள். பதவிந்யாசம்(3) முடிந்து

கோதானமும் ஆகிவிட்டதால் அஸ்திவாரங்கள் ஆங்காங்கே தோண்டப்பட்டிருக்க அந்த மொத்தக் கற்றளியின் நீள அகலங்களைப் பற்றி சோழ தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் கூடியிருந்த மக்கள் ஆச்சரியத்துடன் பேசிக் கொண்டார்கள்.

*(3) கோயில் கட்டப்படும் முன்பு செய்யப்படும் ஒருவகையான வாஸ்து மண்டல பூஜை*

இன்னொரு சாராரை வேறு கவலை வாட்டியது. அவர்கள் நின்றிருந்த இடத்திலிருந்து நாடக மேடையை நோக்கினால் நாடக மேடையின் பின்புறம்தான் தெரிந்தது ! அரசரை அணுகிப் பார்க்க இடம்பிடிக்கப்போய் கடைசியில் நாடகம் பார்க்க முடியாமல் போய்விடுமே... குறைந்தபட்சம் தெற்கு வாயில் பக்கமாகவாவது போய் நின்றுகொள்ள வேண்டும் ! ஓரமாக நின்றாவது நாடகத்தைப் பார்க்கலாம். அரசர் கற்றளிக்குள் நுழைந்த சில நிமிடங்களிலேயே அந்தப் பக்கமாகக் கிளம்பிவிட வேண்டியதுதான். ஆனால் இப்போதிலிருந்தே அந்த இடத்திலும் கூட்டம் சேர ஆரம்பித்திருப்பதுதான் கவலையைக் கொடுக்கிறது..

கும்பலை விலக்கிக்கொண்டு வாயிலில் காவல் நிறைந்திருந்த பகுதியை அணுகி மழபாடியாரின் முத்திரை மோதிரத்தைக் காட்டினார் அம்பலவாணர். காவல் வீரர்கள் அந்த மோதிரத்தால் அதிகம் மசிந்ததாகத் தெரியவில்லை.

"நீங்கள் யார் ஐயா ? எதற்காக திருக்கற்றளி வளாகத்துக்குள் சென்றுகொண்டிருக்கிறீகள் ?"

"நான் ஆச்சாரியாரின் நாடகக் குழுவைச் சேர்ந்தவன் ! மாலையில் நடக்கும் நாடகத்தில் நானும் வேடம் கட்டுகிறேன் - அதற்காகத்தான்..."

"ஓ ! நாடகக் குழுவா ? அவர்கள் இன்னும் வந்து சேரவில்லை ஐயா ! அவர்களுக்கு வடக்கு வாயிலுக்கருகே தனியாக குடிசை போடப்பட்டிருக்கிறது. அங்கே சென்று அவர்களோடு சேர்ந்துகொள்ளுங்கள் ! நாடக கோஷ்டியார் உங்களையும் தங்கள் குழுவில் ஒருவர் என்று சேர்த்துக்கொண்டு உள்ளே நுழைந்தாகவேண்டும் - தனியாக வேறு எவரும் உள்ளே நுழைய அனுமதி மறுக்கப்படுகிறது ! அதுசரி - இந்த முத்திரை மோதிரம் உங்களுக்கு ஏது ?"

அவன் சந்தேகக் கண்களுடன் தன்னை விசாரிப்பதை அம்பலவாணர் புரிந்துகொண்டார். சரிதான் ! கடுமையான காவல் போலிருக்கிறது ! இன்றைக்கு இருக்கும் நிலைமையில் இத்தனை கடுமை தேவைதான் - அசம்பாவிதமாக ஏதாவது நடக்காமலிருக்க வேண்டுமே ! நாடக கோஷ்டியார் இன்னமும் வந்து சேரவில்லையா ? இந்நேரத்திற்கு வேடக்கட்டு ஆரம்பமாகியிருக்க வேண்டுமே ! என்ன தாமதமோ தெரியவில்லை. வடக்கு வாயிலுக்கருகில் சென்று காத்திருக்க வேண்டியதுதான்.

சிவப்பு வண்ண மெய்ப்பை உடுத்திய அரசரின் திருமெய்க்காப்புப்படை விரர்களையே தைரியமாக அணுகிப் பேசிவிட்டுத் திரும்பும் அம்பலவாணரை கும்பல் சற்று மரியாதையுடனே நோக்கியது.

தம் இல்லத்திலிருந்து திருக்கற்றளி வளாகத்திற்குப் புறப்படத் திட்டமிட்டு வைத்திருந்த நேரத்திலிருந்து ஏறக்குறைய இரண்டு நாழிகைகளுக்கும் மேலான தாமசம் ஏற்பட்டுவிடவே திருவாலன் திருமுதுகுன்றனான விசயராஜ ஆச்சாரியார் பெரும் கடுகடுப்பில் இருந்தார். அவரைக் கடந்து செல்லும் அனைவருமே அவருடைய வசைமொழிகளுக்கும் அர்ச்சனைகளுக்கும் இலக்கானார்கள். சிலர் அவரது முக தரிசனத்தைத் தவிர்ப்பதற்காக புழக்கடை வழியாக வீட்டைச் சுற்றிக்கொண்டு வாயிலை அடைந்தார்கள்.

கூத்தப் பெருமக்களின் இலட்சணம் ஆச்சாரியாருக்கு அத்துப்படியாகத் தெரிந்ததனால்தான் புறப்படவேண்டிய நேரத்தை முன்னெச்சரிக்கையாக ஒரு ஜாம நேரம் முன்கூட்டி வைத்திருந்தார். அந்த ஒரு ஜாம நேரத்தில் - இதோ ! இரண்டு நாழிகைகள் இரண்டு நொடிபோல் கழிந்துவிட்டன... குழு இன்னமும் கிளம்பியபாடில்லை ! "அடடா ! மூன்றாவது காட்சிக்கு வேண்டிய திரைச்சீலையை மறந்துவிட்டேனே !" என்று ஒருவன் பின்கட்டுக்கு ஓட மற்றொருவன் "கிளம்பும் நேரம் என்னவோ தாகமாகவே இருந்கிறது - ஒரு செம்பு நீரருந்திவிட்டு நொடியில் வந்துவிடுகிறேன்" என்று உக்கிராண அறைப்பக்கம் மறைந்தான்.

வாயில் பக்கம் நாடகத்திற்கு வேண்டிய சாமான்கள் பெரிய மாட்டு வண்டிகளில் ஏற்றப்பட்டு தயாராக இருந்தன. வண்டிகளின் பின்புறம் தொங்கிக்கொண்டு செல்வதற்காக சில சிறுவர்கள் வேறு காத்துக்கொண்டிருந்தார்கள் ! அவர்களில் ஒருசிலர் அமைதியாக நிற்க முடியாமல் மாடுகளைத் தொந்தரவு செய்யவே மாட்டுவண்டிக்காரர்கள்

தார்க்குச்சிகளால் அந்த சிறுவர்களை மிரட்டிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு வழியாக ஆச்சாரியாரின் தொந்தரவு பொறுக்க முடியாமல் அந்தக் குழு கிளம்பியது. குழுவின் ஒருவனாக நின்றிருந்த அரிகண்டதேவனுக்கு மனது ஒரு நிலையில் இல்லை. சீருடையாளும் மற்ற தளிச்சேரிப் பெண்டுகளையும் காலையிலிருந்தே ஆச்சாரியார் வீட்டுப் பக்கம் காணவில்லை. நம்மையெல்லாம் ஓட ஓட விரட்டும் ஆச்சாரியார் அவர்களுக்கு மட்டும் எத்தனை இடம் கொடுத்து வைத்திருக்கிறார் என்று கூத்தப் பெருமக்களிடம் புலம்பித் தீர்த்தான்.

அவர்களின் மறுமொழியோ வேறுவிதமாக இருந்தது ! ஆச்சாரியாருக்கு நேற்றைய ஒத்திகையில் தளிச்சேரிப் பெண்டுகளின் நாட்டியம் பரம திருப்தியளித்ததாம். அவர்களை தயார் செய்த திருவாரூர் தலைக்கோலியை புகழ்ந்து தள்ளிவிட்டாராம். குழு நடிகர்கள் சிலரின் நடிப்பில்தான் அவருக்கு அவ்வளவாக திருப்தியில்லையாம். "புதிதாக வந்திருப்பவர்கள்கூடப் பரவாயில்லை ! வழக்கமாக நடிக்கும் கழுதைகள்தான் சண்டித்தனம் செய்கின்றன !" என்ற விமர்சனத்தில் அரிகண்டனுக்கே சிறிது திருப்திதான். அவன் புதிதாக சேர்ந்திருப்பவர்கள் பட்டியலிலல்லவா வருகிறான் ? ஆக ஆச்சாரியாருக்குத் தன் நடிப்பில் பெரிய திருப்தி ஏற்படாவிட்டாலும் அதிருப்தி ஏற்படாதவரை சரி. சீருடையாளையும் ஒரு பக்கம் கைக்குள் போட்டுக்கொண்டு வரப்போகும் நாடகங்களில் படிப்படியாக முன்னுக்கு வந்துவிடலாம் என்று எண்ணமிட்டது அவன் மனம்.

ஆசானைக் காணவில்லை. நல்லவேளை... சிறு வேடத்தோடு அவரை விட்டோம் - முக்கிய வேடம் கொடுத்திருந்தால் நமது பாடு

சிக்கலாகியிருக்கும்... நேற்று முழுவதும் ஆசான் ஆச்சாரியாரிடம் முகத்தைக் காண்பிக்கவேயில்லை. இன்றும் ஒருவேளை நேராக கற்றளி வளாகத்திற்கே வந்து சேர்ந்துகொள்கிறாரோ என்னவோ...

நேற்று ஒத்திகையின்போது நடந்ததைப்போல் கடைசி நேரத்தில் போனால் போகிறதென்று அரிதாரத்தை அரைகுறையாகப் பூசிக்கொண்டு நிற்கக்கூடாது. ஒப்பனைக் கலைஞர்களை தனியே கண்டு பேசி அவர்களில் எவனுக்காவது ஆசை வார்த்தைகள் காண்பித்து தன்னுடைய வேட அலங்காரத்தை முன்பே முடித்துக்கொண்டு விடவேண்டும். முக்கிய நடிகர்கள் ஏசத்தான் செய்வார்கள் - ஏசிவிட்டுப் போகட்டும் ! நமது வாழ்க்கையேயல்லவா இந்தக் கூத்தில் அடங்கியிருக்கிறது ! இந்தக் கூத்து நல்லபடியாக முடிந்து நமக்கும் நல்ல பெயர் கிடைத்தால்தான் சீருடையாளை தைரியமாக அணுகலாம். அவளைத் திருமணம் செய்து கொள்வதைப் பற்றி தந்தையிடமும் துணிவுடன் பேசலாம்... ஆசானின் ஆதரவும் தனக்கு இருக்கும்.

நான்கு பேருக்கு மத்தியில் பிழைக்கத் தெரிந்த பிள்ளையென்று பேரெடுத்து விட்டால் தந்தை நம்மை ஏன் வசைமாறி பொழிகிறார் ?

ஆக எப்படிப் பார்த்தாலும் நாடகம் நல்ல முறையில் நடைபெற்று அதில் மன்மதனாக நடித்தவன் சிறப்பாக சிலாகிக்கும்படி செய்யவேண்டும். அதிருஷ்டவசமாக தளிச்சேரிப் பெண்டுகள் தோன்றும் முக்கியமான காட்சியில் ஒரு நடிகனாக நாமும் இடம்பெறுகிறோம். யார் கண்டது ! இந்த நாடகத்தை பேரரசரேயல்லவா முன் வரிசையில் நின்று காணப் போகிறார் ! நல்லபடியாக நடந்து முடிந்தால் அவருடைய ஆதரவும் தனக்குக் கிடைத்து.....

கற்றளி வளாகத்தை நெருங்கும்போது அரிகண்டனின் மனக்கோட்டை "இஞ்சி சூழ் தஞ்சையின்"(1) கோட்டை மதிலைப் போல் விரிந்து படர்ந்துவிட்டது !

*(1) கருவூர்த் தேவரின் திருவிசைப்பா. இஞ்சி என்றால் கோட்டை/மதில் என்றும் ஒரு பொருள்*

******************************************************************************************
*******

அந்தப் பெரிய இரதம் தஞ்சையின் தெருக்களில் தேவலோகத்து ஹம்ச இரதம் வானத்தில் மிதந்து செல்வதைப்போல் சென்றுகொண்டிருந்தது. தஞ்சையின் பெருந்தச்சர்கள் அரசருக்கான இரதம் என்று பார்த்துப் பார்த்து அங்குலம் அங்குலமாக இழைத்து அதனைச் செய்து முடித்திருந்தார்கள். இரதத்தின் அருமை பெருமைகள் ஒரு பக்கம் இருக்கட்டும் - அதனை இரதசாரதியின் இருக்கையில் அமர்ந்து திறமையாக ஓட்டிச்சென்ற மழபாடியாரைச் சொல்லவேண்டும் ! அவருடைய கைலாவகம் லேசான அசைவுகளாக கடிவாளங்களின் வழி புரவிகளுக்குத் தெரியப்படுத்தப்பட, குண்டு குழிகளற்ற தஞ்சையின் தெருக்களில் அவற்றின் பாதங்கள் அனாயசமாகப் பறந்தன. இந்த அற்புதக் காட்சியைக் கண்டு இரசித்துக்கொண்டிருந்த தஞ்சை மாநகரின் பொதுமக்களில் பலருக்கு அந்தக் குதிரைகளுக்கு இருபுறமும் சிறகுகள் முளைத்திருப்பன போலவும் அவை கந்தர்வ தேசத்துப் புரவிகள்

போலவும் தோன்றியதில் அதிக வியப்பில்லையல்லவா ?

முன்பே செய்து வைத்திருந்த ஏற்பாட்டின்படி இரதத்திற்கு இருபதுகோல் இடைவெளியில் நான்கு மெய்க்காவலர்கள் தங்கள் புரவிகளை சீராகச் செலுத்திக்கொண்டிருந்தார்கள். அவர்கள் நால்வருமே பேரரசரின் மெய்க்காவலுக்காக திருமெய்க்காப்புப் படைத் தலைவர் ஆட்கொண்ட வில்லியாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட வில்லிகள் ஆவர்.

திருமெய்க்காப்புப் படையென்பது சோழ சைன்யத்தின் அந்தளகப் படை, வில்லிகள் படை, ஆனையாட்கள் படை, குதிரையாட்கள் படை என்று பல்வேறு படைகளிலிருந்தும் பொறுக்கியெடுக்கப்பட்ட வீரர்களைக் கொண்டதாகும். அதனால் திருமெய்க்காப்புப் படையானது பல்வேறு விதமான திறமைமிக்க வீரர்களைக் கொண்ட படையாக விளங்கியது, புரவியில் சென்றுகொண்டிருந்த நால்வருமே முன்பு பண்டித தெரிஞ்ச சோழ வில்லிகள் படையில்(2) பணியாற்றிய வீரர்களாவர். அதற்குச் சான்று பகர்வதுபோல் அவர்கள் நால்வரின் தோள்களிலும் வில்லிகள் படையினர் மட்டும் உபயோகிக்கும் பிரத்யேக சிறுவில்லும் அம்பறாத்துணியும் காணப்பட்டன. முன்பு மழபாடியாரின் கைகளில் இதே வகையான வில் அம்புகளைப் பார்த்திருப்பதால்(2) இவற்றை நாம் எளிதில் அடையாளம் கண்டுகொள்கிறோம்.

*(2) பார்க்க இராஜகேசரி - அத்தியாயம் 25*

அந்த நால்வரின் முகங்களும் சொல்லி வைத்ததைப் போல உணர்ச்சிகள் எதுவுமற்று இறுகிக் கிடந்தன. அவர்களின் கழுகுப் பார்வை கூட்டத்தினரைக் கிழித்துக்கொண்டு அங்குமிங்கும் அலைபாய்ந்தன.

மெய்க்காவல் படையில் பல நாட்கள் பயிற்சி பெற்ற கண்களாதலால் அவை அரை வினாடிக்கும் குறைவான நேரத்தில் தம் கண்முன் விரியும் காட்சியை உள்வாங்கிக் கொண்டன. அடுத்த அரைவிநாடி நேரத்தில் கண்ட காட்சியில் ஆபத்து ஏதேனும் தெரிகிறதா என்பது அலசப்பட்டது. நால்வரும் வெவ்வேறு திசைகளில் தத்தம் கவனத்தை செலுத்தியிருப்பதையும் காண்கிறோம். எத்தனை விரைவாகப் புரவிகள் சென்றாலும் அந்தக் கண்கள் எந்த சாளரத்தையும் பலகணியையும் விட்டுவைக்கவில்லை.

மழபாடியார் கருமமே கண்ணாக இரதத்தை ஓட்டுவதில் கவனம் முழுவதையும் செலுத்தியிருந்தாலும் தனக்கு முன்னால் நடப்பதைக் கண்களாலும் இரு பக்கங்கள் மற்றும் பின்புறம் நடப்பதை தன் உள்ளுணர்வினாலும் கூர்மையாகக் கவனித்தபடி வந்தார். அசாதாரணமாகத் தெரிந்த சிறு அசைவுகூட அவரால் கணநேரத்தில் கண்டுபிடிக்கப்பட்டது - கண்காணிக்கப்பட்டது.

இவர்களையும் தவிர அரசரைச் சுற்றி நான்கு கவசமணிந்த மெய்க்காவலர்கள் திசைக்கொருவராக இரதத்தின் நான்கு பக்கங்களிலும் மண்டியிட்டு அமர்ந்து பயணம் செய்துகொண்டிருந்தனர். அவர்களின் கைகளிலும் விதவிதமான ஆயுதங்கள் பிரயோக நிலையில் தயாராக இருந்தன.

வேகமாகச் செல்லும் இரதத்தில் மெய்க்காவல் வீரர்கள் புடைசூழச் செல்லும் சக்ரவர்த்திகளை வீதியோரங்களில் திரள் திரளாகத் திரண்டிருந்த பொதுமக்கள் ஒருவராலும் சரியாகப் பார்க்க முடியவில்லை. பல நாழிகை நேரமாகக் காத்திருந்துவிட்டு இப்படி வினாடிக்கும் குறைவான நேரமே

அரசரின் தரிசனம் கிடைத்ததால் பலரும் பெருமூச்சோடு கலைந்தார்கள். சிலர் வாய்விட்டே தங்கள் அதிருப்தியைத் தெரிவித்துக்கொண்டார்கள். இளவட்டங்கள் அரசரின் இரதம் கடந்துசென்றவுடனே திருக்கற்றளி வளாகத்தை நோக்கிக் கிளம்பினார்கள். அவர்களில் சிலர் சிவகங்கைக் குளத்திற்கருகில் உள்ள மரங்களின் மீதேறி அமர்ந்துகொண்டுவிட்டால் அரசர் இராஜகஜத்தில் நிதானமாக திருக்கற்றளி வளாகத்தை அடையும் காட்சியை கண்ணாறக் கண்டு களிக்கலாம் என்று பேசிக்கொள்வதும் நமது காதில் வந்து விழுகிறது.

இரதத்தில் அமைதியே உருவாக கைகளை குறுக்கே கட்டி நின்றிருந்தார் உடையார் இராஜராஜசோழர். திரளான மக்கள் கூட்டம் தென்படும் சில கணங்களில் அவரது கரங்கள் அஞ்சலி ஹஸ்தத்தில் கூம்பிக் கொள்வதைக் காண்கிறோம். இரதத்தின் வேகத்தால் அவருடைய முகபாவங்களை மக்களைப் போலவே நம்மாலும் சரிவர கவனிக்க முடியவில்லை.

அந்த இராஜரதம் தஞ்சையின் நீள அகலங்களை அளந்து கொண்டு விரிந்து பரந்த விச்சாதரப் பெருவீதியைக் கடந்து ஆனையாட்கள்(3) தெரு என்றழைக்கப்பட்ட தெருவில் நுழைந்தது. அங்கு பரம்பரை பரம்பரையாக சோழப் படைகளில் யானைகளைப் பராமரித்த ஆனையாட்கள் எனப்படும் வேளங்களின் குடும்பங்கள் வசித்தன. அந்தத் தெருவில் இரதம் நுழைந்ததும் ஆஹாகாரங்களும் பலமாக எழுந்தன. ஆனையாட்கள் வீட்டுக் குழந்தைகள் யானைகள் எழுப்பும் பிரத்யேக ஹூங்காரங்களை எழுப்பி தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். பிறிதொரு சமயமாக இருந்தால் இரதம் அங்கு நிச்சயம் நின்றிருக்கும். ஆனால் இன்றைய சூழ்நிலையால் இரதம் நிறுத்தப்படாமல் மேலே செல்லவே ஆனையாட்கள் வீட்டுப் பெண்களின் முகத்தில் சிறிது அதிருப்தி

பரவியது.

***(3) கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ள தஞ்சையின் தெருவீதிகளில் ஒன்று. யானை என்பது ஆனை என்றே அக்காலகட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. கஜசம்ஹாரர் "ஆனை உரிச்ச தேவர்" என்று குறிப்பிடப்படுகிறார்.***

ஆனையாட்கள் தெருமுனையில் அரிகுல கேசரிப் பேரங்காடியும் அதனையொட்டிய பெருந்தெருவும் புலப்பட்டன. அவற்றைக் கடந்துவிட்டால் தளிச்சேரியின் வடசிறகு தென்பட்டுவிடும் - சில காத தூரத்திலேயே தளிக்குளத்தார் ஆலயம்.

"தெய்வமே ! ஒன்றும் நிகழ்ந்துவிடக்கூடாது !" என்று மனதால் வேண்டியபடியே இரதத்தை செலுத்திக் கொண்டு சென்றார் பரமன் மழபாடியார்.

*****************************************************************************************
*******

*"அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற்றுள்ளார்*
*ஆரூரார் பேரூரார் அழுந்தூருள்ளார்*
***தஞ்சைத் தளிக்குளத்தார்*** *தக்களூரார்*
*சாந்தை அயவந்தி தங்கினார்தாம்*
*நஞ்சைத் தமக்கமுதாவுண்ட நம்பர்*

*நாகேச்சரத்துள்ளார் நாரையூரார்*
*வெஞ்சொற் சமண்சிறையி லென்னை மீட்டார்*
*வீழிமலையே மேவினாரே"*

என்று அப்பர் பெருமானால் திருவீழிமலை அடைவுத்தாண்டகத்தில் வைப்புத்தலமாகக் குறிக்கப்பட்ட பெருமைபெற்ற பழம்பெரும் பதியான தஞ்சை தளிக்குளத்தார் ஆலயம் தஞ்சைவாழ் பெருமக்களின் வாழ்வில் தவிர்க்கமுடியாததொரு அங்கமாகவே அந்நாளில் திகழ்ந்தது. அழகிய குளிர்ந்த தாமரைக் குளத்திற்கு நடுவில் அமைந்த ஆலயமாதலால் "தளிக்குளம்"(4) என்று அழைக்கப்பட்ட அத்தலத்தில் உறைந்த தாமரைக் குளத்து மகாதேவர்(5) பன்னெடுங்காலமாக அங்கே லிங்க உருவில் குடியிருந்து தஞ்சை வாழ் பெருமக்களின் குறைபோக்கி வந்தார் (6).

***(4) தளிக்குளத்தார் என்றால் குளிர்ந்த நீருக்கு நடுவில் உறைபவர் என்று பொருள். தாமரைகள் நிறைந்த குளம் எப்போதும் குளிர்ச்சியாகவே இருக்கும்.***
***(5) சுந்தரச் சோழர் கல்வெட்டொன்று தளிக்குளத்தாரை தாமரைக் குளத்து மகாதேவர் என்றே அழைக்கிறது. பார்க்க குடந்தை சேதுராமனின் ஆய்வுக் கட்டுரைகள் தொகுதி 1, பக்கம் 259***
***(6) தளிக்குளத்தார் ஆலயத்தையே இராஜராஜர் பெரிய கோயிலாக மாற்றியமைத்தார் என்னும் சதாசிவப் பண்டாரத்தார் கூற்று (பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி - 1) தவறான தரவாகும். பெரிய கோயில் கட்டி முடித்து பல காலமான பின்னரும் தளிக்குளத்தார் ஆலயம் வழிபாட்டில் இருந்துள்ளது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன.பார்க்க குடந்தை சேதுராமனின் ஆய்வுக் கட்டுரைகள் தொகுதி 1, பக்கம் 259.***

அப்பர் பெருமான் காலத்தில் மிகச் சிறிய செங்கல் தளியாகத் திகழ்ந்த அத்திருக்கோயில் பிற்காலச் சோழர்களின் ஆதரிப்பில் கற்றளியாகி பற்பல நிவந்தங்களைப் பெற்று இராஜராஜரின் தகப்பனாரான சுந்தரச் சோழர் காலத்தில் சோழ மண்டலம் முழுவதும் அறியப்பெற்ற தளியாக விளங்கிப் பெருமையுற்றது. இராஜராஜரும் அத்தல வழிபாட்டிற்காக உவச்சக் காணிகளையும் நிருத்த போகங்களையும் தளிப்பெண்டுகளையும் வழங்கி மகாதேவர் முக்காலமும் இசைத்தமிழையும் ஆடல் பாடல்களையும் அனுபவிக்க வகைசெய்து கொடுத்திருந்தார். சோழமன்னர்களின் நித்திய பூஜை மற்றும் வழிபாட்டு ஆராதனைகளையும் பெற்று மகிழ்ந்து ஆசி வழங்கும் கடவுளாகவும் தளிக்குளத்தார் திகழ்ந்தார்.

இத்தனை பெருமைகளையும் ஒருசேரப் பெற்ற தளிக்குளத்து மகாதேவர் ஆலயத்தில் சாதாரண நாட்களிலேயே ஓரளவுக்கு நடமாட்டம் மிகுதியாக இருக்கும். மாதாந்திரப் பிரதோஷ காலங்கள் மற்றும் சிவராத்திரி காலங்களிலோ வாய்விட்டுச் சொல்லமுடியாத எண்ணிக்கையில் கூட்டம் சேர்ந்துவிடும்.. அதிலும் ஐப்பசி சதய நாள் என்றால் கேட்கவே வேண்டாம் ! தளிக்குளத்து ஆலயம் அமைந்துள்ள தாமரைக் குளத்தெரு முழுவதுமே மக்கள் தலைகள்தான் தெரியும். தஞ்சை நகரில் குடிகொண்டுள்ள பல்வேறு தரப்பினரையும் தவிர சக்ரவர்த்திகளின் பிறந்தநாள் விழாவிற்காக சோழமண்டலமெங்கிலுமிருந்து தஞ்சைக்கு வந்திருக்கும் பற்பல கூற்றத்துப் பெருமக்களும் தளிக்குள ஆலயத்தை தரிசிக்காமல் வரமாட்டார்களாதலால் வழக்கமான தலைகளும் புதிய தலைகளுமாக ஒரு மானுட சமுத்திரமே அந்தத் தெருவை அடைத்துக்கொண்டு காணப்பட்டது.

பேரரசர் வருகைபுரியும் நேரம் நெருங்கிவிட்டதால் ஆலயத்தின் மஹா மண்டபத்தில் கூடியிருந்த மூலப்பருடையாரும் மற்ற ஆலயத்துப் பரிவாரங்களும் பட்டர்களும் பிடாரர்களும் வாத்திய மாராயர்களும் பரபரப்போடு காணப்பட்டார்கள். ஆலயத்திற்கென்று நிவந்திக்கப்பட்ட கவரிப் பிணாக்கள் (6) ஆலயத்தின் பகுதிகளை பல்வேறு மலர் அலங்காரங்கள் கொண்டு அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள் - அரசர் வாயிலில் நுழையும் வரைகூட இவர்களின் அலங்காரங்கள் முடியாது என்று எவரோ அவர்களை வசைபொழிவதையும் கேட்க முடிகிறது.

*(6) இறைவனுக்கு கவரிவீசும் பெண்டிர்*

தளிக்குளத்து ஆலயம் பற்பல பெருமைகள் பெற்ற ஆலயமாக இருந்தாலம் அளவில் சிறிய ஆலயமாகவே இருந்ததால் அரசர் வரும் போது நெருக்கடி ஏற்படக்கூடாது என்பதற்காக பொதுமக்கள் அனைவருக்கும் கடந்த ஒரு நாழிகை நேரமாக அனுமதி மறுக்கப்பட்டு வந்தது. அதனால் ஆலயத்தின் வாயிலில் கூடியிருந்த பொருமக்கள் முகத்தில் அதிருப்தி பரவியிருக்கக் காண்கிறோம். அந்த அதிருப்தியையும் மீறி அரச தரிசனம் கிடைக்கும் ஆவல் அவர்களது முகத்தில் தெரிந்தது.

தாமரைக் குளத்து மகாதேவர் தங்க நாகாபரணமும் பற்பல ஆரங்களும் முத்துக்களும் மாலைகளையும் சாற்றிக்கொண்டு திவ்ய அலங்கார பூஷிதராக திரைக்குப்பின் காட்சியளித்துக்கொண்டிருந்தார். அலங்கார வேலைப்பாடுகள் முழுவதுமாக முடிந்துவிட்டாலும் கருவரைக்குள் நின்றுகொண்டிருந்த ஆலயத்தின் பிரதான பட்டர் அஸ்திர சிவனார் மாலைகளை சரிசெய்வதும் நாகாபரணத்தை சரிசெய்வதுமாக

இருப்பதிலிருந்து அவரது பரபரப்பு நமக்கு நன்கு விளங்குகிறது.

ஆலயத்தின் பிரகாரத்தின் பல்வேறு பகுதிகளிலும் இடையாடை மட்டும் தரித்த வெற்று மேனியர்களாக திருமெய்க்காப்புப் படை வீரர்களும் ஆங்காங்கே தெரிந்தார்கள். மெய்ப்பை தரிக்காததால் ஆலயத்துப் பரிவார ஆட்களுக்கும் அவர்களுக்கும் அதிகம் வித்தியாசமில்லாமல் இருந்தது. அவர்களில் ஒருசிலர் "திருமெய்க்காப்புப்படை" என்ற முனைப்போடு ஈட்டியைத் தூக்கிக்கொண்டு அங்குமிங்கும் நடைபழகிக்கொண்டிருக்க வேறுசில பக்தி நிறைந்த வீரர்கள் தளிப் பரிவாரமாகவே மாறி நெற்றியில் திருநீறு பூசி பல்வேறு ஆலய வேலைகளிலும் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்கள். குறிப்பாக கத்தி அரிவாள் முதலான சற்றே ஆபத்தான ஆயுதங்களைப் பிரயோகிக்கவேண்டிய வாழை மரம் வெட்டுவது முதலான வேலைகளில் அவர்கள் முனைந்து ஈடுபடுவதைக் காண்கிறோம். அவர்களது முகம் சற்று நட்பாகவே தெரிந்தாலும் ஊன்றிக் கவனித்துப் பார்த்தால் அவர்கள் ஆலயத்துத் தளிப் பரிவாரக்காரர்களில் சந்தேகத்திற்குரிய முகம் ஏதாவது தென்படுகிறதா என்ற அலசுவதைக் கண்டுகொள்ளலாம்.

தாமரைக்குளத் தெருவை சக்ரவர்த்திகளின் இரதம் வேகவேகமாக நெருங்கிக்கொண்டிருந்தது.

## ஆலய தரிசனம்

ஆச்சாரியாரின் நாடகக் குழுவும் அவர்தம் நாடகத்துக்கான பொருட்களைச் சுமந்துகொண்டு வரும் மாட்டு வண்டிகளும் ஆடி

அசைந்துகொண்டு தஞ்சை வட தளிச்சேரியின் தென்சிறகு வீதிகளின் வழியாக கற்றளி வளாகத்தின் வடக்கு வாயிலுக்கு வந்து சேர்ந்தனர். அங்கே அவர்களுக்காக பெரியதொரு குடிசை போடப்பட்டு உதவிக்கு ஆட்களும் நிறுத்தப்பட்டிருந்தனர். அப்படி உதவிக்கு நின்ற ஆட்களில் ஒருவராக அம்பலவாணரும் குழந்தை செங்கமலத்துடன் நின்றுகொண்டிருந்தார்.

வானில் மேகங்கள் சூழ்ந்து சூழ்ந்து கலைந்ததால் புழுக்கம் சற்று அதிகமாகவே தெரிய, அம்பலவாணர் முகத்தில் வியர்வை அரும்பியிருக்கக் காண்கிறோம். நாடகக்குழு அங்கத்தினர்களில் ஒருவராக வந்து சேர்ந்த அரிகண்டனுக்கு அம்பலவாணரைக் கண்டதும் சற்று உற்சாகம் பிறந்தது. சீருடையாளைப் பற்றி மனம் விட்டுப் புலம்புவதற்கு ஒரு தலை அகப்பட்டுள்ளதல்லவா ?

ஆனால் அரிகண்டனின் புலம்பலுக்கெல்லாம் நேரமில்லாமல் குழு வந்து சேர்ந்த மறு விநாடியிலிருந்து ஆச்சாரியார் அனைவரையும் விரட்டத்தொடங்கிவிட்டார். நாடகத்தில் வேடம் தரிப்போர் தத்தம் வேடத்திற்குரிய உடைகளையும் சாமான்களையும் தாங்களாகவே பாதுகாத்து தனியாக எடுத்து வைத்துக்கொள்ளவேண்டும் என்பது குழுவினருக்கு அவர் போட்டிருக்கும் சட்டங்களுள் ஒன்று. அதனால் வண்டிகள் வந்து சேர்ந்த மறுவிநாடியே குழுவின் நடிகர்கள் அதனைச் சூழ்ந்துகொண்டு "இது உன்னுடையதல்ல - அவனுடையது !" " அட, என் உடையை ஏனப்பா எடுக்கிறாய் ?" என்றெல்லாம் கூச்சலிட்டபடி தத்தம் வேடசாமான்களை சேகரிக்கத் தலைப்பட்டனர். இப்படித் தலைக்குத் தலை முண்டியடித்ததால் அங்கே சிறியதொரு சச்சரவு ஆரம்பமானது. ஆச்சாரியார் தலையிட்டபின்தான் அவர்களது வேகம் சற்று குறைந்தது !

குழுவிற்குப் புதியவனான அரிகண்டனுக்கு இதெல்லாம் ஒன்றும் புரியவில்லை ! எதற்காக வேட சாமான்களை எடுப்பதற்கு இத்தனை அவசரமாக அடித்துக்கொள்கிறார்கள் என்று வியந்தான் அவன். சிறிது நேரம் கழிந்தபின்தான் அடடா - இந்தக் களேபரத்தில் எவராவது தவறிப்போய் தன்னுடைய மன்மத வேடத்திற்குரிய உடைகளையோ கரும்பு வில்லையோ எடுத்துக்கொண்டு போய்விட்டால் அதனால் அநேக அனர்த்தங்கள் விளையுமே ! ஆச்சாரியாரின் நூற்றியெட்டு அர்ச்சனைகளுக்கும் ஆளாக வேண்டுமே ! என்ற எண்ணம் எழுந்தது. தவறுதலாக எடுப்பவர்கள்போக தன்னுடைய பெண் சிநேகிதங்களைக் கண்டு பொறாமைகொண்டவர்களில் எவராவது வேண்டுமென்றே நமது சாமான்களை ஒளித்து வைத்துவிட்டாலும் சிக்கல்தான்... இருக்கும் ஓரிரு நாழிகைகளுக்குள் வேடத்தைக் கட்டிக்கொண்டு நாடகத்திற்குத் தயாராவதா அல்லது மூலைக்கு மூலை காணாமல் போன பொருட்களைத் தேடிக்கொண்டிருப்பதா ?

"மகாதேவரே ! என்னுடைய சாமான்களை தவறுதலாகவோ அல்லது வேண்டுமென்றோ ஒருவரும் எடுக்காமலிருக்க வேண்டும் !" என்று வேண்டிக்கொண்டான் அரிகண்டன்.

அந்தோ ! அவன் சுதாரித்துக்கொள்வதற்குள் கூட்டம் பலமாக சேர்ந்துகொண்டுவிட்டதால் சிறிது நேரத்திற்கு ஒன்றும் செய்யமுடியவில்லை. அரை நாழிகை நேரம் கழித்துத்தான் வண்டியையே அவனால் நெருங்க முடிந்தது. அனுமன் அழித்த வனமாகக் காட்சியளித்த வண்டியின் பின்புறத்தில் ஏறக்குறைய குப்பைபோலக் கிடந்த தனது மன்மத உடைகளைப் பார்த்து அவனுக்குக் கண்ணீரே

வந்துவிடும்போலிருந்தது....ஒரு வழியாக தனது உடைகளையும் கரும்பு வில்லையும் சேகரித்துக்கொண்டு மார்பில் இருக்க வேண்டிய ஆரங்களையும் தலைக்கு அணியவேண்டிய சிறு கீரீடத்தையும் தேட ஆரம்பித்தான் அவன். தாமிரம் மற்றும் பித்தளை உலோகங்களில் முலாம் பூசிச் செய்யப்பெற்ற அந்தப் போலி நகைகளை எங்கு தேடியும் காணவில்லை !

எவரோ இரண்டாவது வண்டியில் வரும் நகைப் பெட்டியில் அவையெல்லாம் உள்ளனவென்று சொல்லவே இரண்டாவது வண்டிக்கும் சென்று ஆவலுடன் தேடினால்...ம்ஹூம் ! அவையெல்லாம் பெண்களுக்கான நகைகளாகவே இருந்தன ! தளிப்பெண்டுகளின் பெட்டிபோலும்... விதவிதமாய் எத்தனை எத்தனை நகைகள்... பெண்டுகள் தஞ்சையில் நன்றாகவே கொழிக்கிறார்கள்.... நம்முடைய நகைகளைத்தான் காணவில்லை - நமது வேடம் நாசமாய்ப் போனது மாதிரிதான் !

சிறிது நேர யோசனைக்குப்பின் வேறு வழியில்லாமல் அந்தப் பெட்டியில் கிடந்த நகைகளில் சிறிதளவு பெரியதாகத் தெரிந்த ஒரு ஹாரத்தையும் ஓரிரண்டு முத்து மாலைகளையும் அணிந்துகொண்டான். பாவம் - யாருடைய நகைகளோ இவை ! எவனோ நமது நகைகளில் கையை வைக்கப்போக நாம் வேறொருவர் பொருளில் கைவைக்கும்படி ஆகிவிட்டது. கீரிடத்திற்குத்தான் என்ன செய்வதென்று தெரியவில்லை - அது "மன்மதனுக்காகவே" பிரத்யேகமாகத் தயார் செய்யப்பெற்ற கிரீடமாதலால் எவரும் அதனை அணிந்துகொண்டு மேடையேறவும் முடியாது ! பின் எங்கே சென்று தொலைந்தது ? இதனைத் தேடுவதில் இப்போது ஈடுபட்டால் வேடம் கட்டுவதற்கு நேரமாகி அவசரத்தில் சரியாக வண்ணமடித்துக்கொளளாமல் மேடையேறும் நிலை

ஏற்பட்டுவிடும்... கிரீடம் எக்கேடு கெட்டோ போகிறது - வேண்டுமானால் ஆசானைத் தேடச் சொல்லி விண்ணப்பிக்கலாம் - அவருக்கு வேடம் கட்ட அதிக நேரம் பிடிக்காதே...!

வண்டியை விட்டு வெளியில் வந்து அம்பலவாணரைச் சந்தித்தான் அரிகண்டன்.

"ஆசானே ! இப்போது நடந்த சிறு கலவரத்தில் எவரோ என் வேடத்திற்குரிய நகைகளையும் கீரீடத்தையும் அள்ளிக்கொண்டு போய்விட்டார்கள்... ஆச்சாரியாருக்குத் தெரிந்தால் தொலைத்துக் கட்டிவிடுவார் ! எனக்கோ வேடம் கட்ட நேரமாகிக்கொண்டிருக்கிறது... எனக்குரிய கிரீடத்தையும் ஹாரங்களையும் இந்த வண்டிகளில் சற்று தயவு செய்து தேட முடியுமா ? "

"அட, நீ என்ன வேடங் கட்டுகிறாய் என்றுகூட இன்னும் என்னிடம் சொல்லவில்லையேயப்பா !"

"நேற்று ஒத்திகைக்கு வந்திருந்தீர்களானால் அனைத்தையும் பார்த்திருக்கலாமே... சரி, போகட்டும் ! நான் இன்று மன்மதனாக வேடம் கட்டுகிறேன் - மன்மதன் வழக்கமாக அணிந்துகொள்ளும் சிறு கிரீடங்களை பார்த்திருக்கிறீர்களல்லவா ? அதைப்போல நடுவில் மாணிக்கம்போன்ற சிவப்புக் கல் பதித்த கிரீடமொன்றும் அதற்கு இணையான ஓரிரு ஆரங்களும் தென்படுகின்றனவா என்று பாருங்கள் ! ஆரங்களில் புலிமுகம் மற்றும் அன்ன வரிகள் தெரியும் - சரியா ?"

"என்னால் முடிந்தவரை தேடிப்பார்க்கிறேன் ! அதுசரி - எனக்கு வேடம்

எப்போது கட்டுவார்கள் ?" என்றார் அம்பலவாணர் பரிதாபமாக. அவருக்குத் தாமும் இன்றைய நாடகத்தில் நடிக்கிறோமா என்பதே சந்தேகமாகி விட்டது !

"என்ன ஆசானே அப்படிக் கேட்டு விட்டீர்கள் ! என்னுடைய வேடக் கட்டு முடிந்ததும் ஒப்பனைக் கலைஞனை விட்டுவிடாமல் உங்களுக்கும் சேர்த்து வேடமிடச் சொல்லி விடுகிறேன் - செப்புக் காசுகள் பத்து கிடைத்தால் அவனைக் கைக்குள் போட்டுக்கொள்வது இன்னும் எளிதாக இருக்கும்...."

"செப்புக் காசென்ன - இந்தா ! ஒற்றைக் பொற்கழஞ்சையே வைத்துக்கொள் ! ஒப்பனை நமக்கு நன்றாக அமைந்தால் அதுவே போதும் !"

"ஆஹா ! அள்ளியள்ளிக் கொடுக்கிறீர்கள் ஆசானே - இதனை வைத்துக்கொண்டு பத்து ஒப்பனைக் கலைஞர்களுக்கு பிழி(1)வாங்கிக்கொடுத்து விடலாம் - கவலையை விடுங்கள் !" என்றபடி அகன்றான் அரிகண்டன்.

*(1) மது*

இவர்களுக்கிடையே சம்பாஷணை நடந்துகொண்டிருந்தபோதே ஒரு ஓரமாக நின்றிருந்த செங்கமலத்தை "யாரது குழந்தை !" என்று கொஞ்சியபடியே கூட்டிக்கொண்டு போய்விட்டார் ஆச்சாரியார். குடிசைக்குள் அவருக்கு நடந்துகொண்டிருந்த பால் மற்றும் சிற்றுண்டி மரியாதைகள் அவளுக்கும் கிடைத்தன. உரிமையோடு அவருடைய மடியில் அமர்ந்துகொண்டு ஒப்பனைக் கலைஞர்கள் நாடக நடிகர்களுக்கு

வேடம் கட்டுவதை ஆர்வத்தோடு வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள் செங்கமலம்.

**************************************************************************************
*******

தாமரைக்குளத்து மகாதேவர் ஆலயத்தின் கோபுர வாயிலின் முன்புறம் குழுமியிருந்த பெருங்கூட்டத்தின் காரணமாக சக்ரவர்த்திகளின் இரதம் சிறிது தூரத்திலேயே நிறுத்தப்பட்டது. திருமெய்க்காவல் வீரர்கள் பொதுமக்களை விலக்கி வழி ஏற்படுத்திக்கொடுக்க, அதன் வழியாக சக்ரவர்த்திகள் மேலே போர்த்தியிருந்த பட்டாடை காற்றில் பரபரபக்க கன வேகமாக கோயிலுக்குள் நுழைந்தார். அவரைத் தொடர்ந்து வந்த மழபாடியாரால் அவருடைய வேகத்துக்கு நடக்கவியலாமல் ஒரு சில தப்படிகள் ஓடிவரும்படி ஆயிற்று.

சக்ரவர்த்திகள் கோயிலினுள் நுழைந்தவுடன் சங்கும் காளமும் ஊதப்பெற்றன. "சக்ரவர்த்தி இராஜராஜ சோழர் வாழ்க !" என்ற வாழ்த்தொலிகளும் எழுந்தன. அவர் தனது மேலாடையை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு பட்டர் கொடுத்த திருநீற்றை உடலெங்கும் பூசிக்கொண்டு கூப்பிய கரங்களுடன் மஹாமண்டபத்திற்குள் நுழைய, அதற்காகவே காத்துக்கொண்டிருந்த உவச்சப் பெருமக்கள் தத்தம் இசைக்கருவிகளான இலைத் தாளம், செண்டுத் தாளம், மொரவியம், வீணை, குழல் முதலானவற்ற எடுத்துவைத்துக்கொண்டு இசைக்கத் தொடங்கினார்கள்.

பிடாரர் (2) இருவர் இனிய குரலில் நம்பியாரூரரான சுந்தரப் பெருமானின் திருநொடித்தான் மலை திருப்பதிகத்தைப் பாட ஆரம்பித்தனர். பஞ்சமம் என்றழைக்கப்பட்ட பண்ணில் அமைந்திருந்த அப்பாடல்கள் கேட்பார் உள்ளத்தை கரைத்து உயிரை உருக்கின.

கோயிலைச் சேர்ந்த நான்கு அழகிய தளிப்பெண்டுகள் அப்பாடல்களுக்கு ஏற்றவாறு அபிநயம் பிடித்தார்கள். அவர்களில் ஒருத்தி சுந்தரரைப்போலவே திருநீறு பூசி மேல்கொண்டையிட்டுக்கொண்டு கையில் தாளத்துடன் ஆடலில் ஈடுபட்டாள். மற்றவர்கள் அவளைச் சுற்றி ஆடினார்கள்.

*(2) தேவாரம் ஓதுவார் அந்நாளில் பிடாரர் என்று அழைக்கப்பட்டனர்.*

சம்சார பந்தங்கள் நிறைந்த சுந்தரரின் பூவுலக வாழ்வு ஒரு முடிவுக்கு வரும் நேரம் வந்துவிடுகிறது. கையிலைவாழ் பரமன் தன் அணுக்கனை சகல மரியாதைகளுடனும் ஏற்றிவர இந்திரனின் வெள்ளை வாரணமாம் ஐராவதத்தையே அனுப்புகிறான். அஞ்சைக் களத்திலிருந்து சுந்தரர் வானுலகம் நோக்கி அத் தெய்வீக யானையில் பயணப்பட, அவருடைய நெருங்கிய நண்பரும் சிவத்தொண்டருமான சேரமான் பெருமாள் தன்னுடைய குதிரையில் ஏறி திருக்கயிலாய ஞானஉலாவைத் தொடங்குகிறார்.

சுந்தரர் கண்களில் நீர் சுரக்கிறது. மண்ணில் வாழும் சிவனடியார்களை பெருமான் இறுதியில் ஆட்கொள்வதை எண்ணியெண்ணி நெஞ்சம் பூரிக்கிறார்.

**"மண்ணுலகிற் பிறந்து நும்மை**
**வாழ்த்தும் வழியடியார்**
**பொன்னுலகம் பெறுதல் தொண்ட**
**னேனின்று கண்டொழிந்தேன்**
**விண்ணுலகத்தவர்கள் விரும்**
**பவெள்ளை யானையின்மேல்**
**என்னுடல் காட்டுவித்தான் நொடித்**
**தான்மலை உத்தமனே.."**

சுந்தரருக்கு வழிகாட்ட சிவபெருமான் தன் நாட்டியத்திற்குக் குடமுழவிசைக்கும் வாணனையே அனுப்பிவைக்கிறார். கிம்புரு கின்னரர்களும் வித்யாதரர்களும் புடைசூழ நிற்க வானிலிருந்து தேவரும் மூவரும் பூமாரி பொழிகின்றனர். பூவுலகும் மேலுலகும் அதிர அயிரவாரணம் புறப்படுகிறது.... வருண தேவன் கடல் உருவில் வந்து வழியனுப்ப விழைகிறான் (3)...

***(3) பார்க்க வரலாறு டாட் காம் இதழ் 7, இரா.கலைக்கோவன் அவர்களின் கட்டுரை***
***http://www.varalaaru.com/Default.asp?articleid=104***

**"அரவொலி ஆகமங்கள் அறி**
**வாரறி தோத்திரங்கள்**
**விரவிய வேதஒலி விண்ணெ**
**லாம்வந் தெதிர்ந்திசைப்ப**
**வரமலி வாணன் வந்துவழி**

**தந்தெனக் கேறுவதோர்**
**சிரமலி யானை தந்தான்நொடித்**
**தான்மலை உத்தமனே..."**

அளவில் சிறிய தாமரைக்குளத்து மகாதேவர் ஆலய மஹாமண்டபத்தில் அன்று கூடியிருந்தவர் அனைவரும் அஞ்சைக் களத்தில் என்றோ நடந்த அந்தக் காட்சிகளை மீண்டும் கண்டார்கள். சுந்தரர் மீண்டும் கயிலயங்கிரியை அடைவதையும் அங்கு கூடியுள்ள மாமுனிவர் "இத்தனை மரியாதைகளுடன் வந்து சேரும் இத்த உத்தமன் யார் ?" என்று கேட்பதையும் அதற்குப் பெருமான் "இவன் நந்தமர் ஊரன் !" என்று நெஞ்சம் பூரித்துப் பதில் சொல்வதையும் கண்டார்கள்.

மிகக் குறுகிய நேரமே நடந்த நிகழ்ச்சியென்றாலும் அந்த நாட்டியமானது சக்ரவர்த்திகள் மனதில் பெரியதொரு மாற்றத்தை உண்டாக்கிவிட்டதென்பது அவரது முகக்குறிப்பால் விளங்கியது. தூய்மையான சிவத்தொண்டர்களின் இறுதி முடிவும் தூய்மையானதாகவே இருக்கும் என்றொரு அசைக்கமுடியாத உறுதி உண்டானது. அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் கரகரவென்று வழிந்தோடியது. "நமச்சிவாயம் ! நமச்சிவாயம் !" என்று உதடுகள் இடைவிடாமல் முணுமுணுத்தன.
மழபாடியாரையும் அந்த நாட்டிய நிகழ்ச்சி சற்று கலக்கி விட்டது. அடடா ! திருத்தொண்டர் புராணத்தை இத்தனை நாட்கள் தெரிந்துகொள்ளாமல் போனேமே.. என்ற வருத்தம் அவருள் படர்ந்தது. எதற்காக போர், வீரர்கள், ஒற்றன், எதிரி என்று இடைவிடாமல் திரிந்துகொண்டிருக்கிறோம் என்கிற விரக்திகூட சிறிதளவு ஏற்பட்டுவிட்டது !

நாட்டியம் முடிந்ததும் கருவரையின் திரைகள் திறக்கப்பட தாமரைக் குளத்து மஹாதேவர் அனைவருக்கும் தரிசனமளித்தார். அர்த்த மண்டபத்தில் நின்றுகொண்டு சக்ரவர்த்திகளும் மழபாடியாரும மஹாதேவரை மிகுந்த நெருக்கத்தில் தரிசனம் செய்தார்கள். "ஶ்ரீபாத மூலத்தார்(4) அனைவரும் நலந்தானே !" என்று சக்ரவர்த்திகள் அஸ்திர சிவனாரை விசாரித்துத் தன்னுடைய அன்பைத் தெரிவித்துக்கொண்டார். சக்ரவர்த்திகளுக்கு பரிவட்டம் கட்டி மரியாதை செய்யப்பட்டது. அந்தப் பரிவிட்டத்துடனே கோயில் உட்பிரகாரத்தை வலம் வந்து வணங்கினார் உடையார்.

எவரோ நேரமாகிவிட்டது என்று ஞாபகப்படுத்த மஹாதேவர் ஆலயத்திலிருந்து அவரும் மற்றவர்களும் கிளம்பத் தலைப்பட்டனர்.

*(4) திருக்கோயில் பட்டர்கள் இவ்வாறு அழைக்கப்பட்டனர்.*

மஹாதேவர் திருக்கோயிலின் வாயிலில் துரோணன் என்று அழைக்கப்பட்ட அந்த இராஜ கஜமானது மத்தகத்தைச் சுற்றிச் சுழற்றியபடி தனக்கு வழங்கப்பட்டிருந்த வாழைப்பழங்களை காலிசெய்துகொண்டிருந்தது. அதன் நெற்றியில் அழகிய பட்டினால் அலங்காரங்கள் செய்யப்பட்டிருந்தன. யானைப்பாகனாக அமர்ந்திருந்தவன் அதனை அதிகம் தொந்தரவு செய்யாமல் மெதுவாகத் தடவிக்கொடுத்தபடியிருந்தான்.

சக்ரவர்த்திகள் கோயிலின் வாயிலை அடைந்து அந்த யானையை நெருங்கினார். அவருடைய அண்மையை சற்று தூரத்திலேயே கண்டுகொண்டுவிட்ட துரோணன் மத்தகத்தை ஒரு கணம் உயரே உயர்த்தி ஒரு பெரிய ஹுங்காரப் பிளிரல் செய்து தன்னுடைய மகிழ்ச்சியைத்

தெரிவித்துக்கொண்டது. அவர் நெருங்கிவந்து அதற்குத் தன் கரங்களால் சில வாழைப் பழங்கள் ஊட்டி விட்டார். யானைப் பாகன் தன் பாதங்களால் அதன் காதுகளுக்குப் பின்புறம் சில சமிக்ஜைகள் கொடுக்க துரோணன் தன் கால்களை மடக்கி சக்ரவர்த்திகள் ஏறுவதற்கு ஏதுவாக படுத்துக்கொண்டது. அவர் கஜத்தின் முதுகில் கட்டடப்பட்டிருந்த தாம்புக் கயிறுகளைப் பிடித்து மளமளவென்று மேலேறி நிமிடத்தில் அதன் முதுகில் அமர்ந்துவிட்டார். யானைப்பாகன் மீண்டும் சில சமிக்ஜைகள் செய்ய துரோணன் கம்பீரமாக எழுந்து நின்றது.

கொம்பும் எக்காளமும் மீண்டும் ஒருமுறை முழங்கின. சக்ரவர்த்திகளின் ஊர்வலம் கோயிலிருந்து மெதுவாகக் கிளம்பியது.

மெய்க்காவல் வீரன் ஒருவனிடமிருந்து குதிரையை சம்பாதித்துக்கொண்ட மழபாடியார் கஜத்திற்கு மிக நெருக்கமாக புரவியை விட்டுக்கொண்டு சென்றார்.

## வரவேற்பு

அமைதியாகத் தெரிந்த பெரிய திருக்கற்றளி வளாகம் சட்டென்று பரபரப்புக்கு உள்ளானது. வளாகத்தின் வெளியிலமைந்த உயரமான மரத்தின்மீது அமர்ந்துகொண்டிருந்த ஒருவன் "தூரத்தே புழுதி தெரிகிறது - புழுதியின் நடுவில் புலிக்கொடி பறந்துகொண்டிருக்கிறது - அநேகமாக சக்ரவர்த்திகளாக இருக்கலாம் !" என்று அறிவித்ததுதான் அதற்குக் காரணம். மெய்க்காவல் வீரர்கள் சட்டென்று தத்தம் வாயிலுக்குச் சென்று ஈட்டியை விறைப்பாகப் பிடித்தபடி நின்றனர். கற்றளியைச் சுற்றியிருந்த

நான்கு வாயில்களுக்கருகிலும் கூடியிருந்த மக்கள் மத்தியில் ஆர்வம் கலந்த பரபரப்பு பரவியது.




திருக்கற்றளி வளாக அமைப்பை விளக்கும் வரைபடம்

மெய்க்காவல் வீரர்கள் மூலமாக நாடகக் குழு கூடியிருந்த பெருங்குடிசையிலும் சக்ரவர்த்திகளின் வருகை அறிவிக்கப்பட்டது. ஆச்சாரியாரின் முகத்தில் முதல் முறையாக ஆணவம் மறைந்து சற்று பணிவு குடிகொண்டதுபோல் காணப்பட்டது. அவர் தன்னுடைய மேல்துண்டை கழற்றி இடுப்பில் சுற்றிக்கொண்டு பரபரப்புடன் குடிசையின் வாயிலுக்கருகில் வந்து நின்று கொண்டார். யார் வருகிறார்கள் ? எதற்காக இத்தனை பரபரப்பு ? என்று ஏதேதோ கேள்விகள் கேட்க நினைத்த செங்கமலத்தின் வாயைப் பொத்தி "இப்போது எதுவும் பேசக்கூடாதடி கண்ணே !" என்று அடக்கி வைத்துவிட்டார் ஆச்சாரியார்.

குழுவின் வண்டிக்குள் அரை நாழிகை நேரம் தேடியும் எதுவும் அகப்படாததால் மனம் வெறுத்திருந்த அம்பலவாணர் சற்றே இளைபாறிக்கொள்ளாலாம் என்று வெளியே வர அவருக்கும் சக்ரவர்த்திகளின் வருகை சொல்லப்பட்டது. சக்ரவர்த்திகளை யானை மீதிருந்து காணும் ஆசையில் அம்பலவாணரும் குடிசையின் வாசலுக்குச் சென்று செங்கமலம் மற்றும் ஆச்சாரியாருடன் சேர்ந்து நின்று கொண்டார்.

வடக்கு வாயிலின் உட்புறம் திருக்கோயிலின் ஸ்ரீகாரியமான பொய்கை நாட்டுக் கிழவர் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளார் கையில் மாலையுடன் காத்துக்கொண்டிருந்தார். அவருக்கருகில் திருக்கற்றளி வளாகத்தின் இளங்கோயிலில் பணியில் அமர்ந்தப்பட்டிருந்த லகுளீச பாசுபத மார்க்கத்தைச் சேர்ந்த பட்டர்களும் வேதம் வல்ல அந்தணர்களும் கற்றளி வளாகத்திற்குள் சக்ரவர்த்திகளை நான்மறைகள் ஓதி வரவேற்கும் பொருட்டுத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். அவர்கள்

கரங்களில் நூல் சுற்றப்பட்டு மாணிக்கம், இரத்தினம், கோமேதகம், புஷ்பராகம், வைரம் உள்ளிட்ட நவரத்தினங்களும் சேர்ந்த நீர் கொண்ட தங்கக் குடம் தெரிந்தது. அது பேரரசருக்கான பூரண கும்பமாக இருக்கலாம் என்று நாம் ஊகிக்கிறோம். திருக்கற்றளியில் தேவாரம் ஓதும் பணியில் பல்வேறு ஊர்களிலிருந்தும் அமர்த்தப்பட்டிருந்த பிடாரர்கள் இன்னும் தஞ்சைக்கு வந்து சேராவிட்டாலும் அவர்களுக்குத் தலைவராக அமர்த்தப்பட்டிருந்த பவன பிடாரர் முன்பே குடியமர்ந்துவிட்டார். வேதம் சொல்லும் அந்தணர்களோடு அவரும் நின்றுகொண்டிப்பதைக் காண்கிறோம்.

தாமரைக் குளத் தளியிலிருந்து புறப்பட்ட சக்ரவர்த்திகளின் கஜ ஊர்வலம் தஞ்சை வட தளிச்சேரியின் வடசிறகு - தென்சிறகு வீதிகளின் வழியாகவே வந்ததால் தளிச்சேரி வீடுகளில் புதிதாகக் குடியமர்ந்த தளிப்பெண்டிர் வாயிலுக்கு வந்து சக்ரவர்த்திகளுக்கு முகமன் தெரிவித்துக் கொண்டார்கள். ஒரு சிலர் ஊர்வலத்தை வழிமறித்து ஆரத்தி கரைக்கவும் முற்பட்டார்கள் - அவர்களை திருமெய்க்காப்புப்படை விலக்க வேண்டியதாயிற்று. சக்ரவர்த்திகளின் முகதரிசனம் அவருடைய ஜென்ம தினத்தில் கிடைத்ததை அந்தப் பெண்கள் பெருமையோடு பேசிக் கொண்டார்கள்.

சிறிது நேரத்தில் சக்ரவர்த்திகளின் கஜம் திருக்கற்றளி வளாகத்தை அடைந்தது. கற்றளியின் வடக்கு வாயிலுக்கு சிறிது தூரத்தில் கஜம் நிறுத்தப்பட உடையார் கீழிறங்கினார். அவரைத் தொடர்ந்து மழபாடியாரும் தம்முடைய புரவியை விட்டிறங்கி அரசரைத் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தார். பாதையின் இருபுறமும் மெயக்காவல் படை வரிசையிட்டு நிற்க அவர்களைத் தாண்டி நின்ற பொதுமக்கள் அவருடைய முகதரிசனத்திற்காக எம்பி எம்பிக் குதித்தார்கள். தளிப்பெண்கள்

பாதையில் பூமாரிப் பொழிய அரசர் மெதுவாக வடக்கு வாயிலை நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

மழபாடியார் பணியின் காரணமாக தஞ்சைக்கு வருவதே ஆறு மாதங்களுக்கு ஒருமுறைதான் என்றாகியிருந்ததால் அவரால் திருக்கற்றளி வேலைகள் ஆரம்பித்ததிலிருந்து அந்தப் பகுதிக்கே வரமுடியவில்லை. முதல் முறையாகப் பார்க்கும் எவரையும் அந்தத் தளியின் நீள அகலங்கள் பயமுறுத்தும் - மழபாடியாரும் இதற்கு விதிவிலக்கல்ல ! இத்தனை பெரிய தளியா... என்று வியந்தார் அவர். வரலாறு காணாத இத்தனை பெரிய தளியைக் கட்டி முடிக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டு களத்தில் இறங்கியிருக்கும் பேரரசரின் மனத்திட்பம் அவருக்கு வியப்பை அளித்தது. எப்பேர்ப்பட்ட மனிதர் இவர் ! இவர் வாழும் காலத்தில் நாமும் வாழ்வது எத்தனை பெரிய பெருமை ! என்றெல்லாம் தோன்றியது.

இந்த எண்ணங்களெல்லாம் ஒரு சில கணங்களே வந்துபோக மீண்டும் தாம் எடுத்துக்கொண்டிருந்த பொறுப்பிற்கு அவரது மனம் வந்து சேர்ந்து விட்டது. நல்லவேளையாக இதுவரை அசம்பாவிதமாக எதுவும் நிகழவில்லை. குறிப்பாக இரத யாத்திரை பத்திரமாக நடந்து முடிந்ததில் மழபாடியாருக்குப் பரம திருப்தி. இனி திருக்கற்றளி வளாகத்தில் பாதுகாப்பு மிகுதி. ஆதித்தன் சூரியனார் சிவப்பு வண்ண மெய்ப்பை அணிந்த வேளாண் ஆட்கொண்ட வில்லியாரின் ஆட்களை கற்றளியின் வாயில்கள் நான்கிலும் நிறுத்தியிருப்பது இங்கிருந்தே தெரிகிறது... இத்தனையும் மீறிக்கொண்டு ஏதாவது நடந்து விடுமா என்ன ?

ஒரு கணம் - ஒரே ஒரு கணம் வந்து போன அலட்சியத்தை மழபாடியார் கவனமாகப் புறந்தள்ளினார். கூடாது - அவர்களது ஏற்பாடுகளை குறைத்து

மதிப்பிடுவதற்கில்லை. துழாய்க்குடியிலேயே எத்தனை முன்ஜாக்கிரதையாய் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன ! குன்னத்தூர் ஆசாரி சொன்ன செய்தி.... தித்தன் விசாரிப்பு....

இல்லை. ஏதோ திட்டம் நிச்சயம் இருக்கிறது.

திருக்கற்றளியின் நான்கு பக்கங்களிலும் வளர்ந்திருந்த மரங்கள் மழபாடியாருக்கு சற்று கவலையைக் கொடுத்தன. ஒவ்வொரு மரத்தின் கிளைகளிலும் சக்ரவர்த்திகளைக் காண்பதற்காக இளவட்டங்கள் ஏறி நின்றுகொண்டிருந்தார்கள். ஒவ்வொரு மரத்தையும் கண்காணித்து அதன் கிளைகளில் இருப்பவர்களிடம் ஆயுதங்கள் ஏதாவது உள்ளதா என்று பரிசோதிக்கச் செய்ய வேண்டுமோ ? கற்றளி வளாகத்திற்குள் நுழைந்ததும் முதல் வேலையாக தென்னவன் மூவேந்த வேளாரின் காதுகளில் இந்த விஷயத்தைப் போட்டுவிட வேண்டும்.

வடக்கு வாயிலுக்கு சிறிது தூரத்திற்கு முன் போடப்பட்டிருந்த குடிசையின் வாசலில் நின்ற தம் குழுவினருடன் நின்ற ஆச்சாரியாரின் பணிவான வணக்கத்தை ஒரு புன்முறுவலுடன் எதிர்கொண்டார் அரசர். "அனைவரும் நலந்தானே ?" என்று அவர் நிதானித்து வாயார விசாரித்ததில் நாடகக் குழுவின் மொத்த உறுப்பினர்களுக்கும் உச்சி குளிர்ந்து விட்டது ! "தங்கள் ஆசியால் அனைவரும் நலமாகவே உள்ளோம் !" என்று ஆச்சாரியார் வாயெல்லாம் பல்லாக விடை பகன்றார். அவருடைய பணிவும் வினயமும் அரிகண்டனுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தன. நிமிர்ந்த நடையும் செருக்கான பார்வையுமாய் எப்போதும் நிலம் அதிர வலம் வரும் ஆச்சாரியாரா இப்படிப் பம்மிக் குழைகிறார் ? என்று வியந்தான் அவன்.

கூடவே "யாரிந்த மாதரசி ?" என்று அருகில் நின்று கொண்டிருந்த செங்கமலத்தை வேறு விசாரித்தார் அரசர் ! அவ்வளவுதான் - எங்கிருந்தோ செங்கமலத்திற்கு நாணமும் வெட்கமும் வந்துவிட்டன.... முகம் கன்றிச் சிவந்துவிட தலையை சட்டென்று குனிந்துகொண்டுவிட்டாள் அவள். அருகில் நின்றுகொண்டிருந்த அம்பலவாணருக்கு எங்கிருந்தோ தைரியம் வந்து எச்சிலை உள்விழுங்கிக்கொண்டு "அவள் என்னுடைய பெயர்த்தி - பெயர் செங்கமலம் !" என்றார்.

அந்தக் குரல் கற்றளி வளாகத்தின் மரங்களிலும் கிளைகளிலும் பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்த மழபாடியாரின் கவனத்தைக் கவர்ந்தது. அம்பலவாணரின் குரலல்லவா இது ! உடனடியாக சக்ரவர்த்திகளை நெருங்கி அவருடைய காதுகளில் ஏதோ புகன்றார் அவர். "அடடா - அந்தப் பெரியவர் இவர்தானா !" என்று சக்ரவர்த்திகள் வியந்தார். அம்பலவாணருக்கு தன்னைப் பற்றி மழபாடியார் ஏதோ சொல்வதும் சக்ரவர்த்திகள் தம்மைக் கண்டு வியப்பதும் சற்று வெட்கத்தை உண்டாக்கிவிட்டன. செங்கமலத்திற்குத் துணையாக இப்போது அவரும் சற்று நாணிக்கொண்டேதான் நின்றார்.

"நாடகம் முடிந்ததும் இவரை நம்மிடம் கொண்டு வாரும் !" என்று மழபாடியாரிடம் சொல்லிவிட்டு சக்ரவர்த்திகள் அங்கிருந்து வேகவேகமாக அகன்றார். கூடவே நகரப்போன மழபாடியாரை அம்பலவாணர் மறித்து "உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமே !" என்று சொல்ல "உள்ளே இளங்கோயிலில் சக்ரவர்த்திகள் அமர்ந்ததும் நானே உம்மை வந்து சந்திக்கிறேன் !" என்று அவருக்கு அவசர மறுமொழியளித்துவிட்டு சக்ரவர்த்திகளைத் தொடர்ந்தார் மழபாடியார்.

**************************************************************************************
*******

"வரவேண்டும் ! வரவேண்டும் ! " என்று இரு கரம்கூப்பி மிக்க மரியாதையோடு சக்ரவர்த்திகளை வரவேற்றார் அவரைவிட வயதில் மூத்தவரான தென்னவன் மூவேந்த வேளார். சக்ரவர்த்திகளும் பதிலுக்குக் கைகளைக் கூப்பி அவரை வணங்கினார்.

பூரண கும்பம் அரசரின் கைகளில் கொடுக்கப்பட்டு அந்தக் கும்பமேந்திய கரங்களைப் பிடித்தபடி உள்ளே நகர்ந்தார் வேளார். நான்கு
திசைகளிலிருந்தும்
யஜுர்வேத மந்திரங்கள் வானளாவ எழுந்தன. மெல்ல நடந்தபடி அனைவரும் கிழக்கு திசையில் அமைந்திருந்த இளங்கோயில் வளாகத்தை அடைந்தனர்.

இளங்கோயில் என்பது கருவரையில் பிரதிஷ்டை செய்யப்படுமுன் தெய்வ மூர்த்தங்கள் எழுந்தருளியிருக்கும் பாலாலயம் என்னும் இடமாகும். இங்கு மூர்த்தங்கள் குறிப்பிட்ட காலம் வரையில் பால், நெல் முதலான பல்வேறு பொருட்களிலும் மூழ்கியிருக்கும். இந்த மூர்த்தங்களுக்கு கண் திறப்பு ஏற்பட்டிருக்காது. கல் விக்கிரகங்கள் தவிர ஐம்பொன் சிலைகளுக்கென்று தனியான விதிகளையும் ஆகமங்கள் ஏற்படுத்தியிருந்தன.
கொகுடிக்கோயில், ஞாழற்கோயில் என்று அக்காலத்தின் பலவகைக் கோயில்களை வரிசைப்படுத்தும் அப்பர் பெருமான் அந்த வரிசையில் இளங்கோயிலையும் குறிப்பிடுகிறார்.

இளங்கோயிலில் அரசர் அமர்ந்ததும் பவனபிடாரரும் உவச்சப் பெருமக்கள் இருவரும் முன்வந்து அவரை வணங்கிவிட்டு திருநாவுக்கசரப் பெருமானின் தேவாரப் பதிகங்களைப் பாடத் தொடங்கினர். "கண்டேனவர் திருப்பாதம் - கண்டறியாதன கண்டேன் !" என்று அப்பர் பெருமான் உருகி உருகிப் பாடியுள்ள ஐயாற்றுப் பதிகங்களை பவன பிடாரர் தன்னுடைய கணீர்க் குரலில் பாடலானார். "மாதர் பிறைக் கண்ணியானை" என்று தொடங்கும் பதிகம் முதலாக "வளர்மதிக் கண்ணியினானை" என்று முடியும் பதிகம் வரையிலான பதினோரு திருப்பதிகங்களையும் பிடாரர் பாடிமுடிக்கும்போது அவர் கண்களிலிருந்தும் கரகரவென்று நீர் வழிந்துகொண்டிருந்தது.

"அடடா ! அப்பர் பெருமானின் தமிழுக்கு எதுவும் ஈடாகாது !" என்றபடி தன் முகத்தை ஒருமுறை அழுந்தத் துடைத்துக்கொண்டார் பேரரசர். இளங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தட்ஷிண மேரு விடங்கரான ஆடவல்லார், உமா பரசேுவரி, கணபதிப் பிள்ளையார், சுப்பிரமணியப் பிள்ளையார் முதலியோருக்கு செய்யப்படும் வழிபாடுகளும் ஹோமங்களும் ஆரம்பமாயின.

பேரரசரைச் சுற்றி நிற்கும் மெய்க்காவல் படையால் திருப்தியடைந்த மழபாடியார் தென்னவன் மூவேந்த வேளாருடன் இளங்கோயிலை விட்டு வெளியில் வந்தார்.

"கற்றளி வளாகத்தைச் சுற்றியிருக்கும் மரங்களில் குழுமியிருக்கும் கூட்டம் சற்று கவலை கொடுக்கிறது வேளாரே !"

"கவலையே வேண்டாம் - ஒவ்வொரு மரத்தின் கீழும் நமது ஆட்கள் நிற்கின்றனர் பாருங்கள் ! மரமேர விரும்பும் இளவட்டங்கள் சோதனைக்குப் பிறகே மேலேற முடியும் !"

"ஓஹோ - நல்ல ஏற்பாடுதான் ! எங்கே மற்ற அரசவைப் பிரதானிகளும் மண்டல நாயக்கர்களும் ? அரசவைப் பெண்டிரைக்கூட காணவில்லை ?"

"பிரதானிகளும் மற்ற அரசியல் அதிகாரிகளும் வரத்துவங்கிவிட்டார்கள் - அவர்களை நாடக அரங்கிற்கு அருகில் அமர்திக்கொண்டிருக்கிறோம் - அதோ பாருங்கள் ! அதிக பேருக்கு அழைப்பில்லை - மிஞ்சிப்போனால் நூறு பேர் வரலாம் ! அரண்மனைப் பெண்டிர் பலரும் பட்டத்தரசியார் அந்தப்புரத்தில் ஏதோ விரதமிருந்து பூஜை செய்கிறாராமே - அதற்குத்தான் செல்கிறார்களென்று செய்தி வந்தது. பட்டத்தரசியாரே போகாதபோது நாம் எவ்வாறு போவது என்று மற்ற தேவியர் நினைக்கிறார்களோ என்னவோ - அவர்களுக்காக ஆச்சாரியாரை மறுபடி நாடகம் கட்டச் சொல்லிவிட வேண்டியதுதான் ! பராந்தகன் குந்தவைப் பிராட்டியாரும் மற்ற சில முதிர்ந்த இராஜ ஸ்த்ரீகளும் மட்டும் சிறிது நேரத்தில் வரலாம் ! ஒட்டு மொத்தத்தில் வரப்போகும் கும்பல் பாதியாகக் குறைந்துவிட்டது நமக்கும் நல்லதுதான் !"

"...ம்.. நாடகம் துவங்குவதற்கு இன்னும் இரண்டு - மூன்று நாழிகைகள் உள்ளன அல்லவா ?"

"நிச்சயம் இரண்டு நாழிகையாகும்போலத் தெரிகிறது ! பூஜைகள் முடிந்து தானங்களும் கொடுத்தபின்னர் பேரரசர் நாடகம் நடக்கப்போகும் வளாகத்திற்கு எழுந்தருளுவார். அவர் செல்வதற்குமுன் நாடகக்குழுவை

அங்கே நான் விரட்டியாகவேண்டும் - ஆச்சாரியாரை ஒரு நடை சென்று பார்த்து விட்டு வருகிறேன் !"

"எனக்கும் அங்கே ஒரு வேலை இருக்கிறது - நானும் நாடகக் குழு தங்கியிருக்கும் குடிசைக்கு வருகிறேன் !"

*************************************************************************************
*******

மழபாடியாரும் தென்னவன் மூவேந்த வேளாரும் வடக்கு வாயிலை அடையும் சமயத்தில் ஆதவனின் மெல்லிய ஒளிக்கிரணங்கள் மெல்ல மேற்திசையில் மூழ்க ஆரம்பித்திருந்தன. நண்பகலுக்கு மேல் சிறிது நேரமாகவே வானத்தில் மேகங்கள் மையம்கொண்டிருந்தால் ஏற்கனவே மெலியதாகக் கவியத்தொடங்கிய இருட்டு திடீரென்று பன்மடங்கு அடர்ந்துவிட்டதுபோல் தோன்றியது. தன்னுடைய ஆட்களில் ஒருவரை விட்டு இன்னும் ஒரு நாழிகை நேரத்தில் வளாகமெங்கிலும் பந்தங்கள் கொளுத்தி வைக்கத் தயாராகுமாறு வேளார் உத்தரவிட்டார்.

நாடகக் குழு தங்கியிருந்த குடிசை உச்சகட்ட பரபரபரப்பிலிருந்தது. நாடகத்துக்கான சீலைகள் ஏற்கனவே மேடைக்குக் கொண்டு செல்லப்பட்டு மேடையின் பின்புறம் காட்சிக்குத் தக்கவாறு மாறக்கூடிய தயார் நிலையில் வைக்கப்பட்டன. அத்தனை நேரமாக மேடையின் ஏற்பாடுகளைப் பார்த்துவிட்டு மழபாடியாரும் வேளாரும் வரும் சமயத்திலேதான் ஆச்சாரியாரும் குடிசைக்குத் திரும்பிக்கொண்டிருந்தார். நாடகம்

துவங்குவதற்கு இன்னும் இரண்டு நாழிகைகள் கூட இல்லாத அந்த நேரத்திலும் குழு உறுப்பினர்கள் சிலர் கடைசி நேர ஒப்பனைகளிலும் தேடல்களிலும் ஈடுபட்டிருந்தது அவருக்குத் தாங்கமுடியாத எரிச்சலைக் கொடுத்தது. வாய்விட்டு வசைமாறிப் பொழியலாம் என்றால் நந்திபோல் வேளாரும் மழபாடியாரும் நின்றுகொண்டிருக்கிறார்கள் !

போதாக்குறைக்கு வேளார் நேராக ஆச்சாரியாரிடம் வந்து "என்ன ஆச்சாரியாரே ! எல்லாம் தயார் நிலையில் உள்ளனவென்று நினைக்கிறேன் - இன்னும் இரண்டு நாழிகைகளில் குழு மொத்தத்தையும் கூட்டிக்கொண்டு மேடையின் பின்புறம் அமைக்கப்பட்டுள்ள இடத்திற்கு வந்து சேருங்கள் ! மழபாடியாரே - நான் கிளம்புகிறேன் - பந்தங்களை சரியாகக் கொளுத்தி வைக்கிறார்களா என்று அருகிலிருந்து பார்த்தாக வேண்டும் !" என்று சொல்லிவிட்டு ஆச்சாரியாரின் பதிலுக்குக்கூட காத்திராமல் கிளம்பிவிட்டார்.

ஆச்சாரியாரின் மனநிலையை வாசகர்களே ஊகித்துக்கொள்ளலாம். வேளாரின் தலை மறையும்வரை காத்திருந்துவிட்டு "அடே ! இன்னும் ஒரு நாழிகை நேரத்தில் எல்லோரும் அவரவர் வேட சாமான்களை எடுத்துக்கொண்டு வரவில்லையோ - தொலைந்தீர்கள் !" என்று ஒரு அதட்டல் போட்டார்.

மழபாடியார் குழுவில் அம்பலவாணரின் தலை தென்படுகிறதா என்று தேடிக்கொண்டிருந்தார். எங்கு தேடியும் காணவில்லை. ஒரு வழியாக சூடாக இருக்கும் ஆச்சாரியாரையே அணுகிக் கேட்டுவிடலாம் என்று நெருங்கும் சமயத்தில்தான் மன்மதனாக வேடம் தரித்துக்கொண்டிருந்த அரிகண்டன் அவரை நெருங்கினான். எவரிடமோ கெஞ்சிக் கூத்தாடி

சம்பாதித்துக்கொண்டிருந்த கிரீடத்தையும் அவன் தலையில் காண்கிறோம்.

"ஐயா ! தாங்கள் என்னுடைய ஆசானான அம்பலவாணரைத் தேடி வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். சிறிது நேரம் தயவுசெய்து பொறுக்க வேண்டும் - அவருக்கு இப்போதுதான் ஒப்பனை நடந்துகொண்டிருக்கிறது !" என்றான். "இப்போதுதான் ஒப்பனை நடந்துகொண்டிருக்கிறது" என்பதை மட்டும் மிக மெல்லிய குரலில் மழபாடியாரின் காதுகளில் மட்டும் விழுமாறு சொன்னான். எங்கே ஆச்சாரியாரின் காதுகளில் அது விழுந்து தொலைந்து நாடகம் துவங்கும் நேரத்தில் அவரிடம் பாட்டு வாங்கிக்கொள்ளவேண்டும் ?

சிறிது நேரத்திலேயே நாணிக் கோணிக்கொண்டு குடிசையின் பின்புறத்திலிருந்து அம்பலவாணர் வந்து சேர்ந்தார் ! இத்தனைக்கும் அவருக்கு ஒப்பனை அதிகம் போட்டதாகத் தெரியவில்லை - அவருடைய இயல்பான தோற்றத்திலேயே அவருக்கொரு வேடம்போலும் ! மீசையில் மட்டும் சற்று நெய் தடவி கம்பீரமாக முறுக்கிவிட்டு முகத்தில் எதையோ பூசி அனுப்பியிருந்தார்கள். தலையில் தலைப்பாகை. வெற்றுடம்பு. கையில் நீண்ட வேல். போர் வீரர் வேடம் போலும் !

"உங்கள் வேடப் பொருத்தம் மிகப் பிரமாதம் - அப்படியே கச்சிதமாகப் பொருந்திவிட்டது !" என்று சிரித்தபடியே சொன்னார் மழபாடியார்.

அம்பலவாணரை வெட்கம் பிடுங்கித் தின்றது. போர்களத்தில் அச்சமென்பதை அறியாமல் சுற்றிச் சுழன்ற அந்த வீரர் தன்னுடைய அந்தரங்க ஆசை இப்படிப் பகிரங்கமாகிவிட்டதே என்று வெட்கி மாய்ந்துபோனார்.

"நீங்கள் வேறு - வயதான காலத்தில் இப்படியொரு கூத்தடித்துக் கொண்டிருக்கிறேனே என்று எனக்கே வெட்கமாக இருக்கிறது ! குழந்தை என்ன நினைத்துக்கொள்வாளோ !" என்றார்.

நல்ல வேளையாக அவர் அந்த வார்த்தைகளைச் சொல்லும் நேரத்தில் ஆச்சாரியார் சற்று விலகிப் போய்விட்டார். கூத்துக் கலையை அல்லது கூத்தப் பெருமக்களை யாராவது தவறிப்போய் சிறிதளவு மரியாதைக்குறைவாகப் பேசினாலும் அவருக்கு எக்கச்சக்கமான கோபம் வந்து தலைக்கேறிவிடும் ! யார் எவர் என்று பார்க்காமல் வசைமாறிப் பொழிந்துவிடுவார்... எதையாவது சொல்லப்போய் எங்கே ஆச்சாரியாரிடம் மாட்டிக்கொண்டுவிடப்போகிறாரோ என்கிற கவலை அரிகண்டன் முகத்தில் தெரிந்தது.

"என்னுடன் ஏதோ பேசவேண்டும் என்றீர்களே - வாயிலுக்குச் செல்வோமா ?" என்று அழைத்தார் மழபாடியார்.

இருவரும் குடிசையின் ஒரு ஓரத்தில் ஒதுங்கினார்கள். தான் காலையில் அரண்மனை வாயிலுக்கு வந்ததையும் அதனைத் தொடர்ந்து நடந்த துரத்தல் புராணத்தையும் கூடிய மட்டும் விபரமாகச் சொல்லி முடித்தார் அம்பலவாணர்.

"ஆஹா - அப்போது நான் சந்தேகித்தது சரிதான் ! இராஜகம்பீரன் சபைக்குள் அவன் வந்துபோயிருப்பது நிச்சயம் - அடடா - கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போய்விட்டதே ! எத்தனை முறை அவர்களை நெருங்கி நெருங்கிக் கோட்டை விட்டு விட்டோம் - அச்சமாக

இருக்கிறது அம்பலவாணரே ! நம் அனைவரையும் மீறி எங்கே அசம்பாவிதமாக ஏதாவது நடந்துவிடுமோ என்று அச்சமாக இருக்கிறது !"

"அடடா ! மாவீரரான தங்களின் வார்த்தையில் அச்சம் என்ன சொல்லே இடம்பெறக்கூடாது அல்லவா ? கவலையை விடுங்கள் - எல்லாம் நல்லபடியாகவே நடக்கும் ! நாளின் பெரும்பொழுது அசம்பாவிதங்கள் எதுவுமின்றிக் கழிந்துவிட்டது - இன்னும் சில நாழிகைகள்தானே - நமது பாதுகாப்பில் இத்தனை கடுமையை சதிகாரர்களே எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். அதனால் ஒருவேளை அவர்களின் திட்டங்கள் மாறிப் போயிருக்கலாம்..."

"அப்படியொரு சாத்தியக்கூறு உள்ளதுதான் ! என்றாலும்....."

"வீணில் மனதைப் போட்டு அலட்டிக்கொள்ளாதீர்கள் ! மற்றவர்கள் அனைவருக்கும் ஆறுதல் சொல்ல வேண்டிய தாங்களே மலைத்து நின்றுவிட்டால் அப்புறம் நாங்களெல்லாம் என்னாவது ?"

ஆச்சரியமாக இருந்தது மழபாடியாருக்கு. வேறெவரிடமும் சொல்லத்துணியாத தனது அந்தரங்கக் கவலைகளை இவரிடம் மட்டும் மனம் விட்டுப் பேசிக்கொண்டிருக்கிறோமே - இதுதான் நட்பா ? என்று வியந்தார்.

"மன்னிக்கவும் - அரசாங்க விவகாரங்களால் உங்கள் நாடக வேடத்தைப் பற்றி சரியாக விசாரிக்க முடியவில்லை. தங்களுக்கு என்ன வேடம் ? எந்தக் காட்சியில் தோன்றுவீர்கள் ?"

"அட அதை ஏன் கேட்கிறீர்கள் ? ஒரே ஒரு காட்சி ! ஒரே ஒரு வசனம் - வெற்றிவேல் ! வீரவேல் ! - அவ்வளவுதான் ! நேற்று தங்களுடன் சுற்றிக்கொண்டிருந்துவிட்டேனாகையால் ஒத்திகையிலும் கலந்துகொள்ளவில்லை. அதனால் என்ன காட்சியில் நான் தோன்றவேண்டும் என்று அரிகண்டன் கூறினால்தான் உண்டு - போதுமா ?" என்று சொல்லிச் சிரித்தார் அம்பலவாணர்.

அவரைப்போல் நாமும் என்றாவது ஒருநாள் கள்ளம் கபடமில்லாமல் மனக்கவலைகளையெல்லாம் மறந்து சிரிக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று மழபாடியாருக்குத் தோன்றியது.

## "ஸ்ரீ இராஜராஜ விஜயம்"

வானம் துடைத்துப் போட்டதுபோல் காணப்பட்டது. பெயருக்குக்கூட ஒரு நட்சத்திரமும் இல்லை. எல்லாம் சூழ்ந்து நிற்கும் மேகக்கூட்டங்களின் உபயம் போலும் ! சந்திரனும் மேகங்களினுடே மறைந்து ஏதோ இருக்கிறேன் என்று பெயருக்குக் காட்சியளித்தது. இப்படியாக இயற்கை அந்த ஐப்பசி சதய நாளில் ஏற்படுத்தியிருந்த ஆழ்ந்த மாலைநேர இருளின் நடுவே தஞ்சையின் திருக்கற்றளி வளாகம் ஆங்காங்கே கொளுத்தப்பெற்று எரிந்துகொண்டிருந்த தீப்பந்தங்களின் வெளிச்சத்தில் மிக ரம்மியமாகக் காட்சியளித்தது. கிழக்கு திசையில் இளங்கோயிலிலிருந்து எழுந்த வெண்ணிற ஹோமப்புகை வானம் வரை நீண்டு சென்று இருளில் கலப்பதும்கூட ஒரு இனம்புரியாத அழகோடு தெரிந்தது.

நாடக மேடை அமைந்திருந்த கற்றளியின் தெற்குப் பகுதியில் ஏறக்குறைய

அத்தனைபேரும் கூடியிருக்கக் காண்கிறோம். மேடைக்கு அருகில் அதிகமான எண்ணிக்கையில் பந்தங்கள் நடப்பட்டிருக்க பார்வையாளர் பகுதியில் அங்கொன்றும் இங்கொன்றுமாகவே பந்தங்கள் தெரிந்தன. வேளாரின் ஆட்கள் அவ்வப்போது பந்தங்களை சோதித்து எண்ணை குறைவாகத் தெரியும் பந்தங்களுக்கு எண்ணை விட்டவாறு சென்றுகொண்டிருப்பதையும் காண முடிந்தது.

மந்திரிகள், பிரதானிகள், மாதண்ட - சாமந்த நாயக்கர்கள், கண்காணி நாயகங்கள், புரவுவரி - திணைக்கள அதிகாரிகள், கணக்கர்கள் என்று அரசாங்கத்தின் முக்கியஸ்தர்கள் பலரும் நாடக மேடைக்குமுன் போடப்பட்டிருந்த பல்வேறு ஆசனங்களில் அமர்ந்திருந்தார்கள். ஒரு சிலருக்கு ஆசனங்கள் கிடைக்காததால் ஒரு ஓரமாக நின்றுகொண்டோ தரையில் அமர்ந்துகொண்டோ மேடையை நோக்கியபடி அமைந்திருந்தனர். வேளார் சொன்ன எண்ணிக்கைக்கு அதிகமாக நூற்றுக்கும் மேற்பட்ட தலைகளைக் காணமுடிகிறது. முந்தைய அத்தியாயங்களில் நாம் சந்தித்த சேனாபதி குரவன் உலகளந்தான இராஜராஜ மாராயர், மந்திரி கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மாதிராயர், திருமெய்க்காவல் படைத் தளபதி வேளாண் ஆட்கொண்ட வில்லியார் முதலியோரைத் தவிர நாம் இதுவரை சந்தித்திராத பல்வேறு பிரமுகர்களையும் முன்வரிசைகளில் காண்கிறோம்.

முதல் வரிசையில் நடுநாயகமாகப் போடப்பட்டிருந்த சிறியதொரு சிங்காதனத்தில் உடையார் இராஜராஜசோழர் அமர்ந்திருந்தார். அவருக்கருகில் ஏறக்குறைய அவருக்கு இணையாகப் போடப்பட்டிருந்த ஆசனத்தில் ஆழ்வார் பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் காட்சி தந்தார். அக்கனும் தமையனும் அடிக்கடி ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு மிக அருகில் பந்தமொன்று ஏற்றப்பட்டிருந்ததால் பேரரசரை அனைவரும் தரிசனம் செய்ய முடிந்தது.

இந்த முக்கிய பார்வையாளர் வட்டத்தைச் சுற்றி நாலா பக்கங்களிலும் மெய்க்காவல் படையினர் காவல் புரிந்துகொண்டிருந்தார்கள். பேரரசர் அமர்ந்திருந்த இடத்தின் இரு பக்கங்களிலும் முன்பு இரத யாத்திரையின்போது புரவியில் முன்வந்த வீரர்கள் கையில் வில் அம்புகளோடு நிற்பதையும் காணலாம். பார்வையாளர்களில் பலரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்ததால் அந்த இடம் மொத்தமும் சிறியதொரு சலசலப்பிற்கு ஆளாகியிருந்தது. உடையார் மட்டும் இல்லாமலிருந்தால் அந்த இடத்திலிருந்து பெரும் கூச்சலே எழுந்திருக்குமென்பதை சொல்லவேண்டியதில்லை.

கற்றளி வளாகத்திற்குள் கூடியிருந்த இந்த அனுமதிக்கப்பட்ட பார்வையாளர்கள் தவிர கற்றளியின் வேலிக்கு வெளியில் கூடியிருந்த திரளான பொதுமக்களுக்கும் மேடை பந்தங்களின் ஒளியில் ஓரளவிற்கு நன்றாகவே தெரிந்தது. குறிப்பாக தெற்கு வாயில் பகுதிக்கருகில் நண்பகலுக்கு முன்னதாகவே இடம்பிடித்துவிட்ட பொதுமக்கள் தங்கள் காத்திருப்புக்குப் பலன்கிடைத்துவிட்டதை எண்ணியெண்ணிப் பூரித்தார்கள். அவர்களில் சிலருக்கு இயற்கை உபாதைகள் ஏற்பட்டாலும் அதற்கு இடம் கொடுத்தால் தற்போது நின்றுகொண்டிருக்கும் இடம் போய்விடுமென்பதால் அவற்றை புத்தியின் சக்திகொண்டு அடக்கியாண்டுகொண்டிருந்தார்கள்.

தென்னவன் மூவேந்த வேளாரும் மழபாடியாரும் ஓரிடத்தில் நில்லாமல் பார்வையாளர் வட்டத்தைச் சுற்றிச் சுழன்றுகொண்டிருந்தார்கள். குறிப்பாக மழபாடியாரின் பார்வை பார்வையாளர் வட்டத்தைத் தவிர இருளைக்

கிழித்துக்கொண்டு கிழக்கும் மேற்குமாய்ப் பாய்ந்துகொண்டிருந்தது.

கூத்து மேடை அமைந்திருந்த இடத்தை சற்று நெருங்கினால் மேடைக்கு மிக அருகில் பல்வேறு இசைக்கலைஞர்களும் தரையிலமர்ந்துகொண்டிருப்பதைக் காண முடிகிறது. நாடகக் காட்சிகளுக்கு ஏற்ப இசையெழுப்பத் தோதாக அவர்கள் அமர்ந்திருந்த இடம் அமைந்திருந்தது கவனிக்கத்தக்கது.

கூத்து மேடையின் முன்புறம் இவ்வாறு காட்சியளித்ததென்றால் நாடகக் குழு கூடியிருந்த மேடையின் பின்புறமோ அல்லோலகல்லோலப் பட்டுக்கொண்டிருந்தது. அந்தச் சலசலப்புக்களுக்கு முக்கிய காரணம் நாடகத்தில் பங்கேற்கப்போகும் சீருடையாள் உள்ளிட்ட அத்தனை தளிப்பெண்டுகளும் கன கச்சிதமான அலங்காரங்களுடன் வந்து சேர்ந்துவிட்டதுதான். அரிகண்டன் சீருடையாளைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போனான் ! மஞ்சள் நிற பொன்னாடையை நடனமாடுவதற்கு ஏற்றவாறு அவள் அழகாக உடுத்திக்கொண்டு வந்த நின்றது அவனுடைய தாபத்தைப் பன்மடங்கு பெருக்கிவிட்டது... விரக தாபத்தால் விக்கித்து நின்றான் அவன் !
தளிப்பெண்டுகள் அனைவருமே கைகள் மற்றும் கால்களில் மலர் மாலைகள் உடுத்தி கரும்பு வில்லேந்தி ஏறக்குறைய அரிகண்டனைப் போலவே காட்சியளித்தார்கள். அவர்களுடைய வேடத்திற்கும் மன்மதனுக்கும் ஏதோ நெருங்கிய சம்மந்தமிருக்க வேண்டுமென்று நாமே யூகிக்கிறோம்.

மேடையின் பின்புறம் மற்றவர்களோடு தென்பட்ட அம்பலவாணர் எவராலும் கண்டுகொள்ளப்படாமல் ஒரு ஓரமாக நின்றார். ஆச்சாரியார்

நாடக வேலைகளில் முனைந்துவிட்டதால் செங்கமலம் அவரை விட்டுவிட்டுத் தன் பாட்டனோடு ஒட்டிக்கொண்டுவிட்டாள்.

அம்பலவாணருக்குள் ஒரு சங்கடம் ஓடிக்கொண்டிருந்தது. அவர் வேடம் கட்ட ஒப்புக்கொண்டதற்கு முக்கிய காரணமே நாடகத்தை அருகிலிருந்து பார்க்கலாம் என்கிற ஆசையினால்தான் ! ஆனால் நடிகர்கள் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்தால் அவரவருக்குரிய காட்சி வருவதற்கு முன்புதான் மேடையின் வலப்புறம் சென்று நிற்கவேண்டுமென்றும் காட்சி முடிந்தபின் இடப்பக்கம் வழியாகக் கீழிறங்கி மேடையின் பின்புறமே வந்துவிடவேண்டுமென்றும் தோன்றியது. தாமும் தம் பெயர்த்தியும் மேடையின் கீழே ஒரு ஓரமாக நின்று மொத்த நாடகத்தையும் பார்ப்பதற்கு ஆச்சாரியாரின் அனுமதி கிடைக்குமா என்று தெரியவில்லை. நாடகத்தைப் பார்க்காமல் வெறும் ஒற்றைக் காட்சியில் தோன்றிவிட்டு "வெற்றி வேல் வீரவேல் !" என்று முழங்கத்தானா இத்தனை சிரமப்பட்டோம் ? கூடாது - ஆச்சாரியார் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் மழபாடியாரிடமே ஒரு வார்த்தை சொல்லி.....

அரிகண்டன் அவருடைய பிரச்சனையை சுலபமாகத் தீர்த்துவிட்டான். சக்ரவர்த்திகளே அவரை சிலாகித்துப் பேசிவிட்டதால் ஆச்சாரியாருக்கு அம்பலவாணரிடம் மதிப்பு பல மடங்கு கூடிவிட்டதாம் ! மேடையின் நடுவில் அவர் நின்றுகொண்டாலும் ஏன் என்று கேட்க மாட்டாராம் ! அதனால் தாராளமாக அடுத்த காட்சிக்காகக் காத்திருக்கும் நடிகர்களுடன் அம்பலவாணரும் மேடையின் கீழ் வலப்புறத்தில் நின்றுகொண்டு நாடகத்தைப் பார்ப்பதில் தடையேதுமில்லையாம்.

பெரியதொரு நிம்மதி ஏற்பட்டது அம்பலவாணருக்கு.

***************************************************************************************
*******

ஏறக்குறைய ஒரு நாழிகை நேரம் கழித்து வாத்தியங்கள் வேகவேகமாக முழங்க ஆரம்பித்தன. தாள வாத்தியங்களான மத்தளமும் பறையும் நீண்டு கொட்டப்பட்டு திடீரென்று ஒரு எதிர்பாராத இடைவெளி விடப்பட, அந்த இடைவெளியில் - மௌனத்தில் - குழலும் வீணையும் மிக இனிமையாக எழுந்தன. பார்வையாளர்களின் எதிர்பார்ப்பு உச்சகட்டத்தை அடைய மேடையின் எழினி(1) சட்டென்று விலகியது.

*(1) திரை*

பெரியதொரு கணபதிப் பிள்ளையார் வரையப்பட்டிருந்த சீலை பின்புறம் காட்சியளிக்க, முன்புறத்தில் ஆச்சாரியார் அந்த வாரண நாயகருக்கு மலர்கள் தூவி அஞ்சலி செய்தார். பின்னணியில் வாத்தியங்கள் ஒலிக்க மேடையின் முன்புறம் வந்து நின்றுகொண்டு கம்பீரமான குரலில் கீழ்க்கண்டவாறு முழங்கினார் -

" சோழதேசத்தை என்றும் காணாத அளவிற்கு மேன்மையுறச்செய்து தஞ்சையில் செங்கோல் செலுத்திக்கொண்டிருக்கும் உடையார் ஸ்ரீ இராஜராஜ சோழச் சக்ரவர்த்திகளுக்கும் அவர்தம் அக்கன் பராந்தகன் குந்தவையாருக்கும் ஏனைய அரண்மனை மாதரசிகளுக்கும் முதன் மந்திரிகள், சேனாபதிகள், நாயகங்கள், கரணங்கள், உடன்கூட்டத்தார் மற்றும் அரசாங்க அதிகாரிகளுக்கும் இந்த நாடகத்தை இப்புனிதம்மிக்க

திருக்கற்றளி வளாகத்தில் அரங்கேற்ற அனுமதியளித்து உரிய உதவிகள் பலதும் நல்கிய ஸ்ரீகாரியத்தார் பொய்கை நாட்டுக் கிழவர் ஆதித்தன் சூரியனாரான தென்னவன் மூவேந்த வேளாருக்கும் மற்றும் கூடியிருக்கும் பொதுமக்கள் அனைவருக்கும் நமது குழுவின் அன்பு கலந்த பணிவான வணக்கங்கள் !

நண்பர்களே ! இந்நாள் எங்கள் குழுவிற்கு ஒரு பொன்னாள் ! கடந்த முப்பத்துநான்கு வருடங்களாக கூத்துக் கட்டும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் நமது குழு இன்றைக்கு ஒரு வித்தியாசமான நாடகத்தை அரங்கேற்கப் போகிறது. இதுவரை புராண இதிகாசங்களிலும் பண்டைய தமிழ் நூல்களிலும் சொல்லப்பட்டிருக்கும் வரலாறுகளையே ஆரியக் கூத்தாகவும் தமிழ்க் கூத்தாகவும் நாடகமாகப் போட்டுக்கொண்டிருந்த நாங்கள், முதன்முறையாக, இன்றைக்கும் நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மகத்தான மனிதரின் புனித சரித்திரத்தை நாடகமாக்கிக் காட்ட இருக்கிறோம். அந்த வரலாறு யாருடையது என்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். இன்றைக்கு நம் எதிரில் அமர்ந்துள்ள சோழச் சக்ரவர்த்திகள் உடையார் ஸ்ரீ இராஜராஜசோழரின் சரித்திரம்தான் அது ! வாழும் காலத்திலேயே வரலாறாகிவிட்ட அவரது வாழ்க்கை நமது உள்ளங்களை மேம்படுத்தும் - இளைஞர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கும் அற்புத சரித்திரமாகும். ஸ்ரீ இராஜராஜ விஜயம் என்று தலைப்பிடப்பட்டுள்ள இந்த நாடகத்தை முழுவதுமாகக் கண்டு களித்து ஆசி வழங்க சக்ரவர்த்திகளே நேரில் எழுந்தருளியிருப்பது நாங்கள் செய்த பாக்கியமாகும்.

நாடகத்தைக் கண்டு களித்து குழுவை ஆசீர்வதிக்க வேண்டுமென்று அனைவரையும் கேட்டுக்கொள்கிறேன் !"

மீண்டும் இசைக் கருவிகள் உச்சஸ்தாயியில் முழங்கின. திரை மூடப்பட்டு விலக்கப்பட, நாடகம் ஆரம்பமானது.

*****************************************************************************************
*******

மழபாடியார் பார்வையாளர்களின் பின்புறம் நின்றுகொண்டு சுற்றுப்புறத்தை மிகக் கவனமாக அலசிக்கொண்டிருந்தார். வேளாரோ நாடகத்தில் முழுவதுமாகத் தம்மைப் பறிகொடுத்துவிட்டதால் அவரிடமிருந்து எதையும் இனி எதிர்பார்ப்பதற்கில்லை. அனைவரின் கவனமும் நாடக மேடையில் இருக்குமென்று சதிகாரர்கள் நினைத்தால் அது தவறு - என் கவனம் எடுத்த காரியத்திலேயே நிலைத்திருக்கும்.

கற்றளி வளாகத்தை நாலாபுறங்களிலும் சூழ்ந்துள்ள மரங்களின் மேலிருந்து அம்போ ஈட்டியோ எறிந்துவிடுதல் சாத்தியம்தான். ஆனால்... ஆனால்.... தூரம் மிக அதிகமாயிற்றே ? குறி தவறும் சாத்தியக்கூறு மிக அதிகம். இத்தனை சிரமப்பட்டுத் திட்டமிட்டவர்கள் இப்படி அரைகுறையான முயற்சியிலா ஈடுபடுவார்கள் ? ஒருக்காலும் கிடையாது. அம்பலவாணர் சொல்வதுபோல் முயற்சியைத் தள்ளிப்போடுவார்களேயொழிய இன்று முயல மாட்டார்கள். ஒருவேளை நமது முழு முயற்சியால் மெய்க்காவல் படையின் கெடுபிடிகள் அதிகமாகி அவர்களால் நினைத்த முறையில் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியவில்லையோ என்னவோ ? இந்தத் தொல்லைகளெல்லாம் ஒழியட்டும் - சாவகாசமாக சக்ரவர்த்திகளின்

உயிரைக் குடிப்போமென்று புறமுதுகிட்டு ஓடிவிட்டார்களா ? அல்லது துழாய்க்குடியானின் மரணம் அவர்களின் திட்டங்களை மாற்றி விட்டதா ? ஏன் இதுவரை தாக்குதல் நடைபெறவில்லை ? இனித் தாக்குதல் நடைபெறுவதற்கு சாத்தியக்கூறுகள் மிகக் குறைவாயிற்றே... ஒருவேளை முன்பு யோசித்ததுபோல் பிரதானிகளில் ஒருவரே அரசரின் உயிரைக் குடிப்பதுதான் திட்டமோ ?

யோசிக்க யோசிக்கக் குழப்பம்தான் மிஞ்சுகிறது.

சிறிது நேரத்திற்குப்பின் மேடையின் பின்புறம் சென்று அம்பலவாணர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று பார்க்க வேண்டும். அவருடைய வேடத்தையும் வெட்கத்தையும் பார்த்து அடக்க முடியாமல் பொங்கிக்கொண்டு வந்த சிரிப்பை மிகுந்த சிரமத்தின்பேரில்தான் கட்டுப்படுத்திக்கொள்ள முடிந்தது.

பார்வையாளர் கூட்டத்தின் ஓரமாக மேடையை நோக்கி நகர ஆரம்பித்தார் மழபாடியார்.

****************************************************************************************
*******

மேடையில் நாடகத்தின் காட்சிகள் வேகவேகமாக அரங்கேறிக்கொண்டிருந்தன.

முதலில் சோழ நாட்டின் மண்வளம், நீர்வளம் முதலியவை கோடிட்டுக் காட்டப்பட்டன. அந்த நாட்டை சீர்மை மிகுந்த முறையில் நடத்திச்செல்லும் சோழவம்சத்தின் புகழ் பாடப்பட்டது. அந்தப் புகழ் மிக்க வம்சத்தில் அரிஞ்சய சோழரின் மகனாகத் தோன்றி பட்டமேற்கிறார் இரண்டாம் பராந்தகரான சுந்தரச் சோழர். அவருக்கு முதலில் ஒரு மகனும் ஒரு மகளும் பிறக்கிறார்கள். அவர்களுக்கு ஆதித்தன் மற்றும் குந்தவை என்று பெயரிடப்படுகிறது.

காட்சி மாறுகிறது.

தேவலோகத்தில் சிபிச் சக்ரவர்த்தியும் மனுநீதிச் சோழரும் சோழவர்மனும் மாந்தாதாவும் கோச்செங்கட் சோழரும் வேறு பல இஷ்வாகு குலத்துப் பேரரசர்களும் தேவராஜனான இந்திரன் முன் கூடியுள்ளனர். சபையில் சிறியதொரு அரம்பையர் நடனம் நடந்து முடிந்தபின் சிபிச் சக்ரவர்த்தி எழுந்திருக்கிறார்.

"ஓ தேவேந்திர ! எங்கள் குலம் மீண்டும் தெய்வங்களின் அருளால் மீண்டும் தழைக்க ஆரம்பித்துவிட்டது. எங்கள் பிரார்த்தனைகள் நிறைவேறிவிட்டன. ஆனால் எங்கள் எல்லோருடைய மற்றொரு பிரார்த்தனை எப்போது நிறைவேறுமென்று தெரியவில்லை. எங்கள் குலத்தில் வீராதி வீரர்களும் சூரர்களும் தீரர்களும் தோன்றியுள்ளனர். பக்திமான்கள் தோன்றியுள்ளனர். நிர்வாகத்தில் சிறந்த நெறியாளர் தோன்றியுள்ளனர். ஆனால் இந்த நற்குணங்கள் அனைத்தும் நிறைந்தவனாக சங்க காலத்தில் ஒரே ஒரு பேரரசன் தோன்றினான். கரிகால் வளவன் என்னும் பெயர்பெற்ற எங்கள் குலத்தின் அந்த இளவல் பூவுலகம் முழுவதையும் தன்னுடைய ஒரே வெண்கொற்றக் குடையின் கீழ்

கொண்டுவந்தான். அவன் ஆட்சியில் வாணிபம் செழித்தது. வளம் கொழித்தது. நிலமகள் மகிழ்ந்து அள்ளியள்ளிக் கொடுத்தாள். தேசமெங்கும் பக்தி பரவியது. அப்படியொரு பொற்காலம் மீண்டும் தென்னாட்டில் ஏற்படவேண்டும் ! மன்னாதி மன்னன் ஒருவன் பிறந்து எங்கள் குலத்திற்கு அழியாப் புகழை விட்டுச் செல்ல வேண்டும் !"

தேவேந்திரன் முகம் புன்முறுவலால் மலர்கிறது. "சோழ குலத்து அரசர்களே ! உங்கள் பிரார்த்தனை நிறைவேறும் நேரம் நெருங்கிவிட்டது. தற்போது நெறிதவறாமல் அரசாண்டு கொண்டிருக்கும் இரண்டாம் பராந்தக சோழச் சக்ரவர்த்திக்கும் அவரது பிரிய பட்டமகிஷி வானவன் மாதேவிக்கும் திருமாலின் அம்சத்தோடு ஐப்பசி மாதம் சதய நந்நாளில் ஒரு திருக்குழந்தை அவதரிக்கப் போகிறது. அக்குழந்தை சோழநாட்டையும் தென்னாட்டையும் முன்னெப்போதும் கண்டிராத மகான்னத நிலைக்கு உயர்த்தப் போகிறது !"

சிபிச் சக்ரவர்த்தியின் முகத்தில் குழப்பம்...."பராந்தகருக்கா ? அவருக்கு ஏற்கனவே ஒரு ஆண் மகவு பிறந்து விட்டதே - எங்கள் குல வழக்கப்படி முதல் குழந்தைக்கல்லவா பட்டம் கட்டப்படும் ?"

தேவேந்திரன் புன்னகைக்கிறான் - "சிபிச்சக்ரவர்த்தியே ! தெய்வங்களின் திருவிளையாடல்களை மானுடர்கள் மட்டுமல்ல, தேவர்களான நம்மாலும் புரிந்துகொள்ள முடியாது. பொறுத்திருந்து பார்க்க வேண்டியதுதான் !"

மீண்டும் பூவுலகம். வானவன் மாதேவி மீண்டும் சூலுறுகிறாள். மிக மிக மங்கலமான கனவுகள் அவளுக்கு ஏற்படுகின்றன. ஆறு தந்தங்களுடன் கூடிய வெள்ளை வாரணம் அவளை அடிக்கடி ஆசீர்வதித்துவிட்டுப்

போகிறது. ஒரு தெய்வீகப் பசு தங்கம் வைரமென்று பொழிகிறது. நீண்டு உயர்ந்த விருட்சமொன்று தன் விழுதுகளில் சகல செளபாக்கியங்களையும் வாரி இறைக்கிறது. நிமித்தகர்கள் இவற்றை தேவலோக ஐசுவரியங்களென்று குறிப்பிடுகின்றனர்.

அரண்மனைச் சோதிடர்கள் அவள் மகவு ஈனும் நாளை மிகுந்த ஆர்வமுடன் எதிர்நோக்கி நிற்கின்றனர். ஐப்பசி சதய நட்சத்திரத்தில் சகல சாமுத்ரிகா லட்ஷணங்களுடனும் உள்ளங்கைகளில் சங்கு சக்கர ரேகைகளுடனும் அந்தக் குழந்தை பிறக்கிறது. குழந்தையின் சிறிய பாதங்கள் பூமியில் பட்ட அந்தக் கணத்தில் நிலத்தில் வாழும் பறவைகளும் விலங்குகளும் மரஞ்செடி கொடிகளும் ஒரு தெய்வீக ஸ்பரிசத்தால் சிலிர்த்துப் போகின்றன !

குழந்தை பிறக்கும் நந்நாளில் சோழ நாட்டில் பல வயதான பெண்களுக்கு நல் நிமித்தங்கள் ஏற்படுகின்றன. வானம் சூல் கொண்டு பொழிகிறது. பசுக்கள் வழக்கத்திற்கதிகமாக பால் சுரக்கின்றன. தஞ்சை மாமணிக்கோயிலின் கோபுரத்தை கருடன் சுற்றிச் சுழன்றதை பெரியவர்கள் காணுகின்றனர். தேசமே மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்குகிறது. தேவலாகத்திலும் மகிழ்ச்சித் திவலைகள் தெறிக்கின்றன.குழந்தை பிறந்தவுடன் பாலுக்கு அழாமல் சிரித்துக்கொண்டு நின்றதாம் ! இறையருளோடு பிறந்த குழந்தையாதலால் அந்தக் குழந்தைக்கு அருமொழி என்று பெயரிடுகின்றனர்.

பழையாறையில் அந்தக் குழந்தை மெல்ல மெல்ல வளர்கிறது. விற்போர், மற்போற், வாட்போர், அந்தளகப் போர், களிற்றுப் போர், புரவிப்போர் என்று அனைத்து வகைப் போர்களிலும் அருமொழி தேர்ச்சிபெறுகிறான்.

அவனுடைய வேகமான வளர்ச்சியை தேசமே பூரிப்போடு கவனித்து வருகிறது.

அந்த நாடகத்தைக் பார்த்துக்கொண்டிருந்தவர்களுக்கு மேற்கூறிய காட்சிகளெல்லாம் கற்பனையாகத் தெரியாமல் நிஜமாக நேரில் நடப்பதுபோலவே தெரிந்தது. நாடகம் துவங்கி மூன்று நாழிகைகள் முடிந்து விட்டதை எவரும் உணரவில்லை - அனைவரும் அந்தக் கூத்தின் வேகமான காட்சிகளில் தங்களை மறந்து மூழ்கியிருந்தனர்.

அனைவரும் என்றா சொன்னோம் ? தவறு. ஒரே ஒருவரைத் தவிர மற்ற அனைவரும் காட்சியமைப்பில் மூழ்கியிருந்தனர். அந்த ஒருவர் எந்தக் கணத்திலும் எந்த வடிவத்திலும் தாக்குதல் வரலாமென்கிற முனைப்போடு கூர்மையாக நாலாபுறங்களிலும் பார்வையை வீசிக்கொண்டிருந்தார்.

## எதிர்பாரா சந்திப்பு

தட்சிண தேசத்தின் மேற்கே மலைநாட்டின் அடர்ந்த காடுகளின் நடுவே ஒரு இரகசிய இடத்தில் பதினைந்து நாட்களாக மழை வெய்யில் பொருட்படுத்தாது விடாமல் நடந்துகொண்டிருந்த அந்த அபிச்சாரக ஹோமமானது உச்சக் கட்டத்தை வேகமாக நெருங்கிக்கொண்டிருந்தது. வெண்களிமண், பால், தயிர், கோதுமை மாவு, பால்வடியும் மரங்களின் பட்டை, அரைத்த சந்தனம், பாதரசம் (1) முதலானவை கொண்டு ஆகமங்களில் குறிப்பிட்டுள்ள அளவில் சமைக்கப்பட்டிருந்த அந்த நீண்ட அபிச்சாரக லிங்கம் அந்தச் சூழ்நிலைக்கு சற்றும் பொருத்தமின்றி எழுந்து

நின்றது. இறைவனைக் குறிக்கும் வடிவமாகவே இருந்தாலும் இருட்டத் துவங்கிவிட்ட அந்த அந்திமாலைவேளையில் காட்டின் நடுவில் நான்கே நான்கு அந்தணர்களால் நடத்தப்பட்ட அந்த வேள்வித்தீயின் முன் லிங்கம் சற்று பயங்கரமாகத்தான் காட்சியளித்தது.

***(1) எதிரிகளை அழிக்கப் புரியப்படும் அபிச்சாரக ஹோம லிங்கங்கள் இவ்வாறு சமைக்கப்படும் என்று காமிகாககம் சொல்கிறது. பார்க்க*** *Elements of Hindu Iconography, T.A.Gopinath Rao - Vol II / Part I,* ***பக்கம்*** *76*

மழையிலிருந்து வேள்வித் தீயைக் காப்பாற்றும் பொருட்டு அங்கு சிறியதொரு பந்தல் போடப்பட்டிருந்தது. அந்தப் பந்தலின் நான்கு பக்கங்களிலும் நான்கு சேர நாட்டுக் காவல் வீரர்கள் இருட்டைக் கிழித்துக்கொண்டு காவல் புரிவதைக் காண்கிறோம்.

வேள்வித் தீயின் நான்கு பக்கங்களிலும் திசைக்கொருவராக அந்த அந்தணர்கள் அமர்ந்து சமித்துக்களால் வேகவேகமாக நெய்வார்த்துக் கொண்டிருந்தனர். அந்த நால்வரின் முகங்களிலும் பதினைந்து நாள் தாடி காணப்பட்டது. நால்வரின் குடுமியும் அவிழ்க்கப்பட்டு பின்முதுகில் அலைஅலையாகக் கருங்கேசம் படர்ந்திருந்தது.உடல் உபவாசம் காரணமாக பெரிதும் தொய்ந்திருந்தாலும் அவர்களின் கண்களில் அபரிமிதமானதொரு வெறி காணப்பட்டது. அதிலும் கிழக்கு திசை நோக்கி அமர்ந்திருந்த அந்த வயதான அந்தணனின் கண்கள் கோவைப்பழமாகச் சிவந்திருந்தன. இருளில் அவர்களது பயங்கர முகங்களைக் காணச்

சகிக்காமல் வேறு புறம் திரும்பிக்கொள்கிறோம்.

அந்தக் குடிசையிலிருந்து சொல்லமுடியாததொரு துர்நாற்றம் எழுந்ததுபோல தோன்றியது. அது வேள்விக்காகச் சேகரிக்கப்பட்டுக் கிடந்த சுடுகாட்டு மண், வாலைக் குமரியின் தலைமுடி, ஆட்டு இரத்தம் முதலான பல்வேறு பில்லிசூனியப் பொருட்களிலிருந்து எழுந்ததா அல்லது அங்கே சூட்சுமமாக ஆவிர்பரித்திருந்த துர்சக்திகளிடமிருந்து எழுந்ததா என்று நம்மால் உறுதியாகச் சொல்ல முடியவில்லை.

சடாலென அந்த வயதான அந்தணன் எழுந்து நின்று வானத்தை நோக்கி கீழ்கண்டவாறு அலறினான் :

"இங்கு கூடியிருக்கும் சூட்சும சக்திகளே ! ஏவல் தேவதைகளே ! அவற்றின் இணையில்லாத தலைவியாக விளங்கும் காள படாரி தேவியே ! நாற்பத்து மூன்று வருடங்களாக உங்களை ஒரு நாள் விடாமல் உபாசித்து வந்ததன் பலனை இன்று அடைய நீங்கள் உதவிபுரிய வேண்டும் ! என் குடும்பத்தை ஈவிரக்கமின்றி நசுக்கிய அந்தக் கொலைகாரனின் உயிர் இன்றோடு ஒரு முடிவுக்கு வரவேண்டும் ! அவனுடைய கர்ம பலன் பலமானது என்பதை அறிவேன் - அதனை முறித்து அவன் உயிரைக் காவுகொள்ளத்தான் இந்த ஹோமத்தை வளர்த்து அதன் அவிர்பாகத்தை உங்களுக்கு அளிக்கிறேன் ! இன்றோடு அவன் ஆயுள் முடியவேண்டும் ! முடியவேண்டும் ! முடிந்தேயாக வேண்டும் - தெரிந்ததா ?"

அந்த உறுமல் காட்டை ஒரு கணம் உலுக்கிற்று. எங்கிருந்தோ உஷ்ணக் காற்றொன்று திடீரென்று கிழக்கு திசையிலிருந்து புறப்பட்டு அந்த ஹோமத்தீயை அலைக்கழித்துவிட்டுச் சென்றது. ஒருகணம் தீ பெரிதும்

அடங்க அந்த இடத்தை அந்தகாரம் சூழ்ந்தது. மற்ற மூன்று அந்தணர்களும் அவசர அவசரமாக நெய்யைத் யாகத்தணலில் சொரிந்து தீ அணையாமல் காக்க முற்பட்டார்கள்.

***************************************************************************************
*******

திருக்கற்றளி வளாகத்தில் நாடகம் தொடர்ந்துகொண்டிருந்தது.

இரண்டாம் பராந்தகரான சுந்தரச் சோழர் பாண்டியனை எதிர்த்துப் போருக்குப் புறப்படுகிறார். அவரோடு பதினைந்து வயதுகூட நிரம்பாத பட்டத்து இளவலான இரண்டாம் ஆதித்தனும் பலர் தடுத்தும் கேளாமல் போருக்குப் புறப்படுகிறான். சேவூருக்கருகில் இரண்டு படைகளும் சந்திக்கின்றன. அதுவரை தமிழ்நாடு பார்த்தறியாத ஒரு பயங்கரமானதொரு போர் அந்தக் களத்தில் அரங்கேறுகிறது. போரில் ஆதித்தன் சண்டமாருதமாகச் சுழன்று சுழன்று பகைவரின் படைகளை வெட்டி வீழ்த்துகிறான்....அவனுடைய வாளுக்கு ஆயிரக்கணக்கான பாண்டிநாட்டு வீரர்கள் பலியாகின்றனர்.... சேர நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான யானைகள் தத்தம் துதிக்கைகளையிழந்து இரத்தம் கொட்டக் கொட்ட பயங்கரப் பிளிரல்களோடு உயிரை விடுகின்றன(2).... அராபிய குதிரைப் படைகட்கு நடந்த பாதிப்பைச் சொல்லவேண்டியதில்லை.

*(2) Epigraphica India, Verse 28.*

தன்னுடைய பலம் மிகுந்த யானைப் படையே அழிந்துபோனதைக் கண்டு "சோழன் தலைகொண்ட" வீரபாண்டியன்(3) சஹ்யாத்ரி மலைக்காடுகளில் அமைந்திருந்த இரகசிய சமண முழைகளில் சென்ற ஒளிய முற்படுகிறான். அவனை உயிரோடு விட்டால் திரும்பத் திரும்பத் தொல்லைகள் நிகழுமென்பதால் இளவலான ஆதித்தன் அவனைத் துரத்திச் சென்று இறுதியில் கொன்றுவிடுகிறான். கொன்றதோடு மட்டுமல்லாமல் வீரபாண்டியன் தலையை மிகவும் அருவருக்கத்தக்க முறையில் தஞ்சைக் கோட்டை வாயிலில் சொருகி வைத்து(4) தனக்கும் தன் குலத்திற்கும் தீராப் பழிதேடிக் கொள்கிறான். இது பாண்டிநாட்டு மக்களை மிகவும் பாதிக்கிறது.

*(3) வீரபாண்டியன் தன்னை "சோழன் தலைகொண்ட" வீரபாண்டியன் என்று அழைத்துக்கொண்டான். அதுவரை அப்படிப்பட்ட அருவருப்பானதொரு பட்டத்தை வேறெந்த தமிழக மன்னரும் பூண்டதில்லை. இவன் கைகளில் உயிரையிழந்த சோழன் யாரென்று உறுதியாகத் தெரியவில்லை - முதலாம் பராந்தகனின் மகனான உத்தம சீலியாக இருக்கலாம் என்பது குடந்தை சேதுராமன் கருத்து (பார்க்க Early Cholas - Mathematics Reconstructs the Chronology). பின்னர் ஆதித்தன் அவனைக்கொன்று பழிவாங்கும் விதமாக தன்னை "வீரபாண்டியன் தலைகொண்ட" கோப்பரகேசரியென்று அழைத்துக்கொண்டான். "பாண்டியன் தலைகொண்ட" என்று பொதுவாகக் கூறி மொத்த பாண்டியர் குலத்தையும் அசிங்கப்படுத்தாமல் குறிப்பாக "வீரபாண்டியன் தலைகொண்ட" என்று கூறிக்கொள்வதைக் கவனிக்கவும்.*

*(4) பார்க்க இராஜேந்திர சோழனின் எசாலம் செப்பேடுகள். இரண்டாம் ஆதித்தன் எதற்காக இவ்வாறு செய்தான் ? ஒருவேளை "சோழன் தலைகொண்ட"தை பெருமையாக நினைத்த வீரபாண்டியனும் உத்தம சீலியின் தலையை மதுரைக்கோட்டையின் வாசலில் சொருகி வைத்திருப்பானோ ? நாமறியோம் !*

பாண்டிய நாட்டைத் தொடர்ந்து ஈழமும் சோழரின் வாளுக்குப் பணிகிறது. இராஜ்ஜிய பாரத்தை பட்டத்து இளவரசனான ஆதித்தனிடம் ஒப்புவிப்பது பற்றி யோசிக்க ஆரம்பிக்கிறார் சுந்தரச் சோழர்.

திடீரென்று மேடையில் இருள் சூழந்தது. பின்னணிக் குரல் "சோழ நாட்டை சிறிது காலம் கலி சூழ்ந்தது. ஆதித்தன் விண்ணுலகைக் காணும் ஆசையில் மேற்கு திசையில் மலைகளின்பின் சென்று மறைந்தான். பரகேசரி உத்தமச் சோழர் பட்டமேற்றார் !"(5) என்றது. ஆதித்த கரிகாலனின் அகால மரணமும் அதற்குப்பின் நிகழ்ந்த அரசியல் குழப்பங்களும் இவ்வாறு சூசகமாக விளக்கப்பட்டன.

*(5) நாடக ஆசிரியரின் இக்கற்பனையை பின்னாளில் திருவாலங்காட்டுச் செப்பேடுகளை எழுதியவர் எடுத்தாண்டுள்ளார் என்று கொள்க. இச்செப்பேடுகளிலும் ஆதித்தன் மரணம் இவ்வாறே கூறப்பட்டுள்ளது.*

அருமொழி இளவயதை அடைகிறான். நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் பயணப்படுகிறான். ஆங்காங்கே இளையோர்

குழுமங்கள் ஏற்படுத்துகிறான். இந்தக் குழுமங்கள் முன்னாளைய பல்லவர்காலக் கடிகைகளைப் போன்று கல்வியையும் போர்ப்பயிற்சியையும் ஒருங்கே அளிக்கும் மையங்களாகத் திகழ்கின்றன. கடற்பயணங்களும் இச்சமயத்தில் அருமொழிக்கு வாய்க்கின்றன. கடற்படையைப் பற்றியும் கடற்போர்கள் பற்றியும் சாவக தேசத்து வியாபாரிகளிடமிருந்து அறிந்துகொள்ள இந்த வாய்ப்பு உதவுகிறது.

காலம் செல்கிறது. உத்தமச் சோழர் அருமொழிக்குப் பட்டம் கட்டி இரண்டாண்டுகளுக்குப்பின் அவனை அரசனாக்குகிறார். அத்துடன் சோழநாட்டின் மகோந்நதமான காலமும் தொடங்குகிறது.

எண்ணில்லாத போர்கள் - வெற்றிக்குமேல் வெற்றி என்று சோழ சாம்ராஜ்ஜியத்தின் நீள அகலங்கள் நாளுக்கு நாள் விரிந்து பரவுகின்றன. சேர தேசம், வடுக தேசம், பாண்டி நாடு, ஈழம், சளுக்க தேசம் என்று தென்னிந்தியா முழுவதும் ஒரு குடையின்கீழ் கொண்டு வந்து இராஜராஜர் என்ற நாமம் தரிக்கிறார் அருமொழிவர்மர். நாட்டின் நீள அகலங்கள் அதிகரித்ததால் நிர்வாக சீரமைப்பு தேவைப்படுகிறது... நாட்டின் மொத்த நீள அகலங்களும் அளக்கப்பட்டு நன்செய் - புன்செய் /தேவதான - பிரம்மதேய நிலங்கள் என்று பாகுபடுத்தப்படுகிறன.

சிதம்பரத்தில் பண்டைய தேவாரத்தின் புதிய பாடல் ஓலைகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. புதிய பதிகங்கள் அரசரின் மனதில் பெரிய மாறுதல்களை தோற்றுவிக்கின்றன. தன்னுடைய குருவிடம் சிவ தீட்சை பெற்று சிவபாத சேகரனாகிறார் இராஜராஜர். நாடு காணாத திருக்கற்றளி எழுப்பவேண்டுமென்கிற ஆவலை தன் உற்றாறிடம் பகிர்ந்து கொள்கிறார்.

முதலில் அனைவருக்கும் மலைப்பு ஏற்பட்டாலும் அவருடைய பிடிவாதத்தினால் அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர்.

*************************************************************************************
*******

மிகுந்த மனக்கட்டுப்பாடோடு நீண்ட நேரம் நாடகத்தை கவனிக்காமலிருந்த மழபாடியாரையே நாடகம் ஒரு கட்டத்தில் கட்டிப்போட்டு விட்டது. குறிப்பாக அருமொழி பட்டமேற்றதிலிருந்து நடந்த நிகழ்ச்சிகளை அவர் தன்னை மறந்து கவனித்துக்கொண்டிருந்தார் - அந்த சரித்திரத்தில் அவருடைய சரித்திரமும் பின்னிப்பிணைந்திருக்கிறதல்லவா ? அவர் மட்டுமல்ல - புராண இதிகாசங்களையே அதுவரை கண்டு வந்திருந்த பார்வையாளர்கள் அனைவருமே அந்த சமகாலச் சரித்திரத்தில் தங்களை மறந்து ஈடுபட்டிருந்தார்கள்.

குறிப்பாக இராஜராஜராக நடித்தவரின் வேடப் பொருத்தம் மிகப் பிரமாதமாக அமைந்திருந்தது. ஆச்சாரியார் குழுவின் மூத்த நடிகரும் நல்ல உடற்கட்டு வாய்ந்தவருமான ஒருவரே அந்த வேடத்தைத் தாங்கியிருந்தார். பேரரசருக்கு முன்னால் அவருடையே வேடத்தைக் கட்டி நடிப்பதற்கு முதலில் அவர் சற்று தயங்கினாற்போல் தெரிந்தது. ஆனால் நேரம் செல்லச் செல்ல அந்த வேடமே அவரை ஆக்கிரமித்துவிட்டது. ஏறக்குறைய பேரரசராகவே மாறிவிட்டார் அவர். குறிப்பாக தேவாரப் பதிகங்களைப் படித்து மனம் உருகி சிவதீட்சை பெற்றுக் கொள்ளும் காட்சியில் மற்றவர்களைப் போலவை மழபாடியாரும் நெக்குருகிவிட்டார்.

சட்டென்று கண்களில் துளிர்த்துவிட்ட நீரால் நாடக உலகிலிருந்து பூவுலகிற்கு வந்து சேர்ந்தார் அவர் !

அடக் கடவுளே ! இதென்ன கொடுமை - நாடக மேடையே நோக்கி நடந்துகொண்டிருந்த நாம் நம்மை மறந்து நாடகத்தில் ஈடுபட்டுவிட்டோமே - அடடா, பொன்னான ஒரு நாழிகை நேரம் கழிந்துவிட்டது ! நல்ல வேளையாக அசம்பாவிதம் எதுவும் ஏற்படவில்லை - சே, என்ன மனிதன் நான் ! எப்படி என்னை மறந்து நாடகத்தில் மனதைப் பறிகொடுத்தேன் ?..... நாடகத்தைச் சொல்ல வேண்டும் ! இப்படியொரு அற்புதமான நாடகத்தை சரிவரப் பார்க்கமுடியாமல் போனது நமது துரதிருஷ்டம்தான் - போனது போகட்டும் - மேடையின் பக்கலுக்குச் சென்று அரசரைச் சுற்றி நிற்கும் திருமெய்க்காவல் வீரர்கள் தத்தம் கடமையைச் செய்துகொண்டிருக்கிறார்களா அல்லது நம்மைப்போல் தம்மை மறந்து மூடர்களாக நாடகக் காட்சிகளில் ஈடுபட்டுவிட்டார்களா என்று கவனிக்க வேண்டும்.

சூழ்ந்திருந்த பார்வையாளர் கூட்டத்தின் ஓரமாக வழி உண்டுபண்ணிக்கொண்டு மெதுவாக முன்னேற ஆரம்பித்தார் மழபாடியார்.

**************************************************************************************
*******

அரண்மனை அந்தப்புறத்தின் மையமாக அமைந்துள்ள அந்த பூஜையறையில் நெருக்கமாகப் பெண்கள் அமர்ந்திருந்தார்கள்.

அறையின் நடுநாயகமாக பட்டத்தரசி தந்தி சக்தி விடங்கியாரும் பஞ்சவன் மாதேவியாரும் கூப்பிய கரங்களுடன் சோழர்குல தெய்வம் நிசும்பசூதனியின் சிலாரூபத்தின்முன் அமர்ந்திருந்தார்கள். அவர்களது கண்கள் மூடப்பட்டிருக்க திருவாய் ஏதோ பிரார்த்தனைகளை முணுமுணுத்துக்கொண்டிருந்தன. அன்னையின் முன் போடப்பட்டிருந்த புஷ்பங்களிலிருந்து அங்கு விமர்சையான பூஜையொன்று அரங்கேறி முடித்தாற்போல் காணப்பட்டது.

அத்தனை பெண்கள் கூடியிருந்தும் அங்கே பெருத்ததொரு மௌனம் குடிகொண்டிருந்தது நமக்கு வியப்பையே அளிக்கிறது.

மனமுருகிய பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்தார் தந்திசக்தி விடங்கியார்.

"தாயே ! பேதையான எனக்கு அரசியல் சூழ்ச்சிகள் புரிவதில்லை. ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு மாள்வது எதற்காக என்று புரியவில்லை. இவருக்கு நண்பர்கள் அதிகம் - எதிரிகள் மிக மிக அதிகம். இன்று அவருடைய உயிருக்கு ஒரு கண்டம் ஏற்படப்போகிறதென்று குருதேவர் சொல்லியிருக்கிறார். அந்த கண்டத்திலிருந்து நீதான் அவரைக் காக்க வேண்டும் ! தாயே ! எங்கள் குல தெய்வமே - எல்லா தீய சக்திகளிடமிருந்து அவரை நீதான் காக்க வேண்டும்... காப்பாயா ? தாயே - சொல் ! காப்பாயா ??"

சட்டென்று அந்த அறை புழுக்கம் கண்டது. அந்தப் புழுக்கத்தை மீறி மேற்கு சாளரத்திலிருந்து எங்கிருந்தோ ஒரு காற்று திடீரென்று அறைக்குள் புகுந்து நிசும்ப சூதனி தேவியின் முன் ஏற்றப்பட்டிருந்த பெரிய விளக்கின்

சுடரை ஏறக்குறைய அணைந்துவிடும் நிலைக்கு அலைக்கழித்தது....

"அப்போது ஆபத்து உறுதியா அம்மா ? " என்றபடி அலறி வேரற்ற மரமாக தேவியின் காலடியில் வீழ்ந்தார் தந்தி சக்தி விடங்கியார்.

************************************************************************************************
*******

கூட்டத்தை விலக்கிக்கொண்டு மிக மெதுவாகவே முன்னேறிக்கொண்டிருந்த மழபாடியார் அவரைப்போலவே மறுதிசையிலிருந்து கூட்டத்தைப் பிளந்துகொண்டு வந்துகொண்டிருந்தவரை சரிவரக் கவனிக்காமல் நேராக மோதிக்கொண்டார் ! மோதப்பட்டவர் கீழே விழுந்துவிட - மழபாடியார் விழாமல் சமாளித்துக்கொண்டாலும் அவருடைய இடைக்கச்சில் கட்டப்பட்டிருந்த ஓரிரு பொருட்கள் கீழே விழுந்து சிதறின... பொருட்களை எடுப்போமென்று கீழே அவர் கீழே குனிய - ஏறக்குறைய அதே சமயத்தில் அவரால் மோதப்பட்ட நபர் கீழிருந்து எழுந்திருக்க முற்பட - இருவருடைய தலைகளும் மோதிக்கொண்டன !

இதேதடா விவகாரம் ? என்றபடி நிமிர்ந்தவர் கீழிருந்து தலையைத் தேய்த்தபடி எழுந்திருக்கும் உருவத்தைக் கண்டு திடுக்கிட்டார் - அது ஒரு பெண்பிள்ளை ! "மன்னித்துக்கொள் அம்மா !" என்ற மழபாடியாரை அவளும் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். மேடையிலிருந்து வெளிச்சம் ஓரளவிற்கு மழபாடியாரின் முகத்திலும் விழுந்ததால் அவருடைய முகம் அவளுக்கு நன்றாகவே தெரிந்தது - ஆனால் அவளுடைய முகத்தை

அவரால் காணமுடியவில்லை. "தா..ங்..க..ளா..?" என்று மிக மெல்லிய குரல் அவருடைய உதடுகளிலிருந்து எழுந்தது.

அந்தக் குரல் ! அந்தக் குரல் ! ஆஹா - மனதின் அடியாழத்தை பிளந்துகொண்டு அதன் இரகசியங்களையெல்லாம் ஒரே வீச்சில் புரட்டிப்போட்டுவிடும் அந்தக் குரல்... அடடா - கேட்டு எத்தனை யுக யுகாந்திரங்களாகின்றன.....

மழபாடியார் அவளுடைய முகத்திலிருந்து தன் விழிகளை ஒரு கணம்கூடக் கீழே இறக்க மனமில்லாமல் "இப்படி வெளிச்சத்திற்கு வா அம்மா !" என்று மெல்லிய குரலில் புகன்றார்.

அவள் ஒரு கணம் தயங்கினாற்போல் தெரிந்தது. அடுத்த கணம் அந்தத் தயக்கத்தை விடுத்து குனிந்த தலையுடன் அவரைப் பின்தொடர்ந்தாள் அந்தப் பெண்மணி. இருவரும் மேடைக்கு பத்து - பதினைந்து கோல் இடைவெளியில் வலப்பக்கம் பந்தம் சொருகப்பட்டிருந்த ஒரு இடத்தை அடைந்தார்கள்.

வெளிச்சத்தில் அவளுடைய குனிந்த முகத்தைப் பார்த்தார் மழபாடியார்..... ஆஹா ! நாம் நினைத்தது சரி - அவளேதான் ! அவருடைய வாழ்வில் ஒரு காலகட்டத்தில் வசந்தத்தை வாரிச்சொரிந்த தேவதையேதான் அவள் ! எத்தனை யுகங்களாயிற்று பார்த்து.... அடடா - எத்தனை காலமாகியும் அந்த முகத்தில் எழில் சிறிதும் குறையவில்லையே ! உடல் சற்று பூசினாற்போல் காணப்படுகிறது - மற்றபடி குருகாடியில் ஒருகாலத்தில் நாம் அன்றாடம் தரிசித்த அதே பொன்னெழில் முகம்தான் !

"நீ...ங்...கள்.....நீ....நீயா ?" என்றார் மழபாடியார்.

அவள் சற்று தயங்கி நிமிர்ந்து பார்த்தாள்.

பார்த்தவள் அப்படியே சிலையானாள்.

அவர்தான்.... அவரேதான் ! அதே நீண்ட கரிய விழிகள். வில்லைப்போல் வளைந்திருக்கும் நெரிந்த புருவங்கள். கண்களில் பழைய பரபரப்புப்போய் ஒரு நிதானம் வந்துவிட்டது. உறுதியான தாடை - கூர்மையான நாசியின் கீழிறங்கும் மீசை - என்ன கம்பீரமான திருமுகம் ! அடடா - எத்தனை ஆண்டுகளாயின ஐயா ! உன் தரிசனம் இன்று கிடைத்ததே - தில்லைக்கூத்தனை நான் வழிபட்டது வீண்போகவில்லை !

கரகரவென்று அவள் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரால் மழபாடியார் ஆடிப்போனார். எதற்கும் கலங்காத அவரது இரும்பு உள்ளமும் கலங்கிவிட்டது.

"மதுரா ! நீதானா ! எத்தனை ஆண்டுகளாகிவிட்டன சந்தித்து - எப்படியிருக்கிறாய் மதுரா ? என்ன செய்துகொண்டிருக்கிறாய் ?"

"மதுரா !" என்ற அவரின் அழைப்பே அவளுடைய இதய நாளங்களில் புகுந்து வயிற்றைப் புரட்டிப்போட்டது. அடடா ! இத்தனை வாஞ்சையாக நம்மை அழைக்கக்கூடியவர் உலகில் இவர் ஒருவர்தான் ! பொறு - அவர் கேட்ட கேள்விக்கு விடையளி !

"நான் - நான்.... திருவாரூர் தளிச்சேரியில்... தளிச்சேரிப் பெண்டாக பல

காலம் பணியாற்றி தற்போது பதியிலாளாக.....(சிறிது மௌனத்திற்குப்பின்)...சில பெண்களின் தலைக்கோலியாக பணியாற்றி வருகிறேன்..."

பதியிலாள் ! தலைக்கோலி - அப்படியென்றால் ??? இவள் திருமணமே செய்துகொள்ளவில்லையா ? ஆஹா !

"மதுரா.....நீ...... நீ பதியிலாளாகவா ஆகிவிட்டாய் ?"

"ஆம் !"

"உன்னோடு நிறைய பேசவேண்டும் மதுரா ! தனியாக உன்னோடு நிறைய பேசவேண்டும். என்வாழ்வில் விடைகாணமுடியாத கேள்விகள் சிலவற்றுக்கு நீதான் விடைசொல்லவேண்டும் - கிடக்கட்டும் ! தஞ்சைக்கு எதற்காக வந்தாய் - எங்கே தங்கியிருக்கிறாய் ?"

"பெரிய திருக்கற்றளியின் நாயகத்தின் அழைப்பின் பேரில் தஞ்சை வந்தேன் - எனக்கு நாட்டிய நாடகங்களில் சிறிது அனுபவம் உண்டு. இந்த நாடகத்தில் சில தளிச்சேரிப் பெண்டிரும் வேடங்கட்டுகிறார்கள். அவர்களின் நாடகத்திற்குப் பொருத்தமான நாட்டியம் சொல்லித்தருவதற்காக வரவழைக்கப்பட்டேன். தளிச்சேரியின் வடசிறகில்தான் தங்கியிருக்கிறேன் !"

"மதுரா ! மிகச் சிக்கலான ஒரு பிரச்சனையில் தற்போது உள்ளேன் - உன்னிடம் அதிகம் பேசமுடியவில்லை. நாளை மறுநாள் தளிச்சேரிக்கு ஆளனுப்பினால் என் அரண்மனைக்கு வருவாயா ?"

"தங்கள் சித்தம் ! இந்தாருங்கள் - உங்கள் இடைக்கச்சிலிருந்து கீழே விழுந்த பொருட்கள் !"



அவரிடம் கொடுக்கும்போது அவருடைய கரங்களை அவளின் கரங்கள் ஸ்பரிசித்தன. பளிச்சென்று உள்ளுக்குள் ஏதோ ஒன்று ஓடியது...மெய்சிலிர்த்துப்போய் தலையைக் குனிந்துகொண்டாள் மதுரா என்கிற மதுரவாசகி.

அப்போதுதான் அதனை கவனித்தாள்.

## இறுதிக் கட்டம்

அம்பலவாணர் மேடைக்கு மிக அருகில் செங்கமலத்துடன் நின்றுகொண்டு நாடகத்தை அணு அணுவாக இரசித்துக்கொண்டிருந்தார். அவருக்கு அருகில் அடுத்த காட்சிக்கான நடிகர்கள் அவ்வப்போது திரண்டு நிற்பதும் சடசடவென எழினி கீழிறங்கும் சமயம் மேடையேறுவதும் அவரது கவனத்தைக் கலைக்கவேயில்லை. அவருக்கு நேர் மாறாக செங்கமலம் அது என்ன ? இது என்ன ? இங்கு நடந்துகொண்டிருக்கும் கதையென்ன என்று அவரைத் துளைத்துக்கொண்டிருந்தாள். சரித்திரம் படைக்கப்போகும் ஒரு சரித்திர நாடகத்தை அருகில் நின்று பார்க்கும் வாய்ப்புக் கிட்டிய மகிழ்ச்சியில் அம்பலவாணரும் மிகப் பொறுமையாக பல கேள்விகளுக்கு பதில் சொல்லியும் ஓரிரு கேள்விகளுக்கு மௌனம் காத்தும் நிலமையை சமாளித்துக்கொண்டிருந்தார்.

நாடகத்தில் பெரிய திருக்கற்றளி கட்டப்போவதைப் பற்றி உடையாராகிய இராஜராஜசோழர் சோழநாட்டின் தலைமைத் தச்சர்களுடன் விவாதிக்கிறார். ஸ்ரீ விமானம் இத்தனை கோல்கள் - ஏறக்குறைய மூன்று பனை உயரம் - என்றால் அதற்கு எத்தனை கருங்கற்கள் தேவைப்படும் ? விமான வடிவம் ஆகமப்படி எந்த வடிவத்தில் அமைக்கப்பட வேண்டும் ? அத்தனை பெரிய எடையை நிலத்தில் எவ்வாறு இறக்குவது என்று விவாதம் ஓடிக்கொண்டிருக்கிறது. தச்சர்கள் ஓரளவிற்கு பொறியியல் நுட்பங்களை சீர்தூக்கி ஆராய்ந்து வடிவம் இப்படித்தான் வரவேண்டுமென்று முடிவெடுக்கிறார்கள்.

கற்றளிக்கான இடம் ஆராயப்படுகிறது. முடிவில் தளிக்குளத்தார் ஆலயத்திற்கு தென்மேற்கே உள்ள இடம் உறுதியான இடமாகத் தேர்வு செய்யப்படுகிறது. பூமிபூஜை மிக விமரிசையாக நடைபெற்று கோதானம் ஆகிறது. அந்தக் கற்றளி வளாகத்தில் பசுக்களும் கன்றுகளும் ஆடுகளும் மன்றாடியார்களின் பார்வையில் விடப்படுகின்றன. கோவின் எச்சங்கள் அந்த இடத்தை பவித்திரமானதாக ஆக்குகின்றன.

காட்சி மாறுகிறது.

தேவலோகத்தில் குமைச்சல். விண்ணும் மண்ணும் காணாத திருக்கற்றளியை மானுட மன்னவன் ஒருவன் கட்டிக்கொண்டிருக்கும் செய்தி தேவேந்திரன் காதுகளை எட்டுகிறது. தேவலோகத்தை விட உயர்ந்ததொரு இடமா ? அதையும் பார்த்து விடுவோம் ! என்று முழங்குகிறான் அவன்.

அவனுடைய உத்தரவின் பேரில் மன்மதனும் இரதியும்

வரவழைக்கப்படுகின்றனர்.

இந்தக் கட்டத்தில் அரிகண்டன் மன்மதனாக நாடகத்தில் நுழைந்ததால் அம்பலவாணரின் ஆர்வம் பன்மடங்கு அதிகரிக்க கண்ணிமைக்காமல் மேடையைப் பார்த்துக்கொண்டிருந்தார். செங்கமலம் ஏதோ சொன்னதுகூட அவர் செவிப்புலன்களில் நுழையவேயில்லை !

மன்மதன் இரதியுடன் தேவராஜன் சபைக்கு வந்து வணங்கி நிற்கிறான்.

"ஓ மன்மதனே ! அன்றொருநாள் நீ புரிந்த உதவியை மீண்டும் புரிய வேண்டும் ! பூலோகத்தில் மானுட மன்னன் ஒருவன் இறுமாப்புக் கொண்டு மகத்தான திருக்கற்றளியொன்றை எழுப்பிக்கொண்டிருக்கிறான் ! கற்றளி முடிந்தவுடன் மகாதேவரைக் குடும்பத்துடன் அங்கு நிரந்தரமாக எழுந்தருளுவிப்பேனென்று சூளுரைத்திருப்பதாகவும் தகவல். விண்ணுக்கும் மண்ணுக்கும் உயர்ந்து நிற்கப் போகும் அந்தக் கோயில் ஒருவேளை கட்டி முடிக்கப்பட்டால் நம்முடன் கையிலாயமலையில் குடிகொண்டிருக்கும் மகாதேவர் குடும்பத்துடன் அந்த பக்தனின் சிந்தையை மெச்சி அக்கற்றளியில் குடிகொண்டுவிட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அதனால் அக் கோயில் கட்டி முடிக்கப்படாமலிருக்க பல்வேறு இடர்களை உண்டாக்க வேண்டும். மகாதேவரின் கவனம் கலையாதவரை அவருடைய அருளினால் அந்த இடர்களை மன்னவன் முறியடித்து விடுவான் - அதனால் மீண்டும் நீ ஒருமுறை உன்னுடைய காமக் கணைகளினால் அவருடைய மோனநிலையைக் கலைக்க
வேண்டும் ! இது எம்முடைய உத்தரவு !"

இரதி ஓடோடிச் சென்று தேவேந்திரன் பாதம் பணிகிறாள்.

"தேவேந்திரா ! சென்ற முறை என் மணாளரை மகாதேவர் பஸ்பமாக்கிவிட்டதை நீ அறிய மாட்டாயா ? என்னுடைய வேண்டுகோளுக்கு மனமிரங்கியல்லவா மகாதேவர் இவருக்கு உயிர்ப்பிச்சையளித்தார் - மீண்டும் அதே தவறை இவர் செய்ய நீங்கள் தூண்டுவது நியாயமா ?"

"இரதி ! நீ சொல்வதும் சரிதான் - ஆனால் மகாதேவரின் கவனத்தைக் கலைப்பதற்கு வேறு உபாயங்கள் தென்படவில்லையே ?"

வானத்தில் எங்கிருந்தோ ஒரு குரல் இடைமறிக்கிறது -

"தேவேந்திரா ! எங்களை மறந்துவிட்டீர்களா ?"

அந்தக் குரலுக்குரிய அப்ஸர ஸ்த்ரீகளான அரம்பை, மேனகை, ஊர்வசி முதலான தேவலோக மாதர்கள் அறுவர் சபைக்குள் நுழைகிறார்கள். (இவ்வாறு தேவலோக மாதர்களாக நுழைந்தவர்கள் அனைவரும் தளிச்சேரிப் பெண்டிர்களாவர்)

"உங்களை மறக்கவில்லை பெண்களே - ஆனால் உங்கள் ஆடல்களெல்லாம் அந்த ஆடவல்லானின் முன் நிற்க முடியாது ! வீணில் முயல வேண்டாம் !"

"பார்த்து விடுவோமா ? தேவேந்திரா ! ஆடலுக்கென்றே பிறந்தவர்கள் பெண்கள் - ஆண்களால் ஒருக்காலும் அந்தக் கலையில் நாங்கள் அடையக்கூடிய உன்னத நிலையை அடைய முடியாது ! காலைத்தூக்கி

நின்றாடி காளி தேவியை ஏமாற்றியதுபோல் எங்களையும் ஏமாற்ற முடியாது !"

மன்மதன் தன்னை இந்த விவகாரத்திலிருந்து காத்துக்கொள்ள முயல்கிறான் - "தேவேந்திரா ! அருமையான யோசனை ! என்னுடைய காமக் கணைகளை இவர்களிடம் கொடுத்தனுப்பி விடுகிறேன். ஆடலுடன் என் கணைகளும் சேர்ந்தால் மகாதேவரின் மனத்தை அசைத்து விடலாம் - அது மட்டுமல்ல ! என்னை நெற்றிக்கண் கொண்டு எரித்ததைப்போல் இவர்களை எரித்துவிட முடியாது - பேதைப் பெண்களை அழித்துவிட்டார் என்று மூவுலகும் அவரைப் பழிக்கும் ! மிஞ்சிப்போனால் சாபம் கொடுப்பார் - இவர்கள் பெறாத சாபமா என்ன ?"

"ம்....சரி ! நீங்கள் அனைவரும் கூறுவதால் ஒப்புக்கொள்கிறேன் ! தாமதம் செய்யாமல் நீங்கள் அனைவரும் கயிலயங்கிரிக்குப் புறப்படுங்கள் ! மகாதேவரின் மனதைக் கயைுங்கள் !"

*****************************************************************************************
*******

மதுரவாசகி சற்று ஆச்சரியத்துடன் மழபாடியாரின் பொருட்களை கவனித்தாள். அவருடைய இடைக்கச்சுப் பொருட்களில் துழாய்க்குடியிலிருந்து கைப்பற்றிய அந்த மாட்டுத்தோல் படமும் இருந்தது. கீழே விழுந்த வேகத்தில் அது பிரிந்துகொள்ள அந்தப் படத்தைப் பார்த்துத்தான் மதுரா ஆச்சரியப்பட்டாள்.

"அட ! இந்தப் படம் எப்படி உங்கள் கைக்கு வந்தது ?"

மழபாடியாருக்கு இதயம் ஒரு கணம் நின்றேவிட்டது ! "என்ன ? இந்தப் படத்தில் இருப்பது இன்னதென்று உனக்குத் தெரியுமா ?"

"தெரியுமே ! இது சோழநாட்டின் ஒரு சில பகுதிகளில் இருக்கும் தலைக்கோலியர் மட்டுமே உபயோகிக்கும் ஒரு நெற்றிப்பதக்கம். தங்களிடம் பயிற்சிபெற்ற தளிப்பெண்களை வேறுபடுத்திக்காட்ட ஒவ்வொரு தலைக்கோலியரும் ஒவ்வொரு முத்திரைகளை உபயோகிப்பர். இந்தப் படத்தில் காணப்படும் அணிகலன் நான் மாணவியாகப் பயின்ற திருவாரூர் தலைக்கோலிக்கு உரியது. அவருடைய மரபு தொடரவேண்டுமென்று நாங்கள் - அதாவது அவரிடம் பயின்ற பதினோரு மாணவியரான நாங்கள் அனைவரும் சோழமண்டலத்தின் பல்வேறு பகுதிகளிலும் தலைக்கோலியராக இருந்து அவருடைய மரபை பேணிக்காத்து வருகிறோம். உதாரணமாக இந்த நாடகத்தில் பங்குபெறப்போகும் அத்தனை தளிப்பெண்களும் எங்கள் மரபில் பயிற்சியளிக்கப்பட்டவர்கள்தான் !"

"என்ன - நாடகத்தில் தளிச்சேரிப் பெண்டுகள் நடிக்கின்றார்களா ? அவர்களுக்குரிய பதக்கமா இது ?"

சட்டென்று மழபாடியாரிக்கு சகல புலன்களும் விழித்துக்கொண்டன ! நடந்த நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் மைய இழையாக ஓடிக்கொண்டிருந்த அந்த ஒன்று என்னவென்து அவருக்குப் புலப்பட்டுவிட்டது ! அம்பலவாணருக்கும் குன்னத்தூர் ஆசாரிக்கும் ஏற்பட்ட சொல்ல முடியாத

அந்த அருவருப்பு இன்னதென்று அவருக்கு அப்போது புரிந்தது - நந்தவனத் திருத்துவான் ஏன் தலைப்பாகையை அவிழ்ப்பதில்லை / மெய்ப்பை கழற்றுவதில்லை என்பதிலிருந்து விடைகாணமுடியாத திகைப்பில் அவரை மூன்று நாட்கள் ஆழ்த்திய அத்தனை நிகழ்வுகளும் சடசடவென்று அவருக்குப் பிடிபட்டன -

"அடடா ! எத்தனை பெரிய முட்டாளாக இருந்திருக்கிறேன் !" என்று நொந்துபோனார் மழபாடியார்.

*******************************************************************************************
*******

மலைநாட்டு ஹோமத்தில் உச்சக்கட்ட ஆஹுதி நடைபெற்றது.

"ஏ தேவதைகளே ! நீங்கள் இன்னமும் மனம் இரங்கவில்லையா ! உங்களை திருப்தி செய்ய இதோ ! நான் என் இரத்தத்தையே சொரிகிறேன் !"

மற்றவர்கள் சுதாரிப்பதற்கும் சட்டென்று தன் உடைவாளை எடுத்து தன் வலக்கரத்தை முழங்கையின் கீழ் வெட்டிக்கொண்டான் அந்த வயதான அந்தணன் !

"ஆ!" வென்ற தீனமான அலறல் அவனிடமிருந்து எழுந்தது.

வழிந்தோடிய அவனது உதிரத்தை ஹோமத்தீயின் நாக்குகள் சுவைபார்த்தன.

****************************************************************************************
*******

மகாதேவர் கயிலயங்கிரியில் ஆழ்ந்த மௌனத்தில் - மோனநிலையில் ஆழ்ந்து அமர்ந்திருக்கிறார். மன்மதனுடைய கரும்பு வில்லுடனும் மலர் அம்புகளுடனும் அப்சர ஸ்த்ரீகள் அவரைச் சூழ்ந்துகொள்கின்றனர்.

****************************************************************************************
*******

நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த அம்பலவாணர் ஆயிரத்து ஓராவது தடவையாக செங்கமலத்தின் கேள்வியால் தாக்கப்பட்டார்.

"தாத்தா ! மேடையில் அனைவரும் ஒரே மாதிரி ஆடை அணிகலன்கள் அணிந்துகொண்டிருக்கின்றனர். ஆனால் நடுவில் இருப்பவளுக்கு மட்டும் ஹாரத்தையும் முத்து மாலைகளையும் காணவில்லை !" என்றாள். ஆம் - அரிகண்டன் தளிப்பெண்டுகளின் பெட்டியிலிருந்து அபகரித்துக்கொண்ட ஆபரணங்கள் இவளுடையவைதான் போலும் - பாவம்....

அம்பலவாணர் செங்கமலம் சொன்னதை கவனத்தில் கொள்ளவில்லை. "ஆம் அம்மா !" என்றார் சுருக்கமாக. ஆனால் செங்கமலத்தின் ஆர்வம் அத்தோடு நிற்கவில்லை. தளிப்பெண்டுகள் ஒவ்வொருவரும் மற்றவர்களிடமிருந்து எந்தெந்த வகைகளில் வித்தியாசப்படுகிறார்கள் என்று கணக்கெடுக்கத் துவங்கினாள் அவள்.

**************************************************************************************
*******

மழபாடியாரின் முகம் மாறுவதை மதுரா கவனித்தாலும் அதன் காரணம் புரியவில்லை.

"அதோ பாருங்கள் ! நான் பயிற்சியளித்த தளிப்பெண்டுகள் !" என்று உற்சாகமாக மழபாடியாருக்கு கையைக் காட்டினாள்.

மழபாடியார் மேடையை நோக்கினார். அடுத்த கணம் ஆயிரம் தேள்கள் ஒருசேர அவரைத் தாக்கியதைப்போன்ற அதிர்ச்சியடைந்தார் !

**************************************************************************************
*******

நாடகத்தில் மகாதேவரைச் சுற்றிப் பெண்டுகள் ஆடிக்கொண்டிருந்தார்கள். மேடையின் வலப்பக்க ஓரத்தில் அரம்பையாக வேடம் கட்டியிருந்த

சீருடையாளும் இடப்பக்க ஓரத்தில் ஊர்வசியான அம்பலக்கூத்தியும் இடம்பெற்றிருந்தார்கள்.

மகாதேவரோ அசைந்துகொடுப்பவர்போல் தெரியவில்லை.

கரும்பு வில்லைக் கையிலெடுத்து மலர் அம்புகளால் மகாதேவரைத் தாக்கக் குறிபார்த்தார்கள்.

*****************************************************************************************
*******

"தாத்தா ! இதோ முதலில் நிற்கும் இந்தப் பெண்ணின் அம்பும் வில்லும் சிறிது வேறுமாதிரி உள்ளதே - அம்பு நுனியைப் பார்த்தாயா ! எத்தனை கூர்மை....."

அம்பலவாணர் வழக்கம்போல முதலில் அதனைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. ஒரு கணம் நிதானித்தபின் - அந்த வாசகத்தின் முழுப் பொருளும் மூளையைத் தாக்கி அதன் அர்த்தம் புரிந்த கணத்தில் .....

*****************************************************************************************
*******

மழபாடியார் நொடியில் தன் பண்டித சோழத் தெரிஞ்ச வில்லிகள் படையின் பிரத்யேக வில்லில் அம்பினைப் பொருத்தினார். அவருடைய கூர்மையான கண்கள் மேடையை - மேடையில் கையில் வில்லோடு நின்ற அந்தப் பெண்களை - அந்தப் பெண்களின் கையில் தரித்திருந்த விற்களை - விற்கள் தாங்கியிருந்த அம்புகளை - நொடியில் பரிசீலித்து இடப்பக்க ஓரம்தான் ஆபத்து என்று தீர்மானித்து....

அடுத்த கணம் சிறிதும் தயக்கமின்றி அவருயை கைகளிலிருந்து அந்த சிற்றம்பு காற்றைக் கிழித்துக்கொண்டு புறப்பட்டுவிட்டது.

*****************************************************************************************
*******

அம்பலவாணரின் மனம் முழுச் செய்தியையும் உணர்வதற்குள் அவருடைய உடல் செயலாற்ற ஆரம்பித்துவிட்டது.

தன் மிச்சமிருந்த பலத்தையெல்லாம் இடது கரத்தில் தேக்கி - அக்கரத்தை மேடையின் முனையில் ஊன்றி - ஒரே தாவலில் மேடையை அடைந்தார். அவர் மேடையேறிய இடம் சீருடையாள் நின்ற இடத்திற்கு ஒரு அடி முன்னால். அவர் நிமிர்வதற்கும் சீருடையாளின் வில்லிலிருந்து கிளம்பிய கோப அம்பு அவரைத் தாக்குவதற்கும் சரியாக இருந்தது.

*****************************************************************************************
*******

மழபாடியாரின் குறி பெரும்பாலும் தவறுவதில்லை. நேராக அந்த முதல் அம்பு புறப்பட்டு அம்பலக்கூத்தியின் மார்பில் - அவள் அம்பு செலுத்திவிடலாம் என்று முடிவெடுத்த அந்தக் கணத்தில் - ஆழமாகத் தைத்தது. என்ன நேர்கிறது என்று அவள் புரிந்துகொள்வதற்குள் அடுத்த அம்பு தொண்டைக்குழியில் பளிச்சென்று இறங்க - தீனமான அலறலுடன் அவள் பின்னே சாய்ந்தாள்.

சீருடையாள்
அம்பலக்கூத்தி
மேடையில் ஏறி நிற்கும் அம்பலவாணர்
பேரரசருக்கு வைக்கப்
குறிப் பாதை
மழபாடியாரின் அம்பு செல்லும் பாதை
இறுதிக்கட்ட நிகழ்வுகளை விளக்

இறுதிக்கட்ட நிகழ்வுகளை விளக்கும் வரைபடம்

*******************************************************************************************
*******

சீருடையாளின் முதல் அம்பு அம்பலவாணரின் வலது தோளில் இறங்கியது. அடுத்த அம்பை வில்லில் பூட்டுவதற்குள் விழித்துக்கொண்டுவிட்ட திருமெய்க்காவல் படைத்தலைவர் ஆட்கொண்ட வில்லியாரின் குறுவாள் அவள் மார்பில் சரேலென்று பாய்ந்து அவளைச் சாய்த்துவிட்டது.

அம்பலவாணர் சற்றே தள்ளாடியபடி நிற்க முயன்று....தோற்று.... தள்ளாடியபடி பின்னே சாய்ந்தார் ! அந்தப் பெரிய அம்பு தாக்கி இரத்த சேதம் அதிகமாவதற்கு முன்னாலே மயக்கம் ஆரம்பித்துவிட்டது.....

அது அவருக்குப் பழகிய அனுபவம். சேவூரிலும் இதேபோல அம்பு தாக்கப்பட்ட மறு வினாடியே மயக்கம் ஏற்பட்டது... அம்பில் விஷம் தோய்க்கப்பட்டிருந்ததால் மயக்கம் ஏற்பட்டதாக வைத்தியர் பின்னர் சொன்னார்.

ஆக மீண்டும் விஷ அம்புதான் தாக்கியிருக்கிறது என்பது உறுதி. இந்தத் தடவை நமனிடமிருந்து தப்ப முடியாது.

அத்தனை வேதனைகளையும் மறந்து அம்பலவாணரின் முகத்தில் சிறிதளவு புன்னகை அரும்பியது.

ஆண்டவா ! கடைசியில் நாம் விரும்பியதைப்போல சோழ இராஜாங்கத்தின் பணியில்தான் நம் உயிர் பிரியப் போகிறதா ? இதில் வருத்தப்பட என்ன இருக்கிறது.... மழபாடியாருக்கு நமது தீரச் செயல் தெரிந்தால் என்ன நினைப்பார்....? பேரரசர்...........நமது..........வீரத்தை மெச்சு.......வாரா ?

செங்க..ம.....ல...த்...தை

யா............ர்...........இ....னி..............................................

**பழங்கதை**

எல்லாம் முதலில் ஒரே வெண்புகை மண்டலமாக இருந்தது. அந்தப் புகை மண்டலத்திலேயே கால் வைத்து நடக்க முடிந்தது.

முதலில் இளம் வயதில் மறைந்துபோன அவருடைய அன்னைதான் எதிர்பட்டாள் - "வா மகனே ! கடைசியில் ஒருவழியாக வந்துசேர்ந்துவிட்டாயா ?" என்று கட்டித் தழுவிக்கொண்டாள்.

அடுத்ததாக கண்டிப்பு நிறைந்த அவருடைய தந்தையார் வந்தார். "கடைசிவரை திருமணம் செய்து கொள்ளாமல் வம்ச விருத்தியை அடியோடு அழித்துவிட்டாயே !" என்று முகத்துக்கு நேரே கைநீட்டிப் பேசினார்.

அவர்களுக்குப் பின் தலைப்பாகையோடு ஒருவர் தெரிந்தார் - எவரோ அவரை அறிமுகப்படுத்தினார்கள்.....அவர்தான் நீலமேகன் கம்பன்

அரையனாம் ! அம்பலவாணரின் பாட்டனுக்கு முப்பாட்டனாம் ! பல்லவர் காலத்தில் பகாப்பிடுகு மார்பிடுகு பட்டங்களெல்லாம் பெற்று செழிப்போடு திருவெள்ளறைப் பகுதியில் (1) வாழ்ந்தவரென்று அம்பலவாணர் கேள்விப்பட்டிருக்கிறார். அவருக்குப் பிறகுதான் அவருடைய குடும்பத்து ஆண்பிள்ளைகளெல்லாம் கம்பன் அரையன் என்று பெயர் வைத்துக்கொள்ளத் துவங்கினார்களாம்.

(1) திருவெள்ளறை ஸ்வஸ்திகக் கிணற்றில் இருக்கும் கல்வெட்டில் கம்பன் அரையன் பெயர் காணப்படுகிறது.

"இவன் எதற்காக இங்கே வந்தான் ?" என்றார் அந்தக் கிழவர் - "அடேய் - உனக்கு இன்னும் நிறைய பணிகள் இருக்கிறன்றன - யாரங்கே - இவன் கண்களைத் திறந்து விடுங்கள் !"

அப்போதுதான் அம்பலவாணர் தன் கண்கள் மூடியிருப்பதை உணர்ந்தார். மூடியிருக்கும் கண்களில் காட்சிகள் தெரிவது சாத்தியமா என்ன ?

"திற ! திற ! உடனடியாக ...."

கண்ணிமைகளுக்கு மேல் இரண்டு பாறைகள் அழுத்திக்கொண்டிருப்பனபோல் தோன்றியது. ஒரு பெருமுயற்சி செய்து கண்களை மெதுவாகத் திறந்ததில்....

அவருடைய கால்மாட்டிற்கு அருகில் அவருடைய நண்பர் கிளையூர் வைத்தியர் தெரிந்தார். அவருக்கு அருகில் அரிகண்டன். அவன் கைகளில் செங்கமலம். அதற்கடுத்ததாக தலைப்பாகையோடு நிற்பவரை அடையாளம்

தெரியவில்லை.

பின் - யார் யாரோ - அரசாங்கப் பிரமுகர்கள்போல் தெரிகிறார்கள் - அப்புறம் சேனாபதி விக்கிரமசோழ மாராயர் - மழபாடியார் - அவருக்கு அடுத்தபடியாக - ஆஹா ! நாம் காண்பதென்ன ? தலையில் கொண்டையுடன் நெற்றியில் திருநீறு நிறைந்து ...கண்களில் கருணை பொங்க....

"விழிகளைத் திறந்துவிட்டார் !" என்று யாரோ குரல் கொடுக்கிறார்கள்.

அவருடைய கரங்கள் நீண்டு அம்பலவாணரின் நெற்றியில் திருநீறு இடுகின்றன. திருவாய் கீழ்கண்ட திருஆலவாய் திருப்பதிகத்தை முணுமுணுக்கிறது.

**"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன் திருஆலவாயன் திருநீறே"**

அம்பலவாணர் நன்றாகவே கண்களைத் திறந்துவிட்டார். ஆ.........இதென்ன ? அவருடைய உடலுக்கு உணர்ச்சி வரவர வலது கரம் முழுவதிலும் தாங்கமுடியாத வலி எற்பட்டது.

அனைவரும் இருப்பதை மறந்து "ஐயோ ! வலிக்கின்றதே !" என்று அலறினார் அம்பலவாணர்.

"எங்கே ? எங்கே ?" என்று அனைவரும் பதறிப் போனார்கள். அரசர் மட்டும் சாந்தமாக "அமைதி ! அமைதி ! வைத்தியரே - என்னவென்று பாரும் !" என்றார்.

பெரியதாக தலைப்பாகை கட்டியவர் அவர் அருகில் வந்தார்.

"எங்கு வலிக்கின்றது அம்பலவாணரே ?"

"வலது கரம் - வலக் கரம் முழுவதும் பாறையைத் தூக்கி வைத்தாற்போல வலிக்கிறது ! வெட்டிவிட்டு விடுங்களேன் !"

"ஆஹா - ஆண்டவன் கருணையே கருணை !"

"என்ன வைத்தியரே - என்ன சொல்கிறீர்கள் ?" என்று குழப்பத்துடன் வினவினார் பேரரசர்.

"அரசே ! இவருக்கு வலது கரம் விளங்காமல் போனதே விஷ அம்பு தைத்து சரியான விஷ முறி சமயத்தில் கொடுக்கப்படாததால்தான். கையிலிருந்து மூளைக்குச் செல்லும் நரம்புகளை விஷம் பாதித்துவிட்டது. தற்போது மீண்டும் வேறொரு வகையான விஷ அம்பினால் அதே கரம் தைக்கப்பட்டதில் நரம்புகளில் மீண்டும் மூலிகை விஷம் பாய்ந்து முன்பு தாக்கிய விஷத்தை முறித்து விட்டது. இவருடைய பழைய வரலாற்றை கிளையூராரிடமிருந்து நான் தெரிந்துகொண்டு வைத்தியம் செய்கையில் கைக்குள் பாய்ந்த விஷம் உடம்பின் மற்ற பாகங்களுக்குச் செல்வதை மட்டும் தடுத்து வலக்கரத்தை விட்டுவிட்டேன் - ஏனெனில் அம்புபாய்ந்த

சில மணிகளுக்கு இவரையுமறியாமல் வலக்கரம் லேசாகத் துடித்துக்கொண்டிருந்தது. அதனால் விஷமுறிவு ஆகியிருக்கலாம் என்று நானும் இவரும் ஊகித்தோம். என்ன....இந்த வைத்தியம் மட்டும் பலித்திராவிட்டால் கைகளை வெட்டியெடுத்துவிட வேண்டியிருந்திருக்கும் - தில்லை அம்பலவன் அருளால் அப்படியேதும் நிகழாதவாறு தப்பித்தார் !"

"ஐயோ ! வலி உயிர் போகின்றதே !" என்று துடிதுடித்தார் அம்பலவாணர்.

பாட்டன் படும் அவஸ்தையைத் தாங்கமாட்டாமல் செங்கமலத்தின் கண்களில் நீர் திரண்டது - "உங்களுக்கு ஒன்றும் ஆகாது தாத்தா !" என்றாள் திரும்பத் திரும்ப.

"அனைவரும் மன்னிக்க வேண்டும். வலி தாங்க முடியாததால் இவருக்கு மயக்க மருந்து கொடுக்க வேண்டியிருக்கிறது !" என்றபடி வைத்தியர் பச்சிலைச்சாற்றை அம்பலவாணர் வாயில் பிழிய....சில கணங்களில் அவர் துவண்டார்.

**************************************************************************************
*******

எல்லாம் கனவில் நடப்பதைப்போல் தோன்றியது. பகலும் இரவும் வந்து போவது தெரிந்தது. யார் யாரோ பார்த்துவிட்டுப் போனார்கள்.

இறுதியாக ஒருநாள் அம்பலவாணரை படுக்கையிலிருந்து கிளப்பிப்

பல்லக்கில் படுக்கவைத்தார்கள். செங்கமலம் தன் மடியிலேயே பாட்டனைப் போட்டுக்கொண்டாள். பல்லக்கு ஊர்வலம் பல ஜாம நேரத்திற்குத் தொடர்ந்தது. பிறகு எங்கோ இறங்கி - மஞ்சத்தில் கிடத்தி.....

அவர் ஒரு திங்களுக்கும் மேலாக அரைமயக்க நிலையில் இருந்தார்.

இடையிடையே முழிப்புத் தட்டியபோது யார் இல்லத்திலோ இருக்கிறோமென்று தெரிந்தது - ஆனால் யாரென்று தெரியவில்லை. வீடு புதிதாகத் தெரிந்தது. கண்ணுக்கு விருந்தாக வீட்டின் பின்புறம் குளிர்ச்சியான தோட்டம் தெரிந்தது. ஜாதி மல்லி மற்றும் பல்வேறு பூஞ்செடிகளும் மணத்தை வாரியிறைத்தன.
மழபாடியார் அடிக்கடி வந்து பார்த்துவிட்டுப் போனார். கிளையூர் வைத்தியரும் அரிகண்டனுடன் அவ்வப்போது வந்து போனார்கள். அப்பனுக்கும் பிள்ளைக்கும் சமரசமாகிவிட்டதுபோல் தெரிந்தது.

வேறு பல அரசாங்கப் பிரமுகர்களும் எப்போதாவது வந்து விசாரித்துவிட்டுப் போனார்கள். துழாய்க்குடிக்காரர்கள் ஆதிச்ச சேர்வை தலைமையில் ஒருநாள் வந்து அரைகுரை மயக்கத்திலிருந்தவரை கட்டிப் பிடித்துக்கொண்டார்கள்.

"எங்களுக்கெல்லாம் அழியாப் பெருமை தேடித்தந்துவிட்டீர்கள் ஆசானே !" என்று சேர்வை தழுதழுக்கச் சொன்னது அரைகுறையாக காதில் விழுந்தது. லேசாக புன்னகைக்கக்கூட முயன்றார் அம்பலவாணர்.

**************************************************************************************

*******

ஒருநாள் விடியற்காலை அம்பலவாணருக்கு முழுமையாக முழிப்பு வந்து தான் படுத்திருந்த மஞ்சத்திலிருந்து எழுந்து அமர்ந்துகொண்டார். தலை சற்று பாரமாகத் தெரிந்ததேயொழிய மனது மற்றபடி உற்சாகமாகவே இருந்தது. வலது கரத்தின் வலி பெரிதும் குறைந்திருந்தது.

சிறிது நேரத்திலேயே மழபாடியாரும் அவருடைய துணைவிபோல் காணப்பட்டதொரு பெண்மணியும் அம்பலவாணர் இதுவரை சந்தித்திராத வேறொரு புதிய மனிதருடன் அறைக்குள் நுழைந்தார்கள்.

"ஆஹா ! எழுந்து உட்கார்ந்துவிட்டார் போலிருக்கிறதே - வைத்தியர் சொன்ன கெடுவுக்கு ஒரு வாரம் முன்னரே உடல் தேறிவிட்டது ! எல்லாம் ஈசன் கருணை..." என்றார் மழபாடியார். புதிய மனிதரை ஏற இறங்க அவர் பார்ப்பதைக் கண்ட மழபாடியார் - "ஓஹோ - இன்னமும் உங்களுக்கு இவரை அறிமுகப்படுத்தவில்லை - அம்பலவாணரே ! இவர்தான் திருமெய்க்காவல் படையின் தலைவர் வேளாண் ஆட்கொண்ட வில்லியார் !"

வில்லியார் தலையைக் குனிந்து மரியாதையுடன் தன்னை வணங்குவதைக் கண்ட அம்பலவாணர் சற்றே துணுக்குற்று தாமும் பதில் வணக்கம் செலுத்த முயன்றார். வழக்கமான இடது கரத்தோடு வலக்கரமும் மிகக்குறிப்பிட்ட அளவு வரை உயர்ந்து பிறகு தொய்ந்தது !

"ஆஹா ! வலது கரம் செயல்படத்துவங்கிவிட்டது - இனி தங்களுக்கு சற்று பயிற்சி தேவை - அவ்வளவுதான் ! சிறிது காலத்தில் இரண்டு கரங்களையும் இயக்கும் சக்திபெற்றுவிடுவீர்கள் ! வில்லியாரே - உடையாருக்கு அம்பலவாணர் தேறிவிட்டதாக உடனடியாக செய்தியனுப்பிவிடுங்கள் !" என்றார் மழபாடியார் உற்சாகத்தோடு.

அம்பலவாணருக்கு நா வறண்டது. தண்ணீர் வேண்டும் என்று சைகையால் கேட்டார். தண்ணீருக்கு பதில் மருந்து கலந்த சிறிது பாலை மழபாடியாரின் அருகில் நின்ற பெண்மணி புகட்டினார். அம்பலவாணருக்கு சிறிது பலம் வந்து - பேசுவதற்காக தொண்டையைச் செருமிக் கொண்டார்.

"மழபாடியாரே ! தங்கள் அன்புக்கு எவ்விதம் நன்றி சொல்வேன் ? எப்பாடு பட்டோ என் உயிரைக் காப்பாற்றி விட்டீர்கள்...." அவரது கண்களில் லேசாக நீர் திரண்டது. கரம் குவிக்க நீண்டது....அந்தக் கரத்தை மழபாடியார் பிடித்து அவரைக் கட்டியணைத்துக் கொண்டார்.

"வீராதி வீரரே - உங்களைக் காப்பாற்றியது நான் மட்டுமல்ல ! உடையார் காப்பாற்றினார் - அரசாங்கத்தின் தலைமை மருத்துவர் தீவிர சிகிச்சையளித்துத் தங்களைக் காப்பாற்றினார் - இதோ தங்களின் முன் நிற்கும் ஆட்கொண்ட வில்லியார் உங்களின் உடலை ஆதுலசாலைவரை தூக்கிக்கொண்டு சென்று காப்பாற்றினார் - என் அருகில் நிற்கும் மதுரா என்கிற இந்தப் பெண்மணி கடந்த ஒரு திங்களாக அல்லும் பகலும் தங்களின் அருகில் இருந்து வேளை தவறாமல் மருந்தும் உணவும் அளித்து உங்களை தினமும் நீராட்டிப் பாதுகாத்துக் காப்பாற்றினாள் -

உங்களின் பெயர்த்தி செங்கமலத்திலிருந்து சோணாடு முழுவதும் உங்கள் நலனுக்காக எத்தனை பூஜைகள் நடந்துள்ளன தெரியுமா ? - அந்த மக்களின் நல்லெண்ணம் தங்களைக் காப்பாற்றியது ! வீரரே - உங்களை நண்பர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமையடைகிறேன் !
உங்களாலல்லவோ இந்த சதியைப் பற்றி முதன்முதலில் அறிய முடிந்தது !
உங்களின் தீவிர முயற்சி மட்டும் இல்லையென்றால்....
உடையாரையல்லவா இழந்திருப்போம் - அந்தோ ... நினைக்கவே மெய் நடுங்குகிறது !"

அம்பலவாணருக்கு ஒன்றும் புரியவில்லை. "ஐயா - செங்கமலம்...."

"மிக சௌகரியமாக தங்கள் நண்பர் தஞ்சை கிளையூர் வைத்தியர் வீட்டில் உள்ளாள் ! இன்று செய்தி போய்விடும் - அநேகமாக மாலையில் அவளை - இன்னும் பல பெரிய மனிதர்களை எதிர்பார்க்கலாம் !" என்றபடி மழபாடியார் ஆட்கொண்ட வில்லியாரைப் பார்த்துக் கண்சிமிட்டினார். வரப்போகும் "பெரிய மனிதர்" யார் என்பதைப் புரிந்துகொண்ட ஆட்கொண்ட வில்லியாரும் முகம் மலர்ந்தார்.

"ஐயா - இது எந்த ஊர் / யாருடைய இல்லமென்று என்று தெரிந்துகொள்ளலாமா ?"

"நான் பிறந்து வளர்ந்து ஆளாகிய குருகாடியில் என் அன்னையின் வீட்டில் உள்ளீர்கள் ! இதோ - இந்தப் பெண்ணும் குருகாடியைச் சேர்ந்தவர்தான் - பெயர் மதுரவாசகி !"

அம்பலவாணர் அந்தப் பெண்மணியை நோக்கிக் கரம் குவிக்க

முற்பட்டார். மதுரா சற்றே நாணியபடி முன்வந்து கேப்பங்கஞ்சியை அவருக்குப் புகட்டி சுடுநீரும் புகட்டினாள்.

அம்பலவாணருக்கு உடலில் கணிசமான பலம் வந்துவிட்டதுபோல் தோன்றியது.

"ஐயா - சிறிது நேரம் நடக்க விரும்புகிறேன் - என்னை யாராவது தோட்டத்தின் பக்கம் அழைத்துச் செல்கிறீர்களா?"

"ஆஹா - இந்த நாளுக்காகத்தானே கடந்த ஒரு திங்களாக நான் காத்துக்கொண்டிருந்தேன் !" என்றபடி மழபாடியார் அவருக்கு ஒரு பக்கம் தோள்கொடுக்க - மறுபக்கம் ஆட்கொண்ட வில்லியார் அவரது கரத்தை தன் தோளில் போட்டுக்கொண்டு அம்பலவாணர் எழுந்திருக்க உதவினார்.

அனைவரும் மெதுவாக அந்த அழகிய தோட்டத்தை நோக்கி நடந்தார்கள்.

****************************************************************************************
*******

"என்னதான் நடந்தது மழபாடியாரே ?" என்று இருவர் தோள்களிலும் கைசாய்த்து, மெதுவாக அடிமேல் அடிவைத்து நடந்தபடி வினவினார் அம்பலவாணர்.

"அடடா ! எதைச் சொல்வது எதை விடுவது ! நம்பவே முடியாத

அதிசயம் அம்பலவாணரே - அன்று அரசர் தப்பித்தது தெய்வ அருளினால்தான், அதில் சந்தேகமேயில்லை !" என்று துவங்கி மழபாடியார் மதுராவை சந்தித்ததையும் தொடர்ந்து மேடையை நோக்கி அம்பெறிந்ததையும் கூறினார். "அவர்கள் திட்டத்தில் சிறிதுகூட பழுதில்லை அம்பலவாணரே ! முதல் அம்பு தாக்கத் தவறிவிட்டாலும் இரண்டாவது அம்பு நிச்சயம் தாக்கியிருக்கும் - உண்மையில் அந்தக் கடைசிக் கணங்களில் என் கவனம் முழுவதும் மேடையின் இடது புறம் மட்டிலும்தான் இருந்தது ! வலப்புறத்தில் நின்றவள் என் கண்களுக்கே தெரியவில்லை. மேடை மறைத்துவிட்டது. இன்னும் சொல்லப்போனால் ஒரே சமயத்தில் இருவர் தாக்கக்கூடும் என்பதே நான் எதிர்பாராத ஒன்று - எத்தனை கிராதகமான எண்ணம் பாருங்கள் ! எவரும் எதிர்பாராத விதத்தில் நீங்கள் மத்தியில் புகுந்து உங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் குறுக்கே பாய்ந்து பேரரசரைக் காப்பாற்றி தீராப் புகழுக்குச் சொந்தக்காரராகிவீட்டீர்கள் ! அது மட்டுமல்ல - எளிதில் இடம்பெறமுடியாத பேரரசர் மனதிலும் நீங்கா இடம் பெற்று விட்டீர்கள் அம்பலவாணரே ! உங்களின் நலனை தினமும் முறியெழுதி அனுப்பச்சொல்லி உடையாரிடமிருந்து எனக்கு உத்தரவு உள்ளது தெரியுமா ?" என்றார் மழபாடியார். மாலையில் பேரரசரே நேரில் வரக்கூடும் என்று நாவு வரை வந்துவிட்ட செய்தியை சிரமப்பட்டு அடக்கிக்கொண்டார்.

"அதென்ன பழைய ஞாபகத்தில் அம்பலவாணர் - அம்பலவாணர் - என்றே அழைக்கிறீர்கள் !" என்று கடிந்துகொண்டார் ஆட்கொண்ட வில்லியார்.

அம்பலவாணர் ஒன்றும் புரியாமல் அவரை நோக்க "ஓ ! உங்களுக்குத்

தெரியாதல்லவா - இனி நீங்கள் "இராஜகேசரி(2) அம்பலவாணர்" என்றே அழைக்கப்படுவீர்கள் !"

(2) பொதுவாக அரசர்கள் மட்டுமே தரித்த இப்பட்டம் அரிய சந்தர்ப்பங்களில் பொதுமக்களுக்கும் வழங்கப்பட்டது. பார்க்க குடந்தையாரின் Early Cholas - Mathematics Reconstructs the Chronology

"அப்படியா !" என்று வாயைப் பிளந்தார் அம்பலவாணர். பேரரசரின் அன்புக்கே பாத்திரமாவதென்றால் அதற்கு எத்தனை கொடுத்து வைத்திருக்க வேண்டும் !

"மதுரவாசகி சொன்ன தகவலை வைத்து எப்படி மேடையிலிருந்து ஆபத்து என்று கண்டறிந்தீர்கள் ?"

"நான் முதலிலிருந்தே ஒரு முட்டாள்தனத்தை என்னையுமறியாமல் செய்திருக்கிறேன் அம்பலவாணரே - நீங்கள் சதிகாரர்களில் ஒருவனைப் பார்த்தபோது இனம்புரியாத அருவருப்புத் தோன்றியதாகச் சொன்னதை நான் ஆழ்ந்து யோசித்திருக்க வேண்டும் - விட்டுவிட்டேன் ! என் மனிதில் நானே "சதிகாரன் ஒரு ஆண் !" என்றொரு கட்டளையை உண்டாக்கிக்கொண்டு விட்டேன் - அதுதான் பெருந்தவறாக முடிந்தது. அது ஆண் அல்ல, பெண் ! சதிகாரர்கள் மூவரில் இருவர் பெண்கள் - ஒரு ஆண் ! அதுவும் அந்த இரண்டு பெண்களும் சாதாரணப் பெண்களா... ஆஹா !"

"என்ன - அந்த சதிகாரிகள் யாரென்று உமக்குத் தெரியுமா ?" என்றார்

ஆட்கொண்ட வில்லியார் ஆச்சரியத்துடன்.

"அதனைப் பற்றி பிறகு கூறுகிறேன் ! முதலில் அம்பலவாணரின் கேள்விக்கு முழுமையாக பதிலளித்து முடிக்கிறேன். அம்பலவாணரே ! உங்களுக்கும் ஆசாரியாருக்கும் இனம்புரியாத அருவருப்பு ஏற்பட்டது நியாயம்தான். அந்தப் பெண்கள் ஆண்களாக வேடம்கட்டிக்கொண்டிருந்ததால் ஏறக்குறைய நபும்சகர்களாக உங்களுக்குக் காட்சியளித்துள்ளனர். என்னதான் வேடப்பொருத்தம் பிரமாதமாக இருந்தாலும் பெண் பெண்தானே ? அதனால்தான் உங்களுக்கு அருவருப்பு தோன்றியிருக்கிறது. நமது வீரர்கள் நந்தவனத் திருத்துவான் தலைப்பாகையை அவிழ்ப்பதேயில்லை - மெய்ப்பையை கழற்றுவதேயில்லை என்று கூறியபோதாவது என் புத்திக்கு உறைத்திருக்க வேண்டும் ! ஆண்வேடம் கட்டிய பெண்ணால் தலைப்பாகையை எப்படி அவிழ்க்க முடியும் ? மெய்ப்பையைத்தான் எவ்விதம் கழற்ற முடியும் ? இருவரில் ஒருத்தி பெண்ணாகவே இருந்து முறிக்கிழவரை ஏமாற்றி அரசாங்க ஓலைகளைப் படித்துக்கொண்டிருக்க, மற்றவள் திருத்துவானாக வேடம்பூண்டு நாட்கூலிக்கு மாராயரின் மாளிகையில் மட்டுமல்ல - பிரம்மராயரின் மாளிகையிலும்கூட வேவு பார்த்து வந்திருக்கிறாள் ! அவளுடைய முகத்தைத்தான் நான் முதல்நாள் மாராயரின் மாளிகைக்கருகில் கண்டேன். ஆனால் கூட்டத்தில் தவறவிட்டு விட்டேன் !

இருவரும் திட்டமிட்டே தளிச்சேரிப் பெண்டாக வேடமிட்டிருக்கிறார்கள் ! இதற்காகவே தஞ்சைக்கு வரும் வண்டிகளை துழாய்க்குடியானை விட்டு வேவு பார்த்து தகுந்த தளிச்சேரிப் பெண்களை மடக்கி அவர்களிடமிருந்து உத்தரவு ஓலைகளைப் பறித்துக்கொண்டு அவர்களை துழாய்க்குடிக்கருகில் ஒரு இரகசிய இடத்தில் சிறை வைத்துவிட்டார்கள். அவர்களைப்

பார்த்துக்கொள்ளும் பொறுப்பை துழாய்க்குடியிலிருந்தவன் - இன்னமும் நம்மால் அடையாளம் காணப்படாதவன் - ஏற்றுக்கொண்டான்.

உத்தரவு ஓலைகளைக் கொண்டு தளிப்பெண்டுகளாக தஞ்சை திருக்கற்றளியில் சேர்ந்து விட்டார்கள் - அம்பலவாணரே ! இதற்காகவே தஞ்சையில் ஒரு தனி ஆசானை அமர்த்தி நாட்டியமும் கற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன் ! தளிப்பெண்களாதலால் அவர்களுக்கு வீடும் ஒதுக்கப்படது அவர்களின் வேலைக்கு வசதியாகிவிட்டது

ஆச்சாரியாரின் நாடகம் நடக்கப்போவதைக் கேள்விப்பட்டு இவர்களாக ஒரு நாட்டியத்திற்கு ஏற்பாடு செய்து எப்படியோ ஆச்சாரியாரையும் சம்மதிக்க வைத்து விட்டார்கள். சரித்திர நாடகத்தில் தளிப்பெண்டுகளின் நாட்டியம் ஒரு புதுமையாக இருக்குமென்பதால் ஆச்சாரியாரும் ஒப்புக்கொண்டுவிட்டார். மதுராவை அவருக்கு முன்பே தெரியுமாதலால் அவளையே பயிற்சிக்கும் அமர்த்திவிட்டார்.

பயிற்சி துவங்குகையில் இவர்கள் கிள்ளிக்குடிப் பெண்களென்பதால் மதுரா அவர்களின் தலைக்கோலி பற்றியும் அவர்களின் நெற்றிப் பட்டயம் குறித்துக் வினவியிருக்கிறாள். அப்போதுதான் தளிப்பெண்டுகள் மத்தியில் இப்படி பல்வேறு மரபுகள் இருப்பதும் அதற்கென்று பிரத்யேக முத்திரைகள் இருப்பதும் அவர்களுக்குத் தெரியவந்துள்ளது.. அவசர அவசரமாக அதுபோன்ற நகையை இரவல்வாங்கி மாதிரிப் படத்தை நகலெடுத்துக்கொண்டுள்ளனர். அணிகலனை மேல் வைத்துப் பிரதி எடுக்கவேண்டுமென்பதால் மாட்டுத்தோலை உபயோகித்துள்ளனர். தஞ்சையில் வேலை நடப்பது கடினமென்பதாலும் பின்னால் சிக்கல்கள்

வந்தாலும் வருமென்பதாலும் துழாய்க்குடியானை விட்டு எறும்பியூரில் ஒரு ஆசாரியிடம் நகை செய்து வாங்கியிருக்கின்றனர் - துழாய்க்குடியான் நாம் சந்திப்பதற்கு முதல்நாள்தான் நகையைச் செய்து தஞ்சைக்குக் கொண்டுசென்று கொடுத்துவிட்டு வந்திருக்கிறான் - நான் நமது ஆட்களை விட்டு விசாரித்ததில் இந்தத் தகவல்களெல்லாம் தெரிந்தன..."

"பெண்டுகள் இருவரில் ஒருவராவது அகப்பட்டார்களா ஐயா ?"

"அதெப்படி அகப்படுவார்கள் ? ஒருத்தியை நானே வேறு வழியின்றி கொலைசெய்து விட்டேன் - மற்றவளின் உயிரை ஆட்கொண்ட வில்லியாரின் குறுவாள் குடித்துவிட்டது. வேறு வழியில்லை - அவர்கள் உயிர் உடலில் இருக்கும் ஒவ்வொரு கணமும் பேரரசரை கொலைசெய்யவே முயற்சிப்பார்கள் ! அவர்கள் எப்படியும் பிராணத் தியாகம் செய்யும் நோக்கத்துடன்தான் வந்திருந்தனர் என்பது அவர்கள் தங்கியிருந்த வீட்டை சோதனையிட்டதில் தெரிந்தது - ஒரு பொருள்கூட மிச்சமில்லை அம்பலவாணரே - அத்தனையும் அப்புறப்படுத்தப்பட்டிருந்தன !"

"இருவரும் வீட்டை ஒழித்து வைத்துவிட்டுப் போனார்கள் !" என்று வேளக்காரக் கிழவி அரிகண்டனிடம் அன்று சொன்னது அம்பலவாணருக்கு ஞாபகம் வந்தது. அடடா - இந்த சதிகாரி அரிகண்டனின் காதலியல்லவா ? அவனிடம் விசாரித்தால்.... பாவம் ! வேண்டாம் ! அவனுடைய காதல் விவகாரத்தை இந்த சமயத்தில் வெளியில் இழுத்தால் சந்தி சிரித்துவிடும் ! விசாரணை என்கிற பெயரில் புரட்டியெடுத்து விடுவார்கள்....

"மழபாடியாரே - எல்லாம் கதையில் வரும் சம்பவங்கள்போல நடந்து முடிந்துள்ளன ! இன்னமும் இந்த நிகழ்ச்சிகளின் அதிர்ச்சியிலிருந்து என்னால் மீள் முடியவில்லை...." என்றார் அம்பலவாணர் ஆயாசத்துடன்.

"உண்மைதான் - சிறிதுகூட அப்பழுக்குச் சொல்ல முடியாத திட்டம் ! அந்த இருவரை நாம் இருவராக எதிர்கொண்டதால்தான் சதியை முறியடிக்க முடிந்தது. இந்தச் சதியைத் தீட்டியவன் எத்தனை கொடியோனாக இருப்பானென்பதை தங்களால் எண்ணிப் பார்க்கக்கூட இயலாது !"

"உண்மைதான் !"

மெல்ல நடந்தபடி நால்வரும் அந்தத் தோட்டத்தின் பின்புறம் ஓடிக்கொண்டிருந்த சிறிய வாய்க்காலின் கரையை அடைந்தார்கள். காய்ந்து விழுந்து கிடந்த பெரியதொரு தென்னை ஓலையை நிழலான பகுதிக்கு எடுத்துச்சென்று தாங்களும் அமர்ந்துகொண்டு அம்பலவாணரையும் கைத்தாங்கலாக அமர வைத்தார்கள்.

காலையிங்காற்று அம்பலவாணரின் நாசியில் இதமாகப் புகுந்து வெளிவந்தது.

"மழபாடியாரே - அந்தப் பெண்களை முன்பே தெரியுமென்று கூறினீர்களே ! அந்த வரலாற்றைக் கூறுங்களேன் ..." என்றார் ஆட்கொண்ட வில்லியார்.

"இப்போதா ? அது மிக நீண்ட கதையாயிற்றே..." என்று இழுத்தார் மழபாடியார்.

"மாலைவரை நாம் இருவரும் இங்கே இருந்துதானாக வேண்டும் - "பெரிய மனிதர்களெல்லாம்" வரப்போகிறார்களல்லவா ? அதனால் பொழுது முழுதும் அவகாசமுள்ளது - சொல்லுங்களேன் !"

அம்பலவாணரும் "பல நாட்களாக ஒரே மூலையில் முடங்கிக் கிடந்து உள்ளம் துருவேறிக் கிடக்கிறது மழபாடியாரே ! எனக்காக அவசியம் நீங்கள் அந்த வரலாற்றை கூறத்தான் வேண்டும் !"

மழபாடியார் இருவர் முகத்தையும் நோக்கினார். எதுவும் சொல்லவிட்டாலும் ஆர்வத்தைக் கண்களில் தேக்கி கால்களை முன்னே வைத்து கைகளால் கால்களைக் கட்டிக்கொண்டு தன் முகத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருக்கும் மதுராவையும் நோக்கினார்.

தொண்டையை ஒருமுறை செருமிக்கொண்டு அந்த சுவையான வரலாற்றைக் கூற ஆரம்பித்தார்.

**(முதல் பாகம் முற்றும்)**

**************************************************************************************************

**(இராஜகேசரி முதல் பாகம் முற்றிற்று. மழபாடியார் சொன்ன கதை இரண்டாம் பாகமாக "சேரன் கோட்டை" என்ற பெயரில் ஒரு இடைவெளிக்குப் பிறகு நமது மாத இதழில் வெளியாகும். நாவலைத்**

தொடர்ந்து படித்து உற்சாகமூட்டிய அத்தனை நேயர்களுக்கும் நமது நெஞ்சார்ந்த நன்றி - ஆசிரியர்)